# நாமொன்று நினைக்க

## ய. மஹாலிங்க சாஸ்திரி



கலைமகள் காரியாலயம்

உரிமை பதிவு] மயிலாப்பூர் :: சென்னை [விலை ரூ. 4-0-0

# முகவுரை

நான் சுமார் முப்பது வருஷங்களுக்கு முன் என் நண்பரான கோமல் குப்புஸ்வாமி ஐயரின் தூண்டுதலின் பேரில் அவருடைய விவேகபோதினிக்குச் சில கதை கட்டுரைகள் எழுதத் தொடங்கினேன். என் முதல் எழுத்து, சாணக்யன் என்ற பெயர் கொண்ட முத்ரா ராக்ஷஸக் கதைச் சுருக்கம். சற்றேறக்குறைய அதே காலத்தில் என் மதிப்புக்குரிய அரிய நண்பர் ஸ்ரீமான் கா. சி. வேங்கடரமணி அவர்கள் பிறப்பித்த, தமிழ்உலகுப் பத்திரிகைக்கும் நான் எழுத நேர்ந்தது. ஆனால் என் நண்பரின் பத்திரிகையுடன் என் தமிழ் எழுத்தும் நின்றுவிட்டது.

பல வருஷங்களுக்குப் பின் ஸ்ரீமான் வேங்கடரமணி பாரதமணியைத் துவக்கினார். அதில் மறுபடியும் எழுதி வந்தேன். மத்தியில் என் மற்றொரு நண்பர் ஸ்ரீமான் கே. வி. ராமசந்திரன் பிரசுரிக்க மேற்கொண்ட சில்பஸ்ரீக்கும் விஷயதானம் செய்துவந்தேன். சில்பஸ்ரீ இரண்டு வருஷங்களும் பாரதமணி சுமார் பத்து வருஷங்களுந்தான் வெளிவந்தன.

அதனால் என் தமிழ் எழுத்துக்குத் தூண்டுதல் நின்று போகும் சமயத்தில் புதிய நண்பர் ஒருவர் தோன்றினார். அவர் தமிழ் அன்பரே ஒழிய எனக்கு நேரில் அறிமுகம் இல்லாதவர். தமிழ் எழுத்துக்கலை வளர்ச்சிக்கு என்னைப் போன்றவர்களையும் இழுத்துப் போடவேண்டுமென்று நினைத்தார் போலும். அவருடைய பேராதரவில் வருஷத்துக்கு ஒரு முறை ஒரு கதை எழுதலானேன். நடுவே நடுவே என்னை அவர் தூண்டுதல் செய்து சிறு கதைகளும் கட்டுரைகளும் எழுதச் செய்தார். உலகம் அறிந்த அவர் பத்திரிகை மூலம் என் பெயர் வெளிவந்தது. இது எனக்கு அவரால் ஆன ஒரு பெரிய உபகாரமாகும்.

சற்றேறக்குறைய அதே சமயத்தில் சுதேசமித்திரன் வாரப்பதிப்பு எனக்கு மித்திரனாயிற்று. அடிக்கடி அப் பதிப்பில் கதை, கட்டுரை எழுதலானேன். ஆசிரியர் நீலம் நான் ஒரு தொடர்கதை எழுதலாம் என்று தூண்டி எனக்கு ஊக்கமூட்டினார். மாப்பிள்ளைத்தோழனை எழுதினேன்.

அது முடிந்த கொஞ்சகாலத்துக்குப் பிறகு அவரே என்னை மற்றொரு தொடர்கதை எழுதும்படி உத்சாகப்படுத்தினார். நாமொன்று நினைக்க என்ற நீண்ட நவீனத்தை எழுதலானேன். அது ஒரு வருஷம் ஓடிற்று. ஆசிரியரின் பொறுமையைப் பரிசோதிக்கும் அளவில் நான் ஒவ்வொரு சமயம் என் வாராந்தர லிகித அனுப்புகளில் தவக்கம் செய்ய நேர்ந்ததும் உண்டு. அந்த ஒரு வருஷ காலமும் நான் கொடிய இருமல் நோயுடன் போராடிக்கொண்டு எழுதிவந்ததை என்றும் மறக்க முடியாது. ஒருவாறாகக் கதையை முடித்தேன். ஆரம்பத்தில் சீதாராமன், சேஷு சாஸ்திரிகள், மணி மாமா, ஸரஸ்வதி இவர்களைத்தான் கண்டிருந்தேன். அவர்களைத் தொடர்ந்து செல்லும்போது மேல் மேலும் பல கதாபாத்திரங்கள் என் முன் தோன்றினார்கள். சீதாராமன் மூலம் ராமநாதன், அவன் தகப்பனார், மாமா முதலியவர்களையும்; ராமநாதன் மூலம் பத்மா, அழகிரிசாமி முதலியவர்களையும்; காந்திமதி செல்லம் மூலம் முத்துசாமியையும்; முத்துசாமியின் மூலம் சர்மாவையும்; சர்மா மூலம் கமலி முதலியவர்களையும் கண்டு கண்டு கிளைக்குக் கிளை பிரிந்து சென்று உலகெல்லாம் சுற்றித் திரிந்து, ஒரு கல்யாணத்தில் ஆரம்பித்தவன், ஆறு கல்யாணங்களை நிறைவேற்றி வைத்தேன். நாமொன்று நினைக்க என்ற நாமதேயம் ஆதியிலேயே தோன்றியதுதான். அது அந்தத்திலும் உறுதியாகியிருப்பதுடன் கதையில் ஒவ்வொரு பாகத்திலும் ஊடுருவிப் பாய்ந்து நிற்பது கண்டுகொள்ளத்தக்கது.

மாப்பிள்ளைத் தோழனைக் கலைமகள் நிலையம் வெளியிட்டதும் அதற்கு, கா. சி. வேங்கடரமணி முகவுரை எழுதி அதைச் சிறப்பித்ததும் எனக்கு வெற்றியின் இன்பத்தை அளித்திருக்கின்றன. இப்போது, நாமொன்று நினைக்கவும் கலைமகள் நிலையத்தாரின் பேராதரவு கொண்டு வெளிவருகிறது. இதற்கு முன்னுரை எழுதியிருக்கிறார் ஸ்ரீமான் கு.கா. ரகுநாதையர். பத்திரிகை உலகில் அவரை அறியாதவர் இல்லை. இது இந்தக் காலம். அந்தக் காலத்தில் அதாவது முப்பது வருஷங்களுக்கு முன் அவர் மேதையையும் சகல கலா பாண்டித்யத்தையும் உயர்ந்த பண்புகளையும் அறிந்து கட்புக்கொண்ட சிலருள் நானும் ஒருவன். மேதாவிகளை உலகம் போற்றுவதோ உதாசீனம் செய்வதோ ஒரு நீதி நியதிக்குக் கட்டுப்பட்டதாகத் தெரியவில்லை. கிரீடத்தில் முன்னே பதித்திருந்தாலும் போலிக் கற்களுடன் ஒரே ஹாரத்தில் இணைத்திருந்தாலும் உதிர்ந்து குப்பையில் கிடந்தாலும் மாணிக்கம் மாணிக்கந்தான்; அந்த இயற்கை மதிப்பை உணர்ந்தவர்கள் செயற்கை விசேஷங்களை முன்னணி

யில் வைத்துப் பேசமாட்டார்கள். ஸ்ரீமான் ரகுநாதையர் தம்மை இந்த ரீதியில் மதித்துக்கொள்ளும் பக்குவம் வாய்ந்த உத்தமர். அவர் எனக்கு எழுதியிருக்கும் முன்னுரையிலும் அதை நான் ஏற்றுக்கொள்வதில் அடையும் சந்தோஷத்திலும் எங்கள் பழைய கட்சியின் தத்துவம் நிரம்பியிருக்கிறது. ஆகந்துவான காற்று ஆழ்ந்த தீர்த்தங்களின் அடித்தலத்தைக் கலக்காதல்லவா?

ஸ்ரீமான் கா. ஸி. வேங்கடரமணி என் முதல் புத்தகத்துக்கு முன்னுரை எழுதியதும் ஸ்ரீமான் கு. நா. ரகுநாதையர் என் இரண்டாம் புத்தகத்துக்கு முன்னுரை எழுதித் தந்திருப்பதும் எங்கள் இளம்பிராயத்தை நினைவூட்டும் உசிதமான இணைப்புகள்.

உண்மைக் கவிகள் தொட்டால்சுருங்கிகளே. அவர்களை ஆதரித்துப் போஷிப்பது ஒரு அருங்கலை. அதன் தத்துவங்களை அறிந்து தமிழ் வளர்ச்சிக்குச் சேவை செய்துவரும் பத்திரிகைக் காரர்களுக்கும் முக்கியமாக இவ் வெளியீட்டில் ஈடுபட்டிருக்கும் கலைமகள் நிலையத்தாருக்கும் என் நன்றி.

திருவாலங்காடு,
8—7—1950.

ய. மஹாலிங்க சாஸ்திரி

# முன்னுரை

எனது வெகுகாலத்து நண்பர் ஸ்ரீ மகாலிங்க சாஸ்திரிகள் தமது இரண்டாவது நவீனமான நாமொன்று நினைக்க என்னும் புஸ்தகத்துக்கு முன்னுரை எழுதும்படி என்னைக் கேட்டது எனக்குச் சற்று வியப்பாக இருந்தது. தமிழன்பரிடையே அவருக்கு நல்ல மதிப்பு இருந்துவருவதை பிரபல பத்திரிகைகளில் அவ்வப்போது வெளியாகும் அவர் கதைகளையும் கட்டுரைகளையும் வாசகர்கள் ஊக்கத்துடன் படித்து ஆனந்திப்பதிலிருந்து யாரும் ஊகிக்கலாம். 'கரும்பு கட்டுடன் கிடந்தால் எறும்பைப் பாக்கு வைத்து அழைக்க வேண்டியதில்லை. அப்படியிருக்க என்னை முன்னுரை எழுதும்படி அவர் தூண்டியதற்கு எங்கள் நட்புத்தான் காரணம். இருந்தாலும் இந்தக் கதையின் நோக்கத்தைப்பற்றியும் ஆசிரியர் பண்பாட்டைப்பற்றியும் நான் இரண்டொரு வார்த்தை சொல்லுவது உசிதமென்றே நினைக்கிறேன்.

ஸ்ரீ மகாலிங்க சாஸ்திரிகள் பெருங்குடியிற் பிறந்தவர். பெரியோருடன் நெருங்கிப் பழகி அவர்களுடைய நன்மதிப்பைப் பெற்றவர். ஆங்கிலப் படிப்பிலும் சட்டப் பயிற்சியிலும் தேர்ந்து தொழில் அநுபவம் பெற்று உலக இயல்பை நன்கு அறிந்தவர். ஸம்ஸ்கிருத சம்பத்து இவர்களுக்குக் குல தனம். அந்தப் பாஷையில் அநேக கிரந்தங்கள் செய்திருக்கிறார். உலகப் போக்கைச் சந்துஷ்டியுடனும் நிதானத்துடனும் நோக்குபவர். நாளுக்கு நாள் மாறிவரும் நமது சமூக வாழ்க்கையை உண்மையாக, மனத்தைக் கவரும் வகையில் சித்திரிக்கும் ஆற்றலை இந்த நவீனத்தில் காணலாம்.

விருப்பு வெறுப்பு இல்லாமல் நம் இனத்தாருடன் பழகுவது தான் மேலான வித்தை. அந்தப் பண்பை இலக்கியத்தில் கையாளுவது என்பது ஆற அமர உலகத்தை உணர்ந்து ஒரு முடிவுக்கு வந்தவர்களுக்கே சாத்தியமாகும். ரிஜிஸ்டர் விவாகம், விதவையின் மறுமணம் முதலிய புதுப்பழக்கங்களைப் பின்பற்றுபவர் இந்தக் கதையில் சம்பவிக்கிறார்கள். பழைய சம்பிரதாயங்களில் பூர்ண நம்பிக்கையுடைய பாத்திரங்களும் இங்கே காணப்படுகிறார்கள். ஆனால் இவ்விரு சாராருக்கும் நடுவே நீடித்த நெரநெர்ப்போ பொல்லாப் பிடிவாதமோ காணப்படவில்லை என்பது கவனிக்கத் தகுந்தது. தவிர்க்க முடியாத பிளவுகளால் சிதறுண்ட சமூகத்தில், "எப்படியோ தொலைந்து போகட்டும்" என்ற வேண்டா வெறுப்பையோ அதனால் ஏற்பட்ட அலக்ஷியத்தையோ குறிப்பதல்ல இது. "உலகம் பலவிதம், அவரவர் மதத்தை அவரவர் கைப்பற்றட்டும். பிறருக்குப் பாடம் கற்பிக்க நான் யார்?"

என்ற பாரதமக்களின் பரந்த நோக்கமே நமது பிளவுபட்ட சமூகத்துக்கு இன்னும் அடிப்படையாக இருக்கிறது என்பதை ஆசிரியர் நன்கு வெளிப்படுத்துகிறார்.

பிறர் வாழ்க்கையில் தலையிடுவது அநர்த்தமாகலாம் என்ற கொள்கை ஒரு புறம் இருக்க நல்வாழ்வு எது என்பதைப்பற்றி நமது மக்களிடையே அதிக அபிப்பிராய பேதம் இல்லை. தன் மனோவேகத்தையே பின்தொடர்ந்து தன் வாழ்க்கையைத் தன் இஷ்டம்போல் அமைத்துக்கொள்வதில் ஆர்வங்கொண்ட ராமநாதன், பிறர் மனம் புண்படாமல் நடந்துகொள்வதே தன் தர்மமென்று கருதும் சீதாராமனுடைய மேன்மையை வாயாறப் புகழுகிறான். விடனாகவும் வீணனாகவும் பெரும்பாலும் காலங் கழித்த சிவராமனும், "என் பெண்களான உஷாவின் வசீகரத்தையும் செல்லத்தின் காதல் வேகத்தையும் விட, ஸரஸ்வதியின் உயரிய தோழமையும் உள்ளடக்கமும், காந்திமதியின் களங்கமற்ற உள்ளமும் பதி சிசுருஷையும்தான் எனக்கு மேலாகத் தோன்றுகின்றன" என்று தெளிந்த வாக்குமூலம் கொடுத்திருக்கிறார். எல்லோருக்கும் மேலான குணமுடையவனும் எல்லோராலும் போற்றப்படுபவனுமான முத்துஸ்வாமி கொஞ்சம் பத்தாம் பசலிதான். கதைப்போக்கிலும் எப்படியோ வந்து சேர்ந்து சீக்கிரமாகவே நழுவிவிடுகிறான். கதை அமைப்பில் ஒரு குறையாகக்கூட இதைச் சிலர் கருதலாம். ஆனால் தற்காலச் சமூக நிலைமையை நோக்குங்கால் ஆஸ்திக்யமும் ஆசாரமும் பயந்து நடக்கவேண்டிய காலமாகத்தானே தெரிகிறது?

நமது ஆசிரியருக்குக் கதை முக்கிய நோக்கன்று; நிகழ்ச்சிப் பொருத்தங்கள் முன்பின் இருந்தாலும் அவர்களுடைய நடத்தையிலும், அவர்கள் நடமாடும் உலகத்தை ஆசிரியர் சித்திரிக்கும் ரீதியிலும் பாத்திரங்களுடைய மனநிலைகள் தெளிவாகத் திகழ்கின்றன. பாத்திரங்கள் பல இருப்பினும் ஒன்றைப்போல் இன்னொன்று இல்லாததாலும் ஒவ்வொன்றின் பிரத்தியேக குணங்களும் மேலோங்கி நிற்பதாலும் வாசகர் மனத்தில் அழுத்தமாகப் பதிகின்றன. படிப்பவர் கவனத்தை இடைவிடாமல் இதுவே கவருகிறது.

ஆசிரியருடைய நடை எளிமையும் பொருத்தமும் வாய்ந்தது. அர்த்த புஷ்டியுள்ள கருத்துக்களை வெளியிடத் தகுந்த கருவியாக இருக்கிறது. ஹாஸ்யப் பண்பு இதில் ஸரளமாகப் பொதிந்து கிடக்கிறது. இது ஒரு நல்ல இலக்கியமென்றே ரஸிகர்கள் ஒப்புவார்கள் என்று நம்புகிறேன்.

மயிலாப்பூர்,
5—6—1949.

கு. நா. ரகுநாதன்

# பொருளடக்கம்

# நாமொன்று நினைக்க

## 1

## குடும்பக் கடிதம்

சியாமளாம்பாபுரம் காவிரியாற்றங்கரையில் பாடல் பெற்ற கோவிலினால் பெருமை வாய்ந்த ஒரு புராதன ஸர்வமான்ய அக்கிரகாரம். அது தென்னிந்திய ரெயில்பாதையின் பக்கத்தில் இருப்பதால் ஒரு ரெயில் நிற்கும் இடமாகிப் பல ஊர்களுக்கு இடையே போக்குவரத்து களிலும் வியாபாரத்திலும் முக்யத்துவத்தை அடைந்து நாளடைவில் தபாலாபீஸ், பாங்கு, கோர்ட்டு, கடைத்தெரு முதலிய வசதிகளுடைய சிறு நகரமாகி விட்டது. அங்கே ஓர் உயர்தரப் பள்ளிக்கூடமும் பிரமுகர்களால் ஏற்படுத்தப்பட்டு நாளுக்கு நாள் அது படிக்கும் பிள்ளைகளின் எண்ணிக்கையிலும், போதிக்கும் உபாத்தியாயர்களின் எண்ணிக்கையிலும் மிக முன்னேறி வந்தது.

அக்கிரகாரத்தின் நாலைந்து தெருக்களிலும், வைதிகர்களும் லௌகிகர்களும், ஸ்மார்த்தர்களும் வைஷ்ணவர்களும், ஏழைகளும், பிரபுக்களும், பண்டிதர்களும் கலைஞர்களும் பாரம்பரியமாக வசித்து வந்தார்கள். கோவிலும் குளமும் தென்னந்தோப்புகளும் அக்கிரகாரத்தை ஒட்டியே இருந்ததால் ஊரின் அழகும் சௌகரியமும் பார்த்தவர் பிரியப்படும்படியாக இருந்தன.

அந்த அக்கிரகாரத்தின் மேலண்டைத் தெருவில் சேஷு சாஸ்திரிகள் என்ற ஒரு கிருகஸ்தர் வசித்து வந்தார்.

சீதாராமன் சேஷு சாஸ்திரிகளின் இரண்டாவது குமாரன்.

சீதாராமன் சிறு வயதிலேயே தன்னம்பிக்கையும் சுதந்தரமும் உடையவன். தகப்பனார் சேஷு சாஸ்திரிகள் அவனை ஆங்கிலப் பள்ளியில் அதிகம் படிக்கவைக்க ஐவேஜி இல்லாதவர். அவனுக்கு அத்தியயனம் சொல்லிவைத்துத் தமக்கு உதவியாயிருக்கச் செய்யலாமென்று யோசித்திருந்தார். ஆனால் சீதாராமன் வீட்டுப் படிப்பில் வெறுப்புடையவனாக இருந்தான். அவனுக்குப் பள்ளிப் படிப்பு அதிகம் விருத்தியடையாவிட்டாலும் அதன் மூலம் நண்பர்கள் பலர் அவனுக்கு ஏற்பட்டனர். ராமநாதன் என்ற ஒரு நண்பனுக்கு நல்ல அந்தஸ்தும் ஐவேஜும் உண்டு. அவன் தகப்பனாருக்கு ஒரு பெரிய மதராஸ் கம்பெனியில் வேலை. ராமநாதன் தாய்மாமன் வீட்டிலிருந்து படித்து வந்தான். அடிக்கடி பட்டணம் போவான். அப்போதெல்லாம் சீதாராமன் ராமநாதனுக்கு உற்ற துணையாவான். அவர்கள் நட்பு நாளுக்கு நாள் அதிகரித்தது. எந்தக் காரியத்திலும் ராமநாதன் சீதாரமனின் உதவியை எதிர்பார்ப்பான். ராமநாதனின் பெற்றோர்களும் சீதாராமனை அன்புடன் வரவேற்றார்கள். இருவரும் சம நிலைமையில் எல்லாச் சௌகரியங்களையும் சேர்ந்து அனுபவித்தார்கள். சேஷு சாஸ்திரிகள் தம் பையனின் தைரியத்துக்காகவும் வியாபகத்துக்காகவும் சந்தோஷப்பட்டார். பையன் பிழைத்துக்கொள்வான் என்ற நம்பிக்கை அவருக்கு உண்டு. அவருக்கும் அவன் மூலமாகச் சில பெரிய இடங்களில் போக்குவரத்து ஏற்பட்டது.

கொஞ்ச காலத்தில் ராமநாதன் பட்டணத்துக்கே படிக்கப் போகும்படி நேர்ந்தது. அவன் சீதாராமனையும் தன்னுடன் அழைத்துச் செல்ல விரும்பினான். சேஷு சாஸ்திரிகள் அரை மனத்துடன் அநுமதித்தார். சீதாராமன் அதற்கு முன்னாலேயே முழுமனத்துடன் தீர்மானம் செய்துவிட்டான்.

சீதாராமன் ராமநாதனுடனே இருந்துகொண்டு பட்டணத்தில் படித்துவந்தான். அவனால் ராமநாதன் பெற்றோர்களுக்கு மிகுந்த உதவியாக இருந்தது. சாமர்த்தியசாலியாகவும், பணிந்து வேலை செய்யக்கூடியவனாகவும், தைரியமும் வியாபாகத்துவமும் அதிகம் உடையவனாகவும் இருந்த ஒரு வாலிபன் வீட்டோடு இருப்பதில் அவர்கள் திருப்திப்பட்டார்கள். ராமநாதனின் ஆதரவு அவனுக்குப் பலமாக இருந்தது. சீதாராமன் பெரிய மனுஷ்யர் வீட்டுக் குழந்தைபோல் வளர்ந்து வந்தான். இருந்தாலும் தான் ஏழை என்பதையும் அதிருஷ்டவசத்தினால் நல்ல புகலிடம் பெற்றவன் என்பதையும் சிறிதும் மறக்காமல் சீதாராமன் எப்போதும் தாழ்வுடனும் பணிவுடனும் நடந்துகொண்டு தன்னை ஆதரித்து வருவோருக்கு எவ்விதத்திலும் உதவியாக இருக்கவும் அவர்கள் ஆமோதிப்பைப் பெறவும் ஊக்கம் உடையவனாக இருந்து வந்தான். ஆனால் அவன் படிப்பில் அதிகம் ருசியுள்ளவனாக இல்லை. ராமநாதனும் அப்படித்தான். ஏதோ இரண்டொரு வருஷம் பள்ளிக்குப் போய்வந்தானே ஒழியப் படிப்பில் அதிக முன்னேற்றம் அடையவில்லை. சீதாராமன் ராமநாதனின் தகப்பனாரான வேங்கட சுப்பையரிடம் விநயமாகப் பல சமயங்களில் தனக்கு ஏதாவது சம்பாத்தியத்துக்கு வழி ஏற்பட்டால் படிப்பை நிறுத்திவிட்டு உத்தியோகம் பார்க்க வேண்டியதுதான் என்று தெரிவித்துக்கொண்டிருந்தான். "நான் ஏழைக் குடும்பத்தைச் சேர்ந்தவன். தகப்பனாருக்கு வயதாகி விட்டது. அவர் குடும்பி; கல்யாணத்துக்குப் பெண்கள் இருக்கிறார்கள். என் தமையன் சம்பாதிக்க லாயக்கில்லாதவன். தம்பிகள் படிக்கிறார்கள். தாயார் சீக்குக்காரி. நான்மட்டும் உங்கள் வீட்டில் சௌக்மாகச் சாப்பிட்டுக்கொண்டிருந்தால் குடும்பப்பொறுப்பை உணராதவனாவேன். எனக்கு ஏதாவது சிபார்சு செய்து ஒரு வேலை பண்ணி வைத்துவிடுங்கள். பிற்பாடு அதிருஷ்டம் உள்ளபடி நடக்கட்டும்" என்று அவரிடம் முறையிடுவான்.

வேங்கட சுப்பையர் இளகிய மனமுடையவர். சிறு வயதில் சீதாராமனுக்குக் குடும்பப் பொறுப்பு ஏற்பட்டிருப்பதை உணர்ந்து மனம் உருகினார். அவன் இன்னும் கொஞ்சகாலம் படித்து யோக்கியதையை ஏற்படுத்திக் கொண்டு நல்ல வேலையில் அமர வேண்டும் என்பது அவர் நோக்கம். அவனை முன்னுக்குக் கொண்டுவந்து ஒரு நிலையில் ஏற்படுத்தும்வரையில் அந்தப் பொறுப்பையும் அவர் அங்கீகரிக்கத் தயாராக இருந்தார். இவ்விதம் சில வருஷங்கள் சென்றன. சீதாராமனும் ராமநாதனும் காலேஜில் சேர்ந்து படிக்கலானார்கள்.

ஊரில் சேஷு சாஸ்திரிகளுக்குத் தன் பையன் பெரிய இடத்தில் புகுந்து சாமர்த்தியமாகவும் படித்து வருவதில் பெருமை மிகுதியாக இருந்தது. அவன் முன்னுக்கு வந்து விடுவான் என்றும் குலத்தைக் காக்க வல்லவனென்றும் அவனைப்பற்றிக் கவலை இல்லை என்றும் திண்ணையில் பொழுதுபோக்குக்கு வந்து உட்காரும் சாமி, ராமண்ணா, சுப்பையா, எல்லோரிடமும் தினம் ஒன்றுக்குப் பத்துத் தடவையாவது அவர் சொல்லிக்கொள்ளாமல் இருக்க மாட்டார். அவருடைய மனோராஜ்யத்தைத் தினமும் விரிவாக வளர்த்துவந்தவள் அவருடைய மனைவி வேம்பு அம்மாள் தான். சீதாராமன் பட்டணத்திலேயே தான் பழகும் பெரிய குடும்பஸ்தர்களின் ஆதரவையும் மதிப்பையும் பெற்றவனாகி உயர்தரக் கனதனவான் வீட்டுப் பெண்ணை மணக்க நேரலாம் என்றும் அது மூலம் தன் பெண்களுக்கு அந்தஸ்து உள்ள இடங்களில் புக்ககம் ஏற்படலாம் என்றும், பிள்ளைகளுக்கும் அவனவனுக்குத் தக்கபடி உத்தியோகங்களைச் சம்பாதித்துக்கொள்ள வசதியாக இருக்குமென்றும் வேம்பு அம்மாள் மனக் கோட்டைகள் கட்டி வந்தாள். தன் தமையன் பெண் ஸரஸ்வதியைத் தன் பிள்ளைக்குக் கல்யாணம் பண்ணிக் கொள்வதாகச் செய்துவந்த பிரஸ்தாபங்களையெல்லாம் அந்த அம்மாள் மறக்கலானாள்.

ஆனால் ஏற்கனவே அவள் செய்திருந்த பிரஸ்தாபத்தை மணி மாமா மறக்கவில்லை. ஸரஸாவின் ஜாதகத்துக்கும் சீதாராமனின் ஜாதகத்துக்கும் பொருத்த விஷயங்கள் பல வருஷங்களுக்கு முன்னாலேயே ஆலோசிக்கப்பட்டு ஜோதிடர்களால் ஆமோதிக்கப்பட்டன. ஆகையால் மணி மாமா தை பிறந்ததும் சேஷ சாஸ்திரிகளிடம் முகூர்த்தத்தைப் பிரஸ்தாபிக்க வந்தார். சாஸ்திரிகள், "குசாலாய் நடக்கட்டும், ஈசுவர சம்மதம் இருந்தால். இங்கே பாரு மணி! எனக்கு இதில் என்ன சொல்வதற்கு இருக்கிறது? குலம் விசாரிக்கணுமா? கோத்திரம் விசாரிக்கணுமா? இல்லை, மனுஷ்யாளைப் பற்றி விசாரிக்க வேண்டுமா? உன் தமக்கை பாடு, உன் பாடு. கல்யாணத்தை எப்படி இருந்தாலும் நீயேதான் நடத்தி வைக்கப் போகிறாய். நீயே சம்பந்தியாகிவிட்டால் இன்னும் விசேஷம். நான் திண்ணையை விட்டுக் கீழே இறங்க வேண்டிய அவசியமே இல்லை. உன்னிடத்திலும் உன் தமக்கையிடத்திலும் எல்லாப் பொறுப்புகளையும் விட்டுவிட்டுச் சாப்பிடக் கூப்பிட்ட சமயத்தில் நான் வரச் சித்தமாக இருக்கிறேன்" என்று வெகு தந்திரமாகப் பதில் சொன்னார்.

மணி மாமா வேம்புவிடம் சென்றார். தம்பிக்கு வேம்பு அதிகமாகவே உபசாரங்களைச் செய்தாள். மணி வந்த காரியத்தை எடுத்துப் பேசினார். சாஸ்திரிகள் சொன்னதையெல்லாம் அப்படியே திருப்பி ஒப்பித்தார். வேம்பு மோவாய்க்கட்டையை இடது தோளின் சிகரத்தில் ஒரு தரம் இடித்துக்கொண்டு முகத்தில் சலிப்பையும் கோபத்தையும் வரவழைத்துக்கொண்டு பேசலானாள். "நன்றாயிருக்கு. வெட்கக்கேடுதான். நான் சொல்லுகிறதைக் கேட்டுக்கொண்டுதான் இவாள் எல்லாக் காரியங்களும் செய்கிறார்களாக்கும். ஏன் இந்த வேஷம் போட வேண்டும்! என்பேரில் ஏன் பழி சுமத்த வேண்டும்! நான் என் மருமாளைப் பண்ணிக்கொள்ள என்ன தடை

சொல்லப்போகிறேன்? இவாளுக்கு அது தெரியாது! அவா பேச்சை நம்பாதே, மணி!''

மணிக்கு அவள் சொல்வது என்னவென்றே புரியவில்லை. ''என்ன அக்கா! அவருக்குச் சம்மதந்தான். பின்னே வேறே என்ன சொல்லுகிறாய்? பழி என்ன? பாசாங்கு என்ன? எனக்குப் புரியவில்லையே? உடனே முகூர்த்தம் வைக்கவேண்டியதுதானே?''

வேம்பு தலையை அசைத்து ஒரு வெற்றிச் சிரிப்புச் சிரித்துக்கொண்டு, ''பிள்ளையைக் கேட்க வேண்டாமா? இந்தக் காலத்துப் பிள்ளைகள், தாயார் தகப்பனார் வார்த்தைக்கு என்ன மதிப்பு வைத்திருக்கிறார்கள்? நாலைந்து வருஷமாகப் பட்டணம் போன பிள்ளை லீவுக்குக்கூட இங்கே வந்து இரண்டொரு மாதம் பெத்தவர்களுடன்கூட இருப்பதில்லை. ஓர் ஆவணி அவிட்டம், தீபாவளி என்றால் கூட அங்கேயே இருந்துவிடுகிறான். அவர்களும் அவனை அப்படிச் சொந்தப் பிள்ளைபோல் வைத்துக்கொண் டிருக்கிறார்கள். அந்த ராமநாதன் என்கிற பிள்ளை இவனோடு அண்ணன் தம்பியாகப் பழகுகிறது. சீதாராமன் இங்கே எப்போதாவது வந்தாலும் ராமநாதனும் கூடத்தான் வருகிறான். அவாள் பணக்காராள்தான்; நாங்கள் ஏழைகள்தான். இருந்தாலும் இரண்டு குடும்பங்களும் ஒரு குடும்பமாகப் போய்விட்டன. இப்போ சீதாராமனுக்குக் கல்யாணம் பண்ணுவதானால் வேங்கடசுப்பையரும் சங்கரி அம்மாளும் பார்த்துத்தான் தீர்மானம் பண்ண வேண்டும். எங்கள் பேச்சு ஏறாதுபோல் இருக்கிறது. நானும் பட்டணம் போயிருந்தேன். வேற்றுமை இல்லாமல் அவாள் வீட்டில் ஓர் அத்தை, மதனி வந்தால் எப்படியோ அப்படித்தான் என்னையும் அபிமானித்து நடத்தினார்கள். 'இந்தப் பிள்ளையை எப்படியாவது முன்னுக்குக் கொண்டு வருவது என் பொறுப்பு' என்று சொல்லிக் கொண்டிருக்கிறார் அந்த மனுஷ்யர். அவர் செய்யவும் செய்வார். அவருக்கு அவ்வளவு செல்வாக்கு இருக்

கிறது. ஏதோ அகிலாண்டேசுவரி கிருபையில் சீதா ராமனுக்கு...''

மணி மாமா ஏதோ வரப்போகும் வார்த்தையைத் தடுக்கப் பார்ப்பவர்போல் குறுக்கிட்டார்: "அப்படியானால் பட்டணம் போகிறேன். சீதாராமனையும் பார்த்துவிட்டு அவன் சிநேகிதனுடைய தகப்பனாரையும் கண்டு பேசுகிறேன். விஷயம் எந்த மட்டும் இருக்கிறது என்று நேரில் தெரிந்துகொள்ளுகிறேன்.''

வேம்புவுக்கு மணி பட்டணம் போவதில் சம்மதம் இல்லை. அவள் பட்டணப் பிரஸ்தாபத்தை மலையத்தனை இடையூறாக எடுத்துக் காட்டியும் அதை மணி கடுகத்தனை விஷயமாக மதித்துவிட்டாரே என்ற ஏமாற்றம் அவளுக்கு அதிகமாக இருந்தது. "மணி, நீ வீணாகப் பட்டணம் கிட்டணம் போய் அலையவேண்டாம். புருஷாளை விட்டு இன்றைக்கே ஒரு லெட்டர் போடச் சொல்லுகிறேன், சீதாராமனைப் புறப்பட்டு வரும்படி.''

"அவன்தான் வரமாட்டான் என்று சொன்னாயே?''

"இல்லாவிட்டால் விஷயத்தைக் குறிப்பிட்டுத்தான் எழுதச் சொல்லுகிறேனே. எதற்கும் நீ போய் அலைய வேண்டாம் என்று தோன்றுகிறது.''

"இப்போது அவன் இருக்கிற அந்தஸ்தில் எழுதினால் ஒன்றும் பதில் போடமாட்டான். நீங்களோ ஒன்றிலும் பட்டுக்கொள்ளாமல் பேசுகிறீர்கள். உங்களாலும் ஒன்றும் தீர்மானம் செய்துவிட முடியாது என்றுதான் நினைக்கிறேன். ஆகையால் அவனைப் போய்ப் பார்த்து அவனுக்குப் புதுக் கார்டியனாக ஏற்பட்டிருக்கும் அந்தப் பிரபுவையும் கண்ணால் கண்டுவிட்டுத்தான் வருகிறேனே. என்ன அதனால் அசௌகரியம்? நேரில் போனால் இரண்டில் ஒன்று புரிந்துவிடும். நாளோ ஆகிவிட்டது. எனக்கும் சீதாராமன் இல்லை என்று சொன்னால்தான் வெளியில் பார்க்க உத்தேசம். ஏனென்றால் ஒன்றுக்குள் ஒன்று. எவ்வளவோ காரியங்களுக்குச் சௌகரியம் உண்டு.''

மாமா எழுந்திருந்தார். வேம்பு, மனத்தில் இல்லாத ஆமோதிப்பை முகத்தில் வரவழைத்துக்கொண்டு, "ஆனால் இல்லையோ? உறவு விட்டுப்போகாமல் நம் பெரியவாள் காலத்தில் அப்படித்தானே செய்துவந்தார்கள்? இப்போதுதான் பெரியவாள் சொல்லுகிறதைச் சின்னவர்கள் கேட்கிறது என்கிறதெல்லாம் அஸ்தமித்துப் போய்விட்டதே! இந்தக் காலத்துப் பிள்ளை, பெண்களைத் தாயார் தகப்பன்மார், 'இப்படி இரு, அப்படிச் செய்' என்று சொல்லக்கூடத்தான் பயமாக இருக்கிறதே. சொல்லத்தான் சொன்னோம்; எங்கே அதுகள் கேட்கிறதுகள்? காலம் கலிகாலமாகப் போய்விட்டது. அது அது இஷ்டத்துக்கு அது அது செய்துகொள்கிறது. நாம் நல்லது, கெட்டது என்று சொல்லப் போனால், 'பத்தாம் பசலி' என்று பரிகாசம் செய்கிறதுகள். நம்ம வார்த்தைக்குத் துளிகூட மதிப்பென்பதே இல்லை. அதுகள் போகிற வழியில் அதுகளை விட்டுவிட்டு நம் மரியாதையை நாம் காப்பாற்றிக்கொள்ள வேண்டியதுதான். அதனால்தான் சொன்னேன். உனக்கு வேறு காரியம் இருந்தால்..."

மணி பளிச்சென்று திரும்பி நின்றார்:

"எனக்கு வேறு காரியம் இல்லை. இதற்காகத்தான் பட்டணம் போகிறேன். இன்று சாயந்தரமே புறப்படுகிறேன். பிள்ளைக்கு ஏதாவது சமாசாரம் இருந்தால் சொல்லு. ஏதாவது சாமான்கள் அனுப்புவதானாலும் கொடு. கொண்டுபோய்க் கொடுக்கிறேன். எனக்கும் அவன் இருக்கிற இருப்பையும் அவனுக்கு ஆதரவாக இருக்கும் அந்தப் பெரிய மனுஷ்யாளையும் பார்க்க வேண்டுமென்கிற ஆவல் இருக்கிறது. போய்விட்டு உடனே திரும்பிவிடுவேன். வெள்ளிக்கிழமை உங்களைப் பார்க்கிறேன். அன்றே பாக்கு வெற்றிலை வாங்கிவிடலாமென்று உத்தேசம். என் மனத்துக்கு எல்லாம் சமாதானமாகத்தான் இருக்கிறது. சீதாராமன் உங்களிடத்தில் எப்படி இருந்தாலும் என் வார்த்தையைத் தட்டமாட்டான் என்று

நினைக்கிறேன். ஆனால் ஈசுவர சம்மதம் இருக்கவேணும். நான் வருகிறேன், வேம்பு.''

''ஏண்டா, மணி! காபிகூடச் சாப்பிடாமல் போகிறாயே! கொஞ்சம் டிபன் பண்ணிவிட்டு...''

''இல்லை, வேம்பு; எல்லாம் ஆகட்டும். வெள்ளிக் கிழமை பழம், பாக்கு, வெற்றிலையுடன் வருகிறேன். அப்போது உபசாரம் பண்ணலாம். ரெயில் 5½ மணிக்கு. நான் ஆத்துக்குப் போய்விட்டுப் புறப்படத்தான் அவகாசம் இருக்கிறது.''

சேஷு சாஸ்திரிகள், ''என்னடி! கல்யாணம் நிச்சயமாகிவிட்டாப்போல் இருக்கிறதே!'' என்று ஸம்ஸாரத்தைக் கேட்டுக்கொண்டே உள்ளே வந்தார்.

''மணி எப்போதும் தான் பிடித்த முயலுக்கு மூன்றே கால்கள் என்று ஸ்தாபிக்கும் சுபாவம் உடையவன் தானே.''

''நாலாவது கால் இல்லாவிட்டால் முயல் ஓட்டம் பிடிக்குமோ?''

''அந்த யோசனை அவனுக்கு இல்லை.''

''இல்லை! இவனுக்கு என்ன தைரியம்! நம்மை விட்டு இந்த வரன் எங்கே போகப்போகிறது என்று தானே இவன் எண்ணம்? கல்யாணம் நிச்சயம் பண்ண வந்தவன் மாதிரியா அவன் பேசுகிறான்? மடியிலே கை போட்டு இழுக்கிற மாதிரியாக அல்லவா பேசுகிறான்?''

''அவாத்தில் பெண்ணைப் பெற்று உங்களுக்குக் கொடுத்த ஸ்வாதீனத்தில் அவ்வளவு பேசலாம் என்று தான் பேசுகிறான்போல் இருக்கிறது.''

''இல்லை! பணம், காசு, சீர், செய் நேர்த்தி எல்லாம் நாமத்தைச் சாத்திவிடச் சுலபமாக இருக்கும் என்ற உத்தேசமா? ஏமாந்து போனால் தட்டி அடித்துக்கொண்டு போய்விடலாம் என்று பார்க்கிறானோ? வெள்ளிக் கிழமை பாக்கு வெற்றிலை வாங்க வருகிறானோ? என்ன டிபன் பண்ணப்போகிறாய் உன் சம்பந்திக்கு?''

வேம்புவின் முகம் நொந்துவிட்ட விளக்குப்போல் ஜொலித்தது. "ஆமாம், என்னைப் பரிகாசம் பண்ணமாட் டேளோ! உங்களுக்கு அதுதான் தெரியும்! நீங்கள் வாசலிலேயே நறுக்குத் தறித்தாற்போல் இரண்டு வார்த்தை சொல்லி அவனை மடக்கி அனுப்பாமல், வழ வழ கொழ கொழவென்று வழிந்துவிட்டு என்னிடம் அனுப்பினால் அவன் ஏன் ஏறி மிதிக்க மாட்டான்?"

சாஸ்திரிகள் இந்த யதார்த்தமான வீரியமுள்ள தாக் குதலைக் காதில் வாங்காதவர்போல் எம்பிக் குதித்துக் கொண்டு மேலே பேசினார் - "நம் சேஷு பிள்ளைதானே! லகுவாய் முடித்துவிடலாம். ஏதாவது கொடுத்ததை வாங்கிக்கொள்ளுவான். மேலே கேட்டால் அதட்டி அடக்கி விடலாம் என்ற தைரியம்போல் இருக்கிறது."

"பெண்ணோ நகத்தால் வழிக்கிற கறுப்பு. குணமோ கேட்க வேண்டியதில்லை! தாயாரைக் கொண்டிருக்கிறது, நிறத்துக்கும் குணத்துக்கும். ஸாக்ஷாத் சின்ன நாகம்மா தான். இதிலே அங்காரக தோஷமாம். அவனும் நாலு வருஷமாக நமக்குத் தெரியாமல் எங்கே எங்கேயோ பார்த்தாகிவிட்டது. ஒன்றும் தகையவில்லை. என்ன செய்வான், பாவம்! பெண் கட்டையை எவ்வளவு நாள் தான் வீட்டில் வைத்துக்கொண்டிருக்க முடியும்! அது தான் இங்கே வந்தான். அசட்டு உடன்பிறந்தாள் இருக் கிறாளே; செல்லாத சரக்கைத் தந்திரமாகக் காலில் கட்டி விடலாம் என்று யோசித்திருக்கிறான்போல் இருக்கிறது."

"நீயும் அசடாக இருக்கலாம். நானும் தாக்ஷிண்யத் துக்குப் பல்லை இளிக்கிறவனாக இருக்கலாம். பிள்ளையாண் டான் அசடில்லையே. அவன் சம்மதித்தால்தானே கல் யாணம்! பட்டணம் போய்ப் பார்க்கட்டுமே. நமக்கேன் பழி? இல்லை என்று சொல்லும் அபவாதம் நமக்கு வேண்டாம். பிள்ளையாண்டான் மாமாவின் தடலடிக்குப் பயப்படமாட்டான். மூக்கை அறுத்து அனுப்பிவிடு வான். நாம் நல்லவர்கள்போலவே இருந்துவிடுவோமே.

பெண் கறுப்பு என்றாவது, துர்க்குணி என்றாவது, நகை, நட்டு, பணம் காசுக்கு வழியில்லை என்றாவது நாம் நம் வாயால் சொல்லுவானேன்? அதனால்தான் நான் மழுப்பிப் பேசி அவனை உன்னிடம் அனுப்பினேன். அநேகமாகப் பயணம் போய்விட்டு உன் தம்பி இங்கே கால் அடி எடுத்து வைக்கமாட்டான் என்று தோன்றுகிறது.''

''இருந்தாலும் சீதாராமனுக்கு ஒரு கடிதாசு இன்றைப் போஸ்டிலேயே எழுதிப்போட்டு வாருங்கள்.''

''கடிதாசா? இன்றைப் போஸ்டில் எப்படிச் சேரும்? எழுத வேணுமா, என்ன?''

''எல்லாத்துக்கும் எழுதினால் நல்லதுதான். மணி மனுஷ்யாளுக்குத் தகுந்தாற்போல் பேசுவான். 'உன் அம்மா, அப்பாவிடம் பேசி முடித்துவிட்டேன். வெள்ளிக் கிழமை பாக்கு வெற்றிலை வாங்கப் போகிறது. உனக்குத் தெரிவித்துவிட்டு உன் இஷ்டப்படி ஏதாவது மாப்பிள்ளை ஜோடிப்பு சாமான்களை வாங்கிக் கொடுப்பதற்காகப் பட்டணம் வந்திருக்கிறேன்' என்று அவனிடம் சொன்னால் அவனும் சிறுபிள்ளையானதால் நம்பிவிடலாம். மணி எதுவும் செய்யமாட்டான் என்கிறதில்லை.''

*    *    *    *

மணி தன் சம்சாரம் நாகுவிடம், தான் பட்டணம் போக வேண்டிய அவசியத்தை எடுத்துக் காட்டினார்.

''அவர்கள் பெரிய இடமாக எதிர்பார்க்கிறார்கள்போல் இருக்கிறது. முன் மனுஷ்யாளாக இல்லை. புது மகிமை வாய்த்திருக்கிறது. உங்களுக்கு இங்கே வாங்கிக் கொண்ட பேச்சுப் போதாது. இன்னும் காசைச் செலவு செய்துகொண்டு பட்டணம் போய் மருமானிடம் அவமானப்பட்டுக்கொண்டு வரவேணுமாக்கும்'' என்று நாகு இடித்துக் காட்டினாள்.

''என்னமோ நம்ம குழந்தைக்கு ஒரு அகமுடையானை அந்தப் பிரும்மா சிருஷ்டிக்க மறந்தா போயிருப்

பான்? வீணாகக் கர்வம் பிடித்தவர்கள் காலைக் கட்டும் விவகாரம் எனக்குப் பிடிக்கவில்லை'' என்று கனிந்து பேசினாள்.

"இந்த வேளையிலே போனவாளுக்கு ஒரு டம்ளர் காபிகூடக் கொடுக்கவில்லையா? என்ன தாக்கை? கிராதகி! இவளிடம் சம்பந்தம் பண்ணினால் நம் குழந்தைக்கு என்ன சுகம் கிடைக்கப் போகிறது?'' என்று தூஷித்துப் பார்த்தாள்.

பிடிவாதமுள்ள மணி தன் பிரயாணத்தை நிறுத்தவில்லை. "சகுனி மாதிரி புறப்படும் வேளையிலே அஸ்துச் சொல்லாதே'' என்று அவளை அடக்கிவிட்டு ஐந்து மணிக்குள் ஸ்டேஷனுக்கு வந்து சேர்ந்தார், ஒரு படுக்கை டார்ச்சு லைட்டுடன்.

ஆனால் ஸ்டேஷனில் ரெயில் வரும் பரபரப்பு ஒன்றையும் காணவில்லை. டிக்கட் ஜன்னல் திறக்கப்படவில்லை. விசாரித்ததில் ரெயில் அன்று 1½ மணி லேட்டாக வரும் என்று தெரிந்தது. 'கிருஷ்ணா' என்று ஒரு பெஞ்சி ஓரத்தில் உட்கார்ந்தார் மணி. படுக்கையைப் பெஞ்சியின் கீழ் வைத்துக்கொண்டார். டார்ச்சைப் படுக்கை கட்டிய கயிற்றின் இடையில் செருகியிருந்தார். மணியின் சிந்தனை பல பாதைகளில் ஓடிக்கொண்டிருந்தது.

சிறிது நேரத்தில் மூன்று ஆசாமிகள் வந்து அந்தப் பெஞ்சியில் உட்கார்ந்தார்கள். அவர்களைப் பார்த்தால் பிரயாணிகளாகத் தோன்றவில்லை. மூட்டை முடிச்சு ஒன்றையும் காணவில்லை. மூவரும் ஒரு கோஷ்டி என்பது அவர்களின் சிரிப்பு, களிப்பு விளையாட்டுகளினால் தெரிந்தது. அவர்கள் அநேகமாக ஒரே மாதிரியாகத்தான் உடுப்பும் உடுத்திருந்தார்கள். உள்ளே அணிந்திருந்த வலை பனியன் தெரியும்படியான காகிதம் போன்ற மெல்லிய வெள்ளை அரைக்கை ஷர்ட்டு, அரையில் கீழே புரளும்படி கட்டிய தூய நான்கு முழ மில் வேஷ்டி, கிராப்புத் தலை, கறுத்த மேனி, காலில் புதுச் செருப்பு. ஒருவன் மட்டும் கழுத்தில் லேசான

தங்கச் செயினும், கையில் ரிஸ்டு வாட்சும் அணிந்திருந்தான். அவன் தோள்மேல் விசிறி மடிப்புச் சேலம் அங்கவஸ்திரம் தவழ்ந்தது. மற்ற இருவரும் துண்டுதான் போட்டுக்கொண் டிருந்தார்கள். அவர்கள் ரெயில்வே ஸ்டேஷனில் எந்த விதமான விசேஷ காரியம் உடையவர்களாகவும் தோன்றவில்லை. தமாஷாகப் பொழுது போக்கவே அங்கே வந்திருந்ததாகத் தோன்றிற்று. அவர்களின் ஹாஸ்யம் நிமிஷத்துக்கு ஒரு தரம் ஸ்டேஷன் கூடத்தையே அதிரச் செய்துகொண்டு ஒலித்தது. மத்தியிலிருந்த விசிறி மடிப்புத் தங்கச் செயின், ரிஸ்டுவாட்சைப் பக்கத்திலிருந்த இரு தோள்துண்டுத் தோழர்களும் உற்சாகப்படுத்தி உடுக்கடித்துக்கொண் டிருந்தது நன்கு விளங்கிற்று. நடுநாயகம் கம்பீரமாக உட்கார்ந்திருந்தான். கால்களை முன்னே எட்டினவரை நீட்டி, முதுகை விறைக்கவைத்து, முகத்தை மேல் நோக்கச் செய்து, கைகளை இரு பக்கங்களிலும் முழம் போடுகிறவனைப்போல் விரித்துவிட்டு, அவன் வீற்றிருந்த கோலத்தைப் பார்த்தால் ஏசுநாதர் சிலுவையில் அறையப்பட்ட காட்சி ஞாபகத்துக்கு வரும். அவன் புகைச் சுருட்டைப் பற்றவைத்திருந்தான். நண்பர்கள் அவன் செவிகளில் பொழியும் ஹாஸ்ய மொழிகளுக்கு அவன் குலுங்கக் குலுங்கச் சிரித்தபோது சிலுவையிலிருந்து விடுபட உதைத்துக்கொள்ளுபவன்போல் காணப்பட்டான். வாய்விட்டுச் சிரிக்கப் புகைச் சுருட்டுத் தடை செய்தபடியால், அவன் சிரிப்பது மூச்சுக்கு ஒரு முறை கனத்த படலமாய்க் கக்கப்படும் புகைத்திரள்களால் ஊகிக்கத்தகுந்ததாக இருந்தது. தாங்க முடியாத சிரிப்பு வந்தபோது மட்டும் அந்த மனிதன் புகைச் சுருட்டை வலது கையின் இருவிரல்களால் அநாயாசமாக அப்புறப்படுத்திக்கொண்டு கோழி விக்கலுக்கு ஒப்பான ஒருவித விசித்திர சப்தத்துடன் சிரித்தான். அப்போது அவன் காண்பித்த ஹஸ்த விந்நியாசம் துவைத தத்துவத்தை விளக்கும் ஸ்ரீமத்வாசாரியின் உபதேச ஹஸ்தத்தை ஞாப

கப்படுத்துவதுடன், தணிந்து புகையும் சுருட்டுமூலம் தூமமார்க்கம் என்று வேதாந்தங்களில் சொல்லப்படும் மார்க்கத்தையே தான் கடைப்பிடித்திருப்பதையும் புலனாக்குவதாக இருந்தது. அதே சமயத்தில் அம்மனிதனுடைய முகத்துவாரம், நாசித்துவாரங்களின் வழியே எழுந்து சுழலும் தூமச்சுருள்கள் தமோகுணமயமான அவன் ஆத்மாவின் அத்தாட்சிகளாகத் தோன்றின.

ஒவ்வொரு தரமும் சிரிப்புக்கு முற்றுப்புள்ளி வைப்பதுபோல் இரு விரல்கள் இடையில் தங்கிய அந்தத் தூமவர்த்தியின் எச்சில் ஊறிய நுனியைப் பற்களின் கடிப்பை நாடச் செய்த அவனது வலது கை, மோட்டார்களின் முன்னே கண்ணாடிப் பலகையில் பனிமழைச் சாரல்களின் மூட்டத்தை விலக்க அரைவட்ட ஓட்டத்தில் வேலை செய்யும் விசைக்குச்சியை ஞாபகப்படுத்தியது.

இவ்வளவு சுவாரசியமாக அவர்கள் என்ன விஷயத்தைப் பேசிக்கொண்டிருந்தார்கள் என்று மணியால் அறிய முடியவில்லை; அவர் அறிய விரும்பவும் இல்லை. அவர்கள் கதைக்கு, "மாப்பிள்ளை முறுக்கு", "மாமன் முறிவு" என்பதுபோல் ஒன்று தலைப்பாக இருக்கலாமென்று மணி நினைத்தார். மணிக்குப் பெஞ்சியில் உட்கார்ந்திருப்பது சங்கடமாக இருந்தது. இட நெருக்கடியுடனும், அட்டகாச சப்தங்களுடனும், புகைப்படலம் அவரைக் கும்பக ப்ராணயாமம் செய்யும் நிர்ப்பந்தத்தில் ஆழ்த்திவிட்டபடியால் அவர் எழுந்திருக்கப் பார்த்தார். ஆனாலும் சரேலென்று எழுந்துவிட மனம் வரவில்லை. முதலாவது, வேறு ஒரு பெஞ்சியும் காலியில்லை. இரண்டாவது, அவர் முன்னதாகவே பற்றிக்கொண்ட இடத்தை ஏன் விடவேண்டும்? அப்படி விட்டால் படுக்கையையும் அல்லவா தூக்கிக்கொண்டு செல்லவேண்டும்? மூன்றாவது, இதுவரையில் தான் ஒருவன் பக்கத்தில் இருப்பதாகவே அம்மூவரும் கவனிக்காதிருக்க, இடத்தைக் காலி செய்வதன் மூலம் அவர்கள் தன்னைக் கவனிக்கும்படி

ஏன் செய்துகொள்ள வேண்டும்? நான்காவது காரணத்தை மணி சிந்திக்கும் முன் உண்மையில் அங்கே உட்கார்ந்திருக்கத் தமக்குச் சம்மதமா, செளகரியமா என்று மற்றொரு விதமாக ஆலோசிக்கத் தொடங்கினார்.

'அசெளகரியத்தை அநுபவித்துக்கொண்டாவது இடத்தைப் பிடித்துக்கொண்டு கஷ்டப்படுவது சுதந்தரமா? விட்டு ஒழித்துவிட்டு யதேச்சையாகப் போவது சுதந்தரமா? எழுந்திருந்துவிட்டால் அவர்களுக்கும் இடவசதி அதிகமாகும். நமக்கும் நெருக்கடியிலிருந்து விடுதலை ஏற்படும்.' மணிக்கு உட்கார்ந்திருப்பது கோழைத்தனம் என்றும், எழுந்து செல்வது தீரத்தனம் என்றும் விளங்க ஆரம்பித்தது. படுக்கையைக் கிளப்பக் குனிந்தார். அப்போது, "நீங்கள் ஊருக்குப் போகிறீர்களா?" என்று கேட்கும் உரத்த குரல் ஒன்று காதில் விழுந்தது. மணி நிமிர்ந்து திரும்பிப் பார்த்தார், வேறு ஒருவரும் இல்லை. சாமாபிள்ளை ஐயாப்பயல்தான். "ஏண்டா! ஐயாப் பயலே! எங்கே வந்தாய்?" என்று கேட்டுக்கொண்டே மணி பெஞ்சியை விட்டு எழுந்திருந்து ஐயாப்பயலிடம் போனார். அவர் போகாமற்போனால் ஐயாப்பயல் அவரிடம் வந்திருப்பான். அங்கே உட்கார்ந்துகொண்டு பேச்சு வார்த்தைகள் நடத்த மணி இஷ்டப்படவில்லை. அவர் ஐயாப்பயலைக் கூப்பிட்டுக்கொண்டு எழுந்திருந்ததும் அவருக்குப் பின்னால் இடி விழுந்தாற்போல் மூன்று பேர்களுடைய சிரிப்பும் கேட்டது. மணி திரும்பிப் பார்க்கவே வெறுப்படைந்தார். திரும்பிப் பார்த்தால் சமய சந்தர்ப்பத்துக்கு விரோதமாக ஏதாவது விவகாரங்களில் தலையிட்டுக்கொள்ள நேரலாமென்று அவர் நினைத்து அந்நிலையில் ஒன்றையும் பொருட்படுத்தாமல், முகமலர்ச்சியை வரவழைத்துக்கொண்டு சாமாபிள்ளை ஐயாப்பயல் ஸ்டேஷனுக்கு வந்த காரணத்தை விசாரிக்கலானார்.

"எங்கேயடா வந்தாய்?"

"அதுதான் ஒரு இது போட.........".

"ஏது?"

"அதுதான் ஒரு தபால்........."

"தபாலா?"

"அதுதான் மாமா, தபாலாபீஸுக்கு லெட்டராப் போச்சாம்."

"அதுக்காக?"

"ரெயில்லே போடச் சொன்னார்."

"யார்?"

"அவர்தான்—மேலண்டைத் தெருவிலே......"

"மேலண்டைத் தெருவிலே?"

"குள்ளமாய் சிகப்பாய்..."

"என்னடா சொல்லறே?"

"ஒன்றுமில்லை மாமா, அதுதான் அந்த வாத்தியார் இருக்காரோ இல்லையோ? அவர் ஒரு லெட்டர் கொடுத் தார். போஸ்டாபீஸுக்கு நாழியாச்சாம். ரெயில்லே போய் வந்து, இது பண்ணச் சொன்னார்."

"எந்த வாத்தியார், நாலாவது ஸாரா?"

"இல்லை மாமா, உங்களுக்குப் புரியல்லியே. அத்தி யயனம் சொல்லி வைக்கிற வாத்தியார்."

"சீனு வாத்தியாரா?"

"சீனு வாத்தியார் உயரமான்னு இருப்பார்! நான் தான் அப்பவே குட்டைன்னு சொன்னேனே."

"ஏண்டா ஐயாப்பயலே! அவருக்குப் பேர், ஊர் இல்லையா?"

"இந்த ஊர்தான்."

"பேர்?"

"எல்லாம் உங்கள் உறவுதான்."

"என்னடா, எலே; நான் நாலு நாழியாய்க் கேட்கிறேன்..."

"நான்தான் சொல்லுகிறேனே. உங்கள் வேம்பு அம்மாமி இருக்காளோ இல்லையோ?"

"ஆமாம்."

"அந்த மாமாதான்."

"சேஷு சாஸ்திரிகளா?"

"இப்போதான் உங்களுக்குப் புரிந்தது!"

மணிக்கு அக்கறை அதிகரித்தது; மனம் குழம்பிற்று. சிந்தனை லகானில்லாமல் ஓடத் தலைப்பட்டது.

"அப்படி என்ன அவசரம்? யாருக்கு? எந்த ஊருக்கு?"

"எனக்கு என்ன மாமா தெரியும்? கடிதம் இதோ இருக்கிறது. இரண்டணாக் காசு கொடுத்திருக்கிறார். ரெயிலில் அதிகப்படி ஸ்டாம்பு ஒட்டிப் போடச் சொன்னார். அதுதான் வந்தேன். உங்களைப் பார்த்தேன். ரெயில் எப்போது வரும்? இருட்டிப் போய்விடும்போல் இருக்கிறதே."

"ரெயில் இன்னிக்கு லேட்டு."

"ஐயையோ! நான் அப்பாவிடங்கூடச் சொல்லிக் கொள்ளவில்லையே! கன்றுக்குட்டியைக் குளிப்பாட்டி ஓட்டிக்கொண்டு வந்தேன். அந்த வாத்தியார், 'ஏ ஐயாப் பயலே, ஏ ஐயாப்பயலே!' என்று கூப்பாடு போட்டார். (அந்த வாத்தியார் போட்ட சப்தத்தை நினைத்து ஐயாப்பயல் சிரிப்பை அடக்க முடியாமல் சிரித்தான்.) நான் பயந்து போய்விட்டேன். அவாத்துக் கொல்லையிலே மாடு மேய்ந்ததற்காக வையப்போகிறார் என்று நினைத்தேன். ஆனால் அவர் கூப்பிட்ட காரியம் வேறு."

"இந்த லெட்டரைக் கொடுத்தாராக்கும்?"

"கொடுத்துவிட்டு என்ன சொல்கிறார், 'ஜாக்கிரதை, கீழே போட்டுவிடாதே. இந்தா காசு, பத்திரம். கெட்டுப் போக்கிவிட்டு அங்கே போய் முழிக்காதே. (ஐயாப்

பயலுக்குச் சிரிப்புத் தாங்கவில்லை.) நானு காசைக் கீழே போடுவேனா? - 'ரெயிலுக்கு நாழியாகிவிட்டது. உடனே போ! எங்கேயாவது பராக்குப் பார்த்துக்கொண்டு நிற்காதே. போய்விட்டு வந்து என்னிடம், 'போட்டுவிட்டேன்' என்று சொல்லிவிட்டுப் போ. பேசாமல் போய்விடாதே. என்ன நான் சொல்லுகிறது, தெரிஞ்சுகண்டாயா!' (ஐயாப் பயலுக்குச் சிரிக்காமல் இருக்க முடியவில்லை.) என்ன எச்சரிக்கை! என்ன ஜாக்கிரதை! - அதுலேயே ரெயிலுக்கு நாழியாகிவிடும் என்று நினைத்தேன். இங்கே வந்தால் இன்னும் லேட்டாக வரப்போகிறது ரெயில் என்கிறீர்கள்!"

"ஆமாம்டா! ராத்திரி 7-8 மணிகூட ஆகும் என்று சொல்கிறார்கள்."

"ஐயையோ! நான் அத்தனை நாழி காத்திருக்க முடியாதே; நீங்கள் எங்கே மாமா போகிறீர்கள்?"

"நான் பட்டணம் போகிறேன்."

"மாமா, உங்களை நமஸ்காரம் பண்ணிக் கேட்டுக்கொள்கிறேன். நீங்கள் எனக்கு ஒரு உபகாரம் பண்ணுவேளோ?"

"என்னடா பண்ணணும்?"

"நீங்கள்தான் ரெயிலுக்குப் போறேளே."

"ஆமாம்."

"ஏழு மணியோ எட்டு மணியோ இங்கே காத்திண்டுதான் இருக்கப்போறேள்."

"ஆமாம்."

"நான் அத்தனை நாழி காத்திண்டிருக்க முடியாது. அப்பாவுக்குத் தெரிந்தால் அடிக்க வருவார். இருட்டிலே தனியாக அவ்வளவு தூரம் வீட்டுக்குத் திரும்பிப் போவதும் ரொம்ப அசௌகரியம். நீங்கள் ஒன்று பண்ணினால் ரொம்ப உபகாரமாக இருக்கும்."

"என்னடா! சொல்லேன்."

"இந்த லெட்டரை நீங்கள்..."

"சரிடா, இதுதானு பிரமாதம்? கொடு. போட்டு விடுகிறேன்."

"நல்ல வேளை மாமா! இந்தாருங்கோ லெட்டர். இந்தாருங்கோ இரண்டணு."

"அணு வேண்டாம்டா. நீயே வைத்துக்கொள்."

"இந்தாங்கோ மாமா! எப்படி ஸ்டாம்பு ஒட்டிப் போடுவேள்?"

"நான் ஒட்டிக்கறேன். நீ போ! போகச்சே நாலு பழத்தை வாங்கித் தின்றுவிட்டுப் போ; பாவம்!"

ஐயாப்பயலுக்கு வாயெல்லாம் பல்லாகப் போய் விட்டது. கடிதத்தை மணியிடம் கொடுத்து அணுவை இடுப்பில் செருகிக்கொண்டு நடையைக் கட்டினன். மணி கடிதத்தின் அட்ரஸைப் பார்த்தார். 'சீதாராமன்' C/O வேங்கடசுப்பையர், மேல மாம்பலம், மதராஸ்' என்று எழுதியிருந்தது. மணியின் மனத்தில் பலத்த சந்தேகங்கள் எழுந்தன. கடிதத்தைச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டு தன் பூர்வ ஸ்தானத்தைத் திரும்பிப் பார்த் தார். பெஞ்சி காலியாக இருந்தது. படுக்கை ஞாபகமும் வந்தது. வெகு நாழியாகப் பேசிக்கொண் டிருந்துவிட் டோமே என்ற அதிர்ச்சி மனத்தைத் தாக்கியது. பெஞ்சியின் கீழே படுக்கை இவர் வைத்தபடியே இருந்தது. விரைந்து சென்றார் பெஞ்சிக்கு. அதில் உட்கார்ந்துகொண்டு படுக் கையை வெளியில் இழுத்தார். அதன் மேல் செருகி யிருந்த டார்ச்சு லைட்டு? ஆகா! டார்ச்சு லைட்டு! 'ஐயையோ, டார்ச்சு லைட்டைக் காணுமே!' படுக்கையைத் தூக்கிப் பெஞ்சியின்மேல் வைத்துப் புரட்டிப் பார்த்தார். 'கீழே விழுந்து ஓடியிருக்குமோ?' என்று கண்களால் எட்டிய மட்டும் தேடினர். ஓரிடத்திலும் டார்ச்சு லைட்டைக் காணும்! காணும்! போய்விட்டது? கெட்டுத்தான் போய்விட்டது. 'ஆம், திருட்டுத்தான்! இங்கே உட்கார்ந் திருந்தவர்கள்! ஐயையோ! அருமையான டார்ச்சு லைட்

டாச்சே! மூன்று பாட்டரி லைட்டாச்சே! இப்போது 30 ரூபாய் கொடுத்தாலும் கிடைக்காதே! அட பாவிகளா? என்ன டிரஸ்ஸு, என்ன டாம்பீகம்! என்ன அட்டகாசம்! அவர்களை விட்டு அது போகவில்லை! போலீஸ்! போலீஸ்!'

மணியின் பரிதாபத்தையும் எதையோ தேடுகிற பரபரப்பையும் கவனித்துச் சில ஜனங்கள் விரைந்து விசாரிக்கலானார்கள். மணி கொஞ்ச தூரத்தில் ஒரு சிவப்புத் தலைப்பாகையைப் பார்த்ததும், "ஐயா! போலீஸ்! ஐயா! போலீஸ்!" என்று கூக்குரலிட்டார். சில ஜனங்கள் ஓடிப்போய் ஒரு போலீஸ் கான்ஸ்டேபிளைக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். மணி டார்ச்சு லைட்டின் அடையாளத்தையும், சந்தேகிக்கப்பட்ட மூன்று மனிதர்களின் அடையாளங்களையும் வருணித்து அதிகப் படபடப்புடன் தட்டுத் தடுமாறும் வார்த்தைகளைக் கொட்டினார். இதற்குள் ரெயில் வர மணி அடித்தது; டிக்கட் ஜன்னலும் திறக்கப்பட்டது.

மணி ஊருக்குப் போவதைப் பற்றிச் சிந்திக்கவே இல்லை. மணி அடித்ததும் டிக்கெட்டு ஜன்னலுக்கு ஜனங்கள் ஓடி நெறிவதும் டிக்கட்டுத் தேதி அடிக்கும் மிஷின் தடக் தபக் என்று சப்தம் செய்யத் துவக்கியதும் எல்லாம் அவருக்குச் சொப்பனம்போல் இருந்தது. நாகு சகுனத்தடை செய்ததை நினைத்துப் பல்லைக் கடித்துக் கொண்டார். ஸரஸுவின் கல்யாணமென்றால் அதிருஷ்டம் இப்படி இருக்கிறதே என்று பெருமூச்சு விட்டார். ஜயாப்பயல் கொடுத்த கடிதம் விஷமமான கடிதமாகத் தான் இருக்க வேண்டுமென்று நினைத்தபோது அவருக்கு எரிச்சலாக வந்தது. ஏமாற்றும் தொழிலுள்ளவர்களின் ஆடம்பரத்தில் தாம் மயங்கிவிட்டதில் தம்மை வெறுத்துக் கொண்டார். மணியின் மனது ஒரு பெரிய ரெயில்வே ஜங்ஷனைப்போல் ஆயிற்று. அதில் சிந்தனைகள் கொதிப்புடனும் வேகத்துடனும் படபடப்புடனும் பல பக்கங்களில் ஓடின. அவைகளில் புகை படர்ந்து இருள் பெருகியது.

ரெயில் புறப்பட மணி அடித்ததையும், கார்டு ஊதியதையும் கேட்டு மணி விழித்துக்கொண்டார். தான் ஏகாங்கியாக இருப்பதை உணர்ந்தார். ஜனங்கள் அவரவர்கள் ஜோலியைப் பார்த்துக்கொண்டார்கள். போலீஸ்காரன் திருடர்களைத் தேடப் போயிருப்பதாய் மணி நினைத்துக் கொண்டார். ஆனால் அவரிடம் மறுபடி போலீஸ்காரன் அணுகவில்லை. ரெயில் ஸ்டேஷனில் அஜாக்கிரதையாக இருந்தால் சாமான்கள் கெட்டுப்போவது சகஜந்தானே? போலீஸ்காரர்கள் என்ன செய்வார்கள்? தன் துக்கத்தைத் தானே சமாதானப்படுத்திக்கொண்டு, தன் நஷ்டத்தைத் தானே பொறுத்துக்கொள்ள வேண்டியதுதான். துக்கத்தையும் நஷ்டத்தையும் ஒருவரும் பங்கு போட்டுக் கொள்ள வரமாட்டார்கள் என்று மணி தீர்மானித்துக் கொண்டு வீட்டுக்கு ஒரு வண்டி பேசி அதில் படுக்கையை எடுத்து வைத்துவிட்டு ஏறி உட்கார்ந்தார்.

* * * *

மணி வீடு சேர்ந்து கதவைத் தட்டி உரக்கக் கூவின பிறகு, நாகு தூக்கி வாரிப் போட்டாற்போல் எழுந்து ஓடி வந்து கதவைத் திறந்தாள். அவளுக்குத் தூக்கக் கலக்கம் ஒரு பக்கம், அதிர்ச்சி ஒரு பக்கம். மணியின் கைகால்கள் முன்போல் இருக்கின்றனவா என்று முதலில் கவனித்துத் திருப்தி செய்துகொண்டாள். ஜுரம், தலைவலி ஏதாவது வந்திருக்குமோ என்று நிதானிக்கலானாள். மணி வண்டிக்காரனை அனுப்பும்வரையில் கேள்வி கேட்காதிருப்பது நாகுவுக்கு முள்மேல் நிற்பதுபோல் இருந்தது. ரெயில் தவறியிருக்க நியாயமில்லை. ஆனால் டிக்கெட் கிடைத்திருக்காது என்று முடிவு செய்துகொண்டாள். அவராகச் சொல்லும் முன் தான் எப்படிக் கேட்பது என்று தயங்கினாள். தான் போக வேண்டாம் என்று தடுத்ததைக் குறித்துக் குற்றம் கூறப்படலாம் என்று அவளுக்கு ஞாபகம் வந்தது. மணி நாகுவின் முகத்தை நேராகப் பார்க்கவே இல்லை. தாமே குனிந்து படுக்கையைத்

தூக்கி உள்ளே எடுத்து வந்தார். நாகு பல சந்தேகங்களால் கலங்கிய மனத்துடன் பயமும் தடதடப்புமுள்ள ஹீனக்குரலில், "சாப்பிடுகிறீர்களா? பால்கூட வைக்கவில்லையே! மோர் குத்திவிட்டேன்" என்று கேட்டுவிட்டு, தீபாவளியில் இரட்டை வெடிக்கு நெருப்பு வைத்துவிட்டு, அது வெடித்துச் சுழன்று நெருப்பைக் கக்கிக்கொண்டு ஆகாசத்தில் எழுந்து பாய்வதை எதிர்பார்த்து எட்டிப் போய் நிற்கும் சிறுமியைப்போல் நடுங்கிக்கொண்டே வழியை விட்டு நகர்ந்து நின்றாள். "தீர்த்தம் கொண்டுவா, போதும்" என்று சொல்லிவிட்டு மணி ஊஞ்சலில் படுக்கையை விரித்தார். கூடத்தில் ஒன்றும் அறியாத பேதையாகத் தூங்கும் ஸரஸுவை ஒரு முறை பார்த்துப் பெருமூச்சு விட்டார். தீர்த்தத்தைக் கொண்டு வந்து கொடுத்துவிட்டு நாகு, "ஏன் வந்துவிட்டீர்கள்?" என்று மெதுவாக வினவினாள்.

மணி ஒரு பொய்ச்சிரிப்புச் சிரித்துக்கொண்டு, "அந்தப் பயலை ரெயிலில் பார்த்துவிட்டேன்" என்றார்.

"யாரை?"

"அந்தச் சீதாராமன் பயலைத்தான்."

"அவன் எங்கேயிருந்து எங்கே வந்தான்?"

"பட்டணத்திலிருந்து அவன் வருகிறான். நான் பட்டணம் போகத் தயாராக இருக்கிறேன். அவன் இறங்கினதைப் பார்த்துவிட்டு என் பிரயாணத்தை நிறுத்திக்கொண்டேன். இரண்டு ரெயில்களும் இங்கேதான் 'மீட்டிங்கு' ஆச்சு."

"சீதாராமனைப் பார்த்துப் பேசிக்கொண்டிருந்தீர்களா?"

"எல்லாம் பேசிக்கொண்டிருந்தேன். 'நான் என்ன மாமா சொல்லப்போகிறேன். எல்லாம் அப்பா அம்மா சொன்னால் சரிதான் என்கிறான் பயல். சரி, காலையில் பார்த்துக்கொள்ளலாம் என்று அவனை விடைகொடுத்து

அனுப்பிவிட்டு நான் ஒரு வண்டியைப் பிடித்துக்கொண்டு வீடு வந்து சேர்ந்தேன். (சிரித்துக்கொண்டு) நீதான் நான் போகும்போதே அஸ்து என்று..."

"எனக்குத் தெரியும் சொல்லிக் காண்பிப்பீர்கள் என்று. ஆனால் இப்போ என்ன வந்துவிட்டது? கும்பிடப்போன தெய்வம் குறுக்கே வந்தது. பத்து இருபது செலவில்லாமலே மாப்பிள்ளை வந்துவிட்டான்."

மணி (அதிகம் சிரித்துக்கொண்டு), "பணம் மிச்சப் பட்டது உண்மைதான். மாப்பிள்ளை வந்துவிட்டானென்று அதற்குள் அல்ப சந்தோஷப்படாதே. அது கிடக்கட்டும். வெற்றிலை சிவல் தட்டைக் கொண்டுவா."

நாகு தட்டைக் கொண்டுவந்து வைத்துவிட்டுச் சுண்ணும்பு இல்லாததைப் பார்த்து, "உள்ளே இருந்து சுண்ணும்பு எடுத்து வரவேணும். கொஞ்சம் டார்ச்சு லைட்டைக் கொடுங்களேன்" என்று கையை நீட்டினுள்.

மணியின் முகம் சரேலென்று இருள் மண்டியது. "கைவிளக்கை எடுத்துக்கொண்டு போயேன்" என்றார் கவலை தோய்ந்த குரலில். அவருடைய வெறித்த கண்கள் மனக்குழப்பத்தை எடுத்துரைத்தன. நாகு சந்தேகப் படலானுள். "கைவிளக்கில் விளும்பைப் பிடிக்க எண்ணெய் விட்டிருக்கிறேன். எடுத்தால் எண்ணெய் வழியும். டார்ச்சையே கொடுங்கள்; ஏன்? டார்ச்சு எங்கே?"

"நான் எடுத்துப் போனது ஞாபகமாக இல்லை. அதைத் தேடுவதைவிட வெற்றிலை போட்டுக்கொள்ளாமல் இருந்து விடலாம்" என்றார் மணி, அலுத்துக் கொண்டவர் போல்.

"ஏன் இப்படிச் சொல்லுகிறீர்கள்? நீங்கள் டார்ச்சை எடுத்துப்போனது எனக்கு நிச்சயமாகத் தெரியும். எங்கே டார்ச்சு?"

மணி மனோதிடம் இழந்தார். "டார்ச்சு கெட்டுப் போய்விட்டது."

"கெட்டா போய்விட்டது! எங்கேயாவது கீழே விழுந்துவிட்டதா?"

"என்னை அறியாமலா விழுந்துவிடும்?"

"மறந்து வைத்துவிட்டு வந்துவிட்டீர்களா?"

"நானா மறப்பவன்?"

"பின்னே எங்கே அது? உடைந்து போய் விட்டதா?"

"நான் அஜாக்கிரதையாக இருந்தால் அல்லவா உடையும்?"

"பல்பு பியூசாகிவிட்டதோ?"

"வாங்கி எட்டு வருஷம் ஆகிறதே. ஒரு தடவையாவது பல்பு மாற்றியிருக்கிறேனா?"

"என்ன நடந்தது பின்னே?"

"திருட்டுப் போய்விட்டது."

நாகு திகைத்துப் போனாள்.

"அதுமட்டுந்தான் போச்சா? பணம் காசும் போய்விட்டதா?" என்றெல்லாம் கேட்க ஆரம்பித்தாள். மணி ஆதியோடந்தமாக விருத்தாந்தங்களை வருணித்தார். நாகு ஊக்கத்துடன் கேட்டு வந்தாள்.

"அப்போ, சீதாராமனைப் பார்த்தது பொய்தானே?"

"காலையில் பேசிக்கொள்ளலாம் என்பதற்காக ஒரு பொய்யைப் பிரயோகித்தேன். அது பயன்படவில்லை" என்றார் மணி அசட்டுச் சிரிப்புடன்.

"அந்த லெட்டரைப் போடவில்லையே?"

"இல்லை. நாளைப் போஸ்டில் போட்டுவிடலாமென்று உத்தேசம்."

"அந்த லெட்டர் எங்கே இருக்கிறது?"

"சட்டைப் பையில் - ஏன்?"

"அதைப் பிரித்துப் பார்க்கவேணும். நம்ம விஷய மாகத்தான் எழுதியிருப்பார். அதைப் பார்க்காமல் அனுப்பவே கூடாது. ஈச்வரன்தான் இந்தச் சதியை உடைத்தறிய நமக்கு உத்தரவு இட்டிருக்கிறார். டார்ச்சுப் போனதற்குப் பதிலாக இந்த லெட்டர் உங்கள் கையில் சிக்கியது எனக்குத் துக்கமாகவே இல்லை. அவாள் சுபாவமே அப்படித்தான். முன்னே ஒன்று, பின்னே ஒன்று. நான் சொல்லுகிறேன் என்று நினைத்துக்கொள்ளாதீர்கள். அதனால்தான் என்ன சம்பாதித்தாலும் அவர்களுக்கு ஒட்டவில்லை."

"காலையில் பார்த்துக்கொள்ளலாம்" என்று ஒத்திப் போடப் பார்த்தார்.

நாகு, "அதைப் பார்க்காவிட்டால் எனக்குத் தூக்கம் வராது" என்று பிடிவாதம் பிடித்தாள்.

"இதற்குத்தான் நான் உன்னை முதலிலேயே வேறு வழியில் சமாதானம் செய்ய நினைத்தேன். உண்மையைச் சொன்னால் இப்படி வந்து முடியும் என்று எனக்குத் தெரியும்."

"அந்தப் பாவம் என்னுடையதாக இருக்கட்டும். கடிதத்தைக் கொடுங்கள். நான் உடைத்துப் பார்க்கிறேன். உங்களுக்கு வேண்டாமென்றால் நான் விஷயத்தைச் சொல்லவில்லை. நான் அதைப் பார்க்காவிட்டால் இரவு தூங்க மாட்டேன்."

மணி எழுந்திருந்து கோட்டுப் பாக்கெட்டிலிருந்து அந்த லெட்டரை எடுத்துக் கவரை மெள்ளத் திறக்கப் பார்த்து முடியாததால் கிழித்துவிட்டு லிகிதத்தை வெளியில் எடுத்து வாசிக்கலானார்.

உ

ஸ்ரீ சிவ: சரணம்

சியாமளாம்பாபுரம்,
சித்திரபானு, தை, 17,
ஸ்திரவாரம்.

உபயக்ஷேமம்.

சி. சீதாராமனுக்கு அநேக வேதோக்த ஆசீர்வாதம். இவ்விடம் எல்லோரும் க்ஷேமம். அவ்விடத்தில் ம-ள-ள-ஸ்ரீ ஐயர் அவர்கள் குடும்ப க்ஷேமத்துக்கும் உன் க்ஷேமத்துக்கும் எழுதவும். உன்னிடமிருந்து பல காலமாகக் கடிதம் வரவில்லை. ஏன்? அடிக்கடி கடிதம் வராமல்போனால் பல சிந்தனைகளால் மனம் தளர்ந்து போகிறது. ஸ்ரீ ஐயர் அவர்களின் கிருபா விலாஸத்தால் உனக்கு மகத்தான ச்ரேயஸ் உண்டாகப் போகிறது என்பதில் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. பகவத் ஸங்கல்பம் அநுகூலமாக இருப்பதற்கு ஸ்ரீ ஐயர் அவர்கள் உன்னிடம் வைத்திருக்கும் அவ்யாஜமான அன்பே அத்தாட்சியாகும். அவர்களிடம் விநயமாக நடந்துகொண்டு நன்றாய்ப் படி. எங்களுக்கு (முக்கியமாக உன் தாயாருக்கு) வர வரத் தேக சௌக்கியம் குறைவா யிருந்து வருகிறபடியால், நீ குடும்ப பாரத்தை ஏற்றுக் கொள்ளக் கூடியவனாக ஆகவேண்டுமென்ற பிரார்த்தனை கொஞ்சகாலமாக இருந்துவருகிறது. எல்லாவற்றுக்கும் ஸ்ரீ ஐயர் அவர்களே பொறுப்பாளி. உன்னை ஒரு தகுந்த உத்தியோகத்தில் ஸ்தாபித்து நல்ல விவாகத்தைச் செய்து வைத்து, இந்த ஏழைக் குடும்பத்தை வறுமையிலிருந்தும் கஷ்டத்திலிருந்தும் அவர்களே உத்தாரணம் செய்து மஹோபகாரம் செய்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. அவர்களின் அரோக திடகாத்திரத்தையும், மேல் மேல் ஐச்வர்யாபிவிருத்தியையும், குடும்ப க்ஷேமத்தையும் நான் பிரதி தினமும் சியாமளாம்பா சந்நிதியில் பிரார்த்தித்து வருகிறேன். அவர்கள் க்ஷேமம் நம்முடைய க்ஷேமம். அவர்

களின் சௌக்கியம் நம்முடைய பாக்கியம். அவர்களின் கருணை நம் ஜீவாதாரம். நமக்கு வேறு பந்துக்கள் இல்லை; ஆப்தர்கள் இல்லை; சகாயம் இல்லை. தீன அநாத ரக்ஷகனை அந்தப் பரமேச்வரன்தான் ஸ்ரீ ஐயர் அவர்களின் ஸ்வரூபமாக இருந்துகொண்டு நம் குடும்பத்துக்கு அபயப் பிரதானம் செய்திருக்கிறார். ஆகையால் ஸ்ரீ ஐயர் அவர்களிடம் பக்தியுடனும் விச்வாசத்துடனும் கிருதக்ஞதையுடனும் நடந்துகொள்வதுடன் உன் வருங்கால ச்ரேயஸுக்குக் காரணமான அவர்களின் கோட்பாட்டின் படிக்கும், ஹிதோபதேசத்தின் படிக்கும், ஆலோசனைப் படிக்கும் நடந்துகொள். இதுவரை நம்மிடம் உதாசீனமாயிருந்த சில ஸங்கிரஹித பந்துக்கள் இப்போது நீ முன்னுக்கு வரக் கூடிய நிலைமையை உத்தேசித்துச் சில பிளான்கள் போட்டுக்கொண்டு உன்னைத் தாங்க வருவார்கள். அவர்களின் பூர்வ சரித்திரங்களை மறவாமல் அவர்களுக்குத் தக்கபடி பதில்கொடுத்து அனுப்பிவிடு. அவர்கள் அன்பும், ஆதரவும், இன்பமான மொழிகளும் தாற்காலிகமானவை என்றும் தெரிந்துகொள். மேலே ஏறுகிறவன் மேலேதான் பார்க்கவேண்டும். கீழே நோக்கக்கூடாது. படிப்பிலும் சரி, உத்தியோகத்திலும் சரி, நட்பு, விவாகம் முதலிய சம்பந்தங்களிலும் சரி, முன்னேற நினைப்பவன் கீழே இழுக்கப்படுவதற்கு இடம் கொடுக்கக்கூடாது. ஸ்ரீ ஐயர் அவர்களைக் கொண்டு இக் கடிதத்துடன் (ஆனால் இந்தக் கடிதம் வருகிறதை அறியாமல்) ஒரே ரெயிலில் பிரயாணம் செய்து உன்னிடம் நைச்சியம் பேச வரும் ஒன்றும் தெம்பார் சகுனி மாமாவுக்குப் பதில் சொல்லச் செய்து அனுப்பிவிடு. நீ ஒன்றும் பட்டுக்கொள்ளவேண்டாம். உனக்கு அழகும் குலமும் ஐச்வர்யமும் உள்ள பெண்கள் எவ்வளவோ வருகின்றன. ஆனால் நான் ஒன்றையும் மேல்போட்டுக்கொள்ளாததற்குக் காரணம் எல்லாம் ஸ்ரீ ஐயர் அவர்களை பார்த்துச் செய்யட்டும் என்ற எண்ணந்தான். உன் மாமா பெண்ணை நீ பார்த்திருக்கிறாய். இப்போது வயதானதற்காகக் காக்கை கிளியாகி

விடாது. ஆகையால் நீ என்ன அபிப்பிராயப்படுவாய் என்பதில் எனக்குச் சந்தேகம் இல்லை. மேலும் கிட்டின பந்துக்களிடம் சம்பந்தம் செய்வதில் எப்போதும் சுகமில்லை. 'தாக்ஷிண்யம் தனநாசம்.' நீ புத்திசாலி யாகையால் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. மணி மாமாவை ஸ்ரீ வேங்கடசுப்பையரிடம் தள்ளிவிடு. அவன் வாய்ச்சவடால்களை அவர்களிடம் விஸ்தரிக்க முடியாது. அவன் வலையில் சிக்கிவிடாதே. வார்த்தைதான் தேன்; காரியம் குதிரைக் கொம்புதான். உஷார்! நாளைக்கே நடந்த விஷயங்களுக்கு எனக்கு விவரமாகப் பதில் போடு. ஸ்ரீ ஐயர் அவர்களிடத்தில் என் வணக்கத்தைத் தெரிவி. சி. ராமநாதனுக்கு என் ஆசீர்வாதத்தைத் தெரியப்படுத்து. குழந்தை காந்திமதியை உன் அம்மா விசாரித்ததாகச் சொல்லு. கிருகலக்ஷ்மியாக விளங்கும் ஸ்ரீமதி சங்கரி அம்மாளுக்குச் சகல மனோ அபீஷ்டங்களும் ஸித்திக்க வேண்டுமென்று ஸ்ரீ சியாமளாம்பா ஸந்நிதியில் நான் பிரதிதினமும் பிரார்த்தித்துக்கொண் டிருப்பதாகத் தெரிவி.

அவசியம் உடனே மாமா வந்துபோன விருத்தாந்தங்களுக்கு விவரமாக உன் பதிலை எதிர்பார்க்கிறேன். நேற்று வெள்ளிக்கிழமை, அம்பாளுக்கு அர்ச்சனை பண்ணின குங்குமம் இத்துடன் வைத்திருக்கிறேன். இதை அம்மாமி யிடம் கொடு.

இப்படிக்கு ஆசீர்வாதம்,
சேஷு சாஸ்திரி.

கடிதம் வாசித்து முடிந்ததும் மணி நாகுவைப் பார்த்தார். நாகு மணியைப் பார்த்தாள். திருஷ்டி தீக்ஷையில் ஆசார்ய சிஷ்யர்களின் பரஸ்பரப் பார்வை போன்ற அந்தப் பார்வையில் இரு ஆத்மாக்களும் ஒன்றுக்கொன்று கலந்து சமநிலையை அடைந்து ஒரே வழியாகப் பிரவகிப் பதுபோல் இருந்தது. கடிதத்தின் பல சாராம்சங்கள் ஒருமித்த அவர்கள் மனத்தில் அலைகள்போல் கொந்

ளித்தன. அந்தராத்மாவின் துக்கமும், ஏமாற்றமும், வெறுப்பும், ஆச்சரியமும், பரிகாசமும் அவர்களின் முகத்தில் பிரதிபலித்தன. நாகு முதலில் பேசினாள்.

"என்ன! இந்தக் கடிதத்தை வாசிக்காமல் எப்படித் தாங்குவது? ஏதோ விபரீதமாகத்தான் எழுதியிருப்பார் என்ற வரையில்தான் எதிர்பார்த்தோம். இவ்வளவு ஆரம் கேவலமாக இருக்குமென்று எதிர்பார்க்கவில்லை. பெரிய மகாபாரதமாக அல்லவா இருக்கிறது?"

"சாஸ்திரிகள் புராணம் படித்தவரோ இல்லியோ?"

"மனுஷ்யாளுடைய எண்ணம் என்ன விதமாக இருக்கிறது என்று எங்கே தெரிகிறது?"

"இப்போ தெரிகிறதோ இல்லையோ?"

"நன்றாக, வெட்டவெளிச்சமாக! இனிமேல் முகாலோபனம் செய்யவா?"

"மனுஷ்யன் இவ்வளவு அல்பனாக இருப்பான் என்று நான் நினைக்கவில்லை."

"மனுஷி மட்டும்? உங்கள் தமக்கையைச் சொல்வதானால் உங்களுக்கு மனசாகாது."

"எல்லாம் அப்படித்தான்; சரியான ஜோடி! பயல் மட்டும் அப்படியில்லை என்பது நிச்சயம்."

"எல்லாம் குட்டையில் ஊறின மட்டைதானே?"

"அப்படிச் சொல்லாதே. அவன் மேல்பட்ட குணசாலி. இவர் என்றைக்குமே பணப் பெருமையே பெருமை என்று கூத்தாடும் சுபாவம் உள்ளவர்தான். தெரியாதா என்ன? முட்டாள். ஆகாசப் பந்தல் போடுகிறான். பணக்காரர்களை ஸ்தோத்திர பாடத்தினால் மயக்கிவிடலாமென்று நினைக்கிறான். காற்றைப் பிடித்துத் தலைப்பில் முடிந்துகொள்ள ஆசைப்படுகிறான். கொக்கின் தலையில் வெண்ணெயை வைத்து அதைப் பிடிக்கும் யோசனையைச்

செய்கிறான். கடைசியில் தெரியப் போகிறது, பணக்காரர்களின் தன்மை.''

''அவர் கொக்கைத்தான் பிடிக்கட்டும்; காக்கையைத் தான் பிடிக்கட்டும். நமக்கு அவர்கள் எக்கேடு கெட்டுப் போனால் என்ன? நம்மை எவ்வளவு இழிவாக நினைக்கிறார்களென்பது தெரிந்துவிட்டது. நாளைக்கே புறப்பட்டு எங்கேயாவது போய் நாலு ஜாதகங்களை வாங்கி வந்து பார்த்துக் குழந்தைக்கு ஒரு முகூர்த்தத்தை வைத்து அவர்களுக்கு மூஞ்சியில் அடித்தாற்போல் பத்திரிகையைப் போடுங்கள். அவர்கள் பேச்சை இனி விட்டொழியுங்கள். அர்த்த ராத்திரி ஆகப்போகிறது. எல்லாவற்றையும் மறந்துவிட்டுப் படுத்துத் தூங்குங்கள்.''

# 2

# ஸினிமா கோஷ்டி

மறுநாள் காலையில் மணி, சேஷு சாஸ்திரிகளின் நிருபத்தை வேறு கவரில் போட்டு அட்ரஸ் எழுதிச் சீதாராமனுக்கு அனுப்பிவிட்டார்.

அன்று தபாலிலேயே வேறு இரண்டு கடிதங்களும் சீதாராமனுக்கே அட்ரஸ் எழுதிச் சேர்க்கப்பட்டன. ஆனால் இக்கடிதங்கள் பட்டணத்தில் சீதாராமன் கைக்குப் போய்ச் சேருமுன், நாம் சிறிது பின் நோக்கிச் சென்று அதுவரையில் நடந்திருந்த சில வர்த்தமானங்களை ஆராய்வது அவசியமாக இருக்கிறது.

சீதாராமனும் ராமநாதனும் காலேஜில் சேர்ந்து படிக்கத் துவக்கியதாய்ச் சொன்னேனல்லவா? அந்த வருஷத்தில் காந்திமதி ஹைஸ்கூலில் நாலாவது பாரத்தில் படிக்கலானாள். அவளுக்கு வயதினாலும் படிப்பினாலும் ஜோடியான செல்லம் (ராமநாதனின் மாமா பெண்) சியாமளாம்பாபுரத்திலிருந்து மதராஸ் வந்து படிக்கத் தொடங்கினாள். வேங்கடசுப்பையர் காந்திமதியையும், செல்லத்தையும் தன் காரில் பள்ளிக்கூடத்துக்கு அனுப்பவும் அழைத்து வரவும் ஏற்பாடு செய்தார். இரு பெண்களும் வெகு உற்சாகமாகப் படித்து வந்தார்கள். கவலை என்பதையே அவர்கள் அறியாமல் தங்கள் மன உல்லாசத்துக்கே உலகம் படைக்கப்பட்டிருக்கிறதென்று எண்ணியவாறு இனிது காலம் கடத்தி வந்தார்கள். 'வாழ்க்கை என்பது என்ன?' என்று அந்தச் சிறுமிகளைக் கேட்டால், "காலைக் காபி, ஸோப்பு, தைலம், பௌடர், கண்ணாடிமுன் ஆடை அலங்காரம், ஒன்பது மணிக்குச்

சூடான போஜனம், பின்பு டிபன் ஸெட், புஸ்தக முஸ்தீப் புடன் மோட்டாரில் பள்ளிக்குப் பிரயாணம், பள்ளியில் உபாத்தியாயர்களின் சலுகையுடன் அழகற்ற அரட்டைப் பிள்ளைகளின் மத்தியில் கோழிக் கூட்டங்களிடையே மயில் பேடுகள்போல் சில மணிநேரம் நடமாட்டம், நடுவே சிரிப்புக் களிப்புகள், சுவையுடைய சிற்றுண்டி, மாலை மோட்டாரில் சாவகாசமாகக் காற்று வாங்கிக்கொண்டு வீடு திரும்புதல், பின்பு பாட்டு, கூத்து, படம் முதலிய காலக்ஷேபங்கள், உயர்தர உண்டிக்குப்பின் மெத்மெதன மெத்தையில் அயர்ந்த நித்திரை, இதுதான் வாழ்க்கை" என்று தயங்காமல் தெரிவிப்பார்கள். சமையலுக்கு மதுரப் பாட்டியும், துணி துவைக்க அக்காயியும், கட்டளைகளை நிறைவேற்றப் பொக்கையனும், டிரைவர், குமாஸ்தா முத லியவர்களும் (ஸ்ரீமானுன வேங்கடசுப்பையரின் வீட்டுச் சிப்பந்திகள்) அப்பெண்களின் நோக்கமறிந்து அன்புடன் சேவை புரிந்துவந்தார்கள். இந்தச் சுகச்சூழலில் சுழன்று வந்தார்கள், இணைபிரியா நட்புகொண்டு வளம்பெற வளர்ந்து வந்த காந்திமதியும் செல்லமும்.

பெண் குழந்தைகள் இருக்கும் தனவந்தர் குடும்பங் களில் புருஷப் பிள்ளைகளுக்குச் சற்றுச் சலுகைக் குறைவு தான். "புத்ராத் அஷ்டகுணம் புத்ரீ" என்றதோர் ஆன் ரோர் வாக்கியம் இருப்பதாகவும் ஞாபகம் வருகிறது. பணச் செலவைப் பொறுத்தது சலுகை என்றால் ஒவ்வொரு குடும்பத்திலும் பெண்கள் விஷயமாகத்தான் பணச் செலவு அதிகம் என்பது அநுபவத்தில் தெரிந்ததுதான். ஆடை ஆபரணங்கள் விஷயமாகப் புருஷப்பிள்ளையை விடப் பெண்களுக்கு எட்டு மடங்கு அதிகச் சலுகை என்று சொல்வதைப் பதினெட்டு மடங்கு என்றும் எண்பது மடங்கு என்றுங்கூடக் கூறுவது பொய்யாகாது. வர்ணம், வாசனை, விநோதம், வீம்பு, வெற்றி, வேஷம், வைபோகம் என்ற ஏழு வகை விவகாரங்களில் உள்ளடங்கியது இன்ப வாழ்க்கை என்ற இயற்கைச் சித்தாந்தத்தை மேற் கொண்ட பெண்ணினம் பிரபஞ்ச சக்தியின் பிரபாவத்தால்

அன்றும் இன்றும் அரசுரிமை செலுத்தி வருகிறது. இத்தகைய இன்ப வாழ்க்கைக்காக அவ்வப்போதைய நாகரிகத்தை அநுசரித்து அவர்கள் எவ்வளவு சலுகை பெறுகிறார்கள் என்பது குடும்பக்கணக்கைப் பரிசீலனை செய்தால் விளங்கும். பண வீக்கமுடைய இந்நாளில் மேற்கூறிய வகார வர்க்கத்துக்குச் சுக்கிரதசை அடித்து வருகிறது. வர்ணம், வாசனை, விநோதம், வேஷம் என்ற நான்கு ஐட்டங்களுக்கான சாமக்கிரிகள் கணக்கிட முடியாதவை. விரிக்கின் பெருகும். அவைகளின் அநுபோகமறியாத ஆடவர்கள் இருந்தால் அவர்கள் பத்திரிகைகளின் விளம்பரங்களின் பேரில் சிறிது பார்வையைச் செலுத்தினால் போதும். ஆங்கில சமூக வாழ்க்கையைப் பின்பற்றும் நவீனக் கொள்கைகளில் பெண்களின் வெற்றி, வைபோகங்கள் தழைத்தோங்கி வருகின்றன. நாகரிகமே, சமூகம் கண்பார்க்கப் பெண்மையைப் போற்றுவதும் முன்னணியில் விட்டுப் பின் செல்வதும் ஆகிய இரு தத்துவங்களில் அடங்கிவிட்டது. சலுகைக்கும் வீம்புக்கும் தொடர்பு உண்டு. ஆகையால் அதைத் தனியே உதாகரிக்கத் தேவையில்லை.

இந்த ஏழு வகாரங்களும் இயற்கையை ஒட்டினவையாகையால் பழமையிலும் புதுமையிலும் பொருந்தியவைதாம். ஆனால் அவைகளின் நவ நாகரிக அவதாரங்கள் முன்னவர்களைப் பழிப்பவைகளாக உருவாகியிருக்கின்றன. முன்னவர்கள் மடமையால் இருள் சூழ்ந்த இரவில் பதுங்கிப் பயனற்ற ஜீவனம் செய்து வந்தமையால் இவ்வரிய சூரிய ஒளியை அறியாத பேதைகளாக இருந்தார்கள் என்பது வருந்தத்தக்கதே!

காந்திமதியும் செல்லமும் நவ நாகரிகப் பிரகடனங்களைப் புதிய பிளாட்டிங் இதழ்கள்போல் முகத்திலும் அகத்திலும் நடையிலும் உடையிலும் வாரி அப்பிக்கொண்டனர். அவர்கள் பேசும் மொழிகள்கூட இவ்விரட்டைப் பிறவிக்கு ருசுவாயின. இந்தப் பெண்ணு

டகச் சூரியோதயத்தில் தீப ஒளிபோல் மங்கினார்கள் சீதாராமனும் ராமநாதனும்.

பிள்ளைகளுக்கே பதினெண் பிராயம் என்பது ஒரு மகத்தான மாறுதலைத் தருவிக்கும் பக்குவ காலம். கௌமாரத்துக்குப் பின் யுவதசையில் பிரவேசிக்கும் ஆண்பிள்ளை தன் பூர்ண திட்டத்துக்கு உயர்வதுடன் குரல் உடைந்து, உணர்ச்சி மிகுந்து ஒரு சங்கோசப் பிராணியாகிறான். மொட்டு மலராமல் காய் ஆவது போல் ஆடவர் வளர்ச்சி. இதே வயது, பெண்களுக்கும் மலர்ச்சியை வருவிக்கிறது. அந்த வயதில் அழகில்லாப் பெண்கள் இல்லை என்று சொல்லுவதுபோல், ஆண் பிள்ளைகள் விஷயத்தில் சொல்லுவதற்கு இல்லை. பெண்கள் தங்கள் வடிவழகை உணரும் பிராயத்தில் பிள்ளைகள் தங்கள் தோற்ற வேறுபாடுகளால் குழப்பமடைகின்றனர். சீதாராமன் தன் வயதுக்குரிய வளர்ச்சியைச் சற்றுப் பருமனிலும் உயரத்திலும் அறிவித்தான். ராமநாதன் நல்ல உயரம், நிதானமான பருமன். சீதாராமனின் முகக்களை பிரஸன்னமானது; சாந்தம் நிறைந்தது. கண்கள் தெளிந்து அகத்தை ஆழ்ந்தும் புறத்தை ஊதாரித்தனமாயும் நோக்கும் இயல்புடையவை. எடுப்பான நாசி; உயர்ந்த லட்சியத்தையும் பெருந்தன்மையையும் எடுத்துக் காட்டக்கூடியது. உதடுகளின் வடிவழகுள்ள திட்டமான ரேகைகள் ரஸிகத்தன்மையையும் மன உறுதியையும் விளக்கின. தலை வட்டமாயும் காதுகள் முழு வீச்சுடன் குவிந்து தொங்குபவையாயும் அமைந்திருந்தமையால் பாக்கியமும் பூர்ண வயதும் அநுமானிக்கப்பட்டன. நிறம், நிலவு போன்ற ஒளி மலிந்தது. அவனைக் கண்டவர் அவனுக்கு அன்பையும் மதிப்பையும் காணிக்கையாகக் கொண்டவராவர். அப்படியிருந்தும் உணர்ச்சி தரும் வயதாலும் பிறரிடம் அண்டிக் காலம் கடத்தும் எளியதனத்தாலும், அவன் தன்னகமற்று ஒதுங்கித் தாழ்ந்து நிழல்போல் நடமாடி வந்தான். ராம நாதனோ தன் இனத்தவருடன் தன் வீட்டில் இருக்கும்

சுவாதந்திரியத்தால் பெருமையுடன் வாழ்ந்து வந்தான். என்றாலும் வயதைப்பற்றிய உணர்ச்சிகளாலும், பெண்களின் ஆக்கிரமிப்பினாலும், பெற்றோர்களின் கண்டிப்பினாலும் அட்டகாசம் அடங்கித் தணிந்து சீதாராமனின் தோழமையால் அதிக ஆச்வாசத்தை அடைந்து வந்தான். ராமநாதன், வாளிப்பும் உயரமும் உடைய வெளிர் மாநிறத் தேகம் உடையவன். கண்களின் பரபரப்பும், கூரிய வளைந்த நாசியும், தளர்ந்த உதடுகளும், ஒட்டிய கன்னங்களும், நீண்ட முகமும், முன்வந்த திடமான மோவாய்க் கட்டையும், அகண்ட நெற்றியும், சிறிய வளையமிட்ட காதுகளும் அவனைச் சீதாராமனுக்கு மாறான புருஷ லக்ஷணமுடையவனாக எடுத்துக் காட்டின. ராமநாதன் நாளுக்கு நாள் தன் மாமாவின் குணாதிசயங்களுக்கு வாரசுபாத்தியம் கொண்டாடுவது தெளிவாயிற்று. சுருக்கமாகச் சொன்னால் மாமா சிவராமன் அழியாச் சொத்தை அழிப்பதிலும், ஊரைப் பிடுங்கி உலையில் போடுவதிலும், கறட்டு வாதங்களில் தலைமை வகிப்பதிலும், ஆடம்பரமான ஊதாரித்தனத்திலும், அத்து மீறின ஹடச் செயல்களிலும் பெயர் பெற்றவன். ராமநாதனின் புதிய அபிருசிகள் படிப்புக்கு எதிரிடையாக இருந்தன. ராமநாதனின் படிப்பு மங்குவதும், பெண்களின் படிப்புச் சோபிப்பதும் வீட்டில் உள்ளவர்கள் கவனத்தைக் கவர்ந்தன. பேச்சும் பரிகாசமும் மலிந்து கிடந்தன. அதனாலும் ராமநாதன் வீட்டில் அதிகம் தங்காமல் வெளி வியாபாரங்களை வைத்துக்கொண்டான்.

சீதாராமனோ மேலே போகப் போகப் படிப்பில் அபிவிருத்தி அடைந்து வந்தான். ஓடத்தில் ஏறினவன் சமுத்திரத்தை எங்ஙனம் தாண்டுவது என்று எண்ணி அவன் படிப்பில் நம்பிக்கை இழந்து ஏக்கமுற்றிருந்த காலம் போய்விட்டது. வேங்கடசுப்பையரின் உள்ளன்பை அவன் கண்டறிந்தது முதல் புது உற்சாகம் பிறந்து ஊக்கத்துடன் படிப்பைக் கவனிக்கலானான். மேலும் சீதாராமன் இளம்பிராயம் முதலே நன்றாக ஸம்ஸ்கிருதம் பயின்றவன்.

வால்மீகி, காளிதாஸர், பாணர், பவபூதி முதலிய மகா கவிகளின் காவ்ய நாடகங்களின் சுவையை ஏகாந்தமாக ரஸித்தவன். கானப் பிரியன். மெல்லிய இனிய குரலில் உள்ளப் பூரிப்புடன் ஆத்மார்த்தமாக ஆலாபனை செய்து இன்புறும் இயல்புடையவன். அவன் ஸுஸ்வரத்துடன் படிக்கும் கவிதைகளுக்குத் தனி மாதுர்யம் பெருகும். பண்டித வம்சத்தில் உதித்த அவனுக்கு முயற்சி இல்லாமலே விற்பத்தியும் ரஸிகத்தன்மையும் ஏற்பட்டு விட்டன. அவனுடைய மாதுல குலமும் விற்பத்திக்கும் ஸங்கீதப் பயிற்சிக்கும் உறைவிடமானது. அவன் மாமா வான மணி ஸகலகலா வல்லவர். சீதாராமனுக்கு மணி மாமாவிடம் அதிகப் பழக்கம்; சிஷ்யத்தன்மையும் உண்டு. நைடதம் அவன் கொஞ்சம் மாமாவிடத்தில் படித்தான். அப்போதே ஸரஸுவும் காவ்யபாடம் கேட்டு வந்தாள். சீதாராமன் ஆங்கிலப் படிப்பைச் சிறிது பிற்காலத்தில் தான் ஆரம்பித்தான். ராமநாதன் நட்புமூலம் வேங்கட சுப்பையரின் ஆதரவு அவனுக்குக் கிடைத்திராவிட்டால் அவன் ஆங்கிலப் பள்ளியில் மேல்படிப்புப் படிக்க நினைத்தே இருக்கமாட்டான். ஆனால் தெய்வ சங்கற்பம் அவனைப் பெரிய ஆதரவில் பட்டணம் காலேஜில் மேல் படிப்புப் படிக்க வசதி செய்து கொடுத்தது. நிலைமை இவ் விதம் மேன்மை அடைந்தபோதும் சீதாராமன் தன் தாழ்மையை மறக்கவில்லை. தன் அருகதைக்கு அதிகமாக அவனுக்குக் கிட்டிய சௌக்கியங்களை எல்லாம் அவன் பற்றில்லாமல் அநுபவித்தான். எந்த நிமிஷத்திலும் தனக்கு உரியதான பூர்வ ஸ்திதியை அந்தரங்க திருப்தியுடன் ஏற்க அவன் தயாராக இருந்தான். சீதாராமனின் மமதையற்ற மனோபாவமும், சேவை புரியும் தணிவும், ரஸிகத்தன்மையுமே ராமநாதனை அவனிடம் நட்புக்கொள் ளும்படி செய்தன. நாளுக்கு நாள் ராமநாதனுக்குச் சீதாராமனிடம் நன்மதிப்பு வளர்ந்து வந்தது. வேங்கட சுப்பையர் புத்திமான்களான பல ஏழைப் பையன்களுக்குக் காலேஜ் ஹைஸ்கூல் சம்பளங்களைக் கட்டி உதவிவந்தார்.

ஆனால் சீதாராமனுக்கு அவ்விதம் உபகரிப்பதோடு நிற்காமல் அவனை வீட்டிலேயே இருக்கச் செய்து போஷித்துவந்தது ராமநாதனின் இஷ்டத்துக்காகத்தான். என்றாலும் நாளடைவில் அவருக்கே அவனிடம் பூர்ணமான அபிமானம் ஏற்பட்டுவிட்டது. சில வருஷங்கள் குடும்பத்தில் உதித்த குழந்தைபோல் பழகிவிட்டதால் மௌனியும் ஸங்கோசியுமான சீதாராமனுக்கே அந்த வீட்டில் எல்லாம் ஸ்வாதீனமாகிவிட்டது.

ஆனாலும், காலம் சுழல்கிறதல்லவா? வாழ்க்கையை ஒரு சக்கரத்துக்கு ஒப்பிடுகிறார்கள், பாஸகாளிதாஸாதி கவிகள். குழந்தைப் பருவம் கடந்த, அறிவு வளர்ச்சி அடைந்து வரும், தன் குலத்தவர்களல்லாத, இரு பெண்களுடன் வாழ்க்கையில் கலந்து ஒரே ஆதரவின் கீழ் வசிக்கும் நிலைமை அவனை மிக்க சங்கோசியாக்கியது. அந்த நிலைமையின் நீடிப்பில் அவன் அதைரியமுற்றவனானான். அன்றியும் ராமநாதன் இளம் வயது மாறியவுடன் சுதந்தரமான சுகவாழ்க்கைக்கு வாரசாகப் பிறந்தவர்களின் சில தன்னடக்கமற்ற போக்குகளை அநுசரிக்கலானான். படிப்பில் அவனுக்கு அலக்ஷ்யம் தோன்ற ஆரம்பித்தது. பள்ளியில் உபாத்தியாயர்களை எதிர்க்கவும் கக்ஷிகள் சேர்க்கவும் முற்பட்டான். அவன் செலவுகள் அடிக்கடி அவனுக்குப் பணத்தட்டு ஏற்படச் செய்தன. சீதாராமன் அவனைச் சீர்திருத்தம் செய்யும் பொறுப்பை ஏற்பது அசம்பாவிதம் என்று எண்ணினான். ஆனால் எப்போதும் போல் அவனுக்கு உடந்தையாக இருந்து உதவும் கைக்கருவியாகவும், ஆமோதிக்கும் ஆச்ரிதனாகவும் ஆவது எப்படி என்பது அவனுக்குக் குழப்பத்தைக் கொடுக்கலாயிற்று. ராமநாதனைத் தன்னுடன் பிணைத்து நேர்வழியில் நடக்கச் செய்யும் நம்பிக்கைகொண்டிருந்த வேங்கடசுப்பையரிடம் தான் கிருதக்ஞதையை மறவாதிருக்க என்ன செய்வது என்ற ஐயமும் அச்சமும் அவன் மனத்தைப் பற்றிக் கொண்டன.

காந்திமதி சீதாராமனிடம் சகஜமாகப் பழகுவது வழக்கம். அவனிடம் ஸம்ஸ்கிருதம் கேட்டுக்கொள்வாள். ராமநாதனிடம் போ, வா என்று பேசுவதுபோல் அவனிடமும் விகல்பமில்லாமல் பேசுவாள். ஆனால் செல்லம் அங்கே வந்தபிறகு அவள் பழகுவது சற்று மாறுதல் அடைந்தது. முன்போல் அதிகம் நெருங்குவதில்லை. விளையாட்டுப் பேச்சுகள் நின்றன. அவள் ரூமுக்கு வருவதில்லை. எப்போதாவது பேசுவது அவசியமானால் ஆங்கிலத்தைத்தான் பிரயோகிப்பது. 'மிஸ்டர் "சீதாராமன்! வில் யூ ப்ளீஸ்?" என்று ஆரம்பிப்பாள். ஏனென்றால் ஆங்கிலத்தில் ஏக வசனப் பிரயோகத்துக்கும் பகு வசனப் பிரயோகத்துக்கும் பேதம் இல்லை. நீ என்று அவனைப் பேசுவது அவளுக்கு உசிதமாகப் படவில்லை. 'நீங்கள்' என்று பேசுவதும் சம்மதமில்லை. இந்தத் தர்மசங்கடத்தில் ஆங்கிலம் உதவியாக இருந்தது. செல்லமோ சீதாராமனுடன் பேசிப் பழகுவதே அரிது. ஒரே ஊர் ஆனதால் ஒருவரை ஒருவர் அறிவார்கள். ஆனால் ஊரிலும் இருவரும் பேசிப் பழகியது இல்லை. மேலும் செல்லத்தின் அந்தஸ்துக்குச் சேஷா சாஸ்திரிகள் பிள்ளை ஓர் அணிற்பிள்ளை, தென்னம்பிள்ளையாகத் தோன்றினான். தகப்பனாரின் கர்வம் அவளுக்குக் கொஞ்சம் உண்டு. காந்திமதியும் அவள் பழக்கத்தால் தன்னிடம் உதாசீன புத்தியுடையவளாக மாறுவதுபோல் சீதாராமனுக்குப் பட்டது. 'ஆனால் முன்போல் காந்திமதி குழந்தையா!' என்று அவன் மனத்துக்குச் சமாதானம் சொல்லிக்கொண்டான். இருந்தாலும் அந்தப் பெண்கள் ஜோடி சேர்ந்தபிறகு வீட்டிலேயே வேறு மதிக்கத்தக்க மனுஷ்யர்கள் இல்லைபோல் அவர்கள் நடந்துகொள்வதாகச் சீதாராமனுக்குத் தோன்றியது. 'சாண் பிள்ளையானாலும் ஆண் பிள்ளை' என்ற பாட்டி காலத்துப் பழமொழியைக் கிழித்துக் குப்பையில் போடும் காலம் வந்துவிட்டதென்று அவன் தீர்மானித்துக்கொண்டான். செல்லம்

தன்னைப் பொருட்படுத்தாத இறுமாப்புக்காரி என்றும் காந்திமதி அவளுடைய சேர்க்கையில் வரவரத் தன்னிடம் நட்புக் குன்றி உதாசீன பாவனையை மேற்கொள்வதாயும் நினைத்துக்கொண்டு அவன் வருந்தினான். பொதுவாய்ச் செல்வம் அக்குடும்பத்தில் வந்து ஒட்டிக்கொண்டது முதல் சீதாராமனின் உறுதி தளர்ந்தது. தன்னைக் கூடிய சீக்கிரத்தில் ராமநாதனும் உபேக்ஷைசெய்ய நேர்ந்துவிடுமோ என்று அஞ்சினான்.

*   *   *

மாமா சிவராமன் வருங்காலத்துக்குத் திட்டம் போட்டிருந்தது யாரும் எளிதில் ஊகிக்கக்கூடியதே. முறிந்துபோன தன் நிலைமையில் செல்வத்தை வீசி ராமநாதனைப் பிடித்து வேங்கடசுப்பையரை ஆக்கிரமிக்க அவன் திட்டம் போட்டிருந்தான். இந்தச் சதியைச் செல்வம் இயற்கையில் அறிந்து அதில் கலந்துகொண்டாளே ஒழிய அவளிடம் வெளிப்படையாக அது ஏற்புறுத்தப்படவில்லை. ராமநாதன் தன்னைப்பற்றிய சதியைச் சந்தேகிக்கவில்லை. மேல்பட்டையைக் கீறி உள்ளே பரிசோதிக்கும் சூக்ஷ்ம புத்தி அவனுக்கு இல்லை. சீதாராமனின் புத்தியோ ஓர் அபாய அறிவிப்புக் கருவிபோல் ஸதா விழிப்புடையது. அவனுக்கு இந்தச் சூழ்ச்சிநிலை எல்லாம் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கியது. மாமா சிவராமன் அடிக்கடி பட்டணம் வருவதும், வேங்கடசுப்பையரின் பணத் தேக்கத்துக்குச் சிவராமனாம்பாபுரத்தில் நன்செய், புன்செய், தோட்டம், மனைகள் மூலம் பரிகாரம் தேடச் சிரத்தை எடுத்துக்கொள்வதும், ராமநாதனின் செலவுகளுக்கு உதவுவதும், அவனைத் தட்டிக்கொடுத்து அவனுக்குப் பரிந்து பேசுவதும் எல்லாம் ஒரே நோக்கத்தின் பிரகடனங்கள் என்பதை அவன் அறிவான். ராமநாதனுக்கும் தன் விவாகத்தைப்பற்றிப் பேச்சுவார்த்தைகள் காதில் விழாமல் இல்லை. மாமா சிவராமனே அவனைச் சில சமயம் தமாஷாக 'மாப்பிள்ளை!' என்று கூப்பிடுவது வழக்கம். ஆனால்

ராமநாதனுக்குத் தன் விருப்பு வெறுப்புகளை ஆராய்ந்து அறியும் பக்குவம் வரவில்லை. கல்யாணம் ஒன்று உண்டென்றும் அதில் செல்லம் முன்னணியில் நிற்கிறாள் என்றும் அவன் உணர்ந்தான். செல்லத்தைப்போல் பல பெண்களும் பின்னே வரிசை வரிசையாகக் காத்திருக்கிறார்கள் என்றும் ஒருவாறு அவனுக்குப் புலனாயிற்று. ஆனால் தன் நாயகியைத் தான் தேர்ந்தெடுக்க வேண்டுமென்றாவது, அந்தத் தேர்தலுக்கு முறை என்னவென்றாவது, தன் வாழ்க்கைச் சுகதுக்கங்கள் அதைப் பொறுத்தவை என்றாவது ஊன்றி உருப்படுத்தி அவன் சிந்திக்கவில்லை. தான் பெரிய தோரணையில் வாழ்க்கையை நடத்தப்போவதாகவும், அழகிய பெண்ணை மணந்து ஒய்யாற்று இன்புறப் போவதாகவும் ஒரு நிர்ணயம் அவனை உத்ஸாகப்படுத்தி வந்தது.

சீதாராமன் ராமநாதனுடைய மடமையை அறிவதுடன், அவன் பெற்றோர்களின் அந்தரங்க மனோபாவங்களையும் எடைபோட்டு வைத்திருந்தான். முக்கியமாக வேங்கடசுப்பையரின் இருதயத்தில் ஓடும் நிழல்கள் அவன் கவனத்திலிருந்து தப்பவில்லை. மாமா சிவராமன் அவருடைய ஆழ்ந்த சிந்தனைகளை அறிய வல்லவனல்லன் என்பது சீதாராமனின் அபிப்பிராயம். ஆனால் சங்கரி அம்மாள் உடந்தையாக இருந்தால் மாமா வெற்றி பெற்று விடலாம் என்பதை சீதாராமன் ஒப்புக்கொண்டான். அந்த வெற்றி கைக்கு எட்டாது என்றுதான் அவனுக்குத் தோன்றிற்று. சங்கரியம்மாள் தம்பியின் அட்டகாசங்களை அறியாதவள் அல்ல. குடும்ப நேர்மையையும் பெருமையையும் வளர்க்கக் கருத்துள்ள அவள் முடிவில் அசட்டுத்தனமாக நடக்கமாட்டாள் என்பது அவன் துணிபு; நியாயந்தானே ?

மாமா சிவராமன் செல்லத்துக்கு ஒரு வைர பேஸரி வாங்குவதற்காகவும் இன்னும் பல ஜோலிகளுடனும் பட்டணம் வந்ததாகச் சொல்லிக்கொண்டார்.

"என்னடா இப்போ திடீரென்று பேசரி? பணம் மிதமிஞ்சிக் கிடக்கிறதோ?" என்று குத்தலாகக் கேட்டாள் சங்கரி.

"இல்லை அக்கா; கல்யாணம் பண்ணவேண்டுமோ இல்லையோ? அதற்காகத்தான் ஒன்றொன்றுய்..."

"கல்யாணம் நிச்சயம் பண்ணிவிட்டாயோ?"

"நிச்சயந்தான். என்றாலே, அக்கா, வரன் கிரன் பார்க்க முடியாது. கையிலே வரன் இருக்கும்போது வெண்ணெயை வைத்துக்கொண்டு நெய்க்கு அழுவது போல்..."

"அப்படி உன் கையில் ஒரு வரன் மாட்டிக்கொண்டிருக்கிறதா என்ன?"

"நான் தீர்மானம் பண்ணுவது கிடக்கட்டும். கல்யாணம் செய்துகொள்கிறவர்கள் தீர்மானம் செய்துவிட்டார்கள். அவர்கள் இஷ்டத்தை அநுஷ்டிக்காமல் நம்மால் இருக்க முடியாது. இது கிடக்கட்டும். ஒரு சம்பந்தமும் இல்லாதவர்கள், ஒருவர் சம்மதத்தையும் பெறுதவர்கள், மலைக்கும் மடுவுக்குமாக இருப்பவர்கள், நிமிர்ந்து பார்க்க யோக்கியதை இல்லாதவர்கள், முற்றும் அசம்பாவிதமாக, ஏதோ கல்யாணம் நிச்சயமாகிவிட்டதுபோல் பேசிக்கொள்ளும்போது, உண்மையிலேயே நோக்க மறிந்த நான், ஏன் கல்யாணம் நிச்சயமானதுபோல் பேசிக்கொள்ளக்கூடாது?"

"யார் அப்படிப் பேசிக்கொள்வது?"

"அது ஒரு மனுஷ்யன்!"

"அந்த ஊர்க் கதையெல்லாம் நமக்கு எதற்கு?"

"ஊர்க் கதையா? நம் கதைதான். பேச்சு நம்ப சம்பந்தமில்லாவிட்டால் நான் பிரஸ்தாபிப்பேனு?"

"எப்படி? நீ சொல்வது குட்டாக இருக்கிறதே!"

"தானே குட்டு வெளியாகிறது."

"நீ சொல்ல ஆரம்பித்ததை நன்றாகச் சொல்லேன். என்ன மூடுமந்திரம்?"

"மூடுமந்திரம் ஒன்றுமில்லை. வெட்ட வெளிச்சந் தான். சியாமளாம்பாபுரத்தில் தண்டோராப் போடப் படுகிறது உனக்குத் தெரியாதோ என்னமோ!"

"என்ன விஷயம்?"

"சேஷு சாஸ்திரி இருந்த நிலைமை யாருக்குத் தெரியாது? இப்போதுதான் என்ன வாழ்கிறது! பலத்த சம்சாரி. என்ன வந்தாலும் போதாது. புராணம், அத்தியயனம், பிரதிக்ரகம், லௌகிக வியாபகங்கள், மந்திரம் தந்திரம், ஜோஸ்யம், ஜபம் எல்லா விதத்திலும் சம்பாதிக்கிறார். இருந்தாலும் பத்து நாள் உட்கார்ந்தால் சாப்பாட்டுக்குக் கிடையாது. அவர் பிள்ளை நல்ல கெட்டிக்காரன். பிடித்தாலும் புளியங்கிளையைப் பிடித்தான்."

"அதில் என்ன தப்பு?"

"என்ன தப்பா? இந்த மனுஷ்யன்களுக்கெல்லாம் இடத்தைக் கொடுத்தால் தலை கழுத்தில் நிற்காதே."

"ஏதோ பாவம்!"

"நல்ல பாவம்! ஒட்டகைக்காரன் கதை கேட்டிருக்கிறாயா?"

"என்ன கதை?"

"ஒரு குடிசைக்காரனிடம் ஒட்டைக்காரன் சொன்னான்..."

"உம்!"

"மழையில் ஒட்டகை நனைகிறது. அதன் தலையைமட்டும் குடிசையில் நீட்டிக்கொள்ள இடம் கொடு என்றது. குடிசைக்காரன் உன்னைப்போல் ஐயோ பாவம் என்று இரங்கி அதற்கு அநுபதித்தானாம். பின் கொஞ்சம் கொஞ்சமாக ஒட்டகையை உள்ளே நுழைந்துக் குடிசைக்காரனை மழையில் நிற்கச் செய்தானாம் ஒட்டைக்காரன்."

"அதுபோலே?"

"சேஷு சாஸ்திரிகள் பிள்ளையை நீ ஐயோ பாவம் என்று இரங்கி வீட்டில் வைத்துக்கொண்டு படிக்க வைக்கப்போக, ஊரில் அவர் உன் பெண் காந்திமதியை அவனுக்கு விவாகம் பண்ணி வைத்து உன் சம்பந்தியாய்விட மனோராஜ்யம் செய்துகொண் டிருக்கிறார். அது தான் சமாசாரம். எப்படி இருக்கு வழக்கு! இதற்கெல்லாம் நாம் இடம் கொடுக்கலாமா?"

"அவர் சொல்லிக்கொண்டால் என்ன? நாம் கொடுத்தால்தான் என்ன? சீதாராமன் தங்க விக்கிரகம்போல் இருக்கிறான். குணம் அமிர்தம். படிப்பிலும் ஊக்கமுடையவனாக இருக்கிறான். படிப்பைவிட உலகம் அறிந்தவன். நிதானம், அடக்கம், நல்லொழுக்கம் உடையவன். ஏன், காந்திமதியை அவனுக்குக் கொடுத்தால் என்ன? குலம் கோத்திரம் வெகு சிலாக்கியமானது. நமக்குத்தான் சேஷு சாஸ்திரிகளையும் வேம்பு அம்மாளையும் தெரியாதா? பிள்ளைக்கு ஓர் உத்தியோகத்தைப் பண்ணி வைத்துவிட்டால், தானே முன்னுக்கு வந்துவிடுகிறான். பெண் சௌக்கியமாக இருக்க வேண்டியதுதான் முக்கியம். பெரிய இடம் என்று போய்விழுந்து எத்தனையோ பேர் மோசம் போகிறார்கள். சொத்தையும் நாசம் செய்கிறார்கள். படாடோபம் இல்லாமல் கல்யாணத்தைப் பண்ணி முடித்துப் பெண்ணையும் மாப்பிள்ளையையும் எப்போதும்போல் அகத்

தோடு வைத்துக்கொண்டு ஒரு கவலையும் இல்லாமல் இருக்கலாம். அவருக்குச் சீதாராமன் இல்லாவிட்டால் வீட்டுக் காரியங்களைக் கவனிக்க அவகாசம் கிடையாது. அவன்தான் ஒரு ஜெனரல் செக்ரட்ரி இந்த வீட்டுக்கு...''

''நீ சொல்வது ரொம்ப ஆச்சரியமாக இருக்கிறதே! இத்தனை விபரீதமாக நீ பேசுவாய் என்று நான் எதிர் பார்க்கவில்லை. அப்படி எண்ணியிருந்தால் இந்தப் பிரஸ்தாபத்தையே எடுத்திருக்க மாட்டேனே! ஆனால் பிள்ளை கல்யாணத்தைவிடப் பெண் கல்யாணந்தான் முதலில் நடக்கும்போல் இருக்கிறது.''

''அப்படித்தானே நடக்கணும்? பெண்ணை வைத்துக் கொண்டு பிள்ளைக்கு யாராவது செய்வார்களா!''

''ஓஹோ; சரி. இந்த வார்த்தை காதில் விழ வேண்டியதுதான் தாமதம், சேஷு சாஸ்திரியைக் கட்டிப் பிடிக்க முடியாது. ஈரேழு பதினாலு லோகத்தையும் ஜயித்துவிட்டதாக மார்தட்டிக்கொள்வார். சரிதான்; குசேலர் குபேரனாகவில்லையா? ஆனால் இந்த வீண் ஜம்பக்காரனுக்கு இந்த அதிருஷ்டம் ஏதோ கொள்ளை என்றுதான் சொல்லவேண்டும். உங்களை அவ்வளவு குல்லா போட்டிருக்கிறான் அந்தப் பயல் என்று தெரிகிறது. லோகத்தில் நாலு பேர் பார்த்துச் சிரிக்கும்படி ஒரு காரியத்தைச் செய்யும்படி ஆகிவிட்டது.''

''என்னடா சிவராமா நீ பேசறது? லோகத்திலே யார் எதற்காகச் சிரிக்கிறார்கள்?''

''வயது வந்த பெண் இரண்டு வீட்டில் இருக்கும் போது மூன்றும் மனுஷ்யனை ஒரு வாலிபனை வீட்டில் வைத்துக்கொள்ளலாமா? இதைப்பற்றி லோகத்தில் பேசமாட்டார்களா? நாம் அந்தப் பேச்சுக் கிளம்புமுன், முன்ஜாக்கிரதையாக இருக்கவேண்டாமா? இதை உன் உடன்பிறந்த நான் சொல்லாவிட்டால் வேறு யார் உங்க

ளிடம் அக்கறை எடுத்துக்கொண்டு சொல்லப்போகிறார்கள்? நீ என்னிடம் கோபித்துக்கொண்டாலும் சரி; என்னைத் திட்டினாலும் சரி, நான் உனக்குச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.”

“சௌராமா, உன் குயுக்திகளுக்குப் பதில் சொல்ல எனக்குச் சாமர்த்தியம் போதாது. புருஷப்பிள்ளைகளுடன் பெண்கள் பள்ளிக்கூடத்தில் வாசிக்கவில்லையா? அகத்தில் அண்ணன் தம்பிபோல் பழகின நாமறிந்து நல்ல சீலனான ஒரு வாலிபனை நீ பொதுப்பட்ட நியாயங்களை அநுசரித்துத் தூற்றுவது சரியில்லை. லோகத்தில் இல்லாதது ஒன்றும் நடக்கவில்லை. நம்மைப்பற்றி யாரோ பேசுவார்கள்போல் நீ பயமுறுத்துவதெல்லாம் வீண். இந்த மாதிரி ஹேஷ்யம், வேண்டியவர்கள்போல் இருந்துகொண்டு சிலர் கிளப்பிவிட்டு வேடிக்கை பார்க்கிறது வழக்கம். அது தானே ஒழிய உலகத்துக்கு ஒன்றும் இந்த மாதிரி விஷயத்தில் வயிற்று வலி இல்லை.”

“அக்கா, இன்று நீ பேசுவதே விசித்திரமாக இருக்கிறது. நான் உனக்கு வேண்டாதவனாகவும், இந்தச் சேஷசாஸ்திரி வகையறா உனக்கு வேண்டியவாளாகவும் போய் விட்டது காலத்தின் கோளாறே தவிர வேறில்லை. நீ இப்படிப் பேசுகிறவள் அல்ல. காலத்துக்குத் தக்கபடி புத்தி மாறுகிறது. அந்தப் பிராமணன் ஊரில் பெருமையடித்துக் கொள்வது, ஊரெல்லாம் புரளியாக இருக்கிறது. நீயோ நான்தான் விஷமம் செய்வதாக நினைத்துக்கொள்கிறாய். அண்டிப் பிழைக்க வந்தவன் காந்திமதி கையைப் பிடிக்கும் வரைக்கும் ஆகிவிட்டால் பின்பு என்னைப்போல் உள்ளவர்கள் வாசல்படி ஏற யோக்கியதை இல்லாமல் போய்விடுமே என்று பயந்துதான், இந்தப் பிரஸ்தாபங்களைப் பிரபலமாகுமுன் அடக்கிவிடவேண்டும் என்று பரக்கப் பரக்க ஓடி வந்தேன். நீயோ என்மேல் கொடுமை கூறுகிறாய். மறுபடி வற்புறுத்திச் சொல்கிறேன். பெரியவர்களுக்கே புத்தி தடுமாறும்போது சிறிசுகளை நம்ப முடியாது. நிதானம்

தவறிவிட்டால் பெருத்த மானக்கேடு. இந்த மாதிரி விஷயங்களில் குருட்டு நம்பிக்கை உதவாது. யாரையும் நம்பிவிட முடியாது. எவ்வளவு நெறியுள்ளவனும் தவறி விட்ட சரித்திரங்களை நாம் கேட்டிருக்கிறோம். இந்தக் காலத்தில் அடிக்கடி காதில் விழும் சமாசாரம் இதுதான். திடுக்கிடும் சம்பந்தங்களும் ரிஜிஸ்டர் விவாகங்களும் சகஜமாகி வருகின்றன. பெற்றோர்கள் திகைக்கும்படிக் கும், விஷத்தை உண்டு வெளிக்கு முக விகாஸத்தைப் பிர கடனம் பண்ணும்படிக்கும் காரியங்கள் அத்து மீறி நடந்து விடுகின்றன. ஆகையால் காலத்தில் விவாகம் செய்வது தான் குடும்பத்தின் கண்யத்தையும் பரிசுத்தத்தையும் காப்பாற்றும் வழி. என் சுய காரியத்துக்காக நான் பேச வில்லை. நீ இஷ்டப்படாவிட்டால் செல்லத்துக்கு வேறு இடம் பார்த்துவிடுகிறேன். காந்திமதிக்கும் நான் வரன் பார்த்துத் தருகிறேன். வீணாகக் கீழே விழுந்துவிட்டுக் கன்னத்தில் மண் ஒட்டவில்லை என்று பிரதாபம் பேசிக் கொள்ளவேண்டாம். நமக்கு எவ்வளவோ உயர்வான சம்பந்தங்கள் கிடைக்கக்கூடியபோது பள்ளத்தில் குதித் தால் தடுமாறி விழுந்ததாய்த்தான் லோகத்தில் நினைப்பார் களே ஒழிய நிதானமாக இறங்கியதாக ஒருவரும் நம்ப மாட்டார்கள். இந்த மாதிரி அவகேடான சம்பந்தங் களெல்லாம் தீராத பக்ஷத்தில்தான் நடக்கின்றன என்பது யாவரும் அறிந்ததே.''

``என்னமோ உனக்குத் தெரிந்ததை நீ சொல்கிறாய்'' என்றாள் சலிப்புடன் சங்கரி. அந்தச் சமயம் ராமநாதனும் சீதாராமனும் பள்ளியிலிருந்து வீட்டுக்கு வந்தார்கள். சிவராமன் முன் வாசலுக்குப் போய் ஹாலில் ஒரு நாற் காலியில் அமர்ந்தான்.

* * * *

சீதாராமனுக்கு ஊரிலிருந்து சில கடிதங்கள் வந் திருந்தபடியால் அவைகளைப் படித்துக்கொண்டு அவன் தன் ரூமில் இருந்துவிட்டான். ராமநாதன் மாமாவை

யோக க்ஷேமங்கள் விசாரித்தான். அன்று சாயந்தரம் சினிமாவுக்குச் செல்லும், காந்திமதி, ராமநாதன் எல்லோருடனும் மாமா சிவராமன் புறப்பட்டார். சீதாராமனையும் அவர் அழைத்தார். ஆனால் அவன் சாக்குச் சொல்லி அவர்களை அனுப்பிவிட்டுப் பின் தங்கினான். மாமா, ஏமாற்றத்துடன் சென்றதாக அவனுக்குத் தோன்றிற்று. ராமநாதன், உற்சாக மேலீட்டில் தான் வராதது னால் ஏமாற்றமடைந்ததாகக் காண்பித்துக்கொள்ளவில்லை.

அன்று வந்த கடிதங்கள் சிவராமனின் மன அமைதியைக் கலைத்தன. அப்பாவின் லெட்டர் அவனைத் தலை குனியச் செய்தது. அவர் ஆகாசக்கோட்டைக்கு அஸ்திவாரம் போடுவது அவனுக்குப் பிடிக்கவில்லை. ஆகாசக் கோட்டை ஆகாசத்தில் உற்பவிக்க வேண்டுமேயானால் தெய்வாதீனமாக உற்பவிக்க வேண்டும். தெய்வபலத்தினால் அந்தரத்தில் தொங்க வேண்டும். அதற்கு மண்ணைப் பறித்து அஸ்திவாரம் போட நினைப்பது எவ்வளவு மடமை? அப்பாவுக்குப் பணக்காரர் பூஜையில் எவ்வளவு நம்பிக்கை! ஓட்டை மணியை எவ்வளவு பலமாக அடிக்கிறார்! வெறும் கை நிவேதனத்தை எவ்வளவு ஆடம்பரமாகச் செய்கிறார்! எல்லாம் பிரார்த்தனை புரஸ்காரத்தினால் நடந்துவிடுமென்று அவருக்கு எவ்வளவு ஆசை! இது பழைய உலகத்துக்கு ஏற்றதாக ஒரு வேளை இருந்திருக்கலாம். ஆனால் இந்தப் புது உலகத்தை அவர் ஊன்றிப் பார்க்காததுதான் தோஷம். இவ்வுலகத்தில் வழங்கும் ஒரே தத்துவம் அகம். இந்த விராட்புருஷனுக்கு நான்கு பாதங்கள்: சுயகாரிய முன்னேற்றம், சுயலாபம், சுயப்பெருமை, சுயக்கொள்கையின் ஆக்கிரமிப்பு! பகாசுரனை ஸ்துதி செய்தோ அவன் முன் அழுது பரிதவித்தோ அவனை ஒரு நாள் உபவாஸம் இருக்கும்படி செய்ய யாரும் நினைக்கவில்லை. ஆனால் ஆசைக்குக் கண்ணில்லை; கட்டுமில்லை! அதுவும் கொஞ்சம் தெய்வானுகூலம் ஏற்பட்டுவிட்டால் பிரம்ம

சாரியின் மனோரதம்போல் காலில்லாப் பந்தலை உயர்த்துவது ஸகஜமாக இருக்கிறது. ஆனால் அந்தப் பந்தலே நம்பித் தன் கூரையைப் பிய்த்து எறிந்துவிடலாமோ? அப்பா கடிதத்தில் பாதி வளைத்துக் கட்டும் ஸ்துதியும், மற்றொரு பாதி வெறுப்பும் உதாசீனமும் நிறைந்ததாயும் இருக்கிறதே! அநாவசியமாக மனுஷ்யனைத் துவேஷிக்கும் அதம மனோபாவம் இவருக்கு ஏன்? தன் உயர்வு நிச்சயமாகுமுன் பிறரை வெறுப்புடன் நோக்குவது என்ன அறிவு? சோம்பேறி மனோரதங்களுக்கு எப்போதும் வாலில் விஷமில்லாமல் இராது. அநேகமாக அவைகள் வியர்த்தமாவதுடன் துயரத் தொடர்புக்கும் காரணமாகின்றன. முதலில் மாமா சிவராமன் விஷயமாக என்னை எச்சரிப்பதுபோல் தோன்றுகிறது. 'இந்தக் கடிதம் வருகிறதை அறியாமல் இந்தக் கடிதத்துடன் ஒரே ரெயிலில் பிரயாணம் செய்து உன்னிடம் நைச்சியம் பேச வரும் ஒண்ணாம் நெம்பர் சகுனிமாமா' என்பது மாமா சிவராமனையல்லவா குறிப்பதாகத் தெரிகிறது! கீழே மணிமாமாவைப்பற்றியும் எழுதியிருக்கிறது. ஸரஸாவைக் காக்கையாக வருணித்திருக்கிறார்! 'மணிமாமாவை வேங்கடசுப்பையரிடம் தள்ளிவிடு' என்று எழுதியிருப்பதால் மணிமாமாவும் இங்கே வரப் பிரசக்தி இருப்பது போல் தோன்றுகிறது. மொத்தத்தில் இரண்டு மாமாக்களையும் நிராகரிக்கும்படி எழுதியிருக்கிறார்! செல்லம், ஸரஸ்வதி இருவரும் என்னை அடையப் போட்டி போடுவதாக ஏற்படுகிறது! ஆனால் செல்லத்தைப்பற்றிய வரையில் இது அசம்பாவிதமாகத் தோன்றுகிறதே!

ஒருவேளை மாமா சிவராமன் அப்பாவிடம் பிரஸ்தாபித்துவிட்டு இங்கே என்னைப் பார்க்க வந்திருக்கிறார் போலும். மாமா சிவராமன் தன் சுருகிய நிலைமையில் ராமநாதனைக் கைவிட்டு என்னை ஆச்ரயிக்கிறார்போலும். ஒருவேளை அவர் அக்காவும், அத்திம்பேரும் நிராகரிப்பு மூலம் அவரை உத்சாகபங்கப்படுத்தியிருக்கலாம். அடுத்தபடியாக என்னைக் கோருகிறார்போலும்! அப்பாவுக்கு மாமா

சிவராமனிடம் வெறுப்பு இருக்கிறது சகஜம். சிவராமன்- பெரிய ஹோதாவில் தர்பார் நடத்தும் சிவராமன் - அப்பாவிடம் போய் யாசிக்கக் கூடியவரென்று கனவிலும் நான் நம்ப முடியாது. ஆனால் இந்த உலகத்தில் எதுதான் நடக்காது? அப்படி ஒருவேளை சிவராமன் என்னிடம் பிரஸ்தாபித்தால், அப்பா எச்சரிக்கும் முன்னமேயே செல்லத்தின் விஷயத்தில் நான் என்ன தீர்மானம் சொல்வது என்பது எனக்குத் தெரியும். ராமநாதனுடன் பகைத்துக்கொள்ளும்படி நேரிடுமானால் செல்லத்தை மட்டுமல்ல, என் உயிரையே நான் தியாகம் செய்யத்தான் நினைப்பேன். ராமநாதனுக்குச் செல்லத்தினிடம் விருப்பு வெறுப்புகள் எவ்விதம் என்று வியக்தமாகத் தெரியாவிட்டாலும் அவனுக்கென்று உத்தேசிக்கப்பட்டுப் பிரஸ்தாபங்கள் நடமாடி வந்திருப்பதால் என் பெயர் அந்தச் சம்பந்தத்தில் உச்சரிக்கப்படுவதுகூட எனக்கு விஷம்போல் பயத்தைத் தருகிறது. எனக்கு ஏதோ போதாத காலத்துக்குத்தான் இந்தப் பரிசோதனை வந்திருக்கிறதென்று நினைக்கிறேன். மேலும் செல்லம் என்னை மதிக்கிறவள் என்று தோன்றவில்லை. இந்தத் திடுக்கிடும் பிரஸ்தாபத்தை மாமா சிவராமன் என்னிடம் ஆரம்பித்தால் அவருக்கு என்ன பதில் சொல்வதென்பது தெரிந்ததுதான். ஆனால் மணி மாமாவுக்கு என்ன தெரிவிக்கிறது? அவர் கடிதம் சுருக்கமாகவும் அன்பும் நம்பிக்கையும் ததும்புவதாகவும் இருக்கிறது. அவர் இங்கே வருவதாக ஒன்றும் எழுதவில்லை. 'இந்த வருஷம் சௌ. ஸரஸுவுக்கு விவாகத்தை ஈச்வர கிருபை இருந்தால் நடத்திவிடலாமென்று உத்தேசம். உனக்குப் பரீக்ஷை முடிந்து நீ ஊருக்கு வரலாமென்று எதிர்பார்க்கிறேன். உன் தேச கால வர்த்தமானங்களின் அநுகூலம் எப்படி இருக்கிறது? உன் அப்பாவிடமும் பிரஸ்தாபித்திருக்கிறேன். மேலே என்ன செய்வதென்று உன் பதிலைப் பார்த்துக்கொண்டு யோசிக்கவேண்டும்.' சுப்பிரமண்ய ஸ்வாமி மயில்வாகனத்தில் இருப்பதுபோல்

வசனம். தாத்பரியம் ஸ்பஷ்டமாகத்தான் இருக்கிறது. எனக்குப் புதுப் பழக்கங்களில் மோகம் இல்லை. மணி மாமாவுக்கு நான் அடிமைப்படவேண்டியவன். ஸரஸுவை அப்பா காக்கை என்று வருணித்திருக்கிறார். அவருக்கு ஹம்ஸமாகத் தோன்றும் பெண்கள் எனக்குக் கொக்காகவும் கோழியாகவும் தோன்றலாம். அப்பா, நிறத்தைப் பார்க்கிறார். நான் சுபாவத்தைப் பார்க்கிறேன். அப்படியும் ஸரஸுவைக் கறுப்பென்று சொல்வது துவேஷ புத்தியினால்தானே ஒழிய, வேறில்லை. அவள் பொன்னிறமல்ல; மாநிறம். நிறத்துக்கும் வசீகரத்துக்கும் சம்பந்தமில்லை. சுரைக்காய்போல் முகமும், சோழி போல் விழியும், அலகுபோல் மூக்கும், அகண்ட நெற்றியும், கோணல் வாயும், கொக்குக் கழுத்துமாக இருந்தால் நிறம் என்ன செய்யும்? ஆனால் அப்பாவை அநுசரித்துத்தான் மாமாவுக்குப் பதில் எழுதவேணும். தெய்வ சங்கல்பம் அப்பாவுக்கும் கட்டுப்பட்டதல்ல; என்னையும் எதிர்பார்ப்பதல்ல. நம் சாமர்த்தியத்தில் ஒன்றும் இல்லை. நீதி வழியே நாம் நடந்தால் அது எங்கே கொண்டுபோய் விட்டாலும் சம்மதமே. 'விவாகத்தைப்பற்றி நான் இப்போது சிந்திக்கவில்லை. என் நிலைமை நேர்ப்பட்ட பிறகு அதாவது நான் ஒரு நிர்வாகியான பிறகு, அதைப்பற்றி ஆலோசிக்க வேண்டிய அவகாசம் இருக்கும். ஒருவிதச் சுதந்தரமும் இல்லாத நான் களத்திரமுடையவனாக எப்படிச் சம்மதிக்க முடியும்? தாங்களே பரிசீலனை செய்து பார்த்து என்னை க்ஷமிக்கவேண்டும்' என்று மணி மாமாவுக்கு எழுதிவிடுகிறேன்.

ஸரஸுவுக்கு என்ன பதில் எழுதுகிறது? ஒரே தபாலில் இந்த மூன்று லெட்டர்களும் வரக் காரணம் என்ன? ஸரஸுவின் கடிதம் அவளுடைய கவலையை வெளிப்படுத்துகிறது. ருக்மிணி, கிருஷ்ண பகவானுக்குத் தூது அனுப்பும் நெருக்கடிபோல் ஏதோ ஒரு நெருக்கடியை அவள் சந்தேகித்தால் ஒழிய இக்கடிதம் எழுத நினைத்திருக்கமாட்டாள் என்பது நிச்சயம். சியாமளாம்பா

புரத்தில் ஏதோ பேச்சு வார்த்தைகள் பலமாக நடந்து வருவதாகத் தெரிகிறது. ஸரஸா ஆரண்டுகொள்ளும்படி என்ன நடவடிக்கைகள் நடந்திருக்கின்றனவோ! ஊகிப்பது அசாத்தியம். ஆனால் அந்தக் கடிதம் எழுதக்கூடிய பண்பு பெற்ற கன்யா ரத்னத்தை நிராகரிப்பது எப்படி முடியும்? வாழ்க்கையின் இந்தப் பண்பு இணையற்ற மகிழ்ச்சிக்கும் அபிவிருத்திக்கும் உத்தரவாதியல்லவா? கடிதமும் ஒரு புதிர் போட்டால்போல்தான் இருக்கிறது. "ஸ்ரீமான் அத்தான் அவர்களுக்கு தங்கள் அன்புள்ள அம்மங்காள் ஸரஸ்வதி அநேக கோடி நமஸ்காரம். நேற்று இரவு நான் தூக்கத்தில் விழித்துக்கொண்டு காதால் கேட்டது ஸ்வப்னமா, வாஸ்தவமா என்று பிரமித்துவிட்டேன். நான் தூங்குவதாகவே என் பெற்றோர்கள் எண்ணியிருந்திருப்பார்கள். உங்களுக்குப் பலவிதமாகக் கடிதங்கள் வரும். பல தாட்சிண்யங்கள் ஏற்படலாம். எனக்கு எல்லோரையும்போல் எழுதத் தெரியாது. நான் காதம்பரியைப் போல் வாசகம் என்ன எழுதுவது என்று தத்தளித்துக் கொண்டிருக்கும் சமயத்தில் நைஷதகவியைச் சரணமடைகிறேன்:

"பாணிக்ரஹண விஷயத்தில் தன் மனத்திலிருக்கும் அபிலாஷையை எந்தக் கன்னிகை வார்த்தைகளினால் நேராகச் சொல்லுவாள்?

"என்னை வேறு மணாளனுக்குக் கொடுப்பது சம்பாவிதம் என்று நினைக்குமுன் இரவில் சந்திரனைத் தவிர மற்றொருவன் பிரகாசிக்கலாம் என்பதைச் சிந்தாந்தப் படுத்திக்கொள்ளவும்.

"துரிதமாய்ச் செய்ய அவசியம் ஏற்பட்ட காலத்தில் தாமதம் சரியல்ல. ஆலோசனைகளெல்லாம் அதற்கு அவகாசம் தரும் காரியத்துக்குத்தான். வேதனை விளம்பத்தைச் சகியாது."

"நீங்கள் அப்பாவிடம் நைஷதம் படிக்கும்போது நான் பக்கத்திலிருந்து கவனித்துக்கொண்டிருந்தேன்.

பின்பு அப்பாவிடம் நானே நைஷதம் வாசித்தேன். சில சுலோகங்களின் கருத்தை மேலே எழுதியிருக்கிறேன். காவ்யம் தனிச் சிந்தனையில் மட்டுமல்லாமல் உலக இயலிலும் உயர்ந்த பயன் தரும் என்பதை இப்போது உணர்கிறேன்.

இப்படிக்குத் தங்கள்,
அன்புள்ள அம்மங்காள்,
ஸரஸ்வதி.''

சீதாராமன் பல முறை இந்தச் சுலோகங்களை ஆவிருத்தி பண்ணித் தாத்பரியத்தை ஆராய்ந்து பார்த்தான். ஸரஸுவுக்கு அவளைப் போலவே அவ்வளவு நாசுக்காக எப்படிப் பதில் எழுதுவது என்ற சிந்தையில் ஆழ்ந்து கரைகாணாமல் அவன் தூக்கத்தில் அயர்ந்துவிட்டான்.

சீதாராமன் தூக்கம் விட்டு எழுந்ததும், விடியற் காலையில் மாமாவுக்கு உத்தேசித்தபடி கடிதத்தை எழுதி வைத்தான். தகப்பனுருக்கு உடனே பதில் எழுதவில்லை. மாமா சிவராமன் ஊருக்குத் திரும்பிய பிறகு எழுதலாம் என்று ஒத்திப்போட்டான்.

ஸரஸுவின் கடிதத்தை மறுபடி எடுத்து வாசித்தான். அவள் தன் பெற்றோர்களின் பேச்சு வார்த்தைகளைக் கவனித்ததிலிருந்து அப்பாவுடன் சமரஸம் முறிந்துபோய் வேறு வரனுக்கு நிச்சயம் செய்துவிட அவர்கள் உத்தேசித்திருப்பதை அவள் அறிந்து அதைத் தனக்கு எச்சரிக்கை செய்யவே அக்கடிதம் எழுதலானாள் என்று ஊகித்தான். அவளுக்கு எப்படிச் சமாதானம் சொல்வது என்ற கவலையில் ஆழ்ந்தான். கடிதம் போடுவது யுக்தமல்ல என்று தீர்மானித்தான். அவன் தகப்பனுருக்கு ஒரு மாதிரியாகவும் அவளுக்கு ஒரு மாதிரியாகவும் எப்படிக் கடிதம் எழுதுவது? கடிதம் மாமா கைக்குக் கிடைத்து விட்டால் என்ன செய்கிறது? அவளும் பதில் போடும்படி எழுதவில்லை. விபரீதப் போக்கில்லாமல் பார்த்துக்கொள்

ளும்படி எச்சரிக்கை செய்திருக்கிருள்; அவ்வளவுதான். மணி மாமா தடபுடலாக ஒன்றும் செய்துவிடமாட்டார்.

எனக்கு முன்னறிக்கை இல்லாமல் நிச்சயமாக ஒன்றும் நடந்துவிடாது. எதையாவது சாக்கு வைத்துக் கொண்டு, அவர் இங்கே வருவார் என்று நான் எதிர் பார்க்கிறேன். ஆனல் ஸரஸுவுக்குச் சமாதானம் சொல்ல வேறு உபாயம் ஏதாவது உண்டா?

சீதாராமனின் ஆலோசனை முடியுமுன் பொழுது விடிந்தது.

# 3

## போர்ஜரி செக்கும் காதல் கவிதையும்

காலையில் ராமநாதன் சீதாராமனின் ரூமுக்கு வந்து முதல் நாள் ராத்திரி பார்த்த சினிமாவைப்பற்றி உற்சாகமாகப் பேசினான்.

"நீ வராமல் போய்விட்டாயே, சீதாராமா?"

"சந்நியாசியின் மகள்தானே! நாம் இருவரும் முன் ஒரு முறை பார்த்திருக்கிறோமே! அதே படமா இன்னமும் ஓடுகிறது? அதைத்தான் பார்க்கப் போனீர்களா? வேறு சிலாக்கியமாக உங்களுக்கு ஒன்றும் தென்படவில்லையா? நான் வராமல் இருந்தது நல்லதாகப் போயிற்று. அந்தக் குப்பைக் களஞ்சியத்தை இன்னுமா ஜனங்கள் பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்!"

"ஆம். நான் முன்னொரு முறை பார்த்திருக்கிறேன். நீயும் அன்று பார்த்தது இப்போதுதான் ஞாபகம் வருகிறது. அந்தப் படத்துக்கு என்ன? நன்றாயில்லை என்று சொல்கிறாய்?"

"நன்றாயிருந்தால் நீ முதல் தடவை பார்த்ததை மறந்து போயிருப்பாயோ?"

"நான் மறக்கவில்லை. நீ என்னுடன் வந்தது ஞாபகம் இல்லை என்றுதான் சொன்னேன்."

"நான் வராமல் நீ தனியாகவும் போவதுண்டோ?"

"இல்லை. நீ இல்லாமல் பாட்டு, கதைகளுக்குப் போவதில்லைதான். ஸினிமாவுக்குப் பல தரம் நீ வர நிராகரித்திருக்கிறபடியால் சில சமயம் நான் தனியே போக நேரிட்டிருக்கிறது."

"வாஸ்தவம்; அதற்கெல்லாம் உனக்கு வேறு ஸகாக்கள் இருக்கிறார்கள் அல்லவா?"

"இருக்கிறார்கள்" என்றான் ராமநாதன் சிரித்துக்கொண்டு.

"நேற்று நீங்கள் பார்த்த படம் உன் மாமாவுக்குப் பிடித்திருக்கிறதாக்கும்."

"கடைசியில், சீதாராமா, நேற்று மாமாவுடன் நான் சினிமாப் பார்க்கவில்லை."

சீதாராமன், "ஏன்?" என்று வினவினான் ஆச்சரியத்துடன்.

"இரண்டாம் ஷோவுக்குத்தான் போனேன்."

"அடாடா! அவர்கள்?"

"அவர்கள் முதல் ஷோ பார்த்துவிட்டு வந்துவிட்டார்கள். நேற்றுக் கூட்டம் நெரிந்தது. டிக்கட்டு வாங்குவது வெகு சிரமமாகிவிட்டது. நான் எனக்குத் தெரிந்த பேர்வழி ஒருவனிடம் பணத்தைக் கொடுத்து நான்கு இரண்டாம் கிளாஸ் வாங்கச் சொன்னேன். அவன் மூன்று டிக்கட்டுகளைமட்டும் வாங்கி வந்தான். தவறிக் குறைத்து வாங்கிவிட்டதற்காகத் தன் மூன்றும் கிளாஸ் டிக்கெட்டை எனக்குக் கொடுப்பதாகச் சொன்னான். நான் அவனிடம் அநுதாபப்பட்டு என் மூன்று டிக்கெட்டுகளை மட்டுமே பெற்றுக்கொண்டேன். மறுபடி டிக்கெட்டு வாங்கப் பிரயத்தனப்படுவது அசாத்தியமென்று நினைத்து, மாமாவையும், இரு பெண்களையும் உள்ளே அனுப்பிவிட்டு, நான் வெளியே நின்றேன். அடுத்த ஷோவுக்குத்தான் போக முடிந்தது. அந்தக் கூட்டத்தில் மறுபடி அவர்களைக் கண்டுபிடிக்க முடியவில்லை. நான் ராத்திரி வீடு வரும்போது அகாலமாகிவிட்டது. மாமாவை இன்னும் சினிமாவைப் பற்றிக் கேட்கவில்லை. அவர், பெண்ணின் புஸ்தகம் நோட்டுகளைப் பரிசோதனை

போட்டுக்கொண்டு, அவன் படிப்பு விஷயமாக விசாரித்துக் கொண்டிருக்கிறார்.''

''உனக்கு ராத்திரி தூக்கமில்லாதது முகவாட்டத்திலேல் நன்றாகத் தெரிகிறது.''

''முகவாட்டமா?'' என்றான் திடுக்கிட்டதுபோல் ராமநாதன்.

''வாட்டம் மட்டுமா? முகம் வெளுத்ததுபோல் அல்லவா தெரிகிறது? எங்கேயாவது பயந்துகொண்டாயா என்ன?''

''சட், பயமாவது, மண்ணாங்கட்டியாவதுடா?'' ஒய்யாரமாக நிமிர்ந்து உட்கார்ந்தான் ராமநாதன்.

''ராமநாதா! உன் ரிஸ்ட் வாட்சு எங்கே?''

''கூட்டத்தில் இடிபட்டதில் கண்ணாடி உடைந்து போய்விட்டது. உடனே வாட்சு ரிப்பேரரிடம் கொடுத்து விட்டேன்.''

''யாரிடம்?''

''கண்ணுசாமி அண்டு ஸன்ஸில் கொடுத்திருக்கிறேன்.''

''தங்கச் சங்கிலியைக் கையில் எடுத்துக்கொண்டு விட்டாயல்லவா?''

''அதைக் கொடுப்பேனா?''

''உன் வைர பட்டன் ஸெட்டைக் கழற்றி வைத்திருக்கிறாயா, என்ன?'' என்று வினவினான் சீதாராமன், மீண்டும் கவனித்து.

''அதை அந்தக் கூட்டத்தில் போட்டுக்கொண்டு போகாதது நல்ல யோசனையாகப் போச்சு. இல்லாவிட்டால் அதையும் பறிகொடுத்துவிட்டால் யாரைக் கேட்க முடியும்?''

"மோதிரம்?"

"எல்லாவற்றையும் உள்ளே பீரோவில்தான் வைத்திருக்கிறேன். உன்னிடத்திலிருந்து இந்த முன் ஜாக்கிரதையெல்லாம் கற்றுக்கொண்டிருக்கிறேன். அது கிடக்கட்டும். சீதாராமா, நாளைக்கு அத்திம்பேர் வரப் போகிறாரே, உனக்குத் தெரியுமோ?"

"அத்திம்பேரா? டாக்டர் கோபிநாத் வருகிறாரா? கோமதியும் வருகிறாளா?"

"கோமதி, குழந்தை ராதா எல்லோரும்தான் வருகிறார்கள். அவர்களோடு மாப்பிள்ளையும் வருகிறாராம்."

"மாப்பிள்ளையா?"

"காந்திமதிக்குப் பார்த்திருக்கிற மாப்பிள்ளை; அத்திம்பேரின் சிறிய தாயின் பிள்ளைதான் அவர். இஞ்சினீயரிங் காலேஜில் படிக்கிறாராம்."

"எப்போ கடிதம் வந்தது?"

"நேற்றுத்தான் வந்ததாம், அப்பா ஆபீஸ் அட்ரஸுக்கு. இப்போது என்னிடம் அப்பா கடிதத்தைக் காண்பித்தார்."

"நாளைக்கே வருகிறாரா?"

"நாளைக்குப் புறப்படுகிறாராம் நாக்பூரிலிருந்து. அதுவும் அவ்வளவு நிச்சயமாக எழுதவில்லை. இந்த வாரத்துக்குள் கட்டாயம் வந்துவிடுகிறார். தன்னுடன் ஜகந்நாத் என்ற தன் அத்தை பிள்ளையையும் அழைத்து வரலாம் என்று எழுதியிருக்கிறார்."

"அத்தை பிள்ளையா? சிறிய தாயார் பிள்ளையா?"

"ஆன்ட் என்று எழுதியிருக்கிறார். அதை எப்படி வேண்டுமானாலும் வைத்துக்கொள்ளலாம்."

"ஆனால் உனக்கு அந்த ஜகந்நாத்தைப்பற்றித் தெரியாதா?"

"எல்லாம் இந்த ஒரு வாரத்துக்குள்தான் பிரஸ்தாபம். அத்திம்பேர் தன்னுடைய 'கஸின்' ஜாதகத்தை வாங்கி அனுப்பி ஒரு வாரந்தான் ஆகிறது. அவர்கள் ஜாதகம் பார்க்கப்போவதில்லை என்றும் எழுதிவிட்டார். அப்பா, ஜாதகத்தைப் பார்த்துச் சம்மதத்தை உடனே தெரிவித்தார். இதை எல்லாம் வீட்டில் பிரஸ்தாபிக்கு முன்னமேயே விரைவில் காரியம் முன்னேறி வருகிறது."

"எதிர்பாராதது, வெகு துரிதமாய் நடக்கிறதும், நாம் உத்தேசிப்பது தடைப்பட்டு நிற்பதும் வழக்கந்தானே?" என்றான் அரை வேதாந்தியான சீதாராமன்.

"அப்பா ஒரு செக் எழுதிக் கொடுத்திருக்கிறார். அதை மாற்றிப் பணத்தை ஆபீஸில் தன்னிடம் கொண்டு வந்து கொடுக்கும்படி சொன்னார்."

"யார் பேருக்கு?"

"வழக்கம்போல் உன் பேருக்குத்தான். எப்போதும் போல் நீதான் பாங்குக்குப் போகவேணும். பணத்தை என்னிடம் கொடுத்துவிடு. நான் அப்பா ஆபீஸுக்குப் போய்விட்டுக் காலேஜுக்கு வருகிறேன். நான் லேட்டாக வருவேன் என்று வாத்தியாரிடம் சொல்லு."

"நான் பாங்குக்குப் போவதானால் எனக்கும் லேட்டாகுமே!"

"முதல் மணிக்கு உனக்கு அட்டெண்டன்ஸ் கொடுக்கும்படி சங்கரிடம் சொல்லிவிடுகிறேன்."

"செக் எவ்வளவு ரூபாய்க்கு?"

"ஆயிரம் ரூபாய்க்கு."

"எதுக்குத் திடீரென்று ஆயிரம் ரூபாய்! இவ்வளவு பெரிய செக் இதுவரையில் என்பேரில் போட்டதில்லையே!"

"நாளைக்கு நிச்சயமாகப்போகிற விவாக சம்பந்தமாக ஏதாவது செலவுக்குத்தான் இருக்கும் என்று நினைக்

கிறேன். அப்பாவை இப்போது கேட்கக்கூடாது. பிற்பாடு கேட்டால் சொல்லுவார். சரி, நாழிகையாகிறது; நீ சாப்பாட்டுக்கு ரெடி பண்ணிக்கொள்.''

காலேஜுக்குப் போகும்போது சீதாராமன் பாங்கியில் செக்கை மாற்றி ராமநாதனிடம் பணத்தைக் கொடுத்தான். ராமநாதன் அப்பா ஆபீஸுக்குப் போனான். சீதாராமன் காலேஜுக்குப் போனான்.

ராமநாதன் காலேஜுக்குப் போகும்போது மணி 12½ ஆகிவிட்டது. அவன் முகக்களை பிரகாசமாக இருந்தது. கையில் தங்கச் சங்கிலியுடன் தங்க ரிஸ்டுவாட்சும், விரலில் வைரமோதிரமும், மார்பில் வைரப்பித்தான்களும் ஜொலித்தன. அவன் கிளாசுக்குள் வருவதைச் சீதாராமன் கவனிக்கு முன் ரோஸ்லிண்டு பத்மா என்னும் மாணவி கவனித்தாள். அவளுடைய அழகிய கண்கள் ராமநாதனின் மேற்கூறிய ஆபரணங்கள்மீது குறிப்பாகப் பாய்ந்து பின் சென்றன. ராமநாதனின் கண்களும் பத்மாவைத்தான் முதலில் தேடின. ராமநாதன் ஒரு மூலையில் மெதுவாகப் போய் அமர்ந்துகொண்டான். உட்கார்ந்ததும் சீதாராமனைப் பார்த்துப் புன்சிரிப்புச் சிரித்தான். பத்மாவை மறுபடி கடைக்கண்ணால் ஆராய்ந்தான். பத்மா உறுதியுடன் சிலையாக மாறிவிட்டாள். சீதாராமன் கவனிப்பதை அவள் உணர்ந்தாள் போலும். உபாத்தியாயர்கள் அதிகமாக ராமநாதனைக் கண்டிப்பதில்லை. அவன் வம்புக்குப் போக யாரும் யோசிப்பார்கள். அவன் துணிகரமாகப் பதில் சொல்லுவதுடன் பல மாணவ மாணவிகளையும் கட்டுப்படுத்தும் செல்வாக்குடையவன். இவ்விதச் செல்வாக்கைக் கருதுபவன் படிப்பில் முன்னேறுவது குறைவுதான். ஆனால் அது ஒரு சுபாவம். அதற்கும் சில சமயம் பெருமை உண்டு.

காலேஜில் ஷேக்ஸ்பியர் நாடகம் ஒன்று கொண்டாட்டத்தின்போது நடத்த எண்ணினார்கள். அதில் ரோஸ

லிண்ட் என்ற கதாநாயகி வேஷத்தைப் பத்மா ஏற்றுக் கொண்டாள். ராமநாதன் கதாநாயகன் வேஷத்துக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டான். இந்தச் செய்தி தெரிந்தோ, என்னவோ, பத்மா தான் இஷ்டப்படாமல் விலகிக்கொள்ள விரும்பினாள். இந்தக் குறிப்பறிந்து 'டைரக்டர்' கதாநாயகன் பார்ட்டுக்கு வேறொருவரை முன் நிறுத்தினார். பத்மா, ரோஸலிண்டாக நடித்துப் பெரும் புகழும், பரிசும் பெற்றாள். இதன் முன்னே பின்னே பத்மாவுக்கும் ராமநாதனுக்கும் மனஸ்தாபம் எதுவும் இருந்ததாகவாவது, இருப்பதாகவாவது யாரும் ஊகிக்கக் காரணம் இல்லை. மற்றப் பெண்கள், பிள்ளைகள் காலேஜில் நடந்துகொள்வது போல்தான் இவ்விருவரும் நடந்துகொண்டார்கள். சீதாராமனுக்குக்கூடத் தொடர்ந்து விமர்சிக்கும்படி யாதொரு சந்தேகத்துக்கும் இடமளிக்கக்கூடிய நடவடிக்கைகள் இவ்விருவரிடையே இருந்ததாகத் தோன்றவில்லை. அன்று மட்டும் அவன் கவனித்த நயன பாஷை அர்த்தமற்றதாக இருக்க முடியாதென்று அவனுக்குப் பளீர் என்று மனத்தில் ஒரு மின்சார வெளிச்சத்தை வீசியது. ராமநாதனின் ஷர்ட் பித்தான்களின் வைரங்கள் கண்ணைக் கவர்ந்தன. பாங்குக்குப் போகும்போது ராமநாதன் அவைகளைத் தரித்துக்கொண்டிருந்ததையும், இல்லாததையும், தான் நிச்சயமாக ஞாபகப்படுத்திக்கொண்டு சொல்ல முடியாத நிலைமைக்கு அவன் வருந்தினான். செக்கில் கையொப்பமிட்டுத் தான் பணத்தை வாங்கி அந்தப் பெருந்தொகையை உடனே ராமநாதனிடம் கொடுத்துவிட்டது தன் மீது தவறு, அஜாக்கிரதை, குற்றம். மோசடி முதலிய அநர்த்தங்களைச் சுமத்தாமல் இருக்குமா என்று அவன் சந்தேகப்பட ஆரம்பித்தான். செக்கையும் வேங்கடசுப்பையரிடமிருந்து வாங்கவில்லை, பணத்தையும் அவரிடம் கொடுக்கவில்லையே என்று ஆராய்ந்து பார்க்கும்போது அவன் பதறினான். எவ்வளவு துரிதத்தில் ஒரு பெரிய பொறுப்புள்ள காரியம் நடந்துவிட்டது என்று நினைத்துத் திகைத்துப்போனான். இந்த நடவடிக்கை

களின் மேல்தோற்றத்துக்கும் உள் தத்துவத்துக்கும் வேறு பாடு இருக்குமோ என்று ஏங்கினான். தான் என்றும் காப்பாற்றி வந்த நிதான புத்தியை ஏன் இழந்தோம் என்று மனம் குழம்பினான். அவனுடைய உடலில் திடீரென்று உஷ்ணம் விசிறி அடித்தது; முகம் வேர்த்தது; நாக்கு உலர்ந்தது; புத்தி இருள் சூழ்ந்தது; இருதயம் படபடவென்று அடித்துக்கொண்டது; கண்கள் வெறித்துச் சூன்யத்தை நோக்கின. கிளாஸ் முடிந்து உபாத்தியாயர் எழுந்து சென்றார். பையன்கள் இடைவேளையை உத்தேசித்துத் தடதடவென்று காலரியில் சப்தம் செய்துகொண்டு வெளியே செல்ல ஆரம்பித்தார்கள். சீதாராமன் தன் நிலைமையைச் சமாளித்துக்கொண்டு, ராமநாதன் உட்கார்ந்திருந்த இடத்தைத் திரும்பிப் பார்த்தான். ராமநாதன் அங்கே தென்படாததாலும் வகுப்பு அநேகமாகக் காலியாகிவிட்டபடியாலும் சீதாராமன் வெளியே வந்தான். தாழ்வாரத்தில் ராமநாதனின் இனிமையான குரல் ஒலித்தது. ஆங்கிலமும், தமிழும், சிரிப்பும், விருப்பும் கலந்து பெருகின. அவன் வேறு சில பையன்களுடன், தான் தன் இஷ்டப்படி வருவதையும் போவதையும் உபாத்தியாயர்கள் பார்த்துக்கொண்டு பார்க்காதது போல் இருந்துவிடுவதைப்பற்றி அட்டகாசமாக விவரணம் செய்துகொண்டிருந்தான். அச்சிறு கோஷ்டி அந்த உயர்தர ஹாஸ்ய கட்டங்களையும், அவைகளுக்கு ஏற்ற அபிநயங்களையும் உத்ஸாகமாக ரஸித்துக்கொண்டிருந்தது. சீதாராமனும் அந்தக் கோஷ்டியில் கலந்துகொண்டான். அவன் கவலைகள் உடனே மறைந்தன.

சில நிமிஷங்களில் ராமநாதனும் சீதாராமனும் கைகோத்துக்கொண்டு டிபனுக்குச் சென்றார்கள்.

  

ஸோமா சிவராமன் செல்லத்தின் படிப்பறையில் உட்கார்ந்துகொண்டு அவளுடைய புஸ்தகங்களைப் புரட்டிக்கொண்டிருந்தார். ஆனால் அவருடைய நினைவுகள்

அலைந்துகொண் டிருந்தன. பள்ளிக்கூடப் புஸ்தகங்களில் அவருக்கு ஒன்றும் விசேஷ சிரத்தை இல்லை. எடுத்த புஸ்தகம் என்னவென்றுகூட அவர் நிதானித்துப் பார்க்கவில்லை. ஆனால் புஸ்தகங்களை எடுப்பதும் பிரிப்பதும் வைப்பதுமாகக் காலங் கழித்தார். செல்லம் ஸ்நான போஜனாதிகளுக்கு மத்தியில் அறையில் நுழைந்தபோது அவர் கேள்விகளுக்குப் பதில் சொல்லுவதும் போவதும் வருவதுமாக இருந்தாள். பின்பு பள்ளிக்கூடத்துக்குப் புறப்பட்டுவிட்டாள். மாமா சிவராமன் மனத்தில் சங்கரி அம்மாளின் பேச்சுத் தோரணை ஒரு புயலை எழுப்பியிருந்தது. ஓர் இரவு சென்றும் அது ஓயவில்லை. சினிமா பார்த்ததிலும் அது அடங்கவில்லை. சீதாராமன் அவருக்கு ஒரே விரோதியாகத் தோன்றினான். சீதாராமனிடம் தன் அக்காவுக்கு ஏற்பட்டிருக்கும் நம்பிக்கையையும் பிரீதியையும் மதிப்பையும் பாதிக்கும் வகையில் தான் எடுத்துக்காட்டிய சில நியாயங்களுக்காகத் தன்னையே அவர் மெச்சிக்கொண்டார். ஆனால் அவ்வளவு உடைத்துப் பேசியும் அக்காவுக்குப் பயன்படாததை நினைக்க அவர் வருந்தினார். அத்திம்பேர் வேங்கடசுப்பையரிடம் தன் மனோபாவங்களைக் கூறிவிடச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தார். வேலைத் தொந்தரவு அதிகமாக இருக்கும் சமயத்தில் அவரிடம் இந்த அக்கப்போர்களை எடுத்துச் சொல்லவேண்டாம் என்று எண்ணினார். வேங்கடசுப்பையர் சில தினங்கள் இரவு எட்டு மணிக்கு வீடு வந்து சேருவார். காலையில் வெகு அவசரமாக ஆபீசுக்குப் புறப்படுவார். எப்போதுமே அவர் யாருடனும் அதிகமாகக் கலகலப்புடன் பேசுபவர் அல்ல. அவரிடம் தனித்துப் பேச வேண்டுமானால், இரண்டு மூன்று தினங்கள் காத்திருந்துதான் அவகாசம் தேட வேண்டும். மாமா சிவராமன் சில தினங்கள் இருந்து பேச வேண்டியவற்றைப் பேசிவிட்டுத்தான் ஊருக்குப் போவதென்று தீர்மானித்துக்கொண்டார். காந்திமதியைச் சீதாராமன் பாணிக்கிரகணம் செய்து

கொள்ளுவதையாவது செல்லத்துக்கு ராமநாதனைத் தவிர வேறு வரன் பார்ப்பதையாவது அவர் மனம் அநுமதிக்கவில்லை. ராமநாதன் சில நடவடிக்கைகளில் தன்னைப்போல இருப்பதில் மாமா சிவராமன் திருப்தியடைந்தார். அதனாலேயே அவனுக்குச் செலவைக் கேட்காமல் ஒவ்வொரு சமயம் பணம் கொடுத்துவந்தார். காசை உதறி எறிகிறவன் உயர் பிறப்புப் பிறந்தவன் என்று மாமா சிவராமனுக்கு ஓர் அபிப்பிராயம். தான் வாங்கியதைத் திருப்பிக் கொடுக்க மறந்துவிடுவதையும் அவர் ஒரு பெரிய ஹோதாவாக மதித்திருந்தார். சிறு பிள்ளைகளை யதேச்சையாக விட்டு விட்டு, அவர்கள் மீது அதிகாரம் செலுத்தாமல் இருப்பது மட்டும் அல்லாமல், அவர்களின் தேவைகளை மனக் களிப்புடன் பூர்த்தி செய்து கொடுப்பதே தந்தையரின் கடமை என்பது அவர் கொள்கை. ராமநாதன் முதல் நாள் இரவு தன்னுடன் சினிமாவுக்கு வராதது பற்றியும், பின்பு அவன் இரண்டாம் ஆட்டத்துக்குப் போனானா, இல்லையா என்பது பற்றியும் விசாரித்து அறிந்துகொள்ள வேண்டியது அவருக்கு அவசியமாகத் தோன்றவில்லை. மாமா சிவராமன் தாமும் தமாஷாக இருப்பதுடன், பிறரையும் தமாஷாக இருக்க அநுமதிக்கும் சுபாவம் உடையவர். அவருக்குச் செல்லத்தினிடம் அதிக அன்பு. அவள் அவருடைய ஒரே பெண். அவளுக்குப் படிக்க ஊக்கம் இருக்கும் வரையில் அவள் படிக்கட்டும் என்ற எண்ணத்துடன் அவள் பட்டணத்தில் சுகமாக உயரிய தர்பாரில் கொஞ்ச காலம் இருந்து அநுபவிக்கட்டும் என்ற எண்ணமுந்தான் அவளை அவர் அங்கே கொண்டு வந்து விடக் காரணம். செல்லம் படிப்பிலும் செல்வமுள்ள வாழ்விலும் குறைவில்லாமல் இருந்து வருவது பற்றிச் சந்தோஷித்தார்.

மாமா சிவராமன் கையிலிருந்த 'நாட்டு வளமும் செய்நேர்த்தியும்' என்ற புஸ்தகத்திலிருந்து ஒரு தனிக் காகிதம் கீழே வீழ்ந்தது. அதை அவர் எடுத்துப் பிரித்துப் பார்த்தார். அது ஒரு கடிதம்போல் காணப்

பட்டது. முதல் குறிப்பும் கீழ்க் கையெழுத்தும் அவரை ஊக்கப்படுத்தின: "அழகுச் செல்வத்துக்கு" என்று மேல் குறிப்பு எழுதப்பட்டிருந்தது. கீழே கையொப்பம் அதிக விந்தையாக இருந்தது; "வெந்த உள்ளம்" என்று காணப்பட்டது. கடிதத்தின் மற்றப் பாகமெல்லாம் பாட்டுப்போல் காணப்பட்டது. மாமா சிவராமனின் மனம் அதில் துரிதமாக ஈடுபட்டது. ஊரோ தேதியோ ஒன்றையும் காணவில்லை. எழுத்துக்கள் இடது பக்கம் சாய்த்து எழுதப்பட்டிருந்தன. எழுத்து அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் இருப்பதற்காகப் போலும்! நுண்ணிய பேனா முனையால் லேசான கோடுகள் அதிகப் பிரகாசமில்லாத மையால் வரையப்பட்டிருந்தன; உள்ளத்தைக் கொள்ளையிட வந்த திருடனின் காலடி வைப்புப்போல்.

மாமாவின் உள்ளம் சங்கைகளுக்கும் பீதிகளுக்கும் ஆளானது. கடிதத்தைக் கூர்ந்து கவனித்துப் படிக்கலானார். எழுத்துக்கள் வேண்டுமென்றே அவசரத்தில் படிக்க முடியாதபடி அமைக்கப் பெற்றிருந்தன. அடிகளின் முதல் எழுத்துக்கள் அழகாகத் தீட்டப்பட்டிருந்தன.

1\. மருளும் மான்போல் அழகிய விழியும்
கார்முகில் அளகம் சூழ்மதி முகமும்,
திகழும் கோவைக் கனிபோல் இதழும்,
சிறுநகை தவழும் சிக்கன மொழியும்,
மதனுக் கம்புகள் ஐந்தும் தந்து
நலம் பெற வைக்கும் துடியிடை நங்காய்!

2\. மண்ணில் வளரும் மணந்தரும் மலரே!
பெண்ணே! பிறவிக் கடலுள் மணியே!
வானில் மிளிரும் வளர்பிறை மதியே!
வையக மனைத்தும் உய்யும் ரதியே
சந்ததம் உன்பால் இன்பக் கனவால்
வந்தவன் ஆதல் கண்டெனை ஏற்க!

3. அனலிற் கருகே வெண்ணெய் உருகும்
காந்தம் தன்னை இரும்புகள் அணுகும்
முழுமதி கண்டால் கடலும் பொங்கும்
மங்கையர் எதிரில் மயங்கார் எவரோ?

4. காணு மல்நான் காதலித் துன்னைத்
தீராத் தாகம் விரைவில் கொண்டேன்
கொஞ்சும் கடைக்கண் குளிரப் பாராய்
தாராய் உன்தன் வாழ்க்கை எனக்கே!

5. ஊற்றுப் பெருக்கென உள்ளம் துள்ளும்
காற்றும் மணமும் கலந்து பொழியும்
தேனும் பாலும் தீஞ்சுவை அளிக்கும்
சொல்லும் பொருளும் செழிக்கச் சேரும்
அத்து விதத்தின் சுத்தா னந்தம்
நித்தமும் ஓங்கும் நிறைந்த அன்பில்

6. அகவல் கவியா? மிகவல்லவனு?
ஏனோ என்தன் மடமை இதனில்?
பண்கள் பாடும் மெய்யன் பற்கு
அரைமதி அணியும் அரனருள் போலப்
பாட்டின் பிழைகள் பொறுத்துக் கொள்வாய்
கருணை புரிவாய் கடையன் எற்கே.

"வெந்த உள்ளம்"

இதைப் படித்தபோது மாமா சிவராமன் வீரபத்திர சொரூபத்தை அடையலானார். எந்தப் பயல் இவ்வளவு துணிச்சலாய்த் தன் பெண்ணுக்குக் கடிதம் எழுதினது? அவனைக் கட்டிவைத்து நையப் புடைத்து ஓர் அடையாளத்தைச் செய்து அனுப்ப அவர் கைகள் துறு துறுத்தன. அவர் எழுந்தார், உட்கார்ந்தார், நாற்காலியைக் கிர் என்று இழுத்துக்கொண்டார்; மறுபடி பின்னே தள்ளினார். டிராயரைப் படாரென்று மூடினார்; மறுபடி இழுத்தார். புஸ்தகங்களைத் தடதட வென்று கீழே தள்ளினார்; மறுபடி இரண்டொன்றைப்

பொறுக்கி எடுத்தார். வேறு லெட்டர்கள் இந்த மாதிரி இருக்குமோ என்று, சில புஸ்தகங்கள், நோட்டுப் புஸ்தகங்கள் முதலியவற்றைப் பரிசோதித்தார். 'வெந்த உள்ளத்' தின் லெட்டரை மறுபடி கையில் எடுத்து இரண்டொரு வரிகளை வாசித்தார். திடீரென்று எழுந்து, அக்கா சங்கரியிடம் சொல்வதற்காக உள்ளே போனார். ஆனால் பக்கத்துத் தெரு ஸ்திரீ ஒருத்தி சங்கரியுடன் பேசிக்கொண்டிருந்ததால் திரும்பித் தம் இடத்துக்கு வந்து உட்கார்ந்தார். செல்லம் வந்தவுடன் அவளை விசாரித்து வெகு கண்டிப்பாக நடந்துகொள்வதென்று தீர்மானித்துக் கொண்டார். செல்லம் வர எத்தனை நாழிகை ஆகுமென்று தம்மையே கேட்டுக்கொண்டு கடிகாரத்தண்டை ஓடினார். மணி இன்னும் பன்னிரண்டு ஆகவில்லை. மாமா சிவராமனுக்கு லேசாகத் தலைவலி கண்டது. மனம் குழம்பியதால் மயக்கம்போல் ஒரு நிலை தோன்றிற்று. அவர் முன்ஹாலில் சோபாவில் சாய்ந்தார். கண்களை அரைவாசி மூடிக்கொண்டு, ஏக்கத்தினால் அயர்ந்தார். அவருடைய கலவரம் நிறைந்த கனத்துப்போன தலையை வலது கை தாங்கிக்கொண்டது. இரண்டொரு நிமிஷம் சூன்ய நிலையில் மனம் அமர்ந்தது. அப்போது மதுரப்பாட்டி அவர் சமீபம் வந்தாள். பாட்டி கொஞ்ச நாழிகையாகச் சிவராமனைக் கவனித்துக்கொண்டிருந்தாள். அவர் உள்ளே போய்த் திரும்பியதைப் பார்த்ததும், என்ன வேண்டுமென்று விசாரிக்க நினைத்தாள். சிவராமனின் சோபாவருகில் வந்து மதுரப்பாட்டி மெதுவாக, "தீர்த்தம் வேண்டுமா?" என்று கேட்டாள். மாமா கண்திறந்து பாட்டியைக் கண்டதும், சுயப்பிரக்ஞையை வரவழைத்துக்கொண்டு, "ஆமாம். கொஞ்சம் தீர்த்தம் கொண்டாருங்கள்" என்றார். "நீங்கள் உள்ளே போனதையும் திரும்பினதையும் பார்த்தேன், அதனால்தான் கேட்டேன்" என்று அந்தரங்கத் திருப்தியுடன் சொல்லிக்கொண்டு மதுரப்பாட்டி உள்ளே சென்று வெள்ளி கூஜா டம்ளரில் தீர்த்தம் கொண்டுவந்து கொடுத்தாள். மாமா தீர்த்தம் அருந்தி

விட்டுத் தம் வெற்றிலை பாக்குப் பெட்டியைத் தேடிக் கொண்டு செல்லத்தின் ரூமுக்குள் சென்றார். அங்கே 'வெந்த உள்ள'த்தின் கடிதம் மேஜையின்மேல் பிரித்தாக் கிடந்ததைப் பார்த்து அச்சங்கொண்டு அதை எடுத்து மடித்துப் பத்திரமாக அந்த 'நாட்டு வளமும் செய்நேர்த்தியும்' என்ற புஸ்தகத்திலேயே ஒளித்துவைத்துப் புஸ்தகத்தை டிராயருக்குள் வைத்துவிட்டு, வெற்றிலைப் பெட்டியுடன் வெளியில் வந்தார். மதுரப் பாட்டி ஹாலிலேயே நிற்பது கண்டு அவள் தம்முடன் பேசுவதற்கு ஆயத்தமாக இருப்பதை உணர்ந்து, நடக்கும் பொழுது போக்குக்காக அவளை வினவினார்: "உள்ளே யார் புதுசாக இருக்கிறதே?"

* * *

மதுரப் பாட்டி வந்திருந்த ஸ்திரீயின் அந்தஸ்து, பிள்ளை குட்டிகள், உறவினர்கள், குணம், குற்றம் குறைகள், இந்த வீட்டுடன் போக்குவரத்து முதலிய விஷயங்களை எடுத்து இடைவிடாமல் உபந்நியசித்துக்கொண்டிருக்கும்போது மாமா சிவராமன் இரண்டு மூன்று தரம் வெற்றிலை புகையிலை போட்டு முடித்துவிட்டார். அந்த அம்மாள் பக்கத்துத் தெருவில் இருப்பவள். சுருக்கமாகச் சொன்னால், சீதாராமனை ஒரு வரனாக உத்தேசித்து விசாரிக்க வந்திருந்தாள்.

---

மதுரப் பாட்டி பெயரில் மதுரமே ஒழிய, சுபாவத்தில் மதுரமல்ல. மாமா சிவராமன், சீதாராமன் வீட்டில் இருப்பதைப்பற்றிச் சங்கரி அம்மாளிடம் ஆக்ஷேபித்ததை அவள் அறிவாள் ஆதலால், பதமறிந்து பேசலானாள்.

"ஏதோ அவனுக்கு அடிக்கிறது அதிருஷ்டம்; ஊரில் உட்கார்ந்தால் சாப்பாட்டுக்கு வழி இல்லை. இங்கே அதிகாரி அவன்தான். படிப்பும் உயர்கிறது. நாளைக்கு உத்தியோகமும் ஆகிவிடும். வீட்டிலேயே பிறந்த பிள்ளைக்கு ஒன்றிலும் அதிகாரம் இல்லை; படிப்பும் மத்திமம்;

போக்கும் ஒரு மாதிரி; எனக்குத்தான் அந்தப் பிள்ளையைப் பார்த்தால் பரிதாபமாயிருக்கு. தனக்கு வேண்டும் வேண்டாமென்பதுகூட அதுக்குத் தெரியாது. நான் பார்த்து, 'ஐயோ பாவம்!' என்று இரங்கி எண்ணெய் தேய்த்துக்கொள்ளச் சொல்லவோ, வயிறு நிறையச் சாதம் போடவோ, பக்ஷணம், பலகாரம் பண்ணிக் கொடுக்கவோ சிரத்தை எடுத்துக்கொண்டால்தான் உண்டு. இல்லாவிட்டால் இல்லை. ஆத்தில் அஷ்டைச்வரியமும் பொங்குகிறது. அநுபவிக்கக் கொடுத்து வைக்க வேண்டாமா? ஊரான் வீட்டுப் பிள்ளைக்கு நடக்கிறது; ஆத்துப் பிள்ளைக்கு இல்லை. அவன் கொடுத்து வைத்தவன். பெண்ணையுந்தான் கொடுத்து மாப்பிள்ளையாகச் செய்துவிடுவதாக எஜமானி அம்மாள் உங்களிடத்தில் சொன்னாளே! நான் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். அம்மாவுக்கு ஒரு குணம் வந்தால் அப்படித்தான் பேசுவார்கள். உங்கள் அக்கா சுபாவம் உங்களுக்குத் தெரியாததற்கா நான் சொல்லப்போகிறேன்? என் பிள்ளை ஒருவன் இருக்கிறான். இவனைவிட நல்ல சிகப்பு. இப்போது கிராப் வைத்துக்கொண்ட பிறகு பார்த்தால் சீமை துரை மகன் மாதிரிதான் இருக்கிறான். குணத்தில் தங்கக்கம்பி. சொன்ன சொல் தவற மாட்டான். கிழித்த கோடு தாண்ட மாட்டான். அவனை எவ்வளவோ பாடுபட்டு ஹைஸ்கூலிலே ஆறு கிளாஸ் படிக்க வைத்தேன்; மேலே காலேஜ் படிப்புக்கு என்றால் அவனை அனுப்ப முடியவில்லை. உங்கள் தமக்கையிடம் மன்றாடிக் கேட்டேன். அவனை ஆத்தில் சாப்பாடு போட்டுச் சம்பளமும் உதவிப் படிக்கச் செய்யவேண்டும் என்று. சம்பளம் வேண்டுமானால் உபகாரம் செய்வதாக உங்கள் அத்திம்பேர் சொன்னாராம். அவன் ஆத்தில் சாப்பிட உங்கள் தமக்கை அநுமதிக்கவில்லை. என் குழந்தையை நான் பிழைப்புக்குப் பாடுபட வெளியே அனுப்பிவிட்டேன். இப்போது அவன் பூனாவில் இருக்கிறான். 85 ரூபாய் சம்பளம். எனக்கு மாதம் 10, 20 அனுப்புகிறான். உடம்பை ஓடாக

உழைத்து நான் இங்கே வேலை செய்கிறதற்கு ஓர் அநுதாபமும் இல்லை. அந்த உபகாரம் எனக்குச் செய்ய மனம் வரவில்லை. சீதாராமனுக்கு ராஜயோகம் அடிக்கிறது. என் பிள்ளை விலை சீதாராமன் பெறுவானு? தெரிந்தவர்களுக்குத் தெரியும்.''

மாமா சிவராமன் எழுந்து புகையிலையைத் துப்பி விட்டு வாயைச் சுத்தம் செய்துகொண்டு வந்து ஆழ்ந்த யோசனையுடன் கேட்டார். புகையிலையை அடக்கி யிருப்பவர்கள் நினைத்ததை உடனே கேட்டுவிட முடியாதல்லவா? ''காந்திமதிக்குச் சம்மதம் இருக்குமோ?''

''குழந்தைகள் எதைக் கண்டதுகள்? காந்திமதிக்கும் சம்மதந்தான். செல்லத்துக்கும் சம்மதந்தான்.''

''செல்லத்துக்கு என்ன சம்மதம்? என்ன பாட்டி! பெரிய கல்லைத் தூக்கிப் போடுகிறீர்களே?'' என்றார் சிவராமன் திடுக்கிட்டுப்போய். 'வெந்த உள்ள'த்தின் கடிதம் அவருக்கு ஞாபகத்துக்கு வந்தது.

''அவனுடைய கவனம் அவளிடத்தில்தான் இருக்கிறது. அவள் குழந்தைதானே?''

'கவனமா?' என்று மாமா தமக்குள் சொல்லிக் கொண்டார். 'பாட்டி பேசுகிறாளா, அல்லது அசரீரி பேசுகிறதா?' என்று வியந்தார்.

மாமா பாட்டியைச் சற்றுச் சிவந்த கண்களால் நேராக நோக்கி உரைக்கலானார்:

''பாட்டி, ஒரு நாளும் செல்லம் அவனை மதிக்கமாட்டாள். புலிக்குப் பிறந்தது பூனையாகப் போகாது.''

''ஆனால் இல்லையோ! நான்தான் இல்லை என்று சொல்லுகிறேனே! யார் அப்படிச் சொல்லுவர்! செல்லம் கெட்டிக்காரி. அவள் சமத்தும் அவள் அழகும் – பார்த்தால் திருஷ்டியாய்ப் போய்விடும் போலேதான் இருக்கிறது. அத்திலே ஊரான் பிள்ளையைக் கொண்டுவந்து விட்டுக்

கொள்ளலாமோ? இதுவா சமயம் அதற்கு? நன்றா யிருக்கோ இது? நீங்களும் சொல்லிப் பார்த்தேன். அவர் மனத்தில் படவில்லை. என்ன செய்கிறது?''

''அவனுடைய கவனம் என்று ஏதோ சொன்னீர்களே, பாட்டி! அது எப்படித் தெரிகிறது?''

''ஆத்திலே புழங்குகிறவாளுக்குத் தெரியாதா என்ன? இரண்டு நாள் முன் கூடத்தில் ஒருவரும் இல்லாத சமயத்தில் அவன் செல்லத்தின் ரூமில் நுழைந்தான்.''

''யாரு?''

''சீதாராமன்தான்! எனக்கு அவன் பெயரைச் சொல்லக்கூட வேண்டியிருக்கவில்லை.''

''செல்லம் தனியே இருந்தாளா?''

''நல்ல வேளையாய் அவள் இல்லை. அக்காயிதான் ரூமைப் பெருக்கிக்கொண் டிருந்தாள். அதைப் பார்த்து விட்டு விறுவிறு என்று வெளியே போய்விட்டான். அக்காயியை வேண்டுமானாலும் விசாரியுங்களேன்!''

''நான் ஒருவரையும் விசாரிக்க வேண்டாம், பாட்டி! நீங்கள் இதை உங்கள் எஜமானியிடம் சொல்லியிருக்க வேண்டாமா? உடனே அதற்குத் தக்க பரிகாரம் செய்து விட வேண்டாமா? இரண்டு நாள் என்ன செய்தீர்கள்? நான் வரவேண்டுமென்று காத்திருந்தீர்களா?''

''எனக்குச் சொல்லப் பயமாகத்தான் இருந்தது. உங்களிடத்தில்தான் சுவாதீனமாகச் சொல்லுகிறேன். என்னுடைய போதாத காலத்துக்கு என்பேரில்தான் பாய்வார்களே ஒழிய, அவனைச் சந்தேகிக்க மாட்டார்கள்.''

''அவன் காந்திமதியிடம் இவ்விதம் இல்லையோ?''

''செல்லத்தையும், காந்திமதியையும் சேர்த்து வைத்துப் பார்த்தவர்கள் இந்தக் கேள்வி கேட்க மாட்டார்கள். நாகரிகப் பூச்சுக்கும் சுயவளத்துக்கும் வித்தியாசமில்லையா? செல்லத்துக்கு அலங்காரம் செய்துவிட்டால் அவள்

ராஜாத்திதானே! ஊன்றிப் பார்த்தால் காந்திமதி என்ன அழகு? வாட்டமும், தேய்வும்..."

மதுரப் பாட்டியின் மர்மமான ஸல்லாபத்துக்கு அணை போடப் பக்கத்துத் தெருவிலிருந்து வந்திருந்த ஸ்திரீ எழுந்து வெளியே வந்தாள். பெரிய பிரவாகத்தைத் தடுக்க வல்ல பெரிய ஆகிருதியையுடைய அந்த அம்மாள் அசைந்து வருவது பர்வதங்கள் பறக்கும் காலத்தை மாமாவுக்கு நினைவூட்டியது. அந்த அம்மாளுக்குக் கழுத்து இருப்பது வைர அட்டிகையினால் ஊகிக்கத்தக்கதாக இருந்தது. அந்த அம்மாளின் நாலு காரட் வைர ஓலையும், துவரம்பருப்புப் பிரமாணமுள்ள மூக்குப்பொட்டும், சாணக் குவியலில் வர்ணப் பூக்கள் விகஸித்ததுபோல் விளங்கின! அவள் ஓர் அதிகாரியின் மனைவி என்பது அவள் நடையிலேயே தெரிந்தது. மாமா சிவராமன் அவளுடைய உறுதியான பார்வைக்கு அஞ்சி ரூமுக்குள் சென்றார். மதுரம் ஜடிதியில் மறைந்துவிட்டாள். அந்த அம்மாள் தன்னைப் பார்ப்பவர்கள் தன் பெருமையைத் தவிர வேறு எதையும் பற்றிச் சிந்திக்கக்கூடியவர்களாக இருப்பார்கள் என்ற ஞாபகமே இராமல் கர்ப்பிரமும் கண்ணியமும் நிரம்பிப் படைக் கண்காணிப்பில் உலாவும் தளபதிபோல் சங்கரியம்மாளால் வழி கொண்டுவிடப்பட்டு வீதியை அடைந்தாள்.

சிவராமன் சங்கரி அம்மாள் திரும்பி வரும்போது அவளைச் சந்தித்துச் செல்லத்தின் விஷயத்தில் சீதாராமன் சந்தேகாஸ்பதமாக நடந்துகொள்வதாயும், அதற்குத் தக்க ருசு இருக்கிறதென்றும், அவனை வீட்டில் வைத்துக் கொள்வதானால் தான் செல்லத்தை அன்றிரவே அழைத்துக்கொண்டு ஊருக்குப் போய்விடுவதாயும் ஆக்ரோஷத்துடன் பேசினார். சங்கரி அம்மாள் சீதாராமனின் நடவடிக்கைகளில் ஒன்றும் சந்தேகாஸ்பதம் இல்லையென்றும், இந்தமாதிரி அசட்டுக் கடிதங்கள் ஏற்கனவே இரண்டொரு தரம் வந்திருந்ததாகக் குழந்தைகள் பிரஸ்தாபித்த

தாகவும், இதையெல்லாம் பொருட்படுத்தினால் பெண்களைப் படிக்க அனுப்பாமல் இருப்பதே நலம் என்றும், விவரம் குழந்தைகள் பள்ளியிலிருந்து வந்த பிறகு விசாரித்துக் கேட்டு வேண்டியதைச் செய்யலாமென்றும், திடீரென்று கோபித்துக்கொள்வது தகாது என்றும், மிக்க திறமையுடன் சுருக்கமாக எடுத்து விளக்கினாள். சிவராமன் சீறிக்கொண்டு எழுந்து செல்லத்தின் அறையில் போய்ப் படுத்துக்கொண்டார்.

* * * *

அன்று சாயந்தரம் ஸ்கூலில் ஒரு காட்சி நிகழ்ந்தது. ஒரு யோகாப்பியாஸி ஆஸனம் முதலான செய்கைகளைக் காண்பித்தார். அந்த நிகழ்ச்சி முடிந்து மாணவ மாணவிகள் வீட்டுக்குத் திரும்பும்போது, விளக்கு வைக்கும் சமயம் ஆகிவிட்டது. செல்லம் கூட்டத்தினின்று பிரிந்து பள்ளித் தோட்டத்தில் ஒரு மாமரத்தடியில் காந்திமதிக்காகக் காத்திருந்தாள். காந்திமதி வரக் கொஞ்சம் தாமதமாயிற்று. செல்லம் மரத்தடியில் தன் புஸ்தக மூட்டைகளை மடியில் வைத்துக்கொண்டு உட்கார்ந்தாள். அன்று ரிக்ஷாவை அமர்த்திக்கொண்டுதான் வீடு செல்ல வேண்டும். கார் வந்து பார்த்துவிட்டுத் தாமதிக்க முடியாமல் போய்விட்டது. ஒன்று தட்டினால் எல்லாம் தட்டுவது வழக்கம். இப்போது காந்திமதியால் தாமதம். நாழிகை ஆனால் வீட்டிலும் அலுத்துக்கொள்வார்கள்; கேள்விகளுக்குப் பதில் சொல்ல வேண்டும். காந்திமதி, 'இதோ வந்துவிட்டேன்' என்று வேறு ஒரு பெண்ணுடன் லாபோரட்டரி பக்கம் சென்றாள். அவளைத் தேடலாமா என்று செல்லம் நினைத்து எழுந்திருக்க யத்தனித்தாள். அப்போது அவள் திடுக்கிடும்படி பின்னேயிருந்து, "மிஸ் செல்லம்" என்று ஒரு மெல்லிய குரல் கிளம்பியது. 'உண்மையில் யாராவது கூப்பிடுகிறார்களா? அல்லது பிரமையா?' என்று செல்லம் திரும்பிப்பார்த்தாள். கூப்பிட்ட குரல் பெண்குரலாகத் தோன்றவில்

லையே! இருட்டும் சமயத்தில் தான் தனியே இருப்பது எவ்வளவு மதியீனம்! - யார்! கே. முத்துசாமி அல்லவா? இதென்ன ஆச்சரியம்! மெல்ல அணுகுகிறானே! என்ன வேண்டும் இவனுக்கு?

செல்லம் திரும்பிப் பார்த்ததும், முத்துசாமி என்பவன் ஏதோ கெஞ்சிக் கேட்கிற பாவனையாக முகத்தில் பரிதாபத்துடன் மான்குட்டியை நயந்து அழைக்கும் ரிஷி குமாரன்போல் விரல்களைக் குவித்து வலது கையை நீட்டி முன்வளைந்து அடிமேல் அடிவைத்து மிக்க சம்சயமும் பயமும் உள்ளவனாக மெல்ல மெல்ல மரக்கிளைகளினிடையே நகர்ந்து வந்துகொண்டு, "மிஸ் செல்லம்! நீ தனியே இருப்பதைப் பார்த்து வந்தேன். நல்ல வேளை; ஒரு சிறிய வேண்டுகோள்" என்று ஆரம்பித்தான். அவளைப் பயப்படுத்தி வெருட்டி விடாமல் இருப்பதற்காக அவ்வளவு நடை பாவனை, சொல் நயங்களை அவன் வரவழைத்துக்கொண்டதாகத் தோன்றிற்று.

செல்லத்துக்குச் சிரிப்பு ஒரு பக்கமும், பயம் ஒரு பக்கமுமாக இருந்தது. சிரிப்புத்தான் முந்திக்கொண்டது. முத்துசாமியிடத்தில் என்ன பயம்? பள்ளிக்கூடத்தில் அவனைப்போல் சாதுப் பையன் வேறு ஒருவனும் இல்லை. ஆயிரம் கிராப்புத் தலைக்கு நடுவில் அவன் ஓர் அழகிய குடுமித் தலையன். சில சமயம் கழுத்தில் ருத்திராக்ஷம் தரித்திருப்பான். நெற்றியில் சிற்றுச் சந்தனம் இல்லாமல் பள்ளிக்கு வரமாட்டான். பள்ளியில் டிபன் சாப்பிடுவதுகூட இல்லை. தான் தோய்த்து நீர்க்காவி ஏறிய தூய வேஷ்டியைத்தான் அவன் உடுப்பான். சட்டையைக்கூடத் தோய்த்துப் போட்டுக்கொள்ளுகிறானோ என்று தோன்றும்! பள்ளி மாணவ மாணவிகள் அவனைப் பரிகசிக்க அஞ்சுவதில்லை. அவனுக்குக் கி. மு. (கிறிஸ்து காலத்துக்கு முற்பட்டவன்) என்ற பெயர் அவர்களால் வழங்கப்பட்டது. அவன் காதில் முத்துக் கடுக்கன் போட்டிருந்தான். அவனுக்கு ஒரு மூக்குக்

குத்தப்பட்டுத் தூர்ந்துபோயிருந்தது. அவனை 'முத்துக் கடுக்கன்' என்றும், 'முத்தம்மா' என்றும் மாணவர்கள் கூப்பிடுவார்கள். மாணவிகள் இந்தப் பரிகாசங்களில் நேரில் கலந்துகொள்ளாவிட்டாலும், சிரிக்கும் மாணவர்களுடன் அவர்களும் கலந்து சிரிப்பார்கள். பெண்களைச் சிரிக்கச்செய்யவே மாணவ தூர்த்தர்கள் 'முத்தம்மா'வை அதிகம் புரளி பண்ணத் தொடங்குவார்கள்.

முத்துசாமி இதையெல்லாம் பொருட்படுத்துவதே இல்லை. தன்னால் சிலர் விநோதம் அநுபவிக்கின்றனர் அல்லவா? என்று சமாதானம் சொல்லிக்கொள்வான். ஆனால் முத்துசாமி மன உறுதி உள்ளவன். அவன் அந்த ரங்கத்தைப் பரிசோதித்தால், தன்னை ஏளனம் செய்பவர்களிடம் அவனுக்குப் பரிதாபமே ஒழிய வெறுப்பு இருக்காது. 'ஐயோ, சிறு வயதில் இவர்கள் தறுதலைகளாகி விடுகிறார்களே! நல்ல பழக்கம், அடக்கம், ஒடுக்கம், மட்டு, மரியாதை, நன்மை, தீமை, அகண்ட மனோபாவம், உயர்ந்த கருத்துக்கள், உன்னத லட்சியம் ஒன்றும் இல்லாமல் வீணைகத் தான்தோன்றித்தனமாக வளர்ந்துவருகிறார்களே! தங்களிடம் பரிகசிக்கத் தகுந்த சூழல்கள் நூறு பிரத்தை வைத்துக்கொண்டு அந்த ஸ்மரணையே இல்லாமல் பிறரைப் பரிகசிக்க முன்வரும் முட்டாள்களாக இருக்கிறார்களே! இவர்கள் என்ன தத்துவத்தைக் கண்டார்கள்! என்ன முடிவை அறிவார்கள்! என்ன ஹிதத்தை உணர்ந்தார்கள்! இவர்களெல்லாம் இப்படியே அவிவேகிகளாக வளர்ந்து ஊர் மக்களானால் உலகம் சீர்கேடான நிலைமைக்கு வராமல் எப்படி இருக்கும்? ஐயோ பாவம்! வாழ்க்கைப் பலனை அநுபவிக்க உதவாத இவர்கள் படிக்கும் படிப்புத்தான் என்ன பிரயோஜனம்! இன்னமும் அவிவேக சிஷ்யர்களுக்கு அந்தகச் செருக்கும் ஏற்பட்டு விட்டால்...' என்றெல்லாம் அநுதாபத்துடன் சிந்திப்பான். முத்துசாமியிடம் உபாத்தியாயர்களுக்கும், படிப்பில் சிரத்தையுள்ள நல்ல மாணவர்களுக்கும் அபார மதிப்பு உண்டு. முத்துசாமி எளிய வாழ்க்கையும், தூய

நன்னடத்தையும், உயரிய மனோபாவமும் உடையவனாக இருப்பதுடன் ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம், கணக்கு முதலிய பாடங்களில் தன் வகுப்புக்கு மேற்பட்ட விற்பத்தி உடையவனாகவும் இருந்தான். எந்தப் பரீட்சையிலும் முதல் மார்க்குகள் அவனுடையவையே. கண்ணுக்குக் குளுமை தரும் அழகிய சாந்த முகவசீகரம் உடையவன். உடல் நிறம் தாழம்பூவை ஒத்தது. விநய சம்பத்து அளவற்றது. அவனுடைய சாத்துவிகத் தன்மையும், ஆடம்பரமற்ற தோற்றமும், பிறர் உவப்பு வெறுப்புகளைப் பொருட்படுத்தாத கம்பீரமும், அவனை ஒப்புயர்வில்லாத மாணிக்கமாக எடுத்துக்காட்டின. அவனைப் பார்த்து நகைக்கும் பிள்ளைகள் அவனிடம் அவமதிப்பைக் காண்பித்தாலும் அவன் பெற்ற படிப்புப் பெருமையையும், முதியவர் மதிப்பையும் மறக்க முடியாமல் மனத்தில் வேதனையுற்றனர். அவன் வெளித் தோற்றப் பரிகாசத்தில் கலந்து கொண்ட இளம் பெண்கள் அவன்பால் உண்மையில் எழும் உணர்ச்சியின் ஸ்வரூபத்தை மறைக்க அதை ஓர் உபாயமாகக் கையாண்டார்கள். அவனைப் பார்த்து அதிகம் சிரித்த பெண்தான் அவனைப்பற்றி அதிகம் சிந்தித்தவள்.

முத்துசாமி மிக்க ஏழைக் குடும்பத்தில் உதித்தவன். கிருஷ்ணா தீக்ஷிதர் என்ற அவன் தகப்பனார் ச்ரௌதம், தர்மசாஸ்திரம் இவைகளில் பிரக்கியாதி பெற்ற வித்துவான். அக்னி பரிசர்யை செய்துகொண்டு கிருகஸ்த தர்மத்தை அநுஷ்டித்து வந்து இறுதியில் "மகாதேவானந்தர்" என்ற புண்ணிய நாமத்துடன் ஸந்நியாஸம் பெற்றுக்கொண்டு இதற்கு முன் வருஷத்தில் மோக்ஷ ஸாம்ராஜ்யம் அடைந்தார். அதனால் முத்துசாமியின் படிப்பு பாதிக்கப்பட்டது. தகப்பனாரின் வியோகம் பரீட்சை சமயத்தில் ஏற்பட்டபடியால் அவன் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சைக்கு ஒரு வருஷம் போகமுடியாமல் மறு வருஷம் அதே வகுப்பில் படிக்கும்படி நேரிட்டது. தகப்பனார் இருந்தவரையில் அவனுக்கு ஏதோ கொஞ்சம்

பணம் அனுப்பி வந்தார். அதைக்கொண்டு அவன் தகப்பனரால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தபடி ஒரு கிருகஸ்தர் வீட்டில் சாப்பிட்டுக்கொண்டு படித்து வந்தான். நடைமுதல் வருஷத்தில் அந்த ஏற்பாடு நீடிக்க வசதி இல்லை. ஆகையால் அவன் வேறு ஏற்பாடு செய்து கொள்ள நேர்ந்தது. அவனுடைய பந்து ஒருவன் காலேஜ் லெக்சரராக வந்து சேர்ந்தான். அவன் "சிவஸ்கந்த சர்மா" என்ற பெயருடையவன். அவன் விவாகம் ஆகாதவன். தனி ஜாகையில் குடிபுகுந்தமையால் தனக்கு உதவியாக இருக்கும்படி முத்துசாமியைத் தன்னோடு வசிக்கச் செய்துகொண்டான். ஹோட்டலிலிருந்து சாப்பாடு வீட்டுக்கு வரவழைத்து அதை இருவரும் சாப்பிடுவார்கள். வினய குணம் மிகுந்த முத்துசாமி, சர்மாவின் ஏவல்களைச் செய்வான். சர்மா நவீனப் பித்துப் பிடித்தவன். அவன் அநாசாரங்கள் பல. ஆனாலும் முத்துசாமியிடம் அன்பும் மதிப்பும் அவனுக்கு உண்டு. முத்துவுக்கு உத்வேகம் தராதிருப்பதற்காகச் சர்மா அவனெதிரில் சிகரெட் ஊதுவதில்லை. சர்மாவின் போக்கு முத்துசாமிக்குப் பிடிக்காமற்போனாலும் எதையும் பொறுத்துக்கொண்டு தன் கருமமே கண்ணாக இருந்தான்.

செல்லம் முத்துசாமியைத் தன் கூரிய பார்வையால் ஒரு முறை அளந்தாள். "நான் தனியே இருப்பதைப் பார்த்து நீர் வருவது முறையல்லவே! நீர் இப்படிப் பேசுவது ஆச்சரியமாக இருக்கிறது."

"என்னைப் பார்த்தால்தான் எப்போதும் உங்களுக்குப் பரிகாசமாக இருக்கிறதே! நாலு பேர் மத்தியில் உன்னிடம் நான் பேசினால் அன்று முதல் என்னைப் பசங்கள் பிலாப்பழத்தை ஈக்கள்போல் மொய்த்துக்கொண்டு விடுவார்களே! ஆதலால்தான் நீ தனியே இருக்கும் சமயம் பார்த்து வந்தேன்."

"நன்றாய் வந்தீர்!" ஏன் வந்தீரோ? செல்லத்துக்குப் பரிகாசச் சிரிப்புப் பொங்கிவந்தது. முத்துசாமி நிற்

பதையும், அவன் பேசுவதையும், தன் தனி நிலைமையை யும் நினைத்து அவள் களுக் என்று சிரித்துவிட்டாள். சிரிப்பவர்கள் எல்லாம் சந்தோஷத்தில்தான் சிரிப்பார்கள் என்று சொல்லுதல் கூடாது. கோபச் சிரிப்பு, கபடச் சிரிப்பு, ஏளனச் சிரிப்பு, வெறுப்புச் சிரிப்பு, பயச் சிரிப்பு, துக்கச் சிரிப்பு என்று பலவகை உண்டு. செல்லத்தின் சிரிப்பு எவ்வகையானது என்பது ஆராய்வதற்கு உரியது.

"உனக்குச் சிரிப்பாயிருக்கிறது என்னைப் பார்த்தால்! ஆம்; நியாயந்தானே" என்று முத்துசாமியும் லேசாய்ச் சிரித்துக்கொண்டான்.

செல்லம் சிரிப்பிலிருந்து குறிப்பை மாற்றிக்கொண்டு, "நான் இப்போதும் தனியாயில்லையே; இதோ காந்திமதி வந்துவிடுவாளே" என்றாள்.

"மிஸ், காந்திமதியா! அவள் வந்தால் என்ன? அவள் பரம ஸாது..."

"ஆனால் நான் பொல்லாதவளா?"

"அப்படி நான் சொல்லவில்லையே! ஆனாலும் பெரிய அந்தஸ்து இருந்தும் அகம்பாவமற்ற தெளிந்த உள்ள முடைய காந்திமதிக்கு இணையாவார் எவர்?"

"நீ இணையாகமாட்டாய் என்று சொல்லுகிறீர்? அவ்வளவுதானே? நான் பணச் செருக்குப் பிடித்தவளாக்கும்? என்னை இப்படித் திட்டுவதற்குத்தான் தனியே இருக்கும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்து வந்தீராக்கும்?" செல்லத்தின் மொழிகள் தாத்பரியத்தில் கோபத்தை அடக்கியிருந்தாலும் தொனியில் கொஞ்சும் கிளியின் இனிமையைக் கொட்டின.

"இல்லவே இல்லை, மிஸ் செல்லம்! அப்படி நினைக்காதே! நான் சொல்ல வந்தது..."

செல்லம் முத்துசாமியின் மற்றச் சொற்களை கவனிக்கப் புகுமுன் அவளை ஒரு சுழல் எங்கேயோ அடித்

துக்கொண்டு போய்விட்டது. "மிஸ் செல்லம்" என்று மூன்றும் தரம் முத்துசாமி தன்னை அழைத்ததிலிருந்து அச்சுழல் ஜனித்தது. முதல் இரண்டு உச்சரிப்புகளில் அதன் சக்தி முதிர்ச்சி அடையவில்லைபோலும். மூன்றாவது உச்சரிப்பில, தரையோடு சுழன்று சுழன்று வரும் ஆகாயவிமானம் தரையை விட்டு எழும்பி வாயுவேகத்தைத் தோற்கடிக்கும் அபார வேகத்துடன் வானளாவிச் செல்லும் ஓர் உணர்ச்சி பிறந்தது. அதில் இன்பமும் பயமும், உவப்பும் வியப்பும் கலந்து கிடந்தன. ஏனோ?

முத்துசாமி அவள் குறிப்பால் கவனம் தளர்ந்ததை உணர்ந்து வற்புறுத்திப் பேசினான்.

"நேற்று, 'நாட்டு வளமும் செய்நேர்த்தியும்' என்ற லைப்ரரி புத்தகத்தை நீ வாங்கிக்கொண்டாய் அல்லவா?"

"ஆமாம், லைப்ரேரியனிடமிருந்து வாங்கிக்கொண்டேன்."

"சரிதான். அதை நான் நேற்றுத்தான் லைப்ரரிக்குத் திருப்பிக் கொடுத்தேன்."

"அதற்கு ஒரு வாரம் முன்னதாகவே நான் பெயர் கொடுத்திருந்தேன். 'இன்று அது திரும்பிவரும். உடனே நீ அதை வாங்கிக்கொள்' என்று லைப்ரேரியன் என்னிடம் காலையில் சொன்னார். சாயந்தரம் அதை நான் அவரிடமிருந்து பெற்றுக்கொண்டேன். ஏன், அதற்கென்ன?"

"ஒன்றும் இல்லை. நீ வாங்கின புஸ்தகத்தைப் பிரித்துப் பார்த்தாயா?"

"நான் இன்னும் அதைப் படிக்கவில்லை. சனி ஞாயிறில்தான் படிப்பேன். ஏன்?"

"மெல்லப் படி, அதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. அந்தப் புஸ்தகத்தில் ஒரு கடிதம் இருந்ததைப் பார்த்தாயோ என்றுதான் கேட்க வந்தேன்."

"என்ன கடிதம்? பார்க்கவில்லையே! உம்முடைய கடிதமா?"

"நான் அதில் வைத்திருந்த கடிதந்தான். அதை எனக்குத் திருப்பிக் கொடுத்துவிடு. அதைக் கேட்கத் தான் வந்தேன்."

"புஸ்தகம் வீட்டில் இருக்கிறது. அதை நான் பிரித்துப் பார்க்கவே இல்லை. கடிதம் இருந்ததும் எனக்குத் தெரியாது."

"கடிதம் எங்கேயாவது கீழே விழுந்திருக்குமோ?"

"விழுந்தால் நான் கவனித்திருப்பேன்; கடிதம் அதில் இருந்தது நிச்சயந்தானா?"

"ஆம், நிச்சயந்தான். அதை நான் உடனே திரும்பப் பெற வேண்டும். அது ஒரு முக்கியமான கடிதம்."

"நான் பார்த்து அது இருந்தால் நாளைக்குப் பள்ளிக்கூடத்துக்கு அதைக் கொண்டுவருகிறேன்."

"நாளை வரையில் தாமதித்தால் எனக்குக் கெடுதல் நேரிடும். இப்போதே நான் உன் வீட்டுக்கு வருகிறேன். சீதாராமனை எனக்கு நன்றாகப் பரிசயம் உண்டு. அவனைப் பார்க்க வருவதுபோல் நான் வருகிறேன். அந்தக் கடிதத்தை எடுத்து என்னிடம் எப்படியாவது கொடுத்துவிடு. தயவு செய். நான் தவறு செய்துவிட்டேன். அது குற்றமாகும் முன் அதை நான் கைப்பற்றிக்கொள்ள வேண்டும்."

"நீர் சொல்வது எனக்கு ஒன்றும் புரியவில்லை. எதுவாக இருந்தாலும் அந்தக் கடிதம் அந்தப் புஸ்தகத்தில் இருந்தால் உம்மிடம் அதைத் திருப்பிக் கொடுப்பதுபற்றி எனக்கு யாதொரு ஆட்சேபமும் இல்லை."

அந்தச் சமயம் காந்திமதியும் வந்துவிட்டாள். முத்துசாமியைக் கண்டு அவள் பயப்படவில்லை. ஆனால் செல்லத்துடன் அவன் சம்பாஷிப்பதைப் பார்த்து ஆச்சரியப்

பட்டாள். அதற்குள் செல்லம் அவளுக்கு விஷயத்தை எடுத்துரைத்தாள். காந்திமதி தன் வீட்டு வேலைக்காரனி டம் அந்தக் கடிதத்தை முத்துசாமியின் ஜாகைக்கு உடனே அனுப்பிவிடுவதாகவும் அதற்காக அவன் அலையவேண்டா மென்றும் சொல்லிப் பார்த்தாள். அவன் அதை அங்கீ கரிக்கவில்லை. தானே வந்து வாங்கிக்கொள்வதாக வற் புறுத்தினான். சரி என்று சம்மதித்து இரு பெண்களும் விடைபெற்றுக்கொண்டு சென்றார்கள்.

இவர்கள் வரத் தாமதமானதால் மறுபடி கார் வந்து காத்துக்கொண் டிருந்தது. இருவரும் அதில் ஏறிக்கொண்டு வீடு சென்றார்கள்.

முத்துசாமி பாதசாரியாக அவ்வழியே சென்றான்.

# 4
## புயல்

இது நிற்க, அன்று சாயந்தரமே, காலேஜ் வேலை நேரத்தின் இறுதியில் ராமநாதனும், சீதாராமனும் விளையாட்டுத் தோட்டத்தில் தனியே சம்பாஷிக்கலானார்கள்.

"உன்னை ஒன்று கேட்க நினைத்தேன், ராமநாதா? நீ பாங்குக்குக் காலையில் என்னுடன் வரும்போது இந்த வைரப்பித்தான் செட்டை நான் பார்த்ததாக ஞாபகம் இல்லையே!"

"பார்த்திருக்கமாட்டாய்."

"மோதிரமும் ரிஸ்டு வாட்சும் அப்போது போட்டுக் கொண்டிருந்தாயோ?"

"இல்லைதான்."

"பாங்கிலிருந்து காலேஜ் வருவதற்குள் அவை எங்கிருந்து வந்தன? அப்பாவிடம் கொடுத்து வைத்திருந்தாயோ?"

"ஆமாம் என்று வைத்துக்கொள்ளேன்."

"ரூபாய் ஆயிரத்தைக் கொடுத்து அவைகளை அடகு மீட்டுக்கொண்டு வந்தாயாக்கும்?"

"நீ சொல்வது சரிதான்."

"என்ன, ராமநாதா? எனக்கு ஒன்றும் புரியவில்லையே? நான் என்ன சொல்கிறேன்? அதில் என்ன சரி?"

"சொல்லுகிறேன், சீதாராமா! உன்னிடம் நான் ஒன்றையும் ஒளிக்க விரும்பவில்லை. உன்னை அதற்காகத் தான் தனியே அழைத்து வந்தேன். ஆனாலும் மனம் தயங்குகிறது. சில நாட்களாகவே உன்னிடம் என்

சம்பந்தமான சில முக்கிய விஷயங்களைப் பேச உத்தேசித்திருந்தேன். இப்போது சொல்லித்தான் ஆகவேண்டும் என்ற நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. நீயும் இப்போது கேட்பதுபோல் தூண்டுதல் செய்யும் சந்தேகக் கேள்விகளை முன்னதாகக் கேட்காததால், எனக்கும் பிரஸ்தாபிக்கச் சந்தர்ப்பம் நேரவில்லை."

"ராமநாதா! நீ காலையில் அப்பா ஆபீசுக்குப் போய் அந்தச் செக் ரூபாய் ஆயிரத்தையும் அவரிடம் கொடுத்துவிட்டாயா, இல்லையா? அதை முதலில் சொல்."

"சீதாராமா! நான்தான் எல்லாவற்றையும் சொல்லப்போகிறேனே! சற்றுப் பொறுமையாகக் கேள். உன்னிடம் எப்போதும்போல் நான் கொஞ்ச நாளாக இருக்கவில்லை."

"அதை நான் அறிந்துகொண்டேன்."

"உன்னைக் கேட்காமல் நான் ஒன்றும் செய்வதில்லை. உன்னை அல்லாமல் நான் ஓர் இடத்துக்கும் போவதில்லை; உன்னிடம் எந்த எண்ணத்தையும் ஒளிப்பதில்லை என்றெல்லாம் இருந்த நட்பு முறையை நான் சில காலமாகக் கைவிட நேர்ந்ததற்கு வருந்துகிறேன்."

"அதனால் என்ன? உனக்கு எப்படி இருக்கவும் சுதந்தரம் உண்டு."

"என்ன? சுதந்தரம், சீதாராமா? புத்தியில்லாதவனுக்குச் சுதந்தரம் கிடைத்தால் அது தனக்கும் பிறருக்கும் தீங்கு இழைக்கக்கூடிய நிலையில் அதை விநியோகிப்பானே ஒழிய நன்மையைப் பெற அவன் அறிய மாட்டானே!"

"இருக்கட்டும், விஷயத்தைச் சொல்."

"உன்னிடம் எப்போதும்போல் கலந்து ஆலோசித்திருந்தால் நான் இன்று காலையில் நடந்துகொண்டபடி,

நடந்துகொள்ள நெருக்கடி ஏற்பட்டிருக்காது. ஆனால் அதைப் பற்றி வருந்துவதில் இப்போது என்ன பயன்? இப்போதாவது, உன் களங்கமற்ற உள்ளத்துக்கு நான் செய்த துரோகத்தை உன்னிடம் தெரிவித்து, என் மனத்தைச் சமாதானம் செய்துகொள்ள விரும்புகிறேன். நம் நட்பு என்றும் குன்றாமல் இருக்கவேண்டும். என்னைப் பற்றி எனக்குக் கவலை இல்லை. உன்னையும் எந்தத் தீங்கிலிருந்தும் காப்பாற்ற நான் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறேன். ஆகையால் நீ ஒன்றுக்கும் அஞ்ச வேண்டாம்."

"ராமநாதா! உன்னிடம் ஆயுள் பரியந்தம் நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாக இருக்கிறேன். நீ செய்வது எனக்குத் துரோகமாகாது, நன்மையாகத்தான் முடியும். துரோகத்துக்கும் உனக்கும் வெகு தூரம் அல்லவா? ஏன் புது மாதிரியாகப் பேசுகிறாய்? என்ன நடந்துவிட்டது? விவரமாகச் சொல். ஆபத்தோ சம்பத்தோ நம் இருவருக்கும் பொது. வேண்டாம், ஆபத்தை என் பங்கில் வை. நான் ஏற்கத் தயாராக இருக்கிறேன். நீ என்னிடம் இதுவரையில் உடன்பிறந்தவனைப்போல் காட்டிவந்த அளவற்ற அன்புக்கு உனக்கு நான் என் தலையைக் கொடுத்து உதவினாலும் தகும்."

"சீதாராமா! இப்படி எல்லாம் இந்த அயோக்கியனைப் பார்த்துப் பேசாதே! மனம் முள் புதரில் விழுந்து தவிக்கிறது. நான் பழைய ராமநாதன் அல்ல."

"நீ பழைய ராமநாதன் இல்லாவிட்டால் என்னிடம் இப்படிப் பேசுவாயா? வீணாக ஆயாசப்படாதே! என்ன கஷ்டத்தில் மாட்டிக்கொண்டுவிட்டாய்? யார் உன்னை மோசம் செய்துவிட்டார்கள்? பணம் போன வழி என்ன? புகார் இல்லாமல் தப்பித்துக்கொள்ள மார்க்கம் உண்டா? தவறுதல் நடந்துவிட்டாலும் அது விஸ்தரிக்கு முன் அதை நேர்ப்படுத்தச் சாத்தியமாகாதா? இதை எல்லாம் ஆலோசிப்போம். பயப்படாதே! தயங்காதே!

உன் நிலைமையை ஒழுங்குபடுத்துவதற்காக நான் எதை யும் துறக்கச் சித்தமாக இருப்பேன், நம்பு.''

''நம்புகிறேன், சீதாராமா! உன் அன்பார்ந்த ஊக்கமற்ற, இனிய சொற்கள் என் மனத்தை உடைக்கின் றனவே ஒழிய என் நிலைமையைச் சமாளிக்க நான் ஐய முறவோ, அதைரியப்படவோ இல்லை. நான் மனதார மேற்கொண்ட வழக்குகள் என்னைக் கிஞ்சித்தேனும் துன் புறுத்தவில்லை. பச்சாத்தாபத்தையும் உண்டுபண்ணவில்லை. உன் நிர்மலமான நட்பைப் பெற அருகதையில்லாத எனக்கு உன் யதார்த்த மொழிகள்தாம் வேதனையைத் தருகின்றன. உன்னை வருத்தி ஒரு பயனை அடைய என் மனம் இடம் கொடுக்காததால், காரியத்தை நேர் செய்து விட்டு உன்னிடம் பிரஸ்தாபித்து உன்னைப் பிரமிக்க வைக் கலாம் என்றும் ஒரு பக்கத்தில் நினைத்தேன். ஆனால் என் கோழை மனம் கேட்கவில்லை. உன்னிடம் இதுகாறும் சில வர்த்தமானங்களை நான் மறைத்து வைத்திருந்ததே மிக்க ஆச்சரியம். உன்னைப் பார்க்கும் ஒவ்வொரு சமயத் திலும் நெஞ்சிலிருந்து துள்ளி எழுந்த வார்த்தைகளைப் பலாத்காரமாக அடக்கிவைத்திருந்தேன். ஆனால் படிப் படியாக என் உறுதி குன்றிவந்தது. சந்தர்ப்பமும் திருகல் போட்டுக்கொண்டது. கட்டுக்கடங்காத பிரவாகம், இப்போது கரையை உடைத்துக்கொண்டு வருகிறது.''

''எதுவானாலும், ராமநாதா! நீ என்னிடம் சொல்லா மல் இருந்தது தவறுதான். சில காலமாக நானும் உன் போக்கில் உள்ள மாறுதல்களைக் கவனிக்காமல் இல்லை. ஆனால் என் மனத்தில் இருந்தது வாய்க்கு வராமல் தடுத்தது என் கோழைத்தனமே! அதுவே அடங்கி நடந்து கழித்த வாழ்நாட்களின் பயன்! நட்பினால் நான் உன் னிடம் எடுத்துக்கொள்ளவேண்டிய சுவாதீனத்தை ஒளிக்க நேர்ந்ததற்கு என் சுயநலப் பற்றே காரணம்.'' ராமநாதா, பத்மாவுக்கும் உன் குழப்பத்துக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டா?''

"சொல்லுகிறேன் கேள். முன்னொரு நாள் பத்மா வகுப்பில் இருக்கும்போது வீட்டில் அவள் தாயார் மயக்கமாக விழுந்து கிடப்பதாக ஓர் ஆசாமி பத்மாவை அழைத்துப்போக வந்தது ஞாபகம் இருக்கிறதா?"

"ஆமாம்!"

"அன்று எல்லோருக்கும் பத்மாவிடம் பரிதாபமாக இருந்ததல்லவா?"

"ஆம்."

"உனக்கும் எனக்கும் அவ்விதச் செய்தி வந்தால் யார் அநுதாபப்படப் போகிறார்கள்? பத்மா ஒரு மோகினி அல்லவா?"

"சரி, மேலே சொல்லு."

"மறுநாள் அவளை இடைநேரத்தில் தனியிடத்தில் சந்திக்க நேர்ந்த நான், அவள் தாயாரின் உடம்பு ஸ்திதியைப்பற்றிக் குசலப்பிரச்னம் செய்தேன்.

"இல்லை சீதாராமா! என் அகம்பாவமேதான் நீ என்னை நெருக்கிக் கேட்காததற்கு மூல காரணம். நான் எப்போதும்போல் உன்னிடம் ஒட்டிக்கொண் டிருந்தால், நீயும் எப்போதும்போல் சுவாதீனமாகக் கேட்டிருப்பாய்! நான் விலகினால், நீயும் விலகுகிறாய். இது இயல்புதானே? அதிலும் சூட்சும திருஷ்டியுடைய உன்னிடத்தில் என் நட்பின் ஏற்றத்தாழ்வுகள் ஒரு தர்மாமீட்டரில் போல் பிரதிபலிக்காமல் இருக்குமா?"

"நல்லது; விஷயத்தைச் சொல், ராமநாதா?"

"சொல்லத்தான் ஆரம்பிக்கிறேன், சுற்றிச் சுற்றி வருகிறேன். வெட்கமும் துக்கமும் அணைபோல் வந்து மறைக்கின்றன."

"மற்ற எவனும் அப்படி அவளைச் சந்தித்துக் குசலப் பிரச்னம் செய்ய ஆவல் கொண்டிருப்பான். ஆனால் நீ தான் அதைச் செய்தாய்!"

"பத்மா மிக்க பணிவுடனும் பாங்குடனும், ஆதரவுடனும் நன்றியுடனும் எனக்குப் பதிலளித்தாள். அது முதல் அவளிடத்தில் பேச நான் ஏதாவது சாக்கு வைத்துக்கொள்ள ஆரம்பித்தேன். அவளும் நான் கோரும் தொடர்பைத் திருப்தியுடன் ஏற்றுக்கொண்டாள். புஸ்தகம் கடன் கேட்பேன். லைப்ரரியில் அவள் வாசிக்கக்கூடிய புஸ்தகம் என்று எதையாவது குறிப்பிடுவேன். நான் வகுப்புக்கு வராத நாட்களில் அவள் எழுதிவைத்திருக்கும் பாடக் குறிப்புகளைப் பார்க்க விரும்புவேன். 'பத்மா, வகுப்பில் நீ மட்டுந்தான் கவனமாக உபாத்தியாயர் சொல்லும் முக்கிய விஷயங்களுக்குக் குறிப்பு எழுதிக் கொள்கிறாய்! மற்றவர்கள் நீ எழுதுவதைப் பார்த்துக் கொண்டு கொலு பொம்மைகள்போல் உட்கார்ந்திருக்கிறார்கள்' என்றேன் ஒரு நாள். பத்மா சிரித்துக்கொண்டாள். அந்தச் சிரிப்பு என் உடலில் நெருப்பாகப் பற்றிக் கொண்டது. 'அந்த நோட்டு வீட்டில் இருக்கிறது; நாளைக்குக் கொண்டுவந்து தருகிறேன்!' என்றாள் பத்மா. மறு நாள் அவள் கொண்டுவந்தாளா என்று விசாரிக்க வெகு உற்சாகத்துடன் காத்திருந்தேன். அவள் அன்று பள்ளிக்கே வரவில்லை. அன்று எனக்குப் பைத்தியம் பிடித்தது போல் ஆயிற்று. பிற்பாடு பத்மா வந்ததும் அவளை அந்த நோட்டு விஷயமாகக் கேட்டேன். அவள் மிகுந்த வருத்தத்துடன் தன் மறதிக்கு என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டாள். நான் சுழலில் விழுந்துவிட்டேன். 'பத்மா, நீ அனுமதித்தால் போகும்போது உன் வீட்டுக்கு வந்து அந்த நோட்டைப் பெற்றுக்கொள்கிறேன்' என்று வரம் வேண்டினேன். இந்த வரத்தை அவள் அனுமதிப்பதில் என் உயிர் ஊசலாடிக்கொண்டிருந்தது. என்ன ஆச்சரியம்! அவள் அனுமதித்துவிட்டாள்! எனக்குச் சுக்கிரதசை ஆரம்பமாகி இருக்கிறதென்று மனத்துக்குள் நினைத்து மகிழ்ந்தேன். அந்த நோட்டுக்கு என் ஜீவிய சரித்திரத்தில் வந்த முக்கியத்துவத்தை நினைக்க எனக்குச் சிரிப்பு வந்தது. மணி அடித்ததும் பள்ளியை விட்டுப் புறப்பட்

டேன். சற்றுக் கடைவீதியில் பொழுது போக்கிவிட்டுப்
பத்மா வீட்டை அடைந்தேன். போகும்போது வெறும்
கையோடு போகாமல் உயர்ந்த ரக பிஸ்கெட்டில் இரண்டு
பாக்கெட்டுகள் வாங்கி எடுத்துக்கொண்டு போனேன்.
பத்மாவின் தாயார் பாக்கியலக்ஷ்மி என்பவள் என்னை வர
வேற்றாள். என்னை ஒரு வட்ட மேஜையின் முன் நாற்
காலியில் உட்காரச் செய்தாள். நான் பத்மாவுக்காகச்
சில நிமிஷங்கள் காத்திருக்க நேர்ந்தது. நான் இருந்த
ஹாலின் சோபையைக் கண்டு வியந்தேன். அதன் நாகரிக
மான அழகுத் தோற்றம் என்னைப் பரவசப்படுத்தியது.
சுவரில் வரிசையாக அமர்த்தப் பட்டு என்னைக் குனிந்து
பார்க்கும் படங்களைக் கவனிக்கலானேன். பல அழகிய பெண்
மணிகளின் போட்டோக்கள் தென்பட்டன. ஒரு யுவதி
வீணையுடன் உட்கார்ந்திருந்தாள். அவள் அருகே பிடில்
வாசிக்கும் கட்டழகி ஒருத்தி காணப்பட்டாள். ஒரு பெண்
நயத்துடன் நர்த்தனம் செய்யும் காட்சி கண்ணைக் கவர்ந்
தது. இரு சுந்தராங்கிகள் பக்க வாத்தியங்களுடன் பாடும்
போது படம் பிடிக்கப்பட்டிருந்தார்கள். சுவரில் நடு மத்தி
யில் அவ்வறையின ராணிபோல் ஒய்யாரமாக அலங்காரம்
செய்துகொண்டு நிற்கும் ரூபவதி ஒரு கையால் தலையில்
பூச்சூட்டிக்கொண்டு புன்னகையுடன் கொஞ்சும் கண்களால்
வருகிறவர்களை வரவேற்பவள்போல் தோன்றினாள். நான்
அப்ஸரஸ்திரீகள் சூழ, தேவேந்திர லோகத்தில் வீற்றிருப்
பதாக எண்ணம் கொண்டேன்.

அடுத்தது பத்மாவின் படம். அவள் கையில்
புஸ்தகங்களுடன் காணப்பட்டாள். அக்குடும்பத்தில்
படிப்புக்காக ஒதுக்கப்பட்டவள் அவள் ஒருத்தி
தான் போலும். அடுத்தது அவள் தாயார்தான் கொஞ்
சம் இளமையில் எடுக்கப்பட்டதாக இருக்கலாம். இரண்
டொரு புருஷர்கள் படங்களும் இருந்தன. அதில் ஒரு
கிழவர் அதிகாரதோரணையில் வீற்றிருந்தார். அவற்றைத்
தாண்டி அப்புறம் கவனத்தைச் செலுத்தினேன். ஓர் அழ
கிய சிறுமியின் விசாலமான நோக்கு என் பேரில் விழுந்

தது. பத்மாவைவிட அழகு வாய்ந்தவள். ஆகா இப்படி! ஒரு மோகினி இருக்கிறாளா என்று வியந்தேன். நான் இருந்த ஹாலின் மேற்குப் பக்கமாயுள்ள ஒரு ரூமின் கதவு பாதி திறக்கப்பட்டு, அதில் ஒரு திவ்ய சுந்தரி நின்று கொண்டு என்னை ஆராய்ந்துகொண் டிருந்தாள். வாசற் படிக்கு நேராக மேலே படத்தில் நான் பார்த்த அவ்வழகி தான் கீழே குதித்துவிட்டாளா என்று பிரமித்தேன். அதே திருவுருவம்! அதே கொள்ளைகொள்ளும் கடைக் கண் நோக்கு!- அந்த நிமிஷத்தில் பத்மா மற்றொரு பக்க மாக வந்து என்னை ஸ்வப்பனத்திலிருந்து எழுப்பியிருக்கா விட்டால், நான் எப்படி நடந்துகொண் டிருப்பேனோ சொல்ல முடியாது! பத்மாவின் குரல் கேட்டதும் அந்த மாய மங்கை மறைந்துவிட்டாள். பத்மா என்னைக் காக்க வைத்ததற்காக மன்னிப்புக் கேட்டுக்கொண்டாள். நானும் அவசரப்பட்டு வந்து அவளைத் தொந்தரவு செய்ததற்காக அவளிடம் மன்னிப்புக் கேட்டுக்கொண்டேன். பத்மா என்னை டிரிங்க் சாப்பிடும்படி வற்புறுத்தினாள். நான் பிஸ்கெட் பாக்கெட்டுக்களை எடுத்து அவளிடம் கொடுத்தேன். பத்மா பழங்கள் நிறைந்த ஒரு வெள்ளித்தட்டை எடுத்து வந்தாள். நாங்கள் பேசிக்கொண்டு வெகு உல் லாசமாகச் சிற்றுண்டி அருந்திக்கொண் டிருந்தபோது, உள் ளேயிருந்து ஒரு மதுரத் தொனி கேட்டது. பாடுவதுடன் வீணையின் நாதமும் ஒலித்தது. அந்த மறைந்த மாயா மோகினியாகத்தான் இருக்க வேண்டும் என்று தீர்மானித் தேன். எதிரே இருந்த அவள் படத்துக்கு என் கண்கள் திருட்டுத்தனமாகச் சென்றன. பத்மா சிரித்தாள். "அவள் என் ஒன்றுவிட்ட தங்கை; என் சிறு தாயார் பெண். அவள் தாயாரை இழந்துவிட்டாள். இப்போது எங்களு டன் வசிக்கிறாள். சங்கீதப் பயிற்சி பெற்றிருக்கிறாள். கச்சேரி செய்யக்கூடிய யோக்கியதை உண்டு" என்றாள் பத்மா. "அவளைச் சிற்றுண்டியில் சேர்த்துக்கொள்ளாமல் இருக்கலாமா?" என்று நான் வினவினேன். "அவளை இங்கே அழைத்து உட்கார வைப்பது மிகவும் சிரமம். இன்

ஞொரு நாள் ஆகட்டும்'' என்றாள் பத்மா. இது நடந்தது முதல் நான் பத்மாவைச் சந்தித்துப் பேசுவதும், அவள் வீட்டுக்குப் போவதும் உண்டு.

"பத்மாவின் நோட்டுப் புஸ்தகத்தை அன்று வாங்கிக் கொண்டாயோ, அதை மறந்துவிட்டாயோ?'' என்று கேட்டான் சீதாராமன் சிரித்துக்கொண்டு.

"நல்ல கேள்வி கேட்டாய், சீதாராமா? நோட்டுப் பிரஸ்தாபத்தை இருவரும் மறந்துவிட்டோம். அது இப் போதுதான் ஞாபகம் வருகிறது'' என்றான் ராமநாதன்.

சீதாராமனும் ராமநாதனும் விழுந்து விழுந்து சிரித் தார்கள்.

"ராமநாதா! ஷேக்ஸ்பியர் நாடகத்தில் அவள் உன் னோடு கதாநாயகியாக நடிக்க மறுத்தது இந்த நட்புக்கு முன்னேயா, பின்னேயா?'' என்று கேட்டான் சீதாராமன்.

"முன்னேதான். இவையெல்லாம் ஒரு மாதத்துக்கு உள்பட்ட சமாசாரந்தானே! அதைப்பற்றியும் பத்மா வைக் கேட்டேன்.''

"என்ன பதில் சொன்னாள்?''

"இப்படியெல்லாம் கேட்பதானால் பதில் சொல்லு வது எனக்குச் சங்கடமாக இருக்கிறது என்றாள்''.

"சரிதான். முதலிலேயே குறி வைத்துவிட்டாள் என்று தெரிகிறது. பெண்களுக்கு இயற்கையில் அமைந்த சாமர்த்தியம் அல்லவா இது? தனக்கு வேண்டிய நெல்லை ஆயிரம் கல்லுக்கு மத்தியிலிருந்து பொறுக்கி விடுவார்கள். தம் விருப்பு வெறுப்புகளைப் பிள்ளைகள் இவ்வளவு ஸ்பஷ்டமாக முன்னதாகவே அறிய முடிவ தில்லை.''

"சீதாராமா! அவள் எதை நினைத்துக்கொண்டு நாடகத்தில் என்னுடைய கதாநாயகியாக நடிக்க மறுத்

தாளோ, அதை நினைத்துக்கொண்டுதான் நான் அந்த நாடகத்தில் கதாநாயகனாக நடிக்க விரும்பினேன். அதைத் தெரிந்துகொண்டாயா நீ?"

"நான் மட்டுமல்ல. பலர் தெரிந்துகொண்டார்கள் என்று நினைக்கிறேன். அதாவது உன் மனோரதத்தைப் பற்றின வரையில்! உண்மையில் தெளிந்து ஆலோசிக்குங் கால், உணர்ச்சி உலகில் சஞ்சரிக்கும் ஆண்கள் அசட்டுத் தனத்தையும் ஆத்திரத்தையுந்தான் வெளியிடுகிறார்கள். பெண்கள் அவ்விஷயத்தில் உயரிய பண்புடன் நடந்து கொள்வது இயற்கையாக இருக்கிறது. அது இருக்கட்டும். ராமநாதா! நீ ஒருநாத காலமாக யாரும் சந்தேகிக்க முடியாதபடி தனியே பத்மாவைச் சந்திக்கவும் பேசவும் இவ்வளவு சுறுசுறுப்புச் சிறுவர்கள் கூட்டத்தின் இடையே எப்படிச் சாத்தியமாயிற்று?"

"இருவர் மனமும் ஒத்திருந்தால் சாத்தியமாகும் என்பதை நானும் ஆச்சரியத்துடன்தான் அறியலானேன்."

"சரி, மேலே கதையைச் சொல்லு."

* * *

"மேலே நேற்று நடந்ததுதான்."

"நேற்று? நேற்று ஸினிமாவுக்கல்லவா போனாய்?"

"முதல் 'ஷோ'வுக்கு டிக்கட் கிடைக்காததால் பொழுது போக்குக்காகப் பத்மா வீட்டுக்குச் சென் றேன்."

"அப்படியா?" என்றான் சீதாராமன் ஆச்சரியத் துடன், சுவரில் சுரங்கக் கதவைக் கண்டு பிடித்தவன் போல்!

"பத்மாவைச் சினிமாவுக்கு அழைத்தேன். அவள் படிப்பைச் சாக்கிட்டுச் சினிமாவை நிராகரித்தாள். நான் படிப்புக்குச் சமாதானம் சொல்லிச் சினிமாவை வற்

புறுத்தினேன். அவள் தாயாரைக் கேட்கவேண்டுமென்றாள். தாயாரிடம் நானே உத்தரவு வாங்கித் தருகிறேன் என்றேன். அவள் நானே கேட்கிறேன் என்று உள்ளே போனாள். திரும்பிவந்தவள், 'இன்று கண்டிப்பாக வர முடியாது; தாத்தா வருகிறார்' என்றாள். தாத்தாவா என்று கேட்டுக்கொண்டு ஹாலில் இருந்த கிழவரின் படத்தைக் கவனித்தேன். 'ஆமாம். அவர்தான்' என்றாள் பத்மா. எங்கேயிருந்து வருகிறார் என்று கேட்டேன். ஏதோ ஒரு ஊருக்கு விவகார விஷயமாகப் போயிருந்தார். நாலைந்து நாட்களாக அவர் ஊரில் இல்லை என்றாள் பத்மா. 'நீ வராமல்போனால் நானும் சினிமாவுக்குப் போகவில்லை' என்றேன். 'அப்படியானால் வீட்டுக்கே சென்றுவிடுங்கள்' என்றாள் பத்மா. 'அதற்கென்ன அவசரம்? முதல் ஷோ முடியும் சமயத்துக்குப் போனால் போதும்' என்றேன். 'மணி ஒன்பதாகிவிட்டது' என்று பத்மா ஜாடையாகத் தெரிவித்தாள். இதற்குள் பக்கத்து ரூமில் பேச்சுவார்த்தை கேட்டது. தாத்தா வந்துவிட்டார் என்றாள் பத்மா. அவள் குரல் பயத்தினால் தடதடத்தது. அதே நிமிஷத்தில் மேலண்டை ரூம் கதவு திறக்கப்பட்டது. தாத்தா வாசற்படியில் வந்து நின்றார். அவர் என்பேரில் தொடுத்த பார்வை குரூரப் பார்வையாக இருந்தது. பத்மா முதலிலேயே எழுந்துவிட்டாள். அவள் வேடனால் மூலை முடுக்கில் வளைத்துக்கொள்ளப்பட்ட மானைப்போல் மருண்டாள். நான் அலட்சியமாக உட்கார்ந்துகொண்டிருந்தேன். கிழவருக்கு என்னைக் காணச் சகிக்கவில்லை போலும். அவர் கண்கள் தெறித்து விடுபவைபோல் விழித்தன. 'பத்மா, என்ன செய்து கொண்டிருக்கிறாய்?' என்றார் கிழவர் உறுதியான அதிகாரக் குரலில். பத்மா ஒன்றும் பேசவில்லை.

'இவன் யார்?' என்று அடுத்த கேள்வி பிறந்தது. கிழவர் குரல் இடிமுழக்கம்போல் ஒலித்தது. அவர் கண்கள் கோபத்தால் ஜொலித்தன. நான் இருந்த சந்தர்ப்பத்தில்

என்னை ஒருவர் குற்றவாளியாக மதிக்கக்கூடும் என்ற உணர்ச்சி எனக்கு வந்தது. உள்ளக் கொதிப்புடன் எழுந்தேன். 'நான் பத்மாவின் கிளாஸ்மேட். நீங்கள் யாராக இருந்தாலும் கோபித்துக்கொள்ளக்கூடிய காரணம் ஒன்றும் இல்லை' என்று தைரியமாகவும் பளிச் சென்றும் எடுத்துரைத்தேன். கிழவருக்கு மூக்குக்கு மேல் வந்துவிட்டது. பூமி அதிரும்படி ஓர் உதை உதைத்துக்கொண்டு எழும்பிக் குதித்தார். 'கிளாஸ் மேட்டானால் பள்ளிக்கூடத்தில். இங்கே என்ன வேலை உனக்கு? அதுவும் இந்நேரத்தில்?' என்று சீறினார். எனக்குச் சரியான ஜவாப்புச் சொல்லத் தோன்றவில்லை. அவர் முறைத்துப் பார்த்த பார்வை என்னை ஈட்டியால் குத்தி இழுப்பதுபோல் இருந்தது. நான் மனம் கலங்கினேன். பத்மாவைப் பார்த்தேன். அவள் அங்கே இல்லை. மெல்ல வெளியே நழுவிவிட்டாள் என்று உணர்ந்தேன். கிழவர், 'நீ என்னவென்று நினைத்துக்கொண்டாய்?' என்ற கர்ஜனையுடன் ஒரு புலிபோல் என்பேரில் பாய்ந்தார். என் சட்டைக் கழுத்தை ஒரு கையால் பிடித்துக்கொண்டு மற்றொரு கையை ஓங்கினார். அவர் பற்கள் நறநறவென்று சப்தித்தன. அவர் மீசை படபடவென்று துடித்தது. அவர் கண்கள் நெருப்பைக் கக்கின. அவருடைய உஷ்ணமான சுவாசம் என் பேரில் அனல் காற்றுப்போல் வீசியது. அவர் பிடித்த பிடி என்னை வலவலக்கச் செய்தது. என் கண்களில் நீர் நிரம்பியது. யமகிங்கரனிடம் அகப்பட்டுக்கொண்ட ஒரு பிராணியாகவே என்னை நினைத்துக்கொண்டேன். 'என்னை விட்டுவிடுங்கள், என்னை விட்டுவிடுங்கள்! நான் ஒன்றும் தவறாக நடந்துகொள்ளவில்லை. உங்கள் பத்மாவையே கேட்டுக்கொள்ளுங்கள். விசாரிக்காமல் என்னை ஹிம்சிக்க வேண்டாம்' என்று அழுதுகொண்டே கெஞ்சினேன். கிழவர் என்னைப் பிடித்த பிடியைத் தளர்த்த விடாமல் என்னை ஒரு முறை ஏறிட்டுப் பார்த்தார். 'வைரப் பித்தான்! தங்கச் சங்கிலி! ரிஸ்டுவாட்சு! மோதிரம்! ஸில்க்குச் சட்டை! என்ன ஜோர்!

என்ன மிடுக்கு! ராத்திரிப் பத்து மணிக்குமேலே! கிளாஸ் மேட்டைப் பார்க்க வந்தானும்! யாரிடம் அளக்கிருய்! பெரிய மைனராகத்தான் எண்ணம்போல் இருக்கிறது?' கழுத்தில் ஓர் அமுக்கு அமுக்கினுர் கிழவர். மல்லயுத்தம் செய்யும் வஸ்தாத்தைப்போல் இருந்தது அவர் நின்ற நிலே! 'ஐயோ! விட்டுவிடுங்கள், நான் போகவேண்டும்' என்று நான் அலறினேன். 'போகவா? எங்கே போகிறது. உன்னே யார் விடப்போகிருர்கள்? நீ யாரைக்கேட்டுக்கொண்டு வந்தாய்?' என்று ஒரு உலுக்கு உலுக்கினுர் கிழவர். எனக்கு துக்கத்துடன் கோபமும் வந்தது. பத்மா சமயம் பார்த்து ஒதுங்கி விட்டதில் ஏமாற்றமும் அடைந்தேன். கழுத்து இறுகும் வலி அதிகமாக இருந்தது. கிழவரின் முரட்டுக் கையை என் இரு கைகளாலும் பிடித்துக்கொண்டேன். 'நீர் என்னே என்ன செய்ய முடியும்?' என்று எதிர்த்துப் போராடினேன் 'உஹூம்! உன் தொழிலுக்கு வீரம் வேறு? வா, உனக்கு வழி சொல்கிறேன்' என்று உறுமிக்கொண்டு கிழவர் என்னேப் பக்கத்து ரூமுக்கு இழுத்தார். அந்தச் சமயம் பத்மா கண்ணும் கண்ணீருமாக ஓடி வந்து, 'தாத்தா! அவர் பெரிய மனுஷ்யர் வீட்டுப் பிள்ளே. ஒன்றும் குற்றமாக நடந்துகொள்ளக் கூடியவரல்ல. நல்ல மதிப்பிற்கு உரியவர். அவரை விட்டுவிடுங்கள்' என்று பரிதாபத்துடன் வேண்டிக் கொண்டாள். 'இவனேயா? விட்டு விடவா? போடி நீ உள்ளே. உனக்கென்னடி தெரியும்? இவன் பெரிய கள்ளன் அல்லவா? யார் வீட்டுப் பிள்ளேயானுல் எனக்கென்ன? இங்கே ஏன் வந்தான் இவ்வேளேயில்? அக்கறையிருந்தால் அந்தப் பெரிய மனுஷ்யன் வந்து ஜாமீன் கொடுத்துவிட்டு அழைத்துப் போகட்டும்' என்று கர்ஜித்துக்கொண்டு கிழவர் என்னேப் பக்கத்து அறைக்குத் தள்ளிக் கொண்டு போனுர். நான், 'போலீஸ் போலீஸ்!' என்று கூவினேன். 'சும்மாக் கிட! போலீஸிடம்தான் உன்னே ஒப்பிக்கப் போகிறேன். பொழுது விடியட்டும்' என்று சொல்லிக்கொண்டு என்னே அறைக்குள் ஒரு கல்தா கொடுத்துத் தள்ளிக் கதவைத் தாளிட்டுவிட்டார் கிழவர்."

ராமநாதனின் குரல் தடதடத்தது. அவன் வார்த்தைகள் குழம்பின. "ராமநாதா!" என்றான் சீதாராமன். அதற்கு மேல் என்ன சொல்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. அவன் நெஞ்சை அடைத்துக்கொண்டது துக்கம். அவன் கண்கள் கசிந்தன. அவன் கைகள் ராமநாதனின் கைகளைப் பற்றிக்கொண்டன, அந்தக் காராக்கிருகத்திலிருந்து நண்பனை விடுவிக்கும் பாவனையாக! ஆபத்துக்கு உதவாத நண்பனைத் தன்னை மனத்துக்குள் சீதாராமன் வெறுத்துக்கொண்டான் போலும்! ராமநாதன் தீர்க்காலோசனை இல்லாமல் சங்கடத்தில் சிக்கிக் கொண்டதற்குத் தன் கண்காணிப்பின் குறைவே காரணம் என்று வருந்தினான் போலும். உலகப் பாதையில் நடப்பவன் எவ்வளவு நுண்ணறிவு படைத்தவனாக இருக்க வேண்டுமென்றும், அன்றேல் எவ்வளவு எதிர்பாராத விபத்துக்கள் அவனை அமுக்கிவிடக் காத்திருக்கின்றன என்றும் சிந்தித்து ராமநாதனிடம் இருக்காயிருந்த கண்மூடித்தனத்துக்கு அநுதாபம் காட்டினான் போலும். தன்னிலும் ராமநாதன் முன்னிலும் குறையாத அன்பும் நம்பிக்கையும் வைத்திருப்பது பற்றித் தான் நடுவில் சிறிது சந்தேகப்பட்டதற்குப் பச்சாத்தாபத்துடன் அவனை மன்னிப்புக் கேட்க நினைத்தான் போலும்.

ராமநாதன் தன்னைத் தானே தேற்றிக்கொண்டு மேலே கதையைச் சொன்னான்.

"நான் அடைபட்டிருந்த ரூம் என் இருதயத்தைப்போல் இருள் மண்டியதாக இருந்தது. அதன் சுவரில் எலெக்டிரிக் ஸ்விட்சு இருக்கிறதா என்று தேடி லைட்டைப் போட நான் துணியவில்லை. தரை மழமழப்பாயிருந்ததால் நல்ல தளவரிசை இட்ட இடமென்றும், காலில் ஒன்றும் தட்டுப்படாததால் அடைசலான இடமல்ல என்றும் உணர்ந்தேன். புழுக்கம் இல்லாததால் ஜன்னல் இருக்கலாமென்று ஊகித்து ஆராய்ந்தேன். ஜன்னலோ என்று சந்தேகம் தோன்றிய இடத்தை

அணுகித் தடவிப் பார்த்தேன். ஜன்னல்தான் நான்கு கதவுகளுடைய பெரிய ஜன்னல். கதவுகள் நன்றாகத் திறக்கப்படவில்லை என்று தெரிந்துகொண்டேன். ஆனால் அவை தாழிடப்படவில்லை. கதவுகளைத் திறந்தேன். வெளியே நீண்ட கூடமாக இருக்கலாமென்று தோன்றிற்று. அதிலும் வெளிச்சமில்லை. எலெக்டிரிஸிடியைச் சிக்கனமாக உபயோகிக்கிறார்கள் போலும் என்று நினைத்துக்கொண்டேன். திடீரென்று யாராவது வந்து வெளிச்சத்தைப் போடலாமென்று எண்ணினேன். 'அப்படி வருகிறவர் யாராக இருக்கலாம்?' என்று யோசித்தேன். 'பத்மா வரமாட்டாளா? என்னைத் தப்பவைக்க வழி தேடமாட்டாளா?' என்று ஏங்கினேன். வீட்டில் மனித சஞ்சாரம் இருப்பதாகவே தெரியவில்லை. நான் இருந்த ரூமில் விளக்கை ஏற்றி உள்ளே இருக்கும் பண்டம் பதார்த்தங்களைப் பரிசோதிக்கலாமா என்று பல தரம் எண்ணி எண்ணித் தைரியம் இல்லாமல் இருளிலேயே பதுங்கினேன். விளக்கைப் போட்டால் கிழவன் வந்து விடுவானோ என்ற பயம் எனக்கு இருந்ததுதான் காரணம். ஜன்னல் ஓரத்தில் ஒரு பெஞ்சு கிடந்தது. அது காலியாக இருந்தது. அதில் உட்கார்ந்தேன். ஆனால் இருப்புக் கொள்ளவில்லை. மறுபடி பைத்தியம் பிடித்தவன் போல் எழுந்து நடந்தேன். ஜன்னல் வழியே கூடத்தை நூறு முறை கவனித்தேன். காலடிச் சத்தத்தை ஆயிரம் முறை நிதானித்தேன். லோகத்துக்குச் சதுர்யுகம் முடிந்து மகாப்பிரளயகாலம் வந்து எல்லாக் கூத்தும் ஓய்ந்த பிறகு தனித்து ஒரு பிராணி நின்றால் எப்படியோ அப்படியே என்னை நினைத்துக்கொண்டேன். கடைசியில் அந்தப் பெஞ்சியில் குப்புறப் படுத்தேன்; உள்ளம் குமுறினேன்; கைகளால் முகத்தை மூடிக்கொண்டு அழுதேன், நிச்சப்தமாக. இந்தத் துக்க வெள்ளத்தில் சில நிமிஷங்கள் மிதந்து சென்றிருப்பேன். ஏதோ காலடிச் சத்தம் இரண்டொரு தடவை கேட்டதுபோல் இருந்தது. கை வளையல் குலுங்கும் சப்தமும் ஒரு முறை ஒலித்தது. ஜன்னலின் வெளிப்

பக்கமாக யாரோ வந்து நின்றதில் ஐயமில்லை. திடுக்கிட்டு 'யார்' என்று உளறினேன். கைவளை ஒலிப்புடன், 'மெல்லப் பேசுங்கள்; நான்தான்' என்று பதில் வந்தது. 'பத்மா' என்று மகிழ்ச்சியுடன் கூப்பிட்டேன், 'இல்லை; உஷா' என்றாள் ஜன்னலருகே நின்றவள். அவள் மூச்சுக்காற்று என் பேரில் அடித்தது. அவள் அலங்கார பரிமளம் உள்ளே வீசியது. அவள் நகைகளின் சலசலப்பு வியக்தமாகக் கேட்டது. 'உஷாவா?' என்றேன் சற்றுத் தயக்கத்துடன். 'ஆம். பத்மாவின் சித்தி பெண்' என்ற பதில் கிடைத்தது. உடனே அந்தப் படத்தையும் விஞ்ஞானத்தையும் நினைத்துக்கொண்டேன். 'உஷா! என்ன அழகிய பெயர்!' என்று எனக்குள்ளே சொல்லிக்கொண்டு, 'பத்மா எங்கிருக்கிறாள்?' என்று கேட்டேன். உஷா பத்மாவின் அந்தரங்க தாதியாக இருக்கவேண்டுமென்று என் மனத்தில் பட்டது. 'பத்மா ஒன்றும் சொல்லியனுப்பவில்லை. அனுப்பவும் மாட்டாள். நான்தான் சொல்ல வந்தேன்' என்றாள் உஷா. எனக்குப் புது அறிவு உதயமாயிற்று. என் நன்றி (உஷாவுக்காக) இருதயம் கொள்ளாமல் ஊற்றெடுத்தது. பத்மாவின் பிம்பம் உருகி ஊற்றுப் பெருக்கில் கலந்து விட்டது. 'உஷா' என்று முதல் முதலாக வாயார அவளை அழைத்தேன். 'ஏன்' என்றாள் உஷா. எங்கள் இருதயம் பரஸ்பரம் நிரவிக்கொண்டு ஒரே மட்டத்துக்கு நிரம்பி நின்றதாக உணர்ந்தேன். 'பத்மா என்னைப்பற்றிச் சிந்திக்கவில்லையா? நான் வெளியேறுவது எப்படி?' என்று கவலையுடன் கேட்டேன் உஷாவை. 'பத்மா தாத்தாவின் அடிமை. தாத்தா பணப்பேய். நீங்கள் சுதந்தரத்துக்குச் சுங்கம் கொடுத்தாலொழிய உங்களை அவர் விடமாட்டார். பத்மாவும் ஒன்றும் செய்ய முடியாது' என்று அழுத்தம் திருத்தமாகப் பேசினாள் உஷா. 'ஐயோ! என்னிடம் ஒன்றும் இல்லையே! நான் என்ன செய்வேன்?' என்று நான் பரிதவித்தேன். 'இதோ அவர் சாப்பிட்டதும் உங்களிடம் வருவார்.

போலீஸில் ஒப்பிப்பதாகச் சொல்லுவதெல்லாம் வெறும் உருட்டல். உங்களை ஹிம்ஸிப்பதெல்லாம் பணம் பறிக்கும் வழி. நாளைக்குத் தருகிறேன் என்று உறுதி செய்து கேளுங்கள். தொகை எவ்வளவு கேட்டாலும் ஒப்புக்கொள்ளத்தான் வேணும். பத்திரம் எழுதிக் கொடுக்கச் சொன்னாலும் சொல்லுவார். காசு விஷயத்தில் காளகண்டன் அந்தக் கிழவன்' என்றாள் உஷா. அவள் பேச்சு எனக்கு ஆச்சரியமாக இருந்தது. பத்மாவின் மழுமழுப்புக்கும் இந்தக் கண்டிப்புக்கும் எவ்வளவு வித்தியாசம் என்று யோசிக்கலானேன். மேலும் ஒரு சந்தேகம் ஜனித்தது. சுவாதீனமாக, 'உஷா' என்று கூப்பிட்டேன். 'என்ன?' என்றாள் அவள். ஜன்னல் கம்பியில் முகத்தை ஒட்டிக்கொண்டு, 'நீயும் அந்தக் கிழவனாரின் பேத்திதானே?' என்றேன். 'ஆமாம். ஆனால் நான் மற்றொரு விதத்தில் அடிமை. பத்மா அவர் ஆதரவைப் பெற்றவள். தாத்தாவிடம் பணம் குவிந்து கிடக்கிறது. பத்மாவின் தாயார் அவருக்குச் செல்வகுமாரி. பணமெல்லாம் அவர்களுக்கே கொடுக்கப் போகிறார். என் தாயாரிடம் அவருக்குப் பற்றில்லை. என் தாயார் தனியாக வேறு ஊரில் இருந்து வந்தாள். போன வருஷம் என் அம்மா இறந்ததும், என்னை இவர்கள் சம்ரக்ஷணையில் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். என்னிடம் கசப்புத்தான். நானே சம்பாதித்துப் பிழைத்துக்கொள்ள வேண்டும் என்று அடிக்கடி சொல்லுகிறார். என் தாயார் நகைகளைத் தவிர எனக்கு வேறு சொத்தில்லை. என்னை இரண்டுபடி தாழ்த்தியே இந்த வீட்டில் நடத்துவார்கள். எனக்குச் சாப்பாடு போடுவதே அதிகப்படி என்று நினைத்து என் பிதாவிடமிருந்து எனக்கு ஜீவனாம்சம் பெற முயன்றுகொண்டிருக்கிறார் தாத்தா. அதற்காகத்தான் இப்போதுகூட எங்கேயோ போயிருந்தார். என்னால் கவலைகளும் கஷ்டங்களும் செலவும் தொந்தரவும் அதிகமாக இருப்பதாகப் பெரியம்மாவும் அலுத்துக் கொள்வாள். பத்மாவுக்கு என்னிடம் அன்பு உண்டு.

ஆனுலும் பணக்காரத் தாத்தாவின் மனம் கோணுமல்தான் நடந்துகொள்வாள். பத்மாவைப் பூராவாக நம்பிவிட முடியாது' என்று முடித்தாள் உஷா. 'நீ சாப்பிட்டாகி விட்டதா?' என்று கேட்டேன். 'இல்லை. அவர்கள் சாப்பிட்டு ஆனபிறகுதான் எனக்குச் சாப்பாடு. ஒரே பங்தியில் என்னை உட்காரவைத்துக்கொள்ள மாட்டார் கள். வேலைக்காரியுடன்தான் நான் சாப்பிடுவேன்' என் ருள் உஷா. அவள் தொனியில் சோகம் இல்லாதிருந்தது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. 'என்ன உறுதி! என்ன துல்யமான மன நிலை! என்ன திடசித்தம்! எவ்வளவு ஆழ்ந்த கருத்து! என்ன பெருந்தன்மை! ஸ்திரீ ரத்தினம் அல்லவா உஷா. உஷா! என்ன அழகிய பெயர்! பெயருக்குத் தகுந்தபடி என்ன அழகு! இவள் முதலில் கதவின் பக்கத்தில் காட்சியளித்தபோது ரம்பையோ, திலோத்தமையோ என்றல்லவா பிரமித்தேன்! அவ்வ ளவு அழகும் அந்த இருள் மூட்டத்தில் மேகத்தினின்று வெளிவராத மின்னல்போல் ஒளிந்து கிடக்கிறது. பத் மாவையும் உஷாவையும் ஒப்பிட்டுப் பார்க்கவும் நியாய மில்லையே. ஊன்றிப் பார்த்தால் பத்மாவின் முகமும் தோற்றமும் புருஷச்சாயையை அநுசரித்தவை! எப் போதும் உத்கிருஷ்ட வஸ்துவின் ஞானத்தால்தான் நிகிருஷ்ட பதார்த்தத்தின் உண்மையான அந்தஸ்து அறிவுக்கு எட்டு கிறது!...'உஷா, நீ என்னைக் காப்பாற்ற வந்த ஒரு தேவதை என்றே உன்னை நான் மதிக்கிறேன். உன்னி டம் என்றும் நன்றி மறவேன். உன்னை என் ஆவியின் அதிதேவதையாகவே என் மனம் நினைக்கிறது. யாராவது வந்துவிடப் போகிறுர்கள். நீ போய்விடு. நான் கிழவ ருக்குத் திருப்தியானதை என் அந்தரங்க திருப்தியுடன் கொடுத்து என்னை விடுவித்துக்கொள்கிறேன். கிழவரும் எனக்கு உபகாரந்தான் செய்திருக்கிறுர். அவரிடம் எனக்கு உண்டான ஆத்திரம் பறந்து போய்விட் டது. என்னை மறந்துவிடாதே, உஷா, நாம் முகம் தெரி யாத இருட்டில் பேசுகிறேம். இந்த இருள் ஒரு சம

யம் விலகவேண்டியது போல் நம் இடையே உள்ள இடை யூறுகளும் விலகிவிடும் என்று நம்பு. உஷா, உன் கையைக் கொடு' என்று நான் என் மனத்தை உடைத்துக்கொண்டு வந்த உணர்ச்சி வெள்ளத்தைக் கண்டிப்புடன் அடக்கிக்கொண்டு மெல்லக் கம்பி வழியே கையை நீட்டினேன். உஷா குனிந்துகொண்டு பேசிக்கொண்டிருந்தாள் போலும். அவளுடைய வெல்வெட் போன்ற கபோலம் கையில் பட்டது. அதை ஸ்பர்சித்த என் கையை நான் முத்தமிட்டுக்கொண்டேன். அப்போது அவள் கை என் கரத்தை மெள்ளப் பற்றியது. கூடத்துக் கோடியில் வெளிச்சம் நடமாடுவது தெரியவந்தது, 'நான் வருகிறேன். ஜாக்கிரதை' என்று சொல்லிவிட்டு உஷா விரைவில் நகர்ந்தாள்.

நான் ஜன்னலினின்றும் எட்டிப் போய்த் தரையில் படுத்துக்கொண்டேன். டார்ச்சு லைட்டுடன் கிழவன் வருவதை நன்கு உணர்ந்தேன். கிழவன் ஜன்னல் வழியாக டார்ச்சு வெளிச்சத்தில் என்னை ஆராய்ந்தான். நான் நிமிர்ந்து பார்க்கவில்லை. 'ஓய்! எழுந்திருங்காணும்! இப்படியே ராத்திரி முழுவதும் குந்தியிருக்கப்போறீரா?' என்று வறட்டுக் குரலில் என்னை வெருண்டை செய்தான் கிழவன். உடனே கூடத்தில் ஸ்விட்சைத் தட்டி எலெக்டிரிக் விளக்கையும் போட்டான். கூண்டில் விழுந்த எலி வெளிச்சத்துக்குக் கொண்டுவரப்பட்டதும் பதுங்குவது போல் நான் பதுங்கினேன். 'உமக்கு வீட்டுக்குப் போக வேண்டுமானால் ஆயிர ரூபாய் அபராதத்தைக் கொடுத்துவிட்டுப் போகலாம்; இல்லாவிட்டால் போலீஸில் மாட்டிவிட்டு உம் மானத்தைச் சந்தியில் இழுத்துவிடுவேன், என்ன சொல்லுகிறீர்?' என்று அதட்டினான் கிழவன். நான் எழுந்து உட்கார்ந்து அவனை முறைத்துப் பார்த்தேன். உஷாவின் உபதேசத்தை நினைத்துக்கொண்டேன். மேலும், உஷாவை உத்தேசித்துக் கிழவனிடம் நட்புக் கொள்ள விரும்பினேன். 'என்னிடம் இப்போது என்ன இருக்கிறது? நோட்டு வேண்டுமானால் ஆயிர ரூபாய்க்கு

எழுதித் தருகிறேன். நாளைக்குப் பணம் கொடுத்து நோட்டைத் தீர்த்துவிடுகிறேன்' என்று பணிந்து கேட்டுக்கொண்டேன். அதற்குள் கதவைத் திறந்துகொண்டு உள்ளே நுழைந்த கிழவன் என் முன் நின்றுகொண்டு சிரித்தான். அது விகாரமான சிரிப்பு. அவனுடைய கோரமான பற்களை உடைத்துவிட வேண்டும்போல் எனக்கு ஆத்திரம் வந்தது. 'நோட்டாவது, சீட்டாவது? இந்தக் கிழவனை ஏமாற்றப் பார்க்கிறீரே! ஐயா! உம் பேரில் இருக்கிற கடியாரம், பித்தான், மோதிரம் இவைகளைக் கழற்றிக் கொடும்' என்றான் நிர்த்தாட்சிண்யமாக, கிழவன். இவைகளைக் கழற்றிக் கொடுத்துவிட்டால் யாரும் சந்தேகிப்பார்களே என்று தயங்கினேன். கிழவன், 'வேறு வழியில்லை' என்று தலை அசைத்தான். எனக்கும் அப்படித்தான் தோன்றிற்று. விடியும் முன் வீடு போய்ச் சேர்ந்தாக வேண்டுமே! 'நான் நாளைக்கே பணத்தைக் கொடுத்துவிட்டால் இவைகளை மீட்டுக் கொள்ளலாம் அல்லவா?' என்று வேண்டிக்கொண்டேன். 'ஆயிர ரூபாயைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டுக் குசாலாக எப்போது வேண்டுமானாலும் மீட்டுக் கொள்ளும்' என்றான் கிழவன். நான் ஒவ்வொன்றாய் வைரப் பித்தான்களையும், வைர மோதிரத்தையும், தங்கச் சங்கிலியுடன் கைக் கடிகாரத்தையும் கழற்றிக்கொடுத்தேன். கிழவன் வெகு திருப்தியுடன் எல்லாவற்றையும் வாங்கிக்கொண்டு, 'ஏன் ஐயா! வைரக் கடுக்கன் நீர் போட்டுக்கொள்ளவில்லை? பணக்காரங்களாச்சே!' என்றான் பல்லை இளித்துக்கொண்டு. 'அடுத்த தடவை வந்தால் அதையும் போட்டுக்கொண்டு வருகிறேன்' என்றேன் நான் வயிற்றெரிச்சலுடன். கிழவன் என்னை வெளியே கொண்டுவந்து விட்டான். கும்பிடும் போட்டு அனுப்பினான். 'நாளைப் பத்து மணிக்குமேல் பணத்துடன் வருவேன். என் சாமான்களை நான் திரும்பிப் பெற வேணும்' என்று கண்டிப்பான குரலில் மறு

படி கேட்டேன். 'நல்லது தம்பி' என்றான் வெற்றியி னால் குவிழ்ந்த பிறந்த கிழவன்."

ராமநாதன் சற்று ஆச்வாசப்படுத்திக் கொண்டான்.

*　　*　　*　　*

"இனி இன்று காலையில் நடந்த விருத்தாந்தந் தான் பாக்கி."

"அதையும் புரிந்துகொண்டேன், ராமநாதா! உன் போக்குப் புயல் போக்கானது, எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது" என்றான் சீதாராமன், தன் உறுதியான நோக்கினால் ராமநாதனைக் தரையோடு நரைந்து விடுப வன் போல். அவன் கீழ் உதட்டில் ஒரு வேதனைச் சிறு நகை பிறந்தது.

"வழி தப்பினால் திக்பிரமை கொண்டு சுழலவேண் டியதுதானே? ஒரு குற்றத்தை மறைக்க மற்றொரு குற் றம் அவசியமாகிறது" என்றான் ராமநாதன், திரண்டு வரும் இருளில் திரையின் பின்னேபோல் தன் முக விகா ரத்தை மறைத்துக்கொண்டு.

"ஆம்! நேர் நடத்தை ஒன்றுதான் தன் காலாலே செல்லும். நேரல்லாத நடத்தை ஊன்றுகோல் இல்லாமல் செல்லாது. ஆகையால் நீ எதிர்பாராத விதமாகப் பறி கொடுத்த அணிகலன்களை மீட்கக் கள்ளச் செக் தயாரிக்க நேர்ந்தது."

"வெட்கக் கேடு! ஆனாலும் உண்மை. மேலும் எனக்கு ஏற்பட்ட நெருக்கடியால் உன்னையும் அந்தச் சுழலில் மாட்டிவைக்க நான் துணிந்தேன்."

'பிரவாகத்தில் விழுந்தவன் கரையில் படரும் கொடியைப் பற்றி இழுத்து அறுப்பதுபோல்' என்று சீதாராமன் தன் மனத்துக்குள் பேசிக்கொண்டான்.

"பாங்கில் அப்பா கையெழுத்தை ஒருவரும் சந் தேகிக்கவில்லையா, சீதாராமா?"

“சந்தேகித்ததாகத் தெரியவில்லை. நீதான் அப்பாவின் கையெழுத்தைச் சந்தேகத்துக்கு இடமில்லாமல் தீட்டியிருந்தாயே! நானே சந்தேகிக்கவில்லையே! ஆனால் அன்று உன் முகச்சாயை நன்றாக இல்லை என்பதைக் கவனித்தேன். நீ பேசியதில் சில தடுமாற்றங்கள் இருந்தன. இருந்தாலும், உன் சமயோசித கற்பனைகளினாலும், உன் துணிகரமான நடிகத்தன்மையினாலும் நான் ஏமாந்தேன். மறுபடியும் பத்மாவுக்கும் உனக்கும் நடுவே சிறிது தலைகாட்டிய நயன பாஷை என்னைச் சிந்திக்கச் செய்தது. செக்கைப் பற்றிய குழப்பம் அப்போது தோன்ற ஆரம்பித்தது. இப்போது தூண்டில் மீன் கதியானது நன்கு விளங்குகிறது! ராமநாதா! இந்தப் பொத்தலை அடைக்க வேறு என்ன சூழ்ச்சி செய்யப் போகிறாய்? பணம் பெற்றுக்கொண்டவன் நானல்லவா? பொறுப்பு உன்னை விட்டு அகன்றுவிட்டது.”

“சீதாராமா! நான் அப்படி நினைக்கவில்லை. உன்னை மாட்டிவிட்டு நான் நிம்மதியாக இருப்பேன் என்று எண்ணாதே.”

“நான் எண்ணுவது இருக்கட்டும்! நீ என்ன தைரியத்தின் பேரில் போலிச் செக்கின் மூலம் பாங்கையும் தகப்பனாரையும் மோசம் செய்தாய்? விஷயம் வெளியானால் என்ன ஜவாப்புச் சொல்லப் போகிறாய்?”

“என் தைரியம் நெருக்கடியில் உதித்ததே. நான் அணிந்திருந்தவை காணாமல்போனால் பல கேள்விகள் எழும். என் புதிய பரிசயங்களைப் பிரகடனம் செய்ய முடியாது. ஒளித்துத்தான் ஆகவேண்டும். ஆகையால் எதைச் செய்தாவது என் அணிகலன்களை மீட்பது ஒன்றே எனக்கு முக்கியமாகிவிட்டது. உடனே ரூபாய் ஆயிரத்தைக் கிளப்புவதற்கு வேறு உபாயம் தென்படவில்லை. மாமாவிடம் பணம் இருக்கிறது. செல்லத்துக்குப் பேஸரி வாங்குவதற்காகப் பணம் தயாரித்துக்கொண்டு வந்திருக்கிறார். அவரிடமிருந்து மெல்ல ரூபாயைக் கிளப்பலா

மென்று ஓர் ஆசை உண்டு. ஆனால் அது உடனே சாத்தியமானதாக இல்லை. செக்கைப் பொய்க்கையெழுத்திட்டு அணிகளை மீட்ட பிறகு அப்பா இந்த மோசடியைக் கண்டுபிடிக்கும் முன் மாமாவிடம் ஏதாவது சாமர்த்தியம் பண்ணிப் பணத்தை வாங்கி அப்பா கணக்கில் கட்டிவிடலாம் என்று ஒரு யோசனை. பிற்பாடு மாமாவுக்குப் பதில் சொல்லிக்கொள்ள எனக்குத் தைரியம் உண்டு. என்னை அவர் வற்புறுத்தமாட்டார்; காட்டிக்கொடுக்கவும் மாட்டார். இல்லையேல் சில தினங்களில் அக்காவும் அத்திம்பேரும் வந்துவிட்டால் நிலைமையைச் சமாளித்துக் கொள்வேன். இந்தத் தைரியந்தான் எனக்கு.''

''நல்லது, ராமநாதா! அதற்குள் அமர்க்களமாகி விட்டால் என்ன செய்கிறது? இன்றைக்கே செக் புஸ்தகத்தை அப்பா கவனித்துவிட்டால்...?''

''அப்பாவுக்கு அதைக் கவனிக்க அவகாசம் இல்லை. அவர் செக் புஸ்தகத்தைத் தேடவேண்டிய அவசியமும் இல்லை. சிறிய செலவுகளுக்கு ரொக்கப் பெட்டியில் பணம் இருக்கிறது. ஒரு வேளை அவர் அதைத் தேடினாலும் அது அவருக்கு அகப்படாது. நான் இடம் மாற்றி அதை வைத்துவிட்டேன். அப்படியே அவர் அதை எடுத்துப் புதுச் செக் எழுத நேர்ந்தாலும் ஒரு நெம்பர் கிழிக்கப்பட்டிருப்பதைக் கவனிக்கமாட்டார். நான் கிழித்த பகுதியின் இரட்டித்த பகுதியை முன் நெம்பரின் பகுதியுடன் லேசாக ஒட்டிவிட்டிருக்கிறேன். விரலால் புரட்டும்போது அது தனியே வராது. அப்பாவின் அவசரத்தில் அவ்வளவு ஸூக்ஷ்மமாக அவர் ஆராய்ந்து பார்க்கமாட்டார்.

''இதெல்லாம் நம் பிரார்த்தனையே ஒழிய நமக்குத் தற்காப்பல்ல. பணத்துக்குப் பணம் போட்டாலும் அதை எடுத்ததற்கு ஜவாப்புச் சொல்லித்தான் ஆகவேண்டும். அதற்கு ஏதாவது பொய் சிருஷ்டிக்கத்தான் வேண்டி வரும். காரியம் ரொம்பச் சிக்கலாகிவிட்டது. ராமநாதா,

நீ மாமாவைக் கேட்டுப் பணம் உடனே வாங்கி நாளைக்கே பாங்கில் கட்டிவிட என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்?"

"இனிமேல்தான் ஏற்பாடு செய்ய வேண்டும். வீட்டுக்குப் போய்த்தானே மாமாவைக் காணவேணும்!"

"ராமநாதா, இந்தச் சிக்கலை நினைத்தால் எனக்கு வயிற்றில் பகீர் என்கிறது. நீ என்னமோ லகுவாக நினைக்கிறாய்! மாமாவிடம் ஐந்து, பத்து விவரம் சொல்லாமல் வாங்கலாம். ரூபாய் ஆயிரத்தை உண்மை விவரம் கேட்காமல் அவர் கொடுத்துவிடுவாரென்று எனக்குத் தோன்றவில்லை."

"இல்லை, சீதாராமா! நான்தான் வேறு வழி சொன்னேனே. 'பேஸரிக்காகக் கொண்டுவந்த பணம் கையில் முடங்கிக் கிடக்கவேண்டாம். பாங்கில் போட்டு வைத்தால் பேஸரி வாங்கும்போது எடுத்துக்கொள்ளலாம். பணம் கையில் இருந்தால் செலவாகிவிடும். செல்லத்தின் பேரில் பணத்தைப் போட்டுவிடுகிறேன்' என்று கேட்டு வாங்கிவிட்டால் பிறகு நம் இஷ்டப்படி செய்துகொள்ளலாம். மாமா சந்தேகப்படமாட்டார். அவருக்கு ஜவாப்புச் சொல்லுவதில் எனக்குச் சிரமம் ஏற்படாது. நிலைமையை நாளைக்கே சமாளித்துவிடலாம். நீ கவலைப் படாதே, சீதாராமா!

"மாமா பேஸரிக்காகக் கொண்டுவந்த பணத்தைத் தன் கையில் வைத்துக்கொண்டிருக்கிறாரோ, அக்காவிடமாவது அத்திம்பேரிடமாவது கொடுத்துவைத்திருக்கிறாரோ? அதை நீ நிச்சயமாகத் தெரிந்துகொண்டிருக்கிறாயா?"

"ஒருவரிடமும் கொடுத்திருக்கமாட்டார். நேற்றுத் தானே வந்தார்."

"நாமாக அப்படி நினைத்துக்கொள்ள முடியாது. மேலும் பேஸரிக்குப் பணம் ரொக்கமாகக் கொண்டுவந்திருக்கிறார் என்பதாவது உனக்கு நிச்சயமாகத் தெரியுமா?"

"கொண்டுவராமலா பேஸரி வாங்கும் பிரஸ்தா பத்தை எடுப்பார்?"

"ராமநாதா! எனக்கு என்னமோ உன் மனோரதங்கள் காலில்லாப் பந்தலாகத் தோன்றுகின்றன."

"அப்படி அவசியம் ஏற்பட்டால் மாமாவிடம் உண்மையைச் சொல்லி அநுதாபத்தை வேண்டுகிறேன். எப்படியும் பெண் கல்யாணத்தைச் சிந்தித்துக்கொண்டிருப்பவர் பணம் சேகரித்து வைத்துக்கொள்ளாமலா இருப்பார்? என் நெருக்கடியை நான் அறிவித்தால் எங்கேயிருந்தாலும் பணத்தை வரவழைத்துக் கொடுத்துவிடுவார். சீதாராமா, நீ யோசிக்காதே! மாமாவை நான் எப்படி வேண்டுமானாலும் ஆட்டி வைப்பேன். என் தாக்ஷிண்யத்தை அவர் தட்ட முடியாது. உனக்குத்தான் தெரியுமே...!"

"ராமநாதா, என்ன சொல்லுகிறாய் நீ? ஆழ்ந்து யோசிக்காமல் பேசுகிறாய்! உன் மாமனுடைய நெருக்கடியை நீ தெரிவித்துக்கொண்டால் உன்னிடம் அவருக்கு அநுதாபம் எப்படி ஏற்படும்? ஏற்கனவே உன் தாயாரின் நிராகரிப்பினால் கலங்கிய அவர் உன் வர்த்தமானங்களையும் கேட்டால் உடனே பெண்ணையும் அழைத்துக் கொண்டு ஊருக்கல்லவா மூட்டை கட்டுவார்? மாமா ரோஷக்காரராச்சே!"

ராமநாதனுக்கு முகம் அசடுதட்டிப் போய்விட்டது. "அக்காவும் அத்திம்பேரும் வரட்டும். அவசியம் நாலைந்து தினங்களில் வந்துவிடுவார்கள். நிலைமையை எப்படியும் சமாளித்துவிடுகிறேன்" என்று அவன் சொன்னது ஹீனஸ்வரத்தில் இருந்தது.

"உன் சங்கல்பம் எனக்கு விந்தையாகத்தான் இருக்கிறது. யார் வந்தாலும் உனக்கு எவ்வளவு செல்வாக்கு இருந்தாலும் ரூபாய் ஆயிரத்தை ஒருவரும் விவரம் கேளாமல் உன் கையில் தூக்கிக் கொடுத்துவிடமாட்டார்கள். அதையும் தவிரச் சில நாட்கள் செல்லுமுன் இங்கே

எல்லாம் கலவரமாகிவிடப்போகிறது. உஷார்!'' என்றான் சீதாராமன் வெறுப்பும் உறுதியும் தோன்றும் விதமாக.

''உஷார் என்று சொன்னாய்! ஆகா! என் உஷாவின் நினைப்பு வருகிறது. என்ன கலவரம் வேண்டுமானாலும் வரட்டும்! என் உஷாவின் காதல் வெற்றியின் நிமித்தமாக எதைத் தியாகம் செய்ய நேர்ந்தாலும், எவ்வளவு கஷ்ட நஷ்டங்கள் வந்தாலும் அவைகளை யெல்லாம் நான் பாராட்டுவதற்கு உரியவையாக நினைக்கவே மாட்டேன்.''

''சரிதான், ராமநாதா! நாழிகையாகிறது; நீ வீட்டுக்குப் போ! நன்றாக இருட்டிவிட்டது.''

''நீ?''

''நான் போட் மெயிலுக்குப் போகிறேன். மணி 7-30 ஆகிறது. ஒரு டாக்ஸியைப் பிடித்துக்கொண்டால் டயத்துக்குப் போய்விடலாம். நீ வீட்டுக்குப் போய் உன்னால் முடிந்தவரை நிலைமையைச் சமாளித்துக்கொள். என் பரிகாரத்தை நான் தேடிக்கொள்ளுகிறேன்.''

''என்ன சீதாராமா, நீ ஊருக்கா போகிறாய்? திடீரென்று, ஒருவரிடமும் சொல்லிக்கொள்ளாமல்! நீ எங்கே என்று கேட்டால் நான் என்ன சொல்லுகிறது!''

''ஏதாவது கற்பனை பண்ணிச் சொல். உனக்குத் தெரியாதா?''

''சீதாராமா! நீ ஏன் பயந்துகொண்டு ஊருக்குப் போகவேண்டும்? நான் உன்னைக் காட்டிக்கொடுப்பேனா?''

''காட்டிக்கொடுக்கமாட்டாய், வாஸ்தவந்தான். எனக்கு உண்மை தெரிந்துவிட்டதால் உன் பெற்றோர்களைப் பார்த்தால் திருட்டுச் சொத்தை அடகு வாங்கினவன் போல் நான் உண்மையை ஒளிக்க வேண்டும். அது என்னால் முடியாது. நான் ஒளித்தாலும் பாங்கில் பணம் வாங்க நான் போட்ட கையெழுத்து என்னைக் காட்டிக் கொடுத்துவிடும். அப்போது உன்னைக் காட்டிக்கொடுப்பதா? அல்லது குற்றத்தை நான் ஏற்றுக்கொள்வதா என்ற தர்ம சங்கடத்தில் மாட்டிக்கொள்வேன்.''

"நானே என் குற்றத்தை அப்பாவிடம் ஒப்புக் கொண்டுவிடுகிறேன்".

"நடக்காத காரியம். அப்படி ஒப்புக்கொண்டால் ரூபாய் போன இடத்தை வெளியிடவேண்டும். உடனே என்ன நடக்கும், தெரியுமா?"

"என்ன நடக்கும்?"

"கிரிமினல் கேஸ் தொடரும். இளம் வாலிபனைப் பலாத்காரம் செய்து மோசடியாகப் பணம் பறித்ததாகவும் இன்னும் பல அவதூறான காரணங்களைக் காட்டியும் உன் பத்மாவின் தாத்தாவின்மேல் உன் தகப்பனார் உடனே பிராது கொடுத்துவிடுவார். உன் நடத்தை அம்பலமாகிவிடும். என்னிடம் ஒப்பித்த கதையை மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் பகிரங்கமாக நீ வாக்குமூலம் கொடுக்க நேரிடும். அப்படிச் செய்வது குடும்பத்துக்கு அவமானமென்று உன் உறவினர் விவகாரத்தை ஒழித்தாலும், வீட்டில் உன்னைக் கட்டுப்பாடுகளில் இறுக்கிப்போட்டு ஒரு சுதந்தரமும் அற்றவனாகச் செய்ய நினைப்பார்கள். நீ உண்மையை இப்போது வெளியிட முடியாது. உன் அப்பா, மாமா, அக்கா, அத்திம்பேர் இவ்வளவு பேரும் உன் உஷா நிமித்தமாக உனக்கு விரோதிகளாகப் போகிறார்கள். ஆனால் உனக்கு உபதேசம் செய்ய நான் முன் வரவில்லை. என்னை மன்னித்துவிடு. எனக்கு ரெயிலுக்கு நேரமாகிறது. நல்லவேளையாக ரெயில் சார்ஜுக்குக் கையில் பணம் இருக்கிறது. அதற்கு ஒருவரையும் யாசகம் கேட்க வேண்டாம். சரி ராமநாதா, எனக்கு விடை கொடு. ஊரிலிருந்து எனக்குத் தந்தி வந்ததாகச் சொல்லிவை. நான் வரட்டுமா!" என்று சொல்லிவிட்டுச் சீதாராமன் துறவு பூண்டவன்போல் மேலே தரித்திருந்த ஒரே சட்டை ஒரே வேஷ்டியுடன் புறப்பட்டுவிட்டான்.

"நிலைமை அவ்வளவு மோசமாகிவிடும் என்று நினைக்காதே, சீதாராமா! நான் எப்படியாவது நிலைமையை நேர்ப்படுத்தி உனக்கு எழுதுகிறேன். நீ வந்து சேரலாம்

சரி போய்வா!" என்று ராமநாதன் தடதடத்த குரலில் சொன்ன வார்த்தைகள் சிறிது தூரம் போன சீதாராமனின் காதில் விழுந்தன. சீதாராமன் பதில் சொல்லுவதற்கு அடையாளமாக ஒரு முறை திரும்பிப் பார்த்து விட்டு விரைவாக வழி நடந்தான்.

எலெக்டிரிக் கம்பத்தின் அடியே வெளிச்சம்பட அவன் திருப்பிய முகம் ராமநாதனின் மனத்தில் அப்படியே பதிந்தது. அந்த முகத்தில் என்ன சோகம்! என்ன உறுதி! என்ன வைராக்கியம்! என்ன சாந்தி! ராமநாதன் காருண்ய வள்ளலால் மன்னிக்கப்பட்ட திருடனைப்போல் உள்ளம் சுருங்கிப்போனான். நல்லோரைத் தூஷித்த கயவனைப் போல் வெட்கி வெந்துபோனான். கடவுளை மறக்கும் நாஸ்திகனைப்போல் சூன்யத்தால் சூழப்பட்டான். மூல நிதியை வைத்துச் சூதாடிய வெறியனைப் போல் ஆராத் துயருற்றான். நிழல் தரும் தருவை வெட்டிய வழிப் போக்கன்போல் தரிக்கத் தலமில்லாமல் தவித்தான். சீதாராமனுடன் தன்னை ஒப்பிட்டுப் பார்த்து மலைக்கும் பாம்புப் புற்றுக்கும் உள்ள வித்தியாசத்தைக் கண்டான்.

பலவாறு மோதும் சிந்தனையில் கலங்கி ராமநாதன் வீடுநோக்கி நடந்தான்.

* * *

ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் அன்று ஆபீஸிலிருந்து சற்றுச் சீக்கிரமாகவே வீட்டுக்கு வந்தார். அவர் தற்செயலாகப் பாங்கு மானேஜருடன் டெலிபோனில் பேச நேர்ந்தபோது காலையில் மாற்றப்பட்ட செக்கைப் பற்றி அறிந்துகொண்டார்.

"தொகை பெரியதல்லவா? அதனால் பிரஸ்தாபித்தேன்."

"யார் வாங்கினது?"

"சீதாராமன். அவன் பேருக்குத்தானே எழுதியிருந்தீர்கள்?"

"ஆமாம், ஆமாம்."

"பணம் கைக்கு வந்ததல்லவா?"

"அதற்கென்ன, வந்துவிடும்."

"ஏன், ஒன்றும் சந்தேகம் இல்லையே?"

"உங்களுக்கு ஒன்றும் சந்தேகமாகத் தெரியவில்லையே?"

"ஹ ஹ ஹ. வழக்கமாகச் செக் மாற்றுகிற பையன் தானே?"

"ஆமாம், கையெழுத்தைப்பற்றிக் கேட்டேன்."

"ஹ ஹ ஹ சரியாகத்தான் இருந்தது."

வீட்டுக்கு வந்ததும் வேங்கடசுப்பையர் தம் டிராயர்க் கைப்பெட்டிகளில் செக் புஸ்தகத்தைத் தேடினார். அதை அகப்படும் முன் சங்கரியம்மாள் சிற்றுண்டிக்கு அழைத்தபடியால், உள்ளே சென்றுவிட்டார். சங்கரியம்மாள் பிரசன்னமாக இருக்கவில்லை.

"ஏன்? என்ன சமாசாரம்?"

"ஏன், ஒரு சமாசாரமும் இல்லை. மச்சினன் வந்திருக்கானே இரண்டு நாளாய், என்ன ஏது என்று விசாரிக்கப்படாதோ?"

"விசாரிக்காமல் என்ன? உள்ளே கூப்பிடேன், டிபன் எடுத்துக்கொள்ளட்டும்."

"டிபன் அவனுக்கு ஆகிவிட்டது. நீங்கள் போய்ப் போசிக்கொள்ளுங்கள்."

"ஏன், ஏதாவது காரியமாக வந்திருக்கானோ?"

"காரியந்தான். நீங்கள் அவன் மூலமாக ஏதோ நிலம் வாங்கப் போகிறதாகச் சொன்னேளாமே?"

"வேறு வேலையில்லை."

"இல்லாவிட்டால் அவனுக்கு ஒரு வைர பேஸரி வாங்கிக் கொடுக்கிறீர்களா?"

"பணம் எங்கே இருக்கு?"

"உங்கள் பாங்கில் இல்லையோ?"

"அவன் போட்டு வைத்திருக்கிறானா?"

"நீங்கள் போட்டு வைக்கவில்லையோ?"

"எவ்வளவு ரூபாய்?"

"ஆயிர ரூபாய்க்குக் குறைந்தால் நன்றாயிருக்குமோ?"

"சரிதான். செக் எழுதியனுப்பியது அவன்தான் என்று சொல்."

"எது செக்?"

"பின்னே நீ என்ன சொன்னாய்?"

"நீங்கள் என்ன சொன்னீர்கள்?"

"நான் இன்று, என்னை அறியாமல் பாங்கில் மாற்றப்பட்ட செக்கைப்பற்றிச் சொன்னேன். அது விஷயம் உனக்குத் தெரியுமா?"

"எனக்கு ஒன்றும் தெரியாதே! நான் ஏதோ விளையாட்டாக அல்லவா பேசினேன்? யார் மாற்றினார்கள்?"

"சீதாராமன் மாற்றியவன். என் கையெழுத்தைப் போட்டது யார் என்று தெரியவேணும்."

"ஐயையோ! எத்தனை ரூபாய்?"

"சப்தம் போடாதே; ஆயிரம்."

"போர்ஜரியா?"

"சரி; அப்புறம் பேசிக்கொள்வோம். செக் புஸ்தகத்தைத் தேடிக்கொண்டிருந்தேன். அதுவும் அகப்படவில்லை. ஏதோ நடந்திருக்கிறது. நீ ஒன்றும் பேசாதே. நான் பார்த்துக்கொள்கிறேன்."

"போலீஸில் தெரிவித்தீர்களா?"

"சட்! போலீஸாவது மண்ணாங்கட்டியாவது. எதற்காகப் போலீஸ்? நீ பேசாமல் இரு. உனக்குத் தெரிந்ததாகவே காண்பித்துக்கொள்ளக் கூடாது! எல்லாம் நான் பார்த்துக்கொள்கிறேன்."

"சீதாராமன் நல்ல பிள்ளையாச்சே!"

"அவனை யாரோ மோசம் பண்ணியிருக்கிறார்கள்."

"சிவராமன் உங்கள் ரூம் வழியே போகவில்லையே."

"சீச்சீ! யானை படுத்தாலும் ஆள் உயரம் இருக்குமாம் அல்லவா? அவன் கொடுக்கிறவனே ஒழிய எடுக்கிறவன் ஆகமாட்டான்."

"நம்ம பிள்ளையிருக்கோ இல்லையோ... தத்தாரி..."

"சரி, அதற்கு மேல் பேசாதே."

"இப்படி இருந்தால் எப்படிக் காலம் தள்ளுகிறது?"

"அதைப்பற்றிக் கவலைப்பட்டு என்ன பிரயோஜனம்?"

"நீங்கள் இதை வெறுமனே விடப்படாது. இன்றைக்கு ஆயிரம்; நாளைக்கு இன்னும் எவ்வளவோ?"

"நாம் ஜாக்கிரதையாக இருக்கவேண்டியதுதான்."

"என்ன ஜாக்கிரதையாக இருக்கிறது! இவனுக்கு எதற்குத் திடீரென்று ஆயிரம் ரூபாய் பணம்? அதையாவது தெரிந்துகொள்ள வேண்டாமா?"

"ஒன்றும் அவசரப்படாதே. நீ திடீரென்று எதையாவது கேட்டுவைக்காதே அவனை."

"நான் ஏன் கேட்கிறேன்? நான் கேட்டால் அது எனக்கு வழியாகப் பதில் சொல்லுமா? எல்லாம் நீங்களே விசாரியுங்கள். ஏதாவது தப்புத் தண்டா இருந்தால் கண்டிக்காமல் மட்டும் விடப்படாது. பிற்பாடு நம்ம பேரைத் தான் சந்தியில் இழுத்துவிடும். பணம் போனாலும் பாதகமில்லை."

"ஈச்வரன் அதிகப் பணத்தைக் கொடுத்தால் அதற்குத் தகுந்த வடிமடையையும் அமைக்கத் தவறுவதில்லை. சரி. எனக்குப் போரும்; காபியைக் கொடு. கூடத்தில் அந்தக் குட்டிகள் வந்துவிட்டாப்போல் இருக்கிறது. ஒன்றும்

அமர்க்களம் வேண்டாம். ஜாக்கிரதை. மதுரப்பாட்டி எங்கே?''

''எங்கேயாவது ஓட்டுக் கேட்டுக்கொண் டிருப்பாள்.''

''நம் வீட்டுக்குள்ளேயே நாம் எவ்வளவு ஜாக்கிரதையாக இருக்கவேண்டி யிருக்கிறது! காபிக்கு சக்கரை போடவில்லை.''

''மறந்துபோய்விட்டேன். எனக்குப் புத்தி சரியாக இல்லை.''

''கூடத்தில் என்ன அமர்க்களம்?''

''சிவராமனுக்குக் காதும் காதும் வைத்தாற்போல் ஒரு காரியத்தைச் செய்வது என்பதே தெரியாது. ஆனாலும் இத்தனை கோபமும் ஆத்திரமும் இருந்தால் எப்படி அந்த மனுஷ்யனுடன் காலம் தள்ளுகிறது? அந்தப் பெண்ணைப் பிடித்து இரைகிறான் போலே இருக்கு.''

''செல்லத்தையா?''

''ஆமாம், அது என்னத்தைக் கண்டது? எவனோ காலாடிப்பயல் ஒரு கடிதத்தை எழுதி அவள் புஸ்தகத்திலே வைத்திருக்கிறான். பள்ளிக்கூடத்தில் கேட்க வேண்டுமோ? இந்த எழவு பள்ளிக்கூடத்தில் படிப்பா சொல்லிக் கொடுக்கிறான்? இதுதான் படிப்பு! இதுகளை நாளைக்கே நிறுத்திவிட்டாலும் தேவலை. என்ன பேத்தலும் பிடுங்கலும்.''

''காதல் கடிதமோ? ஆனால், உன் காலத்தில் நடந்தது மாதிரித்தான் இப்போதும் நடக்கவேண்டும் என்கிறாயா? பெண்கள் சுதந்தரம் வந்ததற்கு அடையாளம் காதலன் அவள் கால்களில் விழுந்து புலம்பிப் புலம்பி அவளை மணக்கிறான்.''

''அவனைக் கட்டேலே வைத்தது!''

''சரி மாடிக்குப் போய்விடுகிறேன். என் காதிலே ஒன்றையும் போடவேண்டாம்.''

"நானு போட்டுப்போகிறேன்!"

"இல்லாவிட்டால் 'காரை' எடுத்துக்கொண்டு எங்கே யாவது வெளியிலே போய்விட்டுமா?"

"வேண்டாம் வேண்டாம்; இன்று ஒரு நாளைக்குக் காலத்தில் அகத்துக்கு வந்திருக்கிறீர்கள். சிவனே என்று மாடியில் போய், சிரமபரிகாரம் செய்துகொள்ளுங்கள். உங்களிடம் ஒருவரும் மத்யஸ்தத்துக்கு வராமல் நான் பார்த்துக்கொள்கிறேன்."

* * *

கூடத்தில் விசாரணை கடுமையாக இருந்தது. சிவராமன் செல்லத்தினிடத்தில் கடிதத்தைக் கொடுத்துவிட்டு,

1. "இது எப்படி உன் புஸ்தகத்தில் வந்தது?"

2. "இதற்கெல்லாம் இடம் கொடுக்கலாமா?"

3. "எழுதினவனைச் சித்திரவதை செய்துவிட வேண்டாமா?"

4. "உபாத்தியாயர்கள் எதற்கு இருக்கிறார்கள்?"

5. "ஹெட்மாஸ்டர் கையாலாகாதவனா?"

6. "உன்னைத்தானா பார்த்தான் அந்த அயோக்கியன்?"

7. "அவனுக்கு அப்பன், ஆயி, கூடப் பிறந்த பெண்கள் ஒருவரும் இல்லையா?"

8. "வெந்த உள்ளமாவது வேகாத உள்ளமாவது?"

9. "எனக்கு அவன் யார் என்று சொல்லு? இன்று இரவே சூர்ணம் செய்துவிடுகிறேன்."

10. "பெண்கள், அப்படி, ஏன் என்று கேட்பாரற்றுப் போய்விட்டார்களா?"

11. "என்ன அநியாயம்! என்ன அக்கிரமம்! என்ன துணிச்சல்! என்ன மானக்கேடு!"

12. "போதும் நீ படித்தது..."

13. "புறப்படு ஊருக்கு இப்போதே" என்றபடியெல்லாம் இடைவிடாமல் கர்ஜித்தார்.

செல்லம் கடிதத்தைப் படித்துக்கொண்டே மனத்தில் மேற்படி ஒவ்வொரு கேள்விக்கும் பதில் சொல்லிக் கொண்டாள்.

1. "இது கி. மு.வால் புஸ்தகத்தில் வைக்கப்பட்டது. நீண்ட முன் யோசனையினால்தான் அவனால் அப்படிச் செய்ய முடிந்தது."

2. "என்னைக் கேட்டுக்கொண்டா அப்படிச் செய்தான்? நான் இடம் கொடுக்கவாவது?"

3. "காதல் கடிதம் எழுதுவது காலித்தனந்தான்; ஆனால் முத்துஸ்வாமி? அவனே இதை எழுதும்படி அவ்வளவு தூண்டுதலுக்கு என் அழகு தான் காரணம்!"

4. "உபாத்தியாயர்களே காதல் கடிதம் எழுத மாட்டார்களா என்ன?"

5. "கலப்புப் பள்ளிக்கூடங்களில் ஹெட்மாஸ்டர் ஈச்வரனாயிருந்தாலும் கையாலாகாதவனாய்த்தான் இருக்க வேண்டி வரும்."

6. "அவன் யோக்கியன்தான். நானும் அழகிதான். என்னைத் தவிர வேறு ஒரு பெண்ணையும் முத்துஸ்வாமி தாசியிலேக்கு மதிக்கமாட்டான் என்பது திண்ணம்!"

7. "அவனுக்கு எல்லாப் பந்துக்களும் இருந்தாலும் பெண்டாட்டி வேண்டியதுதானே. இது என்ன கேள்வி?"

8. "கவிதையும் கற்பனையும் உள்ளவர்களுக்குத் தெரியும் வெந்த உள்ளம் எப்படி ஏற்படுகிறதென்பது."

9. "முத்துஸ்வாமி சூர்ணமாக்கப்படுவதற்கு நான் காண்பித்துக் கொடுக்கமாட்டேன்."

10. "ஏனென்று கேட்பார்கள் இருப்பதனால்தான் ஒருவன் வெந்த உள்ளமாகிறான்."

11. "உங்களுக்கு மாப்பிள்ளை என்று ஒருவன் வந்தால் அவன் எப்படி இருப்பானென்று நினைப்பு? அநியாயமென்ன? அக்கிரமம் என்ன? துணிச்சல் என்ன? மானக்கேடென்ன? இது தான் பெண்களின் வெற்றி!"

12. "படிப்பை நிறுத்துவதுபற்றி எனக்கும் சம்மதந் தான். முன் காலத்தில் பிள்ளைகளுக்குக் கல்யாணப் படிப்பென்று பரிகாசமாகச் சொல்லுவார்கள். இந்தக் காலத்தில் உண்மையாகவே பெண்கள் படிப்பு, கல்யாணப் படிப்புத்தான்."

13. "ஊருக்குப் புறப்படுகிறேன். முகூர்த்தத்தைப் பாருங்கள்."

காந்திமதியும் செல்லத்துடன் வெந்த உள்ளத்தின் கடிதத்தை வாசித்து வாசித்து மகிழ்ந்தாள். இந்தக் கவிதையை அவளைத் தவிர வேறு யாரால் எழுத முடியும்! எதற்காக முத்துஸ்வாமி அந்த லைப்ரரி புத்தகத்தைப் பற்றியும், அதில் தான் வைத்துவிட்ட முக்கியமான கடிதத்தைப்பற்றியும் அன்று சாயங்காலம் தன்னைத் தனிமையில் சந்தித்து அவ்வளவு அக்கறையுடன் பேசினன் என்பது செல்லத்துக்குப் புரிந்தது. காந்திமதியும் அவளும் ஒரு கடைக்கண் நோக்கையும் புன் சிரிப்பையும் அந்தரங்கமாகப் பரிமாறிக்கொண்டார்கள். இந்தக் கடிதத்தை முதல் நாளே பார்த்திருந்தால் தான் முத்துஸ்வாமியிடம் எப்படி நடந்துகொண்டிருக்கக் கூடும் என்று செல்லம் கல்பனு திருஷ்டியால் காண முயன்றாள். தான், எழுதியவரை அறியாது அந்தக் கடிதத்தைப் பார்த்திருந்தால் அது தனக்குக் கோபத்தையும் வெறுப்பையுந்தான் மூட்டியிருக்கும் என்று அவளுக்குப் பட்டது. முத்துஸ்வாமி தன்னை நேரில் சந்தித்தபோது கூக்குரல் போட்டு அவனை மிரட்டியிருக்க நேர்ந்திருக்கும் என்று தெளிந்தாள். அந்தக் கடிதத்தை ஞாபகமூட்ட அவன் பேசிய தந்திரமான வார்த்தைகளுக்கு அவனை மெச்சினுள். அதைத் திருப்பிக் கொடு என்று கேட்ட

தற்குத் தன் உள்ளத்தைப் பரிசோதிப்பதே நோக்கமென்று தீர்மானித்தாள். புத்திசாலியாக இருப்பவன், "நான் உனக்குக் காதல் கடிதம் எழுதியிருக்கிறேன். அதைப் பார்; எனக்குப் பதில் தெரிவி" என்று சொல்லுவான்? என்ன சமத்காரமான வழியை முத்துஸ்வாமி பின்பற்றியிருக்கிறான்! ஒரு வாரம் முன்னதாகவே நான் பெயர்கொடுத்திருந்த புஸ்தகத்தை அறிந்து அதில் கடிதத்தை வைத்தது எவ்வளவு முன்யோசனை! ஒருவேளை என் எதிர்ப்புக்குப் பாத்திரமானால் தப்பித்துக்கொள்ள என்ன தந்திரம்! புஸ்தகத்தை நேரில் கொடுக்கவில்லை. சொந்தப் புஸ்தகமும் இல்லை; லைப்ரரி புஸ்தகம். யதேச்சையாக நான் எடுத்தது. வேறு யாரும் அதே போல் எடுத்திருக்கலாமல்லவா? மேலும் புஸ்தகத்தில் தட்டிக் கெட்டு ஏதோ கடிதத்தை வைத்துவிட்டாராம்! அதைத் திரும்பிப் பெறவேண்டுமாம்! நான் கடிதத்தைப் பார்த்தேனா? பார்க்கவில்லையா? பார்த்திருந்தால் அதைப்பற்றி என் அபிப்பிராயம் என்ன என்ற ஆராய்ச்சிக்கு எவ்வளவு நாசுக்கான வழி! அதை நான் பார்க்காவிட்டால் என்னைப் பார்க்கச் செய்யும் உபாயம் எவ்வளவு உசிதமானது! அது கெட்டுப் போய்விடவில்லையா என்று தெரிந்து கொள்வதில் கவலை! அதைத் தாமதிக்காமல் பெற வேண்டுமாம்! வேறு யாராவது பார்த்துவிடப் போகிறார்கள் என்ற அச்சமல்லவா அது! முத்துஸ்வாமி நினைத்த படியே ஆகிவிட்டது! 'தானே தவறு செய்துவிட்டாராம்! அது குற்றமாகும் முன் அதை அவர் கைப்பற்றிக் கொள்ள வேண்டுமாம்! என்ன பாசாங்கு! அதற்காக அவர் நேரில் வருவாராம்! எங்கள் பின்னே நடந்து வந்தார், பாவம்! நாளைக்கே என் புருஷனாகிவிட்டால் இவ்வளவையும் சொல்லிக் காண்பிப்பாரல்லவா!"

"போதும் படித்தது! பாட புஸ்தகமோ! ஔவையார் பாட்டோ! நளவெண்பாவோ!..."

"இல்லை மாமா! பெரிய புராணம்" என்றாள் காந்திமதி சிரித்துக்கொண்டு.

"ஆமாம், புராணமாகத்தான் இருக்கிறது. கிழித்து எறி, அந்தச் சனியனை" என்று மாமா காகிதத்தைப் பிடுங்க வந்தார்.

காந்திமதி தந்திரமாக அதைத் தன் கையில் வாங்கிக் கொண்டு, "ஆளைக் கண்டுபிடிக்க வேண்டுமானால் தஸ்தா வேஜி கைவசம் வேண்டாமா?" என்றாள் முன்னிலும் அதிகமாகச் சிரித்துக்கொண்டு.

"ஆளைக் கண்டுபிடிப்பது சிரமமில்லை. ஆள் உள்ளேயே இருக்கிறான். நான் ஆளைக் கண்டுபிடிக்கவும் கண்டுபிடிப்பேன். அதற்கு மேல் செய்யவேண்டிய சிக்ஷைகளையும் செய்வேன். ஆனால் உங்களுக்கு மனதாகாது; நம்பிக்கை வராது."

"எனக்கென்ன வந்தது மாமா! நீங்கள் பேஷாகக் கண்டுபிடியுங்கள்; சிட்சியுங்கள். செல்லத்துக்கும் எனக்கும் யாதொரு ஆக்ஷேபமும் இல்லை."

"ஆனால் நானாகக் கண்டுபிடித்தாலொழிய நீங்கள் ஆளைச் சொல்லப்போவதில்லை?"

"தெரிந்தாலல்லவா சொல்வதற்கு? தெரிந்தால் சொல்லாமல் இருப்போமா!"

"உங்களுக்குத் தெரியாமலா இருக்கும்? சந்தேகமாவது ஓரிடத்தில் ஏற்படக்கூடுமல்லவா?"

"எங்களுக்குத் தெரியும் என்றால் எங்களையும் குற்றவாளிகள் ஆக்குகிறீர்களா? எங்களுக்குத் தெரியவே தெரியாது. திருட்டுத்தனமாகத்தானே இந்தக் கடிதங்கள் சேர்ப்பிக்கப்படுகின்றன."

"வெளியிலிருந்து திருடன் வரமாட்டான். இப்படிக் கடிதம் எழுதவும் அதைச் சேர்ப்பிக்கவும் வெளித் திருடனுக்குச் சௌகரியம் இல்லை."

"அப்போ, உங்களுக்குத் தெரியும்போல் இருக்கு!"

"தெரியும். சற்று நேரத்தில் இங்கேயே வருவான். அப்போது என்ன நடக்கிறது பார்." மாமா செல்லத்தின்

பக்கம் திரும்பினார். "நீ ஊருக்குப் புறப்படத் தயாராகி விடு" என்றார்.

செல்லத்தின் முகத்தில் திடீரென்று பயமும் பரபரப்பும் தோன்றின. மாமாவின் பயமுறுத்தலால் அல்ல. கேட்டுக்கு வெளியே முத்துஸ்வாமி வந்து தோட்டக்காரன் பொக்கையனிடம் ஏதோ விசாரித்துக்கொண்டிருந்தான். செல்லம் காந்திமதியைப் பிரார்த்திக்கும் முறையில் பார்த்தாள். காந்திமதி வெளியே செல்ல ஓர் அடி எடுத்து வைத்தாள். தந்திரமாக வெந்த உள்ளத்தின் கடிதத்தைச் செல்லம் காந்திமதியின் கையிலிருந்து பற்றி இழுத்தாள். காந்திமதி கேள்விக் குறியுடன் செல்லத்தை நோக்கினாள். செல்லம் கடிதத்தை வாங்கித் தன் மடியில் ஒளித்துக் கொண்டாள். காந்திமதி கடிதம் இல்லாமல் தன் தூதை நிறைவேற்ற வேண்டிய அவசியத்தை உணர்ந்து சிந்தனை செய்துகொண்டே தோட்டத்துக்குப் போனாள். காவல்காரனை அழைத்து, "அந்த ஐயர் இப்போது இங்கே தென்பட்டால் ஆபத்து நேரிடும். உடனே ஓடிப்போகச் சொல்" என்று எச்சரித்துவிட்டுத் திரும்பினாள். முத்துஸ்வாமி நழுவிவிட்டதைக் கண்டு இருவரும் மகிழ்ந்தார்கள்.

*　　　*　　　*

ராமநாதன் வீட்டுக்கு வரும்போது எல்லோரும் போஜனத்துக்கு உட்கார்ந்துவிட்டார்கள். மதுரப்பாட்டி தான் ஒட்டுக்கேட்டு அறிந்துகொண்டிருந்த செக் விருத்தாந்தத்தைச் சிவராமனிடம் முன்னதாகவே பரிமாறியிருந்தாள்.

சிவராமனின் குற்றச்சாட்டுகளை வேங்கடசுப்பையர் லேசாகக் காதில் வாங்கிக்கொண்டார். சங்கரி அம்மாள் சமாதானம் சொன்னதுபோல் அவரும் சிவராமனுக்குச் சமாதானம் சொன்னார்.

"நீங்கள் சொல்லுகிறபடி, அத்திம்பேரே, கடிதம் எழுதினவன் பள்ளிக்கூடத்து மாணவனாக இருந்தால் உபே

கூறித்துவிடலாம். வீட்டில் இருப்பவனே எழுதியிருந்தால் அதற்கு இடம் கொடுக்காத வண்ணம் மண்டையில் தட்டி விட வேண்டாமா?"

"சிவராமா! சீதாராமனைப் பற்றியவரையில் இது வீண் சந்தேகம். ராமநாதன் எழுதியிருந்தால் உனக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் அல்லவா?"

"ராமநாதனுக்கு நண்பன்போல் இருந்து துரோகம் செய்யவே வந்திருக்கும் சீதாராமனை நீங்கள் அணைத்துப் பேசுவது எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. செல்லத்தை ராமநாதனுக்குக் கொடுப்பதென்று நிச்சயம் செய்யப் பட்டிருப்பது அவனுக்குத் தெரியாதா? அவளை இவன் ஸ்மரிக்கலாமா? என்ன ஆபாசமான காதல் கடிதம்? 'மித்ரத்துரோகி க்ருதக்னச்ச' என்று சொல்லப்படும் கோஷ்டியில் சேர்ந்தவனல்லவா அவன்? அவனை வீட்டில் வைத்துக்கொள்ளலாமா? இது இந்தக் காதல் கடிதத்துடன் நிற்கப்போகிறதா! பணம் காசுக்கு அவனை நம்பியிருக்கிறீர்கள்! என்றைக்கு அவன் போர்ஜரி பண்ணிப் பணத்தைக் கொள்ளையிட்டு உங்கள் தலையில் கையை வைக்கப் போகிறானோ! அப்படி நடக்கிற வரையில் நீங்களும் என் வார்த்தையை மதிக்கமாட்டீர் கள். அவன் அப்பன் ஒரு பெரிய ஆஷாடபூதி. பிள்ளை இங்கே இருப்பதில் தனக்கு ராஜ்யப்பிராப்தி ஏற்பட்டால் போல் தலைகால் தெரியாமல் குதித்துக்கொண்டிருக் கிறான். அல்பனுக்குத் திடீரென்று பெருமையைக் கொடுத்துவிட்டால், அவன் எதற்குத்தான் துணிவான் என்ற எல்லை இல்லை. இதையெல்லாம் சொல்லப்போனால், சிவராமன் பொல்லாதவன். அந்தப் பயல் வீட்டில் இருந் தால், இனிமேல் செல்லத்தை இங்கே விட்டுவைப் பதற்கு எனக்குத் தைரியம் இல்லை. நான் அக்காவிடத்தில், ஊரிலிருந்து வந்தவுடன் இதைத்தான் சொன்னேன். நான் சந்தேகித்ததற்கு ஏற்றாப்போல் காதல் கடிதம் கையில் கிடைத்துவிட்டது. காந்திமதி சொல்வதுபோல் ஆளைக்

கண்டுபிடிக்கத் தஸ்தாவேஜி அகப்பட்டுக்கொண்டது. பண விஷயத்திலும் அவன் மோசடி செய்து ராமநாதன் தலையில் வைக்காமல் போனால் என் பெயர் சிவராமன் இல்லை. ராமநாதன் வரட்டும். அவனிடமும் அவன் நண்பன் யோக்கியதையைப்பற்றிக் கேட்போம்.''

ராமநாதன் இதைக் கேட்டுக்கொண்டே உள்ளே நுழைந்தான். அவன் மனம் விகாரமடைந்திருந்தது. பயமும் தவிப்பும் மிதமிஞ்சி எழுந்தன.

சிவராமன் பேசுமுன் வேங்கடசுப்பையர், "ஏன் இவ்வளவு நாழி?'' என்று அவனைக் கேட்டார்.

"ஸ்ரீதாராமன் எங்கே?'' என்றார் சிவராமன்.

"காலேஜில் ஒரு மீட்டிங். பீச்சு வழியாக நடந்து வந்தேன்'' என்று தகப்பனருக்குப் பதில் சொன்னான் ராமநாதன்.

"ஸ்ரீதாராமனும் வந்துவிட்டானா?'' என்று கேட்டார் வேங்கடசுப்பையர்.

"அவன் வரவில்லை.''

"ஏன்?''

"அவன் ரெயிலுக்குப் போனான்.''

"என்ன விசேஷம்?''

"ஊரிலிருந்து தந்தி வந்ததாம்.''

"என்ன தந்தி?''

"அவன் அப்பாவிடமிருந்து வந்ததாகச் சொன்னான்.''

"நீ தந்தியைப் பார்த்தாயா?''

"இல்லை, அவன் சொன்னதுதான்.''

"ஏன்? வீட்டுக்கு வந்துவிட்டு ஊருக்குப் போகக் கூடாதோ?''

"சாயங்காலந்தான் தந்தி வந்ததுபோல் இருக்கு.''

"பள்ளிக்கூடத்திற்கா தந்தி வந்தது?"

"அப்படித்தான் தெரிகிறது."

"அவன் அப்பாவுக்கு என்ன உடம்பு?"

"தெரியாது."

சிவராமன் இடைவெளி கிடைத்ததும் பேசலானார்:

"அவன் அப்பாவை இரண்டு நாள் முன் நான் பார்த்த போது கொட்டாப்புளியாட்டமா இருந்தார். அந்தத் தெருவில் அவர் போடுகிற சத்தம் எங்கள் தெருவில் வந்து கேட்டது. அதற்குள் என்ன கேடு வந்துவிட்டது? கடைசியில் நான் சொன்னதுதான் ருசுவாகப் போகிறது. இந்தக் கடிதம் என் கவனத்துக்குச் செல்லத்தினால் கொண்டுவரப்படும் என்று அவன் பயந்துகொண் டிருக்கலாம். மற்றொரு விஷயம் நீங்கள் சொல்லாத போனாலும் எனக்குக் காதில் படாமல் இல்லை. ஆள் ஆதாயத்தோடன் தான் ஓடியிருக்கிறான்."

பரிமாறிக்கொண் டிருந்த மதுரப்பாட்டி சிவராமனை அரைக்கால் கண்ணால் பார்த்தாள். சங்கரியின் கண்கள் ஆச்சரியத்தினால் விரிந்து மதுரத்தைக் கூர்மையாக நோக்கின. வேங்கடசுப்பையர் ஒன்றும் பேசவில்லை.

சாப்பாட்டுக்குப் பிறகு வேங்கடசுப்பையர் ராமநாதனைக் கூப்பிட்டுத் தன் டிராயரிலிருந்து செக் புஸ்தகத்தைத் தேடி எடுத்து வரும்படி சொன்னார்.

கோமதி அகமுடையான் காந்திமதியின் கல்யாணம் 'செட்டில்' செய்யும் விஷயமாக ரூபாய் ஆயிரம் அட்வான்ஸு அனுப்பும்படி எழுதியிருப்பதாயும், அதற்குச் செக் எழுதிப் போஸ்டில் அனுப்புவதற்காக ராமநாதனிடம் கொடுத்துவிடுவதாயும் சொன்னார்.

ராமநாதன் செக் புஸ்தகத்தைச் சிறிது நேரத்தில் எடுத்து வந்தான்.

வேங்கடசுப்பையர், "நான் தேடினபோது எனக்கு இது அகப்படவில்லையே!" என்று சொல்லிக்கொண்டு, கிழிக்கப்பட்டிருக்கும் செக்கை ராமநாதனிடம் காண்பித்து, "இது யாரால் கிழிக்கப்பட்டது?" என்று கேட்டார்.

ராமநாதன் தானும் ஆச்சரியப் படுபவன்போல் அபிநயித்து, "எனக்கு ஒன்றும் தெரியாதே!" என்று பதில் சொன்னான்.

சிவராமனின் முகம் மலர்ந்தது. வீரம் விசும்பியது. இடி முழக்கம் போன்ற தொனியில் பேசலானார்.

"இவனைக் கேட்டு என்ன பிரயோசனம்? போர்ஜரி செய்கிறவன் மாங்கை மோசம் பண்ணிப் பணம் பெற்றுக் கொண்டவன், இவனிடத்திலா உண்மையைச் சொல்லி யிருப்பான்? வீட்டுக்குக்கூட வர முடியாமல் காலேஜில் இருந்தபடி ரெயிலுக்குப் போன அவசரம் என்ன என்று இப்போது புரிகிறதல்லவா? ராமநாதா, நீ சற்று முன்னால் வந்திருக்கக்கூடாதா! இப்போதும் என்ன கெட்டுப்போச்சு? இந்தத் தகவலைப் போலீஸில் தெரி வித்து, ஓர் அதிகாரியைக் கூட்டிக்கொண்டு உடனே ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போனால் கையும் களவுமாக ஆளைப் பிடித்துவிடலாம்."

"ராமநாதா, கூப்பிடு ஒரு டாக்ஸியை. நம்முடைய டிரைவர் இருக்கமாட்டான்."

போலீஸில் தெரிவிக்க அக்காவும் அத்திம்பேரும் மறுத்ததால் சிவராமன் தானே ஸ்டேஷனுக்குப் போய்த் துப்பறிவதாகக் கூறிவிட்டு டாக்ஸி ஒன்றை உடனே வரு வித்து அதில் ஏறிக்கொண்டார்.

"அப்படி போட் மெயில் அவனுக்குக் கிடைத்து அவன் போயிருந்தாலும் ஊருக்குப் போய் அவனை நாளைக்கே கொண்டுவந்து நிறுத்திவிடுகிறேன்" என்று உரக்கப் பிரதிக்ஞை செய்தார். டாக்ஸி நகர்ந்தது.

"சிவராமா! அவசரப்பட்டு ஒன்றும் செய்யாதே. நான் பொறுப்பு ஏற்றுக்கொள்ள மாட்டேன். பணம் போனால் போகிறது. சீதாராமன் குற்றவாளியல்ல. ஜாக்கிரதையாக நடந்துகொள்" என்று கடைசியாக வேங்கட சுப்பையர் எச்சரித்தார்.

சிவராமன் வெறுப்புச் சிரிப்புச் சிரித்தது அவர் காதில் பட்டிராது.

# 5

# அக்ஞாதவாஸமும் அபவாதமும்

மறுநாள் சியாமளாபுரத்தில் உஷக்காலத்தில் ஸ்நானத்துக்காக ரமணிசாஸ்திரி லாந்தல், தடிக்கம்பு, செம்பு, பஞ்சபாத்திரம், உத்தரணி, விபூதி சம்புடம், ருத்திராக்ஷம், மடிசஞ்சி இவைகளுடன் வெளிக்கிளம்பிக் கொஞ்ச தூரம் போய்க்கொண்டிருந்தபோது அந்தத் தெருவுக்குச் சாலையிலிருந்து ஒரு வண்டி வருவதைக் கண்டு, 'ரெயிலிலிருந்து யாரோ வருகிறார்கள் போல் இருக்கிறது. யார் வீட்டுக்கோ?' என்று யோசனை செய்துகொண்டு சிறிது நடப்பதும் திரும்பிப் பார்ப்பதுமாக இருந்தார். அப்படி அவர் கவனித்தபோது வண்டி அவர் வீட்டு வாசலைத் தாண்டிக் கிழக்கே சென்றுவிட்டதாகத் தோன்றியதால், 'யாரோ, பக்கத்து வீட்டுக்குப்போல் இருக்கிறது. நம் வீட்டுக்கு யார் வரப்போகிறார்கள்?' என்று நினைத்துக்கொண்டு அவர் தம் வழியே சென்றார்.

சீதாராமன் இருட்டில் சரியாகக் கவனிக்காமல் சற்றுக் கிழக்கே போய் இறங்கிக்கொண்டு வண்டியை அனுப்பிவிட்டு மாமாவாத்துத் திண்ணையில் வந்து உட்கார்ந்தான். 'கதவைத் தட்டவா? தட்டினால் யார் வந்து திறப்பார்களோ? மாமாதான் வருவார்; மாமாவிடம் என்ன சொல்லுகிறது? மாமா ஸ்நானத்துக்குப் புறப்பட்டுப் போயிருந்தால் அம்மாமிதான் கதவைத் திறப்பாள். அம்மாமியின் கேள்விகளுக்கு என்ன பதில் சொல்லுகிறது? ஒருவேளை ஸரளா வருவாளோ? அவளைக் காப்பாற்ற என்னை வரும்படி எழுதியிருந்தாள். என்னைக் காப்பாற்றிக்கொள்ள நான் ஓடி வந்திருப்பதை அவளிடம் எப்படிச் சொல்லுவேன்?......யாராவது வரு

கிறார்கள். அதைப்பற்றி என்ன சிந்தனை? மேலே விசாரணை நடக்குமே! என் விருத்தாந்தங்களை உள்ளபடி நான் சொன்னால் என் பேரில் குற்றம் ஒன்றுமில்லை என்பதை நம்புவார்களா? அல்லது நான் ஏதோ குற்றம் செய்துவிட்டுப் போட்டது போட்டபடியே இடத்தைவிட்டுத் திருட்டுத்தனமாக ஓடி வந்துவிட்டதாகவும், அதை மறைக்க ஏதோ கட்டுக்கதைகள் சொல்வதாகவும் நினைத்துவிடுவார்களா? அப்பாவிடம் இந்தக் கோலத்தில் போனால் கண்டிப்பாக என்னைச் சந்தேகிப்பார். நான் திடீரென்று பரீட்சைக்குப் படிக்கவேண்டிய நெருக்கடியான சமயத்தில் மேல் துணிகூட இல்லாமல் ஓடிவரவேண்டிய காரணம் என்ன? விஷயத்தை ஒளிக்காமல் சொன்னாலும் நான் செய்த குற்றத்தை ராமநாதன் பேரில் சாட்டிவிட யத்தனிப்பதாகத்தான் அப்பா நினைப்பார். ஸ்ரீமான் வேங்கடசுப்பையருக்குத் துரோகம் செய்துவிட்ட பிள்ளை எனக்கு எதற்கு என்று என்னை அப்பா அடித்து விரட்டுவார். அம்மாவிடமும் ஆதரவு கிடைக்காது. பணக்காரர்களிடம் விரோதித்துக்கொண்ட எனக்குத் தாய் தகப்பன்கூடப் புகலிடமாக மறுப்பார்கள் என்பது நிச்சயம். அப்பா கடிதத்திலிருந்து இதை நான் தெரிந்துகொள்ளாவிட்டால் என் அறிவு சூன்யம் என்று பிரமாணம் செய்துவிடலாம். அங்கேதான் என்ன நடக்கிறதோ? என்னை வாரண்டு தொடர்ந்து வருகிறதோ என்னவோ! எதுதான் நடக்காது? நன்மை தீமையை யார் கண்டார்கள்? வேங்கடசுப்பையர் செக் திருட்டைக் கூடிய சீக்கிரம் கண்டுபிடிக்காமல் இருக்கமாட்டார். பாங்குக்காரர்கள் என்னைத்தான் சுட்டிக் காண்பிப்பார்கள். அவர்கள் பேரில் என்ன தப்பு? ரூபாய் ஆயிரம்! எவ்வளவு உதாரியான பிரபுவானாலும் விஷயத்தை அதோடு விட்டுவிட மனதாகுமா! சுற்றியிருப்பவர்கள்தான் சும்மா இருப்பார்களா! போலீஸில் புகார் கொடுப்பார்கள். பிரதிவாதி இல்லாமலே வழக்குத் தீர்ப்பாகும்போது ராமநாதன், 'மௌனம் ஸர்வார்த்த சாதகம்' என்று இருந்துவிடுவானே ஒழிய

என்னைக் காப்பாற்றுவதற்காகத் தன் சரித்திரத்தைப் பகிரங்கப்படுத்தமாட்டான். பணத்தில் பிறந்தவர்கள் பிறர் வருத்தம் அறியமாட்டார்கள். அவனைக் காப்பாற்ற நான் ஓடிவிட்டேன். என்னைக் காப்பாற்ற அவன் என்ன செய்யப்போகிறான்? ஓடிவிட்டதனாலேயே குற்றம் என் பேரில் தங்கிக்கொள்ள வசதியாகிவிட்டது. சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக்கொள்ள ராமநாதன் பின்வாங்கமாட்டான். சிரோமணியும் என்னைக் குற்றவாளியாக்குவதற்குத் தயங்கமாட்டார். ஒரு நொடிப்பொழுதில் எனக்கு வந்த கொடுமையை யோசித்தால் தெய்வந்தான் மனுஷனை ஆட்டிவைக்கிறது என்பது நிசுவாகிறது. ஆனால் இந்த அபவாதம் கொஞ்ச நாளில் தீர்ந்துவிடும். போலீஸ் கேஸ் வந்தால் நான் அதற்கு மேலும் ராமநாதனின் தாட்சிண்யத்தை எதிர்பார்க்க வேண்டியதில்லை. மேலும் ராமநாதனின் ரகசியப்பற்றுக்கள் அதிக நாள் ரகசியமாக இருக்க முடியாது. அவன் இடைவிடாது உஷாவை நாடுவது நிச்சயம். மறுபடி மாட்டிக்கொள்ளலாம். அவன் சரித்திரம் ஒவ்வொன்றாக வெளிவரும்போது செக் வர்த்தமானமும் வெட்ட வெளிச்சமாகிவிடும். என்னைத் தூஷித்தவர்கள் தலை குனிவார்கள். என்னைச் சந்தேகித்தவர்கள் பச்சாத்தாபப்படுவார்கள். ஸ்ரீமான் ஐயா அவர்களின் அன்பு என்றும் என் விஷயத்தில் குன்றாது. அவர் மட்டும் என் பேரில் போலீஸ் நடவடிக்கை எடுக்கச் சம்மதிக்கமாட்டார் என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. இருந்தாலும் நான் கொஞ்சகாலம் அக்ஞாத வாசம் செய்துதான் ஆகவேண்டும்; இந்தச் சக்கரம் சுழன்று நிலைமை நேராகும் வரை. ஆனால் தற்சமயம் அபவாதமும் மானக்கேடும், பயமும் கிலேசமும், விரோதமும் மனஸ்தாபமும் ஏற்படுவதை யாராலும் தடுக்க முடியாது. நாளைக்கே மணி மாமாவின் உதவியால் ரூபாய் ஆயிரம், ஐயர் அவர்கள் பாங்குக் கணக்குக்கு ஈடு செய்வதாக வைத்துக்கொண்டாலும், குற்றம் நீங்காது. குற்றத்துக்குத் தொடர்புள்ள தண்டனைகளைத் தவிர்க்க ரூபாய்

செலுத்தப்பட்டதாய்த்தான் நினைப்பார்கள். போர்ஜரி செக் மூலம் மோசடியாகப் பணம் பெற்றுக்கொண்டதை ஒப்புக்கொள்வதற்கு இதுவே ஓர் அத்தாட்சியாகக் கருதப்படலாம். கடைசியில் ராமநாதனின் சிநேகம் இவ்விதம் முடிந்தது. ஆனால் ராமநாதன் அயோக்கியன் அல்ல, என்னிடம் நட்புகொண்டவன்தான். அருமை, அற்ப புத்தி, விகல்பமான குறுகிய யோசனைகள், கோள் சொல்வது, குற்றம் சாட்டுதல், மோதாவித்தன்மை, வீண் டம்பம், தற்புகழ்ச்சி, அகம்பாவம், விறைப்பு, பணச் செருக்கு, சுயநலத்தினால் இரக்கமின்மை, அபகரித்தல் முதலிய அக்கிரமச் செயல்களில் துணிவு, பணத்தைக் குறி வைத்து வெட்கம் கெட்டுப் போதல், நன்றி மறத்தல், கோட்டான் சந்திர வெளிச்சத்தை வெறுப்பதுபோல் தன் திருஷ்டிக்கு ஏற்றதல்லவென்று நற்குணங்களைப் புறக் கணித்து நிந்தித்தல் முதலிய துர்க்குணங்களில் ஒன் றேனும் அவனிடம் இருப்பதாகக் கூறமுடியாது. காலத் தின் போக்கு, சந்தர்ப்பங்களின் நெருக்கடி, மன உறுதியின்மை, சுற்றியிருப்பவர்களின் கலப்பு, சகவா சத்தினால் ஏற்படும் மதிமயக்கம், சுயால அநுமதிப்பு எல்லாம் சேர்ந்து நல்லவனைக்கூடப் பொல்லாத வழியில் இழுத்து மாட்டிவிடுகின்றன. நடப்பது நடந்தே தீரும். இந்த நிலைமையில் எனக்கு மாமாவைத் தவிர வேறு புகலி டம் இருப்பதாகத் தோன்றவில்லை. பேராபத்து வந்த போது மனம் எவனைத் துணையாக நம்பி நாடுகிறதோ, அவனே அந்தரங்க பந்து, ஆப்த மித்திரன், கருணை செய் யும் குருநாதன், சரணமளிக்கும் குலதெய்வம். மணி மாமாதான் எனக்கு அத்தகைய பந்து, மித்திரன், குரு நாதன், குலதெய்வம். ஆகையால்தான் தாய் தகப்பனார் களிடங்கூடப் போகாமல் இங்கே வந்தேன். நான் உண்மை யில் குற்றம் செய்திருந்தாலே என் மாமா என்னை மன்னித்து ஆதரிப்பார். ஆனால் நான் அவருக்கு எழுதிய பதில் இன்றுதான் கிடைக்கும். எப்படி இருந் தாலும் நேரில் கண்டால் அவர் பிரசன்னமாகிவிடு

வார் என்ற எனக்குத் தைரியந்தான்.' உள்பக்கத்தி லிருந்து வாசல் கதவை யாரோ திறப்பதற்குப் பிரயத் தனப்படுவது தெரிந்தது. கதவை இழுக்கப் பலம் போதாத ஒருவர் அதிகச் சிரமப்படுவதுபோல் தோன் றிற்று. பொழுது விடியப்போகிறதல்லவா?.........சீதா ராமன் திண்ணை மூலையில் போய்ப் படுத்துக்கொண்டு அரைவாசிக் கண்களை மூடிக்கொண்டான்.

கதவைத் திறந்துகொண்டு வெளியே வந்தாள் ஸரஸ் வதி. கையிலிருந்த கல் விளக்கை அவள் பிறையில் வைத் தாள். மறுபடி உள்ளே போகத் திரும்பினாள். திண்ணை ஓரத்தில் யாரோ படுத்திருப்பதைக் கவனித்தாள். "யார் அது?" என்று சற்றுக் கண்டிப்புடன் கேட்டாள். சீதாராமன் எழுந்து உட்கார்ந்தான். 'மாமா இருக் கிறாரா?' என்று பதிலுக்குக் கேட்டான்.

"யார்?" என்ற வார்த்தை சந்தேகத்தில் தோய்ந்து உள் குரலில் வெளிவரும் முன் ஸரஸ்வதி சந்தேகம் தெளிந்து வாசற்படியில் கால் வைத்தாள்.

"ஸரஸு" என்றான் சீதாராமன்.

ஸரஸு வாசற்படி மறைவில் நின்றுகொண்டாள். "நான் ரெயிலிலிருந்து வருகிறேன். போட் மெயிலில்தான் வந்தேன். திண்ணையிலேயே சற்றுப் படுத்தேன். மாமா விடம் மறுபடி நைஷதம் படிப்பதற்காக வந்திருக்கிறேன். முன் படித்ததெல்லாம் மறந்து போய்விட்டது" என்றான் சீதாராமன், முகவிலாஸத்துடன். ஸரஸு தலைநிமிராமல், "அம்மாவைக் கூப்பிடுகிறேன்" என்று காதில் பட்டதும் படாததுமாகச் சொல்லிக்கொண்டு உள்ளே சென்று விட்டாள்.

சீதாராமன் எழுந்திருந்து உள்ளே போய் முன்ன டித் தாழ்வாரத்தில் நின்றான். நாகம்மாள் தயிர் கடைந்துகொண் டிருந்தாள். ஸரஸு ஏதோ சொன்ன தைக் கேட்டு மத்தை நிறுத்திவிட்டுக் கூடத்துக்கு ஓடி

வந்தாள். சீதாராமன் தாழ்வாரத்தில் நிற்பதைப் பார்த்ததும் அவளுக்கு இருந்த ஆச்சரியத்துக்கு அளவில்லை. மருமான் சீதாராமனை நாகு அன்புடன் வரவேற்றாள். பொதுவாக அவள் அவன் க்ஷேமத்தை விசாரித்துவிட்டு அவனைப் பல் தேய்க்க அனுப்பிவிட்டுப் பரபரப்புடன் காலைக் காரியங்களில் ஈடுபட்டாள்.

சிறிது நேரத்தில் மாமா மணி ஸ்நானம், ஜபங்களை முடித்துக்கொண்டு பிரம்ம தேஜஸ் ஜொலிக்கும் திவ்யத் தோற்றத்துடன் கையில் தீர்த்த பாத்திரமும் தலையில் மடிசஞ்சியும் தாங்கியவராகத் திரும்பி வந்தார்.

சீதாராமனைப் பார்த்து அவர் பரமானந்தம் அடைந்தார். "ஸ்நானத்துக்குப் புறப்படும்போது ஒரு வண்டி வரக் கண்டேன். அது நேராகக் கிழக்கேயல்லவா போச்சு! நீயா அதில் வந்தவன்?"

"இருட்டில் வீடு அடையாளம் தெரியவில்லை, மாமா!"

"ஆமாம், நீ ஊருக்கு வந்து எவ்வளவு நாள் ஆகிவிட்டது! பட்டணத்து மனுஷ்யனாகிவிட்டாய்!"

"இனிமேல், மாமா, உள்ளூர் மனுஷ்யன்தான்" என்றான் சீதாராமன்.

காபி சாப்பிட்ட பிறகு மாமா சீதாராமனிடம் தனிமையில் அவன் வந்த விருத்தாந்தத்தைப்பற்றி விசாரிக்கலானார்.

சீதாராமன் மாமாவிடம் ஆதியோடந்தமாகப் பட்டணத்தில் நடந்த விருத்தாந்தங்களைச் சொன்னான். மேல் விளையக்கூடிய விபரீதங்களையும், தன் மனத்துக்கு ஏற்படும் பயங்களையும் எடுத்துக்காட்டினான். தான் திடீரென்று மேல் துண்டுகூட எடுத்துக்கொள்ளாமல் ஓடிவர நேர்ந்த காரணத்தையும் விளக்கினான். சில நாட்கள் தான் அக்ஞாதவாசமாக இருக்கவேண்டிய நிர்ப்பந்தத்

தையும் வற்புறுத்தினன். தன் பெற்றோர்களிடம், தான் செல்ல விரும்பாததையும், அவர்கள் அறியாமலே ஒளிந்து கொண்டு காரியங்களின் போக்கைக் கவனிக்கவேண்டிய அவசியத்தையும் வாதித்தான். பணம் செலுத்தப்பட வேண்டியது முதல காரியம் என்பதையும் பிரஸ்தாபித் தான்.

மணி மாமா அநுதாபத்துடனும் வருத்தத்துட னும் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டார். சீதாராமன் செய்ததையும், செய்ய உத்தேசித்ததையும் ஆமோ தித்தார். அவன் திட்டப்படி, தாம் உதவப் பூராப் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார். பணக்காரர்களின் சக வாசம் நல்லதாக முடியாது என்று பல கோட்பாடுகளு டன் சாதித்தார்.

சீதாராமனை வீட்டிலேயே ஸ்நானம் செய்யச் சொல்லிவிட்டு வெளியில் சென்று தனக்குக் கொடுக்கல் வாங்கல் உடைய ஒரு வியாபாரியிடம் முகதலை யாக ரூபாய் ஆயிரத்தை வாங்கிக்கொண்டு பத்து மணிக் கெல்லாம் பாங்குக்குச் சென்று அந்தத் தொகைக்கு ஒரு 'டிராப்டு' வாங்கி ரிஜிஸ்டர் போஸ்டில் மெட்ரா ஸில் ஸ்ரீ வேங்கடசுப்பையரின் பாங்க் அக்கவுண்டுக்கு அது 'கிரெடிட்' ஆகும்படி அனுப்பிவிட்டுப் பன்னி ரண்டு மணிக்கு வீட்டுக்கு வந்தார். உடனே போஜ னம் செய்துகொண்டு சீதாராமனுடன் வாடகை வண்டி யில் ரெயில்வே ஸ்டேஷனுக்குச் சென்று அங்கே 'ஒன்னே முக்காலி'ல் சீதாராமனைத் திருச்சிக்குத் தம் மைத்து னன் போலீஸ் ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் கோபாலனிடம் போயிருக்கும்படி அனுப்பிவிட்டு வீடு திரும்பினர்.

"ஏன்டா? எங்கே வந்தான்? எங்கே போகிறான்? ஏன் ஆத்துக்குப் போகவில்லை? என்ன, ஒன்றும் புரியவில்லையே? பட்டணத்திலிருந்து வந்தவனுக்கு மூட்டை முடிச்சு ஒன்றும் இல்லையே; அப்பா அம்மா வைக்கூடப் பார்க்கவேண்டாமென்று எங்கேயோ அவ

சாமாக ஏற்றி அனுப்பிவிட்டு வருகிறீர்களே! என்ன சமாசாரம்? எனக்குச் சொல்லப்படாதா? யோசித்துப் பார்த்தால் ஏதோ சந்தேகம் தட்டுகிறதே! தப்பு ஏதாவது நடந்திருக்குமோ?'' என்றெல்லாம் நாகு மணியை விசாரிக்கலானாள்.

மணி பதில் தயாராக வைத்திருந்தார். "உன் தமையன் கோபாலன் இவனுக்கு ஏதோ போலீஸ் உத்தியோகம் செய்துகொடுப்பதாயும், அதற்கு உடனே புறப்பட்டு வரும்படியும் எழுதியிருந்தானும். அத்திம்பேருக்கு இவன் போலீஸ் உத்தியோகத்துக்குப் போகச் சம்மதம் இராது. அதற்காகப் போகும் வழியில் என்னை மட்டும் பார்த்துவிட்டுப் போகலாம் என்று இறங்கியிருக்கிறான். மூட்டை முடிச்சுகளை ஸ்டேஷனிலேயே வைத்திருந்தான். உத்தியோகம் ஆகிவிட்டால் பையன் பணம் சம்பாதிக்கும்போது அத்திம்பேருக்குச் சமாதானம் ஆகிவிடும். இதற்காகத்தான் ரகசியம். வேறு ஒன்றும் இல்லை.''

நாகுவுக்கு இந்தப் பதில் திருப்தி அளித்தது. "ஆனால் உத்தியோகமாகிவிட்டால், நம் ஸரஸுவைக் கொடுத்துக் கல்யாணத்தை முடித்துவிடலாம்போல் இருக்கிறதே. கோபாலன் வார்த்தையை இவன் தட்ட முடியாதே?''

"எனக்கும் அந்த யோசனைதான்'' என்றார் மணி. நாகுவுக்குப் பூரண சந்தோஷம்.

"நீங்கள் அன்றைக்குப் பொய்க்காக மாப்பிள்ளை தானகவே என்னை எதிர்கொண்டு வந்துவிட்டான் என்று சொன்னீர்களே! அது நிஜமாகப் பலித்துவிட்டதே!''

"என் வாயால் பொய்யே வராது. வந்தாலும் அது நிஜமாகிவிடும்.''

* * *

சிவராமன் அன்று பின் ரயிலில் சியாமளாம்பாபுரம் வந்தார். சீதாராமன் விஷயத்தில் தம் அத்திம்

பேர் கொண்டிருக்கும் குருட்டு நம்பிக்கையைத் தகர்த்து விட வேண்டுமென்ற சங்கல்பம் அவருக்குத் திடமாக இருந்ததால், வந்ததும் வராததுமாகத் துப்பறியும் வேலையில் இறங்கினார். சீதாராமன் தன் பெற்றோரிடமாவது, மாமா விடமாவது வந்து சரணமடைந்திருக்கிறானா என்று தெரிந்துகொள்வதற்கு உபாயத்தைத் தேடினார். தன் வண்டிக்காரனை அனுப்பித் துப்பறியச் சொன்னார். தன் கண்ணில் பட்டவர்களை ஜாடையாக விசாரித்துப் பார்த்தார். ஒரு தகவலும் அவருக்குக் கிடைக்கவில்லை. தனக்குப் போலீஸ் உதவி இருந்தால் வீட்டைப் போய் முற்றுகை போடலாமென்று நினைத்தார். அதற்கு அத்திம்பேர் இடம் கொடுக்காததுபற்றி வருந்தினார். 'இருந்தாலும் அந்தப் பயல் எங்கே போய்விட முடியும்? தகப்பனிடந்தான் வந்திருப்பான். மாமா குடும்பத்துக்கும் இவர்களுக்கும் அதிக ஒட்டுதல் இல்லாததாலும் செல்லத்தையோ காந்திமதியையோ காதலிக்கும் இவனுக்குத் தன் மாமா பெண்ணிடம் விருப்பம் இல்லாததாலும் மாமா வீட்டுக்குப் போயிருக்கமாட்டான். இவனுக்கு வேறு ஒளிய இடம் ஏது? ஆனால் தகப்பனாரிடம் தன் குற்றத்தைச் சொல்லாமல், ஏதோ சாதாரணமாக ஊருக்கு வந்ததாகச் சொல்லிக்கொண் டிருக்கலாம். எல்லாவற்றுக்கும் சேஷு சாஸ்திரிகளைக் கண்டால் ரகசியத்தை வெளிப்படுத்திவிடலாம். அப்படி அந்தப் பயல் இங்கே வராவிட்டாலும் வேறு எங்கேயாவது போய் ஒளிந்துகொண் டிருந்தாலும் அவன் யோக்கியதையைத் தண்டோராப் போட்டு ஊர்சிரிக்க அடித்துவிடுகிறேன். வேங்கடசுப்பையர் ரூபாய் ஆயிரம் போனால் போகிறது என்று உதாசீனமாக இருந்தாலும், இந்தப் பயல் செல்லத்துக்குக் காதல் கடிதம் எழுதிய அயோக்கியத்தனத்துக்கு இவனைச் சந்தியில் இழுத்து நாலு பேர் காறித் துப்பும்படி செய்யாவிட்டால் எனக்கு மன நிம்மதி ஏற்படாது.'

சிவராமன் மன நிம்மதி இல்லாத நிலைமையில் வீட்டில் ஸ்நானத்துக்கு வெந்நீர் போடச் சொல்லியிருந்ததை

மறந்து காவேரிக்கு ஸ்நானத்துக்கு கிளம்பினான். காலை வேளையில் காவேரிக் கரை மடத்தில் ஊர் வைதிகர்கள் கூடியிருப்பார்கள் அல்லவா? சிலர் 9,10 மணி வரையில் ஜபதபங்கள் செய்துகொண்டு அவ்விடத்தில் தாமதிப்பார்கள். சிவராமனுக்கு யாரையாவது பார்த்து எதையாவது சொல்லவேண்டும்போல் துறு துறுவென்று இருந்தது.

மடத்தில் சீனு வாத்தியாரும், அவருடன் ஐயாப் பயலுந்தான் தென்பட்டார்கள். சீனு வாத்தியார் ஜப தபங்களை முடித்துக்கொண்டு தர்ப்பாஸனத்தைச் சுருட்டி எடுத்துக்கொண்டு எழுந்திருந்துவிட்டார். அவருடன் ஐயாப் பயலும் புறப்பட ஸன்னத்தமாக இருந்தான். சிவராமனைப் பார்த்ததும் சீனு வாத்தியார் க்ஷேமம் விசாரித்தார்.

"கொஞ்ச நாளாக ஊரில் இல்லை போல் இருக்கிறது?"

"ஆமாம். பட்டணம் போயிருந்தேன்."

"அப்படித்தான் கேள்விப்பட்டேன். குழந்தை கல்யாண விஷயமாகப் போயிருப்பதாகச் சொல்லிக்கொண்டார்கள். பட்டணத்தில் அக்கா, அத்திம்பேர் எல்லாரும் சௌக்கியந்தானே? கல்யாணப் பிரஸ்தாபம் ஏதாவது உண்டோ?"

"இல்லாமலா? மருமாளுக்கும் நடக்கணும்; என் பெண்ணுக்கும் நடக்கணும்."

"உங்கள் வரன்தான் கையிலேயே இருக்கு. மருமாளுக்குத்தான் வெளியே போகவேணும். அதுகூட ஏதோ பிரஸ்தாபம்; சேஷு சாஸ்திரிகள் பிள்ளைக்கே - அங்கேயே இருக்கானே இல்லையோ—ஸீதாராமன்......"

"என்ன பிரஸ்தாபம்; குடியைக் கெடுக்கிற பிரஸ்தாபம்!" என்றார் சிவராமன் கடுகடுப்புடன்.

"நானும் இது அசம்பாவிதம் என்றுதான் நினைத்தேன். இந்தப் பிராமணன் ஏதோ அரைகுறையாக உளறி

யிருக்கிறார். அதை வைத்துக்கொண்டு ஊர் புரளியாய்ப் போய்விட்டது.''

"ஊர்ப் புரளி இதோடா நிற்கப்போகிறது! இன்னும் எவ்வளவோ கூடிய சீக்கிரத்தில் வெளியாகப் போகிறது!"

"ஏன்? என்ன?" என்றார் சந்தேகத்துடனும் பரபரப்புடனும் சீனு வாத்தியார்.

"நான் என்னத்தைச் சொல்லுகிறது? அந்தப் பயல் இங்கே வந்துட்டானோ, இல்லையோ?"

"எந்தப் பயல்? சீதாராமனா? ஆனால் அவன் அங்கே இல்லையோ?"

"நேற்று நான் புறப்படும் முன் ஆள் கம்பி நீட்டி விட்டான். அவனைத் தேடிக்கொண்டிருக்கிறார்கள்."

"ஐயையோ! எங்கேயாவது ஆற்றிலே குளத்திலே ...என்ன அப்படி அவனுக்கு வந்துவிட்டது? பரீட்சை தேறவில்லையோ?"

"ஆறாவது, குளமாவது! அவ்வளவு மானியானால் இந்தக் காரியம் செய்யத் துணிவானா? பரீட்சையாவது படிப்பாவது! அவனுக்கு எதற்குப் படிப்பு? வெறும் கொட்டாப்புளித் தடியன். அவனை வீட்டில் கொண்டுவந்து விட்டுக்கொண்டது தப்பு. அவனுக்குச் சலுகையும் ரொம்பக் கொடுத்துவிட்டார்கள். உடம்பு சும்மா இருக்க முடியுமா? ஏதோ அசடு வழிந்திருக்கிறான். வெளியாகிவிட்டால் என்ன செய்வது என்று கிலி பிடித்துவிட்டது. வீட்டைவிட்டு ஓடத்தான் போகிறோம்; வெறுமனே போவானேன்; ஏதாவது போகிற போக்கில் ஆதாயத்துடன் போகலாமென்று யோசனை செய்து போர்ஜரி செக்கின் பேரில் ஆயிரம் ரூபாய் பணத்தை அமுக்கிக்கொண்டு நழுவிவிட்டான். இங்கேதான் வந்து ஒளிந்துகொண்டிருப்பான் என்று நினைத்தேன்."

"இங்கே வந்ததாகத் தெரியவில்லையே. சேஷு காலையிலே ஸ்நானத்துக்கு வந்திருந்தார். அப்படி ஏதா

வது இருந்தாலும் ஜாடை இங்கிதம் தெரியுமோ, இல்லையோ? சாதாரணமாகத்தான் பேசிக்கொண்டிருந்தார். பிள்ளையைப்பற்றி எப்போதும்போல் ஒரு அத்தியாயம் ஸ்தோத்திரம் செய்துகொண்டார். இங்கே வந்திருப்பதாகத் தெரியவில்லையே. சேஷுவுக்கு ஒளிக்கத் தெரியாது. வெகுளி; எதுவானாலும் பத்துப் பேரிடம் சொல்லிவிடுவாரே ஒழியக் கபடம் சொல்லிக்கொடுத்தாலும் வராதே அவருக்கு. ஒருவேளை மாம்பாவாத்தில் போய் ஒளிந்து கொண்டிருக்கிறானோ என்னவோ?"

"ஹும், ஹும். அங்கே போனால் அவனுக்குச் செருப்படிதான் விழும். மாமா இவனுக்குப் பெண்ணைக் கொடுக்க வேண்டுமென்று முதலில் கேட்டுக்கொண்டிருந்தார். அந்தப் பேச்செல்லாம் மறைந்துபோய்விட்டது. இவன் பெரிய இடத்தில் போய்த் தட்டுக்கெட்ட மாதிரி நடந்துகொண்டுவிட்டு மாமாவிடம் போனால், மணி ரோசக்காரன்; படியேற விடமாட்டான்."

"ஆமாம். பெரிய இடத்துச் சமாசாரம்; கேட்பதுகூட உசிதமில்லை. இந்தப் பயல் என்னமாதிரியாக அங்கே...?"

"குப்பைமேட்டில் இருக்கும் நாயைக் குளிப்பாட்டிச் சிம்மாஸனத்தில் உட்கார வைத்ததும் தலைகால் புரியவில்லை. ஆசையைப் பெரிதாக வளர்த்து, அதன் தூண்டுதலால் கொஞ்சம் அசடும் வழிந்துவிட்டான். அது தெரிந்துவிடு முன் அந்த இடத்தை விட்டு வெளியேற வேண்டியது அவசியமாகிவிட்டது. ஒரு க்ஷணமும் அதற்குமேல் அங்கிருந்தால் ஆபத்து நேர்ந்துவிடும் என்று நிச்சயப்படுத்திக் கொண்டான். அந்த மட்டில் பயல் புத்திசாலிதான்."

"சரிதான். நகுஷன் ஸ்வர்க்கத்துக்குப் போனதும் இந்திராணிமேல் ஆசைப்பட்ட கதைதான்போல் இருக்கிறது. நகுஷனைப்போல் அதப் பாதாளத்திலும் விழுந்து விட்டான். அப்படித்தானே வரும்!"

"போகிறதுதான் போகிறோம். வெறுங்கையோடு

போக வேண்டாம் என்று போர்ஜரியும் செய்து பணத்தைப் பெற்றுக்கொண்டு மறைந்துவிட்டான். பழியை ஐயர்வாள் பிள்ளையின்பேரில் சுமத்திவிட்டான். ஏனென்றால் இப் போது அவன்தானே ஜவாப் சொல்ல வேண்டி இருக்கிறது?"

"கிருதக்னன், கிருதக்னன். கிருதக்னே நாஸ்தி நிஷ்கிருதி:. அவனை ஸ்மரித்தாலும் பாவம். பஞ்சமகாபாதகத்துக்குப் பிராயச்சித்தம் உண்டு. கிருதக்னனுக்கு இல்லை. எங்கே கிடந்த பயலை எந்த ஸ்தானத்தில் கொண்டுபோய் வைத்தான் அந்த ராமநாதன்! அவனுக்கு இப்படியா பிரதிசெய்வது? ராமநாதன் தங்கமான பையன்; வெளுத்ததெல்லாம் பால்! இந்த வஞ்சகனை நம்பி மோசம் போனான். சிவ, சிவ, மகாதேவா! இந்தப் பாபியின் வார்த்தையைப் பேசியதற்காக இன்று அகமர்ஷண ஜபம் பண்ணவேணும். ஒரு நாள் மௌனம் இருக்கவேணும். க்ருச்ரமாவது அநுஷ்டிக்கவேணும். போதும் போதும். நீங்கள் ஸ்நானத்துக்கு வந்தீர்களாக்கும். சரி, நாழிகையாகிறது. நான் வரேன். இந்த விருத்தாந்தம் சேஷுவுக்குத் தெரியாது போல் இருக்கிறது. தானே தெரியட்டும். நாமொன்றும் சொல்ல வேண்டாம். என்ன அவமானம்! என்ன கஷ்டம்! பேராசை பெருநஷ்டம்! எப்போதும் நமக்குத் தகுந்தது தான் நாம் ஆசைப்படவேண்டும். வீரனுக்குத் தகுந்த வீக்கந்தானே? சேஷு, பாவம் வெகுளி. பையன் ஏதோ உயர்ந்த ஸ்திதிக்கு வந்துவிடப்போகிறான் என்று மனக்கோட்டை கட்டிவிட்டார். கடைசியில் இப்படியா ஆச்சு! சிவ, சிவ, ஹர ஹரா! நமக்கேன் இந்த வம்பு? ஐயாப் பயலே, கிருதக்னனின் வார்த்தையைப் பேசினால் நமக்கு அதில் பாதி பாபம் வந்து சேரும். வா வா, அகத்துக்குப் போவோம். ஐயர்வாள், ஸ்நானம் பண்ணுங்கோ; நாழிகை ரொம்ப ஆகிவிட்டது. ஐயாப்பயலே! ஒருவரிடமும் இந்த விருத்தாந்தங்களைப் பற்றி மூச்சுப் பரியாதே! இந்தக் காதில் விழுந்ததை அந்தக் காதால் விட்டுவிடு."

சீனு வாத்தியார் வீட்டுக்குச் சென்றதும் தம் சம்சாரத்தினிடம் மட்டும் மேற்படி விருத்தாந்தத்தைச் சொல்லாமல இருக்க முடியவில்லை. அவர் சம்சாரம் பக்கத்து வீட்டுக்குத் தான் வெகு நாளாகக் கொடுக்க வேண்டிய ஒரு முட்டை நெய்யை எடுத்துக்கொண்டு உடனே சென்று மேற்படி விருத்தாந்தத்தை அங்கே விதரணையாகப் பரிமாறி விட்டு வந்தாள். சத்தியான்னம் அந்த ஊரில் பல ஸ்திரீகள் காரியம் ஒழிந்து பொழுது போக்குக்காக ஒருவரை ஒருவர் சந்திக்க நேர்ந்தது விந்தையிலும் விந்தை. சீதாராமன் பெயர் சந்தியில் இழுக்கப்பட்டது. அவனிடம் அசூயை கொண்டிருந்தவர்களெல்லாம் ஜய பேரிகை கொட்டினார்கள். அவனுக்கும் காந்திமதிக்கும் ஏற்பட்ட காதல் கதைகள் விதம் விதமாக வெளிக்கிளம்பின. அவரவர்கள் பாடாந்தரங்களை எல்லோருமே சுருமுகமாக அறிந்தது போல் சாதித்தார்கள். சிலர் செல்லத்தையே கதாநாயகியாக்கினார்கள். மொத்தத்தில் சீதாராமன் தான் வசித்து வந்த வீட்டில் ஓர் உயர்குலப் பெண்ணைக் கையைப் பிடித்து இழுத்தான் என்ற அம்சம் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. ஒவ்வொரு நாரீமணியும் சிவராமனாவது, வேங்கடசுப்பையராவது தன்னை முதலிலேயே ஆலோசனை கேட்டிருந்தால் இந்த மானக்கேடு வராமல் இருக்க வழியை உபதேசித்திருக்கக்கூடும் என்ற தீர்மானத்தைத் தனித்தனியே நிறைவேற்றிக்கொண்டாள்.

* * *

ஐயாப்பயல் சீனு வாத்தியார் குறட்டை விட்டுத் தூங்கும் சமயம் பார்த்து நழுவி, சேஷு சாஸ்திரிகள் வீட்டின் பக்கமாகப் போய் வட்டமிட ஆரம்பித்தான். சேஷு சாஸ்திரிகள் ரேழி வாசற்படிக்கு நேராக உட்கார்ந்துகொண்டு எழுத்தாணியைத் தீட்டிக்கொண்டிருந்தார். அவர் முன் சிவாத பனை ஓலைக் குவியல்கள் கிடந்தன. வேம்பு அம்மாள் தாழ்வாரத்துத் தூணில் சாய்ந்து

கொண்டிருந்தாள். இருவரும் சுவாரசியமான சம்பாஷணையில் ஆழ்ந்திருந்தார்கள்.

"மணி பட்டணம் போய் நாலு நாள் ஆகிறதே; இன்னுமா திரும்பி வராமல் இருப்பான்? அவ்வளவு முடையாய் அன்றைக்கு வந்தவன், 'போனேன், இன்னது நடந்தது. இப்போது வந்தேன்!' என்று இங்கே வந்து நமக்கு ஒரு பதில் சொல்ல வேண்டாமோ?"

"அவன் காரியம் அனுகூலமாயிருக்கும்போல் இருந்தால்தானே 'இங்கே வரப்போகிறான்? நீங்கள்தான் அன்றைக்கே சொல்லிவிட்டீர்களே; நமக்கேன் பளு! பிள்ளையாண்டான் மூக்கை அறுத்து அனுப்பிவிடுவான் என்று! அப்புறம் உங்களைப் பார்க்க வருவானா?"

"அதானே கேட்கிறேன்?"

"நீங்கள் கடிதம் வேறே எழுதியிருந்தீர்கள். தெரிந்தது தெரியாததற்கு அதுவும் உதவட்டும் என்று."

"அதுதான் என்ன நடந்தது என்று தெரிந்து கொள்ளப் பரப்பு. பிள்ளையாண்டான் ஒரு கடிதாசு போடப் படாதோ? எல்லாம் அவனிடத்தில் நல்லதாய்த்தான் இருக்கிறது. அதிருஷ்டமும் ஏதோ பகவத் கிருபையினால் நல்லதாய்த்தான் இருக்கும்போல் இருக்கிறது. ஆனால் அப்பாவுக்குக் கடிதாசு எழுதுகிற விஷயத்தில் மட்டும் இவ்வளவு அசிரத்தை இருக்கப்படாது. அவன் அடிக்கடி வரவில்லை என்றுகூட எனக்கு வருத்தமில்லை. பெற்றவர்களுக்கு மாதத்துக்கு ஒரு கடிதம் போடவேண்டாமோ! இதைவிட வேறு எந்தக் காரியம் முக்கியம்? நாம் எவ்வளவு கவலைப்படுகிறோம்? அவன் விஷயமாக எவ்வளவு மனக்கோட்டை கட்டுகிறோம். சியாமளாம்பா கிருபையினால் அவன் கல்யாணத்தையும் அந்த வேங்கடசுப்பையரே பண்ணிவைத்து அவர் ஆபீஸிலேயே ஒரு வேலையும் பண்ணி வைத்துவிட்டாரேயானால் எனக்குச் சதாபிஷேகம் பண்ணிக்கொண்டதுபோல். அதற்கு மேல் எனக்கு ஆக

வேண்டியது ஒன்றுமில்லை.'' சேஷு சாஸ்திரிகளின் குரல் தடதடத்தது.

''எல்லாம் நடக்கும். கவலைப்படாதீர்கள். காந்திமதியையே அவனுக்குக் கொடுத்து அவர் விவாகம் செய்து வைக்கப்போகிறார் என்றுதான் நீங்கள் அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிறீர்களே. உங்கள் மனத்தில் பட்டு விட்டால் அது பிற்பாடு அப்படியேதானே நடக்கிறது வழக்கம்.''

சேஷு சாஸ்திரிகளின் கவனம் வெளியே சென்றது. ''யார் வாசலிலே எட்டி எட்டிப் பார்க்கிறது!''

வேம்பு பார்த்துவிட்டு, ''ஒருத்தரும் இல்லைபோல் இருக்கிறதே'' என்றாள்.

சேஷு சாஸ்திரிகள் தொனியை உயர்த்தினார். ''யாரடா அங்கே வாசலிலே! எலே! ஐயாப் பயலே! என்னடா அங்கே நின்றுகொண்டு எட்டிப் பார்க்கிறாய்? இங்கே வாடா உள்ளே.''

''இந்தக் குள்ளனா? கள்ளனை நம்பினாலும் நம்பலாம்; குள்ளனை நம்பக்கூடாது'' என்றாள் வேம்பு.

ஐயாப்பயல் திரு திரு என்று விழித்துக்கொண்டு ரேழிக்கு வந்தான்.

''எங்கேடா வந்தே, ஐயாப்பயலே? யாரைப் பார்க்கிறாய்? வாத்தியார் மாட்டைக் கொல்லையிலே மேயவிட்டிருக்கிறாயே?''

ஐயாப்பயல் ஊதல் தொனியை ஒத்த குரலில் பேசலானான்.

''இல்லை மாமா! மாட்டையும் கன்றையும் இப்போது நான் இந்தப் பக்கமே ஓட்டி வருவதில்லையே. நீங்கள்தான் அன்னிக்குக் கோபிச்சுக்கொண்டேளே.''

''பின்னே எங்கே வந்தாய், இந்த வெயில் வேளையில்? சீனு வாத்தியார் கடைக்குப் போகச் சொன்னாரோ, பொடி மட்டை வாங்க!''

"இல்லவே இல்லை மாமா; வாத்தியார் தூங்குகிறார்."

ஐயாப் பயலுக்கு வாத்தியார் குறட்டை விடுவதை நினைத்ததும் சிரிப்பு வந்தது.

"என்னடா எலே சிரிக்கிறே! ஏதோ திருட வந்தவன் லக்குப் பார்க்கிறதுபோலே ஒரு நாழியா வாசலிலேயே இருந்து எட்டி எட்டிப் பார்த்துக்கொண்டிருந்தாய்! கேட்டால் சிரிக்கிறாய். சொல்லுகிறாயா உதைக்கட்டுமா?"

"இல்லை மாமா! அடிக்காதீங்கோ! சீதாராமன் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். அவனைப் பார்க்கலா மென்று வந்தேன்."

"சீதாராமன் வந்திருக்கானா? யாருடா சொன்னது? ஏதாவது பைத்தியம் சைத்தியம் பிடித்திருக்கிறதா உனக்கு! என்னடா போக்கிரிப் பயலே! எதையோ மறைக்கிறதற்காக இப்படி நீ பாசாங்கு பண்ணுகிறாய்! நன்றாய்த் தெரிந்துகொண்டேன். நீ வர வரக் காலாடிப் பயலாய்ப் போய்விட்டாய். உள்ளத்தைச் சொல்கிறாயா! உன் உள்ளங்கால் நரம்பை வாங்கி விடட்டுமா?" சேஷு சாஸ்திரிகள் ஓலைக் கட்டில் கனமானதாக ஒரு கத்தையைக் கையில் எடுத்தார். வேம்பு அவரைத் தடுத்தாள். "விட்டுத் தள்ளுங்கோன்னா! இரண்டும் கெட்டான்."

"நீ இருடி சும்மா! இவனா ரெண்டுங்கெட்டான்? இந்தப் பயல் ஒட்டுக்கேட்க வந்திருக்கிறான். நாம் பேசிக்கொண்டிருந்ததை வீடு வீடாகப் போய்ச் சொல்லிக் கேலி பண்ணுவான். ஐயாப்பயல் லேசுப்பட்டவன் என்று நினைக்கிறாய்? விஷஜந்து! வாயில் ரெட்டை வரிசை பல்லைப் பார்! இவனால் நம் வீட்டு வார்த்தை எவ்வளவு வெளியே போயிருக்கிறது தெரியுமா! இந்தப் பயலை விடப்படாது. வாசல் கதவை இழுத்துத் தாழ்ப்பாள் போடு, சொல்லுகிறேன். எலே, நிஜத்தைச் சொல்லுகிறாயா, உன் முதுகுத் தோலை உரித்துவிடட்டுமா?"

"இல்லை மாமா! முன்னே சொன்னப்பிலே பண்ணி னாலும் பண்ணுங்கோ. முதுகுத்தோலை விட்டுவிடுங்கோ மாமா!"

ஐயாப்பயல் உடம்பை நெளித்த நெளிச்சலால் சேஷு சாஸ்திரிகளுக்குச் சிரிப்பு வந்துவிட்டது. "சீ கழுதை! ஓடிப்போடா! இனிமே இங்கே வந்து நொட்டுக் கேட்காதே. ஓடிப்போ."

"இதோ போகிறேன், மாமா. நான் சத்தியமாய்ச் சொல்லுகிறேன். நொட்டுக்கேட்க வரவில்லை. சீதாராமனைப் பார்க்கத்தான் வந்தேன். விட்டேன்! விட்டேன்! சிவராம மாமாதான் சொன்னார். சத்தியமாய்ச் சொல்லறேன். விட்டேன், விட்டேன்."

"சிவராம மாமாவா!" என்றார் சேஷு சாஸ்திரிகள். ஏதோ விஷயம் இருக்கும்போல் இருக்கிறதே என்ற சந்தேகத்துடன்.

"அவர் பட்டணத்திலிருந்து இன்னிக்குத்தான் வந் தாராம்?"

"சிவராமன் பட்டணம் போயிருந்தாரா?"

"எனக்கு அதெல்லாம் தெரியாது, மாமா. இன்னிக்குக் காலமேதான் அவர் பட்டணத்திலேயிருந்து வந்தார்."

"அவர் என்ன சொன்னார், சீதாராமனைப்பற்றி? சீதாராமன் அங்கே சௌக்கியமாயிருக்கிறானா இல் லையா?"

"இல்லையே."

"என்னடா, எலே! இல்லை என்கிறாயா?"

"நீங்கள் அவனை அதட்டாதேயுங்களேன்! அவன் சொல்லுகிறபடி சொல்லட்டும்" என்றாள் வேம்பு.

"சொல்லடா மேலே."

"சீதாராமன் அங்கே இல்லை. அவ்வளவுதான்."

"பின்னே எங்கேயாம்?"

"நேற்றுத்தான் எங்கேயோ ஓடிப்போய்விட்டானும்."

"அப்புறம்?"

"போலீஸில் எழுதிவைத்திருக்கிறார்களாம்."

"அவனைக் காணும் என்றா?"

"ஆமாம். அவன் ஆயிர ரூபாய் நோட்டை இரும்புப் பெட்டியிலிருந்து திருடிக்கொண்டு ஓடிப்போய்விட்டானும்."

"ஏலே, போக்கிரிப்பயலே! என்னிடத்திலேயா விளையாடுகிறே?" சேஷு சாஸ்திரிகள் கையிலிருந்த ஓலைக் கத்தையால் ஐயாப்பயல் முதுகில் ஓர் இழுப்பு இழுத்துவிட்டார். "மறுபடி இந்த மாதிரி பேசினால் உன் நாக்கை அறுத்துவிடுவேன்; ஜாக்கிரதை!" என்றார்.

வீல் என்று கத்திக்கொண்டு ஐயாப்பயல், "மாமா, மாமா, வேண்டாம். உங்கள் பிள்ளை செய்ததுக்காக என்னைப் பிடித்து அடிக்கிறேளே!"

"அடே, குடியைக் கெடுக்க வந்த பயலே! என் பிள்ளை யாவது, செய்வதாவதுடா? எந்தப் பயல் சொன்னது! அவன் நாக்குப் புழுத்துப்போகாதா?" சாஸ்திரிகள் ஓலைக் கத்தையை மறுபடியும் பிரயோகித்தார்.

"ஐயையோ மாமா, அடிக்காதேயுங்கள். சிவராம மாமா-எங்கள் வாத்தியாரிடத்திலே சொல்லிக்கொண்டிருந்தார்; காவேரி மடத்திலே. அதைச் சொன்னேன்."

"ஏலே, நன்றாய் ஞாபகப்படுத்திக்கோ; ஒன்றுக் கொன்று உளறாதே! சீதாராமன் திருடினான் என்றா சொன்னான்?"

"ஆமாம் மாமா! ஞாபகமாய்த்தான் சொல்லுகிறேன். சீதாராமன் அவாத்துப் பெண்ணைக் கையைப் பிடித்து இழுத்தானும். ஆயிரம் ரூபாய் பணம் திருடினானும். ஓடிப் போய்விட்டானும்."

சாஸ்திரிகள் ஓலைக்கத்தையை நழுவவிட்டுவிட்டுக் கீழே சாய்ந்தார்.

"சிவராமனு, சொன்னுரா? நான் கேட்கட்டுமா? பொய்யாயிருந்தால் உன்னை என்ன பண்ணுவேன் தெரியுமா?"

"கேளுங்கோ; நிஜந்தான். நிஜமாயிருந்தால் என்ன பண்ணுவேள்?"

"ஐயையோ! - சீதாராமனு! யாரைக் கையைப் பிடித்து இழுத்தானு? நம்ப முடியவில்லையே! அட பாவி! பொய்! பொய்!"

"காந்திமதியாமே, ஒரு பெண். அவளைத்தான். நீங்கள் வேண்டுமானுல் போய்ச் சிவராம மாமாவைக் கேளுங்களேன். சீனு வாத்தியாரை மட்டும் கேட்காதீர்கள். அவர், 'ஏண்டா நீ போய்ச்சொன்னுய்?' என்று என்னை அடிப்பார்.

"ஐயையோ, தெய்வமே!" என்று மூர்ச்சித்தான் வேம்பு. 'ஹா ஈச்வரா! எனக்குத் தாங்க முடியவில்லையே! ஹா ஹா! சியாமளாம்பிகே! கடைசியில் இந்தக் கதிக்கு என்னை ஆளாக்கிவிட்டாயா? ஆயிரம் ரூபாயாம்! இரும்புப் பெட்டியாம்! எங்கே போனுனே? மற்றொரு காலித்தனம் அவன் செய்திருப்பானு? இது என் பிள்ளையா?' சேஷு சாஸ்திரிகள் தூணில் தலையை மோதிக்கொண்டு அழத் தொடங்கினுர்.

ஐயாப்பயல் அவர் அழுவதையும் வேம்பு கிணற்றிலிருந்து தூக்கிப் போடப்பட்டவளைப்போல் விழுந்து கிடப்பதையும் பார்த்துக் கிலி பிடித்துப் போய் விசிக்கலானுன். சிறிதுநேரம் கழித்து, சேஷு சாஸ்திரிகள் கண்ணைத் திறந்து ஐயாப் பயலைப் பார்த்தார்.

"மணி ஊரில் இருக்கிறுரா? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

"நான் நாலு நாள் முன்னே அவரை ரெயில்வே ஸ்டே

ஷனில் பார்த்ததுதான்; பின்பு பார்க்கவில்லை'' என்றான் ஐயாப்பயல்.

"அவன் பட்டணம் போனானே அன்னிக்கா?"

"ஆமாம், நீங்கள்கூட என்னை ஒரு லெட்டரை ரெயிலில் போஸ்டு பண்ணும்படி கொடுத்து அவசரமாக அனுப்பினீர்களே, அப்போ பார்த்ததுதான்."

"அப்போ அவர் உன்னைப் பார்த்தாரா? ஏதாவது விசாரித்தாரா?"

"பார்க்காமல் என்ன? விசாரிக்காமல் என்ன? அன்று ரெயில் ரொம்ப லேட்டாக வரும் என்று சொன்னார். நான் அந்த லெட்டரை அவரிடமே கொடுத்துப் போஸ்டு பண்ணச் சொல்லிவிட்டு அதிகமாக இருட்டு முன் ஆத்துக்கு வந்தேன்."

"ஏண்டா ஐயாப்பயலே! அந்த லெட்டரை மணியிடமா கொடுத்தாய்! நீ போஸ்டு பண்ணவில்லையா?"

"இல்லையே. இருட்டிப் போய்விட்டால் அப்புறம் தனியாக எப்படி ஆத்துக்கு வர முடியும்? அவர் தாம் போஸ்டு பண்ணுகிறேன் என்று சொல்லி வாங்கிக்கொண்டாரே!"

சேஷு சாஸ்திரிகள் இரண்டு கையாலும் தலையில் அடித்துக்கொண்டார்.

கொஞ்சம் தலை தூக்கியிருந்த வேம்பு, "அட பாழும் தெய்வமே!" என்று அலறிவிட்டு மறுபடியும் சோகத்தில் ஆழ்ந்தாள்.

"ஐயாப்பயலே, நீ நல்ல வேளையில் ஆத்துக்குப் போ" என்று அவனை வழி அனுப்பிவிட்டு வாசல் கதவைத் தாழிட்டுக்கொண்டார் சாஸ்திரிகள்.

* * *

அன்று பிற்பகலில் மணி ஒரு தூக்கம் போட்டு எழுந்ததும் சிற்றுண்டியும் தீர்த்தமும் எடுத்துக்கொண்டு நாகு அவரிடம் வந்தாள்.

"ஏன்னா! சீதாராமன் வந்துவிட்டுப் போனதைப் பற்றி என் கிட்டே ஒரு மாதிரியாகச் சொன்னீர்களே! ஊரிலே வேறு மாதிரியாகப் பிரஸ்தாபம் காதில் படுகிறதாமே! அம்மணி சொன்னாள்."

"சரி, சரி. வாயை மூடு. எல்லாம் எனக்குத் தெரியும். சீதாராமன் நம்மகத்துப் பிள்ளைதானே! ஊராரகத்துப் பிள்ளையா? என்ன இருந்தாலும் நீ பேசாதே. ஊர் வார்த்தையை நம்பாதே. எல்லாம் சிவராமன் பண்ணி விட்ட புரளி. எனக்கு உண்மை தெரியும். சீதாராமன் வந்ததாகப் போனதாக ஒருவரிடமும் மூச்சுப்பரியாதே! அம்மணியிடம் சொல்லிவிட்டாய் அல்லவா?"

"ஆனாலும் என்னை அசடாகப் பண்ணுகிறீர்களே! நான் ஒன்றும் சொல்லவில்லை. அவனைப் போலீஸில் தேடுவதாக அவள் சொன்னாள். அவள் சொன்னதை நான் காதில் வாங்கிக்கொண்டேன்."

"அதை மற்றொரு காதால் விட்டுவிடு. வெறும் பொய்! இரண்டு மூன்று நாளைக்குப் பேசாமல் இரு. பிற்பாடு எல்லாம் சரியாகப் போய்விடும்."

* * *

சேஷு சாஸ்திரிகள் கதவைத் தாழிட்டுக்கொண்டாலும் ஊரில் இருப்பவர்கள் அவரை விடுகிறதாக இல்லை. புருஷர்களும் பெண்டுகளும் அளவில்லாத சிரத்தை எடுத்துக்கொண்டு துக்கம் விசாரிக்க வந்தார்கள். சேஷு சாஸ்திரிகளோ வேம்புவோ வந்தவர்களுக்குச் சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. வந்தவர்கள் விதம் விதமாகச் சமாசாரங்களைக் கொட்டி அளந்தார்கள். அதில் சிலர் சீனு வாத்தியாரிடம் நேரில் பேசிக்கொண்டிருந்தவர் என்பதால் புராண ஆகமங்களை மேற்கோளாகவுடைய சமயத்தவர்கள் போல் அதிகப் பெருமையுடன் அறிவை விளக்கினார்கள். மற்றும் சிலர் சிவராமனையே கண்டு பேசித் தெரிந்துகொண்டவர்களாதலால் வேத வாக்கியங்களையே ஆதார

மாகக் காட்டி வாதிக்கும் பதாசாரியர்கள்போல் உன்னதமான பிராமாண்யத்தைப் பெற விரும்பினார்கள்.

இவர்கள் கொண்டுவந்து கொட்டிய குப்பைகளில் சேஷு வாத்தியார் தமக்கு உபயோகமுள்ள இரண்டொரு தகவல்களை மட்டும் பொறுக்கி எடுத்துக்கொண்டார். சீதாராமன் பட்டணத்தை விட்டு முதல் நாளே புறப்பட்டு விட்டது நிச்சயமாக ஏற்பட்டது. மணி ஊரில்தான் இருக்கிறார் என்பது தெரியவந்தது.

சிவராமனைச் சேஷு சாஸ்திரிகள் பார்க்க விரும்பவில்லை. அவரை விசாரிக்கவேண்டுமானாலும் மணி மூலம் விசாரிக்க வேண்டுமென்று நினைத்தார். மணிக்கு இந்த விஷயங்கள் காதில் எட்டாதிருக்குமா? அவன் ஏன் வரவில்லை? தன்னிடம் கோபமா? மனஸ்தாபமா? கடிதத்தை உடைத்துப் பார்த்திருக்க மாட்டார். சென்னைக்குப் போயிருந்தாரே! அங்கே உள்ள நிலைமையைப்பற்றி என்ன தெரிந்துகொண்டார்? எப்போது திரும்பிவந்தார்? சீதாராமன் ஒருவேளை அவரிடம் வந்து மறைவில் இருக்கலாமோ? எதற்கும் மணியைப் பார்த்தாலொழிய மேலே ஒன்றும் ஓடாதுபோல் இருந்தது சேஷு சாஸ்திரிகளுக்கு.

அஸ்தமன வேளைக்குச் சாஸ்திரிகள் மணியிடம் சென்றார். தாம் சில தினங்களுக்கு முன் மணியிடம் பற்றில்லாமல் பேசியதும், அவரை நிராகரித்து ரகசியக் கடிதம் எழுதியதும், அந்தக் கடிதம் மணியிடமே அகஸ்மாத்தாகச் சிக்கிக்கொண்டதும் அவர் மனத்தில் உறுத்தாமல் இல்லை. இருந்தாலும் காரியத்தின் முடையை உத்தேசித்து மிகத் தாழ்ந்து போகும் தீர்மானத்துடன் அவர் புறப்பட்டார். பிள்ளையை விபத்திலிருந்து நீக்கிக் குலப்பெயரையும் அபவாதத்திலிருந்து விடுவித்து அந்தச் சமயத்தில் உதவ மணியைத் தவிரச் சமர்த்தரோ, ஆப்தரோ வேறு ஒருவர் உலகத்தில் இருப்பதாக அவருக்குப் புலப்படவில்லை.

சாஸ்திரிகள் சரணாகதி சங்கல்பத்தோடு கூடிய தீனனை பக்தனைப்போல் மணியை வந்து அடைந்தார்;

புலம்பினார்; அழுதார்; கெஞ்சினார்; கதறினார்; நீயே கதி என்று குப்புறப் படுத்தார்.

மணி, தாம் சென்னை போகவில்லை என்றும், கடிதம் மட்டும் போட்டதாகவும், அதற்குப் பதில் அன்று காலையில் வந்ததாகவும் சொல்லிச் சீதாராமனின் பதிலைக் கொண்டு வந்து காண்பித்தார். தமக்கு வேறு ஒரு தகவலும் தெரியாதென்றும் கூறிவிட்டார். மேலும், சிவராமன் வார்த்தைகளை முழுவதும் நம்பிவிட முடியாதென்றும், சீதாராமன், சிவராமன் பறையறிவிக்கும் விதமாக ஒரு நாளும் நடந்துகொள்ளக் கூடியவன் அல்லவென்றும் திடமாக வாதித்தார்.

"மணி, நீ சொல்லுகிறபடிதான் நானும் நினைக்கிறேன். ஆனால் சீதாராமன் ஒருவரிடமும் சொல்லிக் கொள்ளாமல் திடீரென்று புறப்பட்டுப் போன இடம் தெரியாமல் போயிருப்பதைப்பற்றி என்ன நினைக்கிறது?"

"எனக்கு என்னவோ, அத்திம்பேரே! அதிலேயே சந்தேகந்தான். சீதாராமன் அப்படிச் சொல்லிக்கொள்ளாமல் ஓடிப்போயிருந்தால் வேங்கடசுப்பையர் நமக்கு ஒரு தந்தி அடித்திருக்க மாட்டாரா? சீதாராமன் அங்கேயேதான் இருக்கிறான் என்று நான் நினைக்கிறேன். சிவராமன் ஊருக்குப் புறப்படுமுன் அவன் காலேஜிலிருந்து வீட்டுக்கு வரத் தாமதித்திருக்கலாம். காலேஜ் பிள்ளைகளுக்கு எவ்வளவோ வியாபாரங்கள்! டிராமா, கூத்து ஏதாவது காலேஜில் நடந்திருக்கும்; அல்லது இரண்டு பையன்களாகச் சேர்ந்து காலேஜில் இருந்தபடியே நேராகச் சினிமாவுக்குப் போயிருக்கலாம். சிவராமன் 8, 9 மணிக்கு ரெயிலுக்குப் புறப்பட்டிருக்கிறார். அதற்குள் அவன் வராததுபற்றி அவர் கதை கட்டியிருக்கிறார் என்று தோன்றுகிறது. சிவராமனின் இறுமாப்பும், பொய் பித்தலாட்டங்களும் யாருக்குத் தெரியாது! அவனுக்கு வெகு காலமாகவே சீதாராமனிடம் அசூயை. இவன் வேங்கடசுப்பையர் ஆதரவில்

இருப்பதிலேயே அவனுக்கு சூத்திரம். உங்களைப்பற்றி யும் எவ்வளவு அவதூருகப் பேசியிருக்கிருன்? சீனு வாத்தி யார் மகா விஷமி. ஊரில் ஒருவன் வாழச் சகிக்கமாட்டார். அவருக்குக் கொஞ்சம் இடம் கிடைத்தால் போதாதா? ஊரான் வைக்கோல் போரில் நெருப்பு வைத்துவிட்டுச் சொக்கப்பனை கொண்டாடும் பேர்வழி அல்லவா அவர்! எனக்கு என்ன தோன்றுகிறதென்ருல், இன்றைக்குச் சீதாராமனிடமிருந்து சாதாரணமாகவே கடிதம் வந்திருப்ப தாலும், வேங்கடசுப்பையரிடமிருந்து தந்தியொன்றும் வாராததாலும் சீதாராமன் எப்போதும்போல் அவ்விடமே சௌக்கியமாக இருக்கிருன் என்றுதான் ஊகிக்கத் தகுந் தது என்பதே. ஆகையால் வீண் கவலைப்பட வேண்டாம். நாளைக்கு ஏதாவது தபால் வருகிறதா என்று பார்க்க லாம்'' என்றவாறு மணி அத்திம்பேருக்குச் சமாதானம் சொன்னார்.

ரூபாய் ஆயிரம் மோசடி செய்யப்பட்ட வதந்தி மூலமில்லாமல் கிளம்பாதென்றும், ஊகங்கள் செய்துகொண்டு காலம் கடத்துவது தகாதென்றும், ஒருவேளை விபரீதமாகவே ஏதாவது நடந்திருந்தால் அதன் பின்னே தொடரும் அனர்த்தங்கள் குடும்பத் தையே அதோகதிக்குக் கொண்டுவந்துவிடும் என்றும், உடனே யதார்த்தத்தை நேரில் கண்டறியவேண்டு மென்றும் சேஷு சாஸ்திரிகள் பலமாக வற்புறுத்தி ஞர். சீதாராமனைப் பால்யத்தில் வாத்ஸல்யத்துடன் வளர்த்ததாலும், அவனுக்குக் காவியபாடம் வரையில் போதித்து விற்பன்னன் ஆக்கியதாலும் அவனை ஸரஸ் வதிக்கு வரனுக உத்தேசித்திருப்பதாலும் மணியிடம் தம் பிள்ளையை ஒப்பித்துவிட்டதாகவும் மணி பார்த்து எது சொன்னாலும் செய்தாலும் தாம் கட்டுப்படுவ தாகவும் சீதாராமனை உடனே அழைத்துவந்து அடுத்த மாதத்திலேயே ஸரஸ்வதியைக் கொடுத்து விவாகம் செய்து வைத்து ஊரோடு இருக்கச் செய்துவிட வேண்டு மென்றும், அவனுக்குப் பரம்பரை வித்தை வந்தால்

போதுமென்றும், ஆங்கிலப் படிப்பு நன்மை பயக்கவில்லை என்றும், அவன் பட்டணம் போகத் தாம் அநுமதித்தது அறியாமை என்றும், அதன் பலனைகவே தாம் கவலைகளுக்கும் துக்கத்துக்கும் அவமானத்துக்கும் தள்ளாத வயதில் பாத்திரமாகி வருந்துவதாகவும், இனிமேல் புத்தி வந்ததாகவும் பற்பல சங்கல்ப விகல்பங்களைச் சேஷா சாஸ்திரிகள் சரமாரியாகத் தொடுத்து ஒரு ஜாமம் புலம்பினார்.

கடைசியாக மணியை அன்று இரவே பட்டணம் புறப்பட்டுப் போகும்படி நிர்ப்பந்திக்கலானார். பணம் ஈடு செய்யவேண்டி வந்தால் அதையும் மணிதான் செய்ய வேண்டுமென்றும், தன் மாப்பிள்ளைக்கு வரதக்ஷிணை கொடுத்ததாக நினைத்துக்கொள்ள வேண்டுமென்றும், தம்மிடம் பைசாக் காசு இல்லையென்றும், தாம் வசிக்கும் வீடுகூட ஆயிரம் ரூபாய் பெறுமென்றும் பரிதவித்தார்.

அத்திம்பேர் நாலு நாளைக்குள் இறங்கிய இரக்கத்தை நினைத்து மணி மனத்துக்குள் சிரித்துக்கொண்டார்.

சேஷாசாஸ்திரிகள் பட்டணம் போக மணியை வண்டியில் ஏற்றிவிட்டுத்தான் வீடு திரும்பினார். ஆனால் மணி ஸ்டேஷனுக்குப் போனதும் திருச்சிக்கு டிக்கெட் வாங்கிக் கொண்டார். பட்டணம் போய் அவர் தெரிந்துகொள்ள வேண்டியது ஒன்றும் இல்லை அல்லவா?

ஸரஸ்வதியின் கல்யாண விஷயமாகக் கோபாலனை ஒரு மாதம் லீவு எடுத்துக்கொண்டு வரும்படி நேரில் அவனை அழைக்க மணி புறப்பட்டார்.

# ௬

# புரட்சி

சீதாராமன் ஊருக்குப் புறப்பட்ட அன்று இரவு ராமநாதனுக்கு மன அமைதி கெட்டுவிட்டது. தூக்கம் விலகியது; தைரியம் தளர்ந்தது; பயம் சூழ்ந்துகொண்டது; தவிப்பு அதிகரித்தது; தான் பின்வாங்க முடியாத ஒரு கட்டத்தை உத்தேசித்து விரைந்து செல்வதை அவன் உணர்ந்தான். கூடுவிட்டுக் கூடு பாய்வதுபோல் ஒரு கட்டுப்பாடான சூழ்நிலையை நீக்கி மற்றொன்றில் பிரவேசிப்பதற்குத் தான் ஆயத்தமாகி வருவதைக் கண்டு கொண்டான. புரட்சிகரமான அத்தகைய மாறுதல் ஏற்படத் தான் தீர்க்கதரிசனத்துடன் முன்கூட்டியே சங்கல்பித்ததாக அவன் கூற முடியவில்லை. இருந்தாலும் மேலும் மேலும் அவனை இழுத்துச்சென்றது ஒரு சக்கரம். இல்லாவிட்டால் சீதாராமனுக்கு ஒரு தீங்கும் நினைக்காத அவன் சீதாராமனுக்குப் பரம விரோதியாக ஆகிவிட்டது எங்ஙனம்? குற்றவாளி தானாக இருக்கக் குற்றம் சீதாராமனைப் பற்றிக்கொள்ளுவதை வரவேற்று, அவனுடைய வீழ்ச்சியில் தன் மீட்சியைப் பெறும் மித்திரத் துரோகியாகி வருகிறான் அல்லவா?

'ஏழை, சீதாராமன்! ஒரு வைதிகக் குடும்பத்துக்குப் பிரகாசம் அளிக்க வேண்டிய விளக்குப் போன்றவன்! அடக்கமும் தாழ்மையும் பொறுமையும் ஒழுக்கமும் உடைய நல்ல மாணவன்! அரும்பு மலர்வதுபோல் இன்பமும் மணமும் அழகும் நிறைந்த பேச்சுத் திறம் பொருந்தியவன்! என்னிடத்தில் சகோதர வாஞ்சை உடையவன். என்னை நம்பிப் பட்டணம் வந்து படித்து வருபவன்! சீதாராமனுக்குக் கடைசியாக நான் பகிர்ந்து கொடுத்த பயன் வாழ்க்கையை வெறுக்கச்செய்யும் ஆதாரமற்ற அபவாதமும் பயமும்!

ஆபத்துக்காலத்தில் மித்திரனைப் பரீட்சித்து அறிய வேண்டு மென்று நீதி சாஸ்திரம் கூறுகிறது. என் ஆபத்துக்குத் தன் கழுத்தைக் கொடுத்தான் ஸந்மித்திரனான சீதாராமன். அவனைப் போராபத்தில் மாட்டிவிட்டு, யோக்கியனாக நடிக்கிறேன் துர்மித்திரனாகிய நான். ஆனால் இந்த நிலைமை நீடிக்க முடியாது. என் சாயம் வெளுக்கத்தான் போகிறது. ஆகையால் சீதாராமனை நிரபராதியாக்கி என் குற்றங்களை நானே ஒப்புக்கொண்டு, மன நிம்மதியடைய வேண்டு கிறேன். மேலும் உஷாவைப்பற்றிய என் மனோரதத்தைக் கேவலம் சொப்பனமாக மதித்துத் தள்ளிவிட நான் நினைக் காதவரையில் என் முற்போக்கான திட்டத்தைப் பிரகட னம் செய்யத் துணிந்தே ஆகவேண்டும். அதனால் வரக்கூடிய கஷ்ட நஷ்டங்களையும், மனஸ்தாப வேறுபாடுகளையும், நான் துணிகரமாகத் தாங்கியே ஆகவேண்டும். வாழ்க் கைப்பாதை வெவ்வேறு திக்குகளில் பிரியும் கட்டத்துக்கு என்னைக் கொண்டுவந்து விட்டிருக்கிறது. என் இஷ் டத்தை அநுசரித்து ஒரு திக்கில் காலடி எடுத்துவைக்க நான் இனித் தயங்குவதில் அர்த்தமில்லை. ஆகையால் காலையில் அப்பாவைப் பார்த்து எல்லாவற்றையும உடைத் துப் பேசுவேன்' என்று யோசித்தான் ராமநாதன்.

* * *

மறுநாள் காலையில்! வேங்கடசுப்பையர் தம் மேஜை அடியில் வெகு மும்முரமாக வேலையில் ஆழ்ந்திருந் தார். ராமநாதன் பல தடவை மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு அவர் அறைப் பக்கம் போவதும், அப்போது சந்தர்ப்பம் இல்லை! என்று நினைத்துத் திரும்புவதுமாக இருந்தான்.

வெகுநேரம் கழித்துப் பேனாவைக் கீழே வைத்து விட்டு மூக்குக் கண்ணாடியைக் கூட்டில் போட்டுவிட்டு ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் அறைவிட்டு வெளியே வந் தார். ஸ்நான போஜனாதிகளை முடித்துக்கொண்டு அவர்

ஆபீஸுக்குக் காரில் ஏறும் சமயம் ராமநாதனைக் கூப்பிட்டார். "ராமநாதா, இன்று நான் நாக்பூர் போகிறேன். நேரில் பேசிக் காந்திமதிக்கு வரனை நிச்சயம் செய்து விட்டுக் கோபிநாத் கோமதியுடன் இரண்டு மூன்று நாட்களில் திரும்புகிறேன். நேற்று நான் சொன்ன செக்கை உன் பேருக்கு எழுதியிருக்கிறேன். அதை மாற்றி ரூபாய் ஆயிரத்தையும் ஆபீஸில் என்னிடம் கொண்டுவந்து கொடுத்துவிடு. ஆபீஸில் கொஞ்சம் ஜோலி இருப்பதால் அதைப் பார்த்துவிட்டு அப்படியே ஸெண்ட்ரலுக்கு நான் போவேன். நீ பாங்குக்குப் போய்விட்டு என்னை ஒரு மணிக்குள் வந்து பார்."

ஆபீஸிலிருந்து அவர் தனியே ஊருக்குப் புறப்படும் சந்தர்ப்பம் தனக்கு அநுகூலமாக இருக்கும் என்று ராமநாதன் நினைத்தான். கார் நகர்ந்தது.

ராமநாதன் அப்பா செக் புஸ்தகத்தைப் பார்த்துச் செக்கை எடுத்துக்கொள்ள உள்ளே சென்றான். செக்கில் 'வி. ராமநாதன்' என்று பணம் பெறவேண்டியவரின் பெயர் ஸ்பஷ்டமாக எழுதப்பட்டிருந்தது. கீழே அப்பா கையெழுத்து வைத்திருந்தார். தேதி சரியாகப் போடப்பட்டிருந்தது. தொகையின் எண் ரூ. 1000 என்று குறிக்கப் பட்டிருந்தது. ஆனால் எழுத்தில் ரூபாய் ஆயிரம் என்று எழுதப்படவில்லை. அவசரத்தில் மறந்துவிட்டார்போலும். ராமநாதன் அப்பா பேனாவை எடுத்து மையில் தோய்த்து ரூபாய் ஆயிரம் என்று எழுத்தில் பூர்த்தி செய்துகொண்டான். பின்பு போஜனாதிகளை முடித்துக்கொண்டு செக்குடன் பாங்குக்குப் புறப்பட்டான்.

பாங்கில் இவன் செக் உள்ளே அனுப்பப்பட்ட சிறிது நேரத்துக்கெல்லாம் ஏஜெண்டு ஒரு பியூனை விட்டு இவனை உள்ளே அழைத்தார். தன் எதிரில் இவனை உட்காரச் சொல்லி அன்புடன் வரவேற்றார். பிறகு வெகு நேரம் அவர் தம் குமாஸ்தாக்கள் கொண்டுவரும் கணக்குப் புஸ்தகங்கள், செக்குகள், பாண்டுகள் முதலிய

வற்றைப் பரிசீலனை பண்ணிக் கையொப்பம் இட்டுக்கொண்டிருந்தார். ராமநாதனிடமும் நடு நடுவே இரண்டொரு வார்த்தை பேசினார்.

ராமநாதனுக்கு அங்கே கட்டுப்பட்டதுபோல் உட்கார்ந்திருப்பது சங்கடமாக இருந்தது. நீண்ட நேரமாகியும் செக்குப் பணம் வரவில்லை. கிட்டத்தட்ட மணி ஒன்று ஆகும்போது ஏஜெண்டின் ரூமுக்கு ஒரு தடித்த போலீஸ் இன்ஸ்பெக்டர் வந்தார். ஏஜெண்டுடன் அவர் ஏதோ பொதுவாகப் பேசிக்கொண்டே ராமநாதனுக்குப் பக்கத்து நாற்காலியில் உட்கார்ந்தார். ஏஜெண்டுக்கு அப்போது ஒரு குமாஸ்தாவால் சில காகிதக் கற்றைகளும், நோட்டுப் புஸ்தகங்களும் கொண்டுவரப்பட்டன. ஏஜெண்டு அவைகளிலிருந்து ஒரு செக்கைப் பொறுக்கிக் கையில் வைத்துக்கொண்டார். அது ராமநாதன் எடுத்து வந்த செக்! "இது சந்தேக ஆஸ்பதமாக இருக்கிறது" என்று ஏஜெண்டு ராமநாதனிடம் செக்கைக் காட்டினார்.

ராமநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டதுபோல் ஆயிற்று. போலீஸ் இன்ஸ்பெக்டர் தனக்காகத்தான் வரவழைக்கப்பட்டாரோ என்று நினைக்கலானான். இருந்தாலும் தைரியத்தை விடாமல், "இந்தச் செக்கில் ஒன்றும் சந்தேக ஆஸ்பதம் இல்லை. என் தகப்பனார் கையெழுத்திட்டதுதான் இது. வேண்டுமானால் தகப்பனாரை டெலிபோனில் கூப்பிட்டுக் கேளுங்கள்" என்றான் ராமநாதன்.

ஏஜெண்டு அலட்சியச் சிரிப்புடன் தலையசைத்தார்:

"இந்தக் கையெழுத்து போர்ஜரி என்று ஊகிக்க இடமிருக்கிறது" என்றார்.

போலீஸ் இன்ஸ்பெக்டரிடம் ஏஜெண்டு செக்கைக் காண்பித்தார்.

"நேற்று வந்த செக்கைக் கொண்டுவா" என்று ஏஜெண்டு ஒரு குமாஸ்தாவைப் பார்த்துச் சொன்னார்.

"அதுவும் அந்தப் பேரேட்டிலேயே இருக்கிறது" என்று குமாஸ்தா சுட்டிக்காட்டினார்.

இரண்டு செக்குகளையும் கையில் வைத்துக்கொண்டு ஏஜெண்டும் போலீஸ் இன்ஸ்பெக்டரும் சர்ச்சை செய்தார்கள்.

ரூபாய் ஆயிரம் என்று எழுத்தில் எழுதியிருந்தது ஒரே கையெழுத்தாக இருந்தது.

"அப்படித்தானே இருக்கும்? இரண்டு செக்குகளையும் எழுதினவர் ஒருவரே; அதாவது என் தகப்பனார். ஆகையால் வேறு மாதிரியாக இருக்குமா?" என்று ராமநாதன் கேட்டான்.

ஏஜெண்டு, 'எனக்கு எல்லாம் தெரியும், அப்பா' என்று சொல்லுகிறவர்போல் லேசாகச் சிரித்துக்கொண்டார்.

"வேங்கடசுப்பையர் கையொப்பம் வித்தியாசப்படுகிறது. நேற்று வந்த செக் ஒரிஜினலுக்குச் சரியாக இருக்கிறது. இன்றைச் செக்கின் கையொப்பம் கை நடுக்கத்தைக் காண்பிக்கிறது. இதைக் குற்றமற்றது என்று ஒப்புக்கொள்ள முடியாது."

ராமநாதன் ஏஜெண்டின் மௌட்டியத்தைப் போட்டு உடைத்துவிடலாமா என்று ஆத்திரப்பட்டான். 'நேற்றுச் செக் உண்மையில் போர்ஜரி செக்; அது சரியாக இருக்கிறதாம். இன்றைச் செக் ஸாக்ஷாத் வேங்கடசுப்பையர் கையெழுத்திட்டது; இது போர்ஜரியாம்! இவ்வளவு மடையன்களுக்கு எவ்வளவு பெரிய உத்தியோகம்!' ஆனால் தனக்குத்தான் இந்த ரகசியப் பிரகடனம் கேடு விளைவிக்கும் என்று உணர்ந்து ராமநாதன் தன் ஆத்திரத்தை அடக்கிக்கொண்டான். மறுபடியும் தகப்பனாரைக் கூப்பிட்டுக் கேளுங்கள் என்று அவன் வற்புறுத்தினான்.

மேலும் ராமநாதன் செக்கின் பின்புறத்தில் எண்டார்ஸ் செய்திருப்பதையும், உள்ளே அவன் பெயர் தொகை பெற வேண்டியவராக எழுதியிருப்பதையும் ஒத்துப்பார்த்தும், ஏஜெண்டு இரண்டும் ஒரே கையெழுத்து என்று சாதித்தார். இன்ஸ்பெக்டர் அதை ஆமோதித்தார்.

ராமநாதன், "டெலிபோனில் என் தகப்பனரை நீங்கள் கூப்பிடுகிறீர்களா? அல்லது நான் கூப்பிடட்டுமா?" என்றான் ஆத்திரத்துடன்.

ஏஜெண்டு பரபரப்பில்லாமல், மெள்ள டெலிபோனில் வேங்கடசுப்பையரைக் கூப்பிட்டார். ராமநாதன் அவர் ஆபீஸ் நம்பரை ஞாபகப்படுத்தினான். டெலிபோனில் பதில் தாமதமாகவே கிடைத்தது. வேங்கடசுப்பையர் கம்பெனியிலிருந்து லீவு கேட்டுக்கொண்டு வெளியூருக்குப் புறப்பட்டுவிட்டதாகத் தெரிவிக்கப்பட்டது.

ராமநாதனுக்குத் தலையில் இடி விழுந்ததுபோல் ஆயிற்று. 'அப்படி அவசரமாகப் புறப்பட்டவர் பணத்துக்காகப் பாங்குக்கு நான் வந்ததைப்பற்றி ஏன் டெலிபோனில் விசாரித்திருக்கக்கூடாது? பணம் இல்லாமல் பயணம் எப்படிப் புறப்பட்டார்?' - ராமநாதன் முகம் பயத்தினாலும் வெறுப்பினாலும் விகாரமடைந்தது. இன்ஸ்பெக்டர் அவன் கையைப் பற்றிக்கொண்டார். "நீ அரஸ்டு செய்யப்பட்டிருக்கிறாய்" என்ற மந்திரத்தை அவர் உச்சரித்தார்.

"செக் சந்தேகாஸ்பதமானால் பணம் கொடுக்க மறுக்கலாமே ஒழிய அரெஸ்டு செய்ய நியாயம் இல்லை" என்று ராமநாதன் வாதாடினான்.

"நியாயம் எங்களுக்குத் தெரியும்" என்றார் இன்ஸ்பெக்டர்.

பின்பு ஏஜெண்டுக்கும் இன்ஸ்பெக்டருக்கும் நடுவே சில தனிமையான பேச்சுவார்த்தைகள் நடந்தன.

ராமநாதன் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒரு காரில் கொண்டுபோகப்பட்டான்.

* * *

ராமநாதனைக் கொண்டுபோன கார் ஒரு சந்தியில் டிராமுக்காகப் போலீஸ் கைகாட்டியால் நிறுத்தப்பட்டது. டிராம் மறைவு விலகியதும் ராமநாதன் எதிரே வந்த காரில்

பார்த்தது யாரை? பத்மாவின் தாத்தாதான்! அவர் ஒரு வாலிபனுடன் உட்கார்ந்திருந்தார். அந்த வாலிபன் ஐசுவரியத்தின் அறிகுறிகளால் ஜொலித்தான். அழகிரி சாமி (பத்மாவின் தாத்தா) ராமநாதனைப் பார்த்தார். ராமநாதன் தலைகுனிந்தான். டிராமின் தடை நீங்கியதும் கார்கள் நகர்ந்தன. அழகிரிசாமி போலீஸ் காரைப் பின் தொடர்ந்தார்.

ராமநாதன் போலீஸ் ஸ்டேஷனில் இறக்கப்பட்டதும் அழகிரிசாமி இன்ஸ்பெக்டரைக் கண்டு பேசினார். இரு வரும் ஒருவரை ஒருவர் முன் அறிந்தவர்போல் பழகிக் கொண்டனர். பத்மாவின் தாத்தா தன்னைப் பலமாகப் போலீஸ் நிர்ப்பந்தத்தில் மாட்டிவைக்க ஏதோ இரக்கமற்ற சூழ்ச்சி செய்வதாக நினைத்துக்கொண்டு ராமநாதன் அவரை முறைத்துப் பார்த்துக்கொண்டிருந்தான். ஆனால் அவன் காதில் விழுந்த சில வார்த்தைகள் அவனுக்கு ஆசுவாசம் அளித்தன.

"பெரியவங்க வீட்டுக் குழந்தை அல்லவா? நாங்கள் ஜாமீன் இருக்கிறோம். உங்களுக்கு வேண்டியபோது ஆஜர்ப்படுத்துகிறோம். இப்போது விட்டுவிடுங்கள்."

அழகிரிசாமி சிறிது நேரத்தில் ராமநாதனைத் தம் காரில் ஏற்றிப்போடி சொன்னார். போலீஸ் இன்ஸ்பெக்டர் அவனைப் பிரியத்துடன் வழியனுப்பினார். ராமநாதன் ஏதோ நல்ல காலம் என்று ஆறுதல்கொண்டு ஆச்சரியத்துடனும் படிமானத்துடனும் அழகிரியின் காரில் ஏறிக்கொண் டான். அழகிரி தம்முடன் வந்த வாலிபனுக்கு ராம நாதனை அறிமுகப்படுத்தினார். "பெரியவங்க வீட்டுக் குழந்தை. நம்ப பத்மாவுக்குக் 'கிளாஸ்மேட்'; நம்ப உஷாகிட்டே ரொம்ப சிநேகிதம்."

ராமநாதனுக்குப் பத்மா தாத்தாவின் மொழிகள் அமிர்தமாக இருந்தன. பத்மாவுக்கும் உஷாவுக்கும் நடுவே தன்னுடைய தொடர்பை அவர் பிரித்து நிர்ணயப்படுத்திப்

பேசின தோரணையில் ஏதோ அந்தரங்க தாத்பர்யம் இருக்கிறதென்று அவனுக்குத் தோனிக்காமலில்லை. ராமநாதனுக்கு அந்த வாலிபனை அழகிரி அறிமுகப்படுத்தியது இன்னும் அர்த்தபுஷ்டியுடன் இருந்தது. "இவர்தான் டைரக்டர் சக்கரபாணி; மனோரமா டாக்கீஸ் முதலாளி. நம்ம பத்மாவிடம் இவருக்கு ரொம்ப நட்பு."

கார் வீடு சேர்ந்ததும் சிற்றுண்டி உபசாரங்கள் நடந்தன. அதில் பத்மாவும் உஷாவும் கலந்துகொண்டார்கள். ராமநாதன் உஷாவிடம் தனியாகப் பேசிக்கொண்டிருந்தான். சக்கரபாணி பத்மாவைத் தனியே அழைத்துச் சென்றதால் உஷாவிடம் தனித்துப் பேச ராமநாதனுக்கு நிரம்ப அவகாசம் கிடைத்தது. பத்மாவின் தாயாரிடமிருந்து உஷாவுக்கும் ராமநாதனுக்கும் நட்புத் தொடர்வதில் அநுகூலம் இருப்பதாகவும், அவள் இஷ்டப்படி அழகிரி சம்மதித்திருப்பதாகவும், உஷாவுக்கு அவள் தகப்பனரிடமிருந்து ஜீவனாம்சத் தொகையை வாங்கிக்கொடுத்து அவள் இஷ்டப்படி அவளுக்குக் காதலனையும் ரிஜிஸ்டர் விதிப்படி சேர்த்துவைத்து அவளைத் தனியே விட்டுவிட அவர்கள் உத்தேசித்திருப்பதாகவும் தெரிந்துகொண்டான். ஆகையால் தன் வரவு ஆதரிக்கப்படுமென்றும் அறிந்துகொண்டான். ராமநாதனுக்குப் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் ஆயிற்று. அன்றுமுதல் அவன் அடிக்கடி வந்து உஷாவைச் சந்திக்கலானன். வீட்டில் தகப்பனரும் ஊரில் இல்லாததால் அவனைக் கேட்பவர்கள் இல்லை. தாயார் மட்டும் செக்கைப்பற்றிக் கேட்டாள். "செக் மாறவில்லை. அப்பா ஊருக்குப் போய்விட்டார்" என்று அவளுக்குப் பதில் சொன்னன்.

பத்மாவுக்கும் சக்கரபாணிக்கும் ரிஜிஸ்டர் மணம் கூடிய சிக்கிரத்தில் நடக்கப்போவதாயும் உஷாவுக்கும் தனக்கும் அதே ஒப்பந்தத்தைச் சேர்த்து நடத்திவிடலாமென்றும் பிரஸ்தாபங்கள் இருப்பதாயும் ஆனல் ஒரு காரணத்தினல்தான் தாமதம் என்றும் அதாவது உஷா

வின் பிதா அவள் பேரில் ஒதுக்கிவைக்கப் போகும் ஜீவனாம்சம் என்ன என்று தீர்மானமாகாததுதான் என்றும், அந்த மனுக்கள் இரண்டொரு நாட்களில் வந்து தீரவேண்டுமென்றும், அவர் பேரில் அழகிரி வக்கீல் வைத்து விவகாரங்கள் தொடர்ந்திருப்பதாகவும், இந்த விஷயம் நிர்ணயமானவுடன் இரண்டு பெண்களுக்கும் சேர்த்து ஒரே தினத்தில் விவாக ஒப்பந்த ரிஜிஸ்டர் செய்துவிட அழகிரி உத்தேசித்திருப்பதாகவும் ராமநாதன் அறிந்துகொண்டான். ராமநாதனுக்கும் தன் தகப்பனார் திரும்பிவருமுன் தன் ரிஜிஸ்டர் விவாகத்தை நிர்ணயித்து விடுவதில் அக்கறை ஏற்பட்டது. தான் முதல் செக் போர்ஜரி செய்ததிலிருந்தும், சீதாராமனைத் தர்ம சங்கடத்தில் மாட்டிவைத்ததிலிருந்தும், இரண்டாவது செக் மூலம் தகப்பனார் தன்னிடம் சந்தேகம் உள்ளவர்போல் நடந்து கொண்டதிலிருந்தும், அவன் வீட்டிலிருந்து விலகித் தன் போககே தனிப்போக்காக ஒதுக்கிக்கொள்ளும் மனோ பாவத்தைத் திடப்படுத்திக்கொண்டு வந்தான்.

* * *

ராமநாதன், உஷாவை முதல் முதல் கண்ட அன்றே அவளுடன் சல்லாபித்துக்கொண்டிருந்தான். காலை நேரம்; முன்ஹாலில் அழகிரிசாமியும் அவருடன் புதிதாக ஒருவரும் வந்து அமர்ந்து சம்பாஷணை நடத்தலானார்கள். "என் தகப்பனார் வந்துவிட்டார்" என்று உஷா ராமநாதனிடம் மெல்லிய குரலில் ரகசியமாகக் கூறினாள்.

"உன் தகப்பனார் யார்" என்று ராமநாதன் வினவினான். "நரஸிம்மராஜபுரத்தில் 'ரைஸ் மில்' வைத்திருந்தாரே, அவர்தான்" என்றாள் உஷா. மேலே விவரங்கள் ராமநாதன் விசாரிக்குமுன் அழகிரிசாமியும் வந்தவரும் பேசிய சில வார்த்தைகள் அவர்கள் கவனத்தைக் கவர்ந்தன.

"என்ன அழகிரிசாமி, கடைசியில் உம் சுபாவத்தைக் காண்பித்துவிட்டீரே. எனக்குக் கடுதாசி போட்டால்

போதாதா? 'லாயர் நோட்டீஸ்' விட்டு நான் ஊரில் இல்லாத சமயத்தில் பலபேர் அறிய மானத்தைச் சந்தியில் இழுத்துவிட்டீரே. என் குழந்தைக்கு நான் ஓர் ஏற்பாடு செய்ய மாட்டேனா? கௌரவமான முறையில் விவாகத்தையும் செய்து வைக்கமாட்டேனா? என்னை ஓர் எதிரியைப்போல் நினைத்து நீர் விவகாரம் தொடர ஏற்பாடு செய்தது மிகவும் கண்டிக்கத்தக்கது."

"சரிதான் சாமி, நீங்க சொல்லுகிறது. ஏதோ பத்து வருஷம் தனலக்ஷ்மியை நரஸிம்மராஜபுரத்தில் வைத்துக் காப்பாத்தினீங்க. ஒரு பெண் குழந்தையும் பிறந்தது. பிற்பாடு தனலக்ஷ்மியை ஐந்தாறு வருஷமாக ஏனென்று கேட்கவில்லை. அது இங்கேயும் அங்கேயும் கெட்டலைந்து கஷ்டப்பட்டுக் கடைசியில் நமக்குக் கொடுத்துவைக்கவில்லைங்க. இந்தப் பெண்ணும் அநாதையாகப் போய் விட்டதேயென்று நான் ஒரு வருஷகாலமாகக் கொண்டு வந்து வைத்துக் காப்பாற்றி வருகிறேன். அதுக்கு ஏதாவது ஒரு வழி பண்ணணுமோல்லியோ?"

"என்ன அழகிரிசாமி, நீர் பேசுறதைப் பார்த்தால் அது யாரோ, நீர் யாரோ என்பதுபோல் இருக்கிறது. தனலக்ஷ்மி உமர் மகள்தானே. அதன் குழந்தை உமக்குப் பத்மாவைப்போல் ஒரு பேத்திதானே. உம்கிட்டே என்ன, பணம் குறைச்சலாயிருக்கா? ஒரு கண்ணுக்கு வெண்ணெயும் மற்றொரு கண்ணுக்குச் சுண்ணாம்பும் வைப்பது நியாயமா? அந்தப் பெண் சுவாதீனமாகவும் இந்தப் பெண் பராதீனமாகவும் போயிடுத்தா உமக்கு? நான் கொடுத்தா இந்தப் பெண் சாப்பிடணும்? நீரும் அதுக்கு ஏதாவது ஒரு பங்கு ஏற்படுத்தத்தான் வேணும். நான் தனலட்சுமிக்குக் கொஞ்ச நகைகள் போட்டிருப்பேனா? உலகத்திலுள்ள நகையில் எது குறைச்சல் அவளுக்கு? அந்த நகையெல்லாம் இப்போ எங்கே போச்சு? அந்தக் காலத்திலேயே ரூபாய் பதினாயிரத்துக்கு நகைகள் செய்து கொடுத்திருக்கிறேன். நீர் எப்போது விவகாரத்துக்கு

என்னை இருக்க நினைக்கிறீரோ அப்போது நானும் அந்தக் கணக்குகளை உம்மைக் கேட்கத்தானே வேண்டும்?''

''இருக்கிற நகைகள் இந்தப் பெண்ணிடந்தான் இருக்கின்றன. ஐந்தாறு வருஷம் நீங்கள் கவனிக்காமல் இருந்ததில் தனலட்சுமி ஏதோ இதையும் அதையும் விற்றுச் சுட்டுச் சாப்பிட்டு விட்டாற்போல் இருக்கிறது. சொச்சம் மிச்சத்தை இந்தப் பெண்தான் உடம்பில் போட்டுக்கொண்டிருக்கிறது.''

''அழகிரிசாமி, நீர் பேசுவது உம்முடைய ஈவிரக்கமில்லாத தன்மையைக் காண்பிக்கிறது. லக்ஷக்கணக்காக லேவாதேவி பண்ணும் நீர் உம்முடைய பெண் நகையை விற்றுச் சுட்டுச் சாப்பிடும்படியான ஸ்திதியில் அவளை உபேக்ஷித்தது மிகக் கொடுமையிலும் கொடுமை. எந்தத் தகப்பனாவது இப்படிச் செய்திருப்பானா?''

''அந்தப் பெண்ணின் போக்கு ஒரு மாதிரி. முதலிலிருந்தே எனக்குப் பிடிக்கவில்லைங்க. அதனால் விலகிப் போயிடுத்துங்க.''

''போக்கு என்ன பிடிக்காத போனாலும் என்ன விலகிப் போயிருந்தாலும், ஆபத்துக்கு உதவாத தகப்பன், உம்மைப்போல் ஒருவன் இருக்க மாட்டான். உம் நடத்தையையெல்லாம் நீர் மறந்துவிட்டு இப்போது என்னிடத்தில் உம் கைவரிசையைச் செலுத்தப் பார்க்கிறீர். கோர்ட்டில் போனால் வழக்காட வழி எனக்குத் தெரியும். ஆனாலும் அந்தக் குழந்தையிடம் உள்ள அநுதாபத்தின் பேரில் ஏதோ கொடுக்கச் சித்தமாயிருக்கிறேன். நீர் என்ன கொடுக்கிறீர்; அதை முதலில் சொல்லும். உம்முடைய கடமையைக் கழித்துக்கொள்ள நீர் யோசிப்பதை நான் ஒரு நாளும் நிறைவேற விடமாட்டேன். ஆகையால் நிதானித்துப் பேசும். ஒரே உறுதி வார்த்தை சொல்லுகிறேன், கேளும். நீர் அந்தப் பெண்ணின்பேரில் எவ்வளவு ஸ்தாபனம் செய்கிறீரோ அவ்வளவு தொகை நானும் செய்யத் தயாராக இருக்கிறேன். இருவருடைய பாத்தியதையும் சம

மான பாத்தியதை என்ற அடிப்படையில் தஸ்தாவேஜி ஏற்படுத்துவதாக இருந்தால் என்னிடம் பேசும்; இல்லையேல் கோர்ட்டில் பேசிக்கொள்வோம். அந்தப் பெண்ணுக்குக் கோர்ட்டு மூலம் உம் சொத்தில் சரிபாதிப் பங்கை வாங்கி வைக்காமல் போனால் என் பெயரை மாற்றிக்கொள்வேன். உம் மிரட்டல்களுக்குப் பயப்படுபவன் நான் அல்ல.''

''ஐயா! ஸ்வாமி, நீங்க கோவிச்சுக்காதீங்க. நீங்க சொல்றபடி கேட்க நான் தயாராக இருக்கிறேன். நம்பகிட்டேயிருந்த பணமெல்லாம் சேதமாய்ப் போயிடுத்துங்க. ஏதோ இருக்கிறதில் கொஞ்சம் கொடுக்கறேங்க. நீங்களும் அம்மாதிரி கொடுத்து ஓர் ஏற்பாட்டைப் பண்ணி அந்தக் குழந்தைக்கு அதுவாகப் பார்த்து விரும்பும் வரனுக்கு ரிஜிஸ்டர் விவாகத்தையும் நீங்க கூட இருந்து முடித்து வைத்துவிடுங்க. பத்மாவுக்கு ஒரு வரன் நிச்சயம் பண்ணி இருக்கிறேங்க. இரண்டையும் சேர்த்து உடனே முடித்து விடலாமென்று உத்தேசம். நீங்க கொஞ்ச நாளைக்கு இருக்கலாமோ இல்லியோ?''

''இருப்பதைப்பற்றி ஆட்சேபம் இல்லை. பத்மாவுக்கு எப்படி நிச்சயம் பண்ணியிருக்கிறீர்?''

''டைரெக்டர் சக்கரபாணியைத் தீர்மானித்திருக்கிறது.''

''ஓகோ! அப்போது அவன் பேரில் எவ்வளவு சொத்து எழுதிவைக்கிறீர்?''

''சக்கரபாணி பெரிய லக்ஷாதிபதி. அவர் ஒன்றையும் எதிர்பார்க்கவில்லை. நான் ஏதாவது ஒரு பத்து ரூபாய்க்குச் செய்யலாமென்று உத்தேசம்.''

''அந்தப்படி உஷாவுக்கும் செய்யலாமோல்லியோ?''

''இதுக்கு நீங்க சொன்னபடி சம பாத்தியதையாகவே ஏற்றுக்கொள்வோம். நான் ஐயாயிரத்துக்கு ஏற்பாடு பண்ணுகிறேன். தாங்களும் அந்தத் தொகைக்குச் சம்மதித்தால் சரியாகப் போய்விடுகிறது.''

"சரி, வரன் எப்படி நிச்சயம் பண்ணியிருக்கிறீர்? குழந்தையைக் கூப்பிடும், பார்ப்போம்."

"பெரியவங்க வீட்டுக் குழந்தைதான் இங்கேகூட வந்திருக்கு. குழந்தையையும் கூப்பிடறேன்; அவரையும் கூப்பிடறேன்; பாருங்க."

* * * *

ஆரம்பம் முதற்கொண்டே ராமநாதனுக்குப் பத்மாவின் தாத்தாவுடன் பேசுகிறவருடைய குரல் பரிசயமான குரலாக இருந்தது. 'நமக்கு ரொம்ப நெருங்கின பேர்வழி யாரோதான் அவர்' என்று முதலிலேயே அவன் தீர்மானித்துவிட்டான். மேலும் மேலும் சம்பாஷணை காதில் விழுந்தபோது, அந்தப் பேச்சுத் தோரணையிலிருந்த விறுப்பும், ஊதாரித்தனமும், எதிராளியை மதிக்காத மனோதிடமும் கண்டிப்பும் அவனுக்கு இன்னார்தான் பேசுகிறாரென்று நிச்சயப்படுத்திக் கொடுப்பதுபோல் இருந்தன. தொனியும் வரவர அவன் சந்தேகங்களை விலக்கி, வந்திருப்பவர் இவர்தாம் என்று திட்டமாய் மனத்துக்குச் சுட்டிக் காட்டக் கூடியதாக இருந்தது. நரஸிம்மராஜபுரம் ரைஸ் மில் பிரஸ்தாபம் காதில் விழுந்ததும் அதையும் தொனியையும் பேச்சு வார்த்தைகளுடைய தோரணையையும் ஒத்துப் பார்த்துக்கொண்டு ராமநாதன் உஷாவைப் பார்த்து லேசாகச் சிரித்தான். அப்போது உஷா, "என்ன சிரிக்கிறீர்கள்?" என்று வினவினாள். "சற்றுப் பொறு. நீ யார், நான் யார் என்பது வெளியாகப் போகிறது. ஆனால் நீ உன் அப்பாவைப் பார்க்கப் போகும் போது, நான் கூட வரமாட்டேன். வீட்டை விட்டுத் தற்சமயம் நழுவிவிட எனக்கு மெல்ல ஒரு வழி சொல்லு. வந்திருப்பவர் கண்ணில் நான் இப்போது படக் கூடாது. "உண்மைதானா? ஏன்? என் தகப்பனாரால் உங்களுக்கு என்ன தீங்கு வரும்? நீங்கள் ஏன் பயப்பட வேண்டும்?" என்று உஷா கவலையுடன் கேட்டாள். "இல்லை உஷா! என்றால் இந்தச் சந்தர்ப்பத்தில் அவ

ரைப் பார்க்க முடியாது. நான் உடனே வெளியே போய் விட வேண்டும். இதோ அவர்கள் பேச்சு முடியப் போகி றது. நீ அழைக்கப்படுவாய். நான் தப்பியோட ஒரு வழி சொல். மற்றதைப் பின்னால் பேசிக்கொள்வோம்.''

உஷா பரபரப்புடன் எழுந்திருந்து மற்றொரு பக்க மாக அந்த ரூமினின்றும் ராமநாதனை வெளியே அழைத் துச் சென்று, இப்படியும் அப்படியும் புகுந்து அவன் தந்திரமாக வீதியை அடைய வழியைக் காண்பித்தாள். அவள் திரும்பித் தன் ரூமுக்குள் வருவதற்கும் அழகிரி சாமி அந்த ரூமைத் திறந்து அவள் பிதாவைப் பார்க்க அவளை அழைப்பதற்கும் சரியாக இருந்தது.

உஷா தன் பிதாவான சியாமளாம்பாபுரம் மைனர் சிவராம ஐயர் அவர்களின் பாதங்களில் வணங்கி நின்றாள். அவர்தாம் அவள் பிதாவென்பது இதற்குள் வாசகர் களுக்கு விளங்கியிருக்கலாம். சிவராமனின் மைனர் வியா பகங்களில் நரசிம்மராஜபுரம் ரைஸ் மில் ஒன்று. ரைஸ் மில் தனலக்ஷ்மியின் கூட்டுறவை ஒருவாறு மறைப் பதற்காக ஏற்படுத்தப்பட்ட வியாஜமானகையால், அது லாபகரமாக முடியவில்லை. சுமார் பத்து வருஷங்களில் ஐம்பதினாயிரம் ரூபாய்களை விழுங்கிவிட்டு ரைஸ் மில் அந்தர்த்தான மடைந்தது. தனலக்ஷ்மியால் ஏற்பட்ட செலவுகளும் இந்தப் பெரும் நஷ்டத்தில் ஒரு சிறு பகுதி யாக ஒளிந்துகொண்டது. சகுந்தலை பிறந்ததும் தாம் தபஸ்வி என்பது ஞாபகம் வந்து மேனகையையும் சகுந்தலை யையும் ஒரேயடியாக உதறி எறிந்துவிட்டு விசுவா மித்திரர் வேறு திக்குக்குத் தபசுக்குச் சென்றதுபோல் ரைஸ் மில் ஒழிந்ததும் தனலக்ஷ்மியையும் உஷாவையும் ஒரே வெட்டில் மறந்துவிட்டு, சியாமளாம்பாபுரம் திரும்பி, வெகு யோக்கியமாகவும் அடக்கமாகவும் குடித்தனம் ஆரம்பித்தார் சிவராமன். அவர் உஷாவைப் பார்த்தது சுமார் எட்டு ஒன்பது வயதில். இப்போது தம் அழகிய குமாரியைக் கண்குளிரப் பார்த்ததும் அவர் உள் ளத்தில் அன்பு பெருகியது. தாயில்லாக் குழந்தையாகி

விட்டாளே என்று பரிதாபம் பொங்கி எழுந்தது. "உஷா!" என்று அவளை எடுத்துத் தழுவிக்கொண்டு ஒரு துளி கண்ணீரும் சிந்தினார். அவளுடைய சங்கீதப் பயிற்சி, நாட்டியக் கலையில் தேர்ச்சி எல்லாவற்றையும் கேட்டு அகமகிழ்ந்தார். பின்பு அவள் விவாகத்தைப்பற்றிப் பிரஸ்தாபம் வந்தபோது, "உஷா! உனக்கு இசைந்த நாயகன் இங்கேயே வந்திருக்கிறாராமே; அவரை நான் பார்க்க விரும்புகிறேன்" என்று சிவராமன் கேட்டார்.

"அவர் சற்று முன்பு வெளியே போய்விட்டார்" என்றாள் உஷா. அழகிரி அவளை நம்பாதவர்போல் ரூமில் எல்லாம் நுழைந்து தேடிப் பார்த்தார்.

"அவர் யார்? என்ன பெயர்?" என்று சிவராமன் விசாரித்தார். பத்மாவின் 'கிளாஸ்மேட்' என்றும் பெரியவங்க வீட்டுப் பிள்ளையென்றும் அழகிரி சொன்னார். உஷா தன்னிடமிருந்த ஒரு புஸ்தகத்தைக் கொண்டுவந்து காண்பித்து, "இதில் அவர் பெயர் இருக்கிறது; பாருங்கள்" என்றாள். அது ஸ்ரீ தியாகையர் அவர்களின் அரிய பெரிய கீர்த்தனைகள் அடங்கிய ஒரு புஸ்தகம். அதன் முதல் தாளில், 'மிஸ் உஷாவுக்கு வி. ராமநாதனால் அன்புடன் அளிக்கப்பட்டது' என்று வரையப்பட்டிருந்தது. சிவராமன் மேற்படி வி. ராமநாதனுடைய ஆகிருதி, லக்ஷணங்களைப்பற்றி விசாரித்தார். மனத்துக்குள் ஒருமாதிரியாக நிச்சயமும் செய்துகொண்டார். ஒரு பக்கம் திருப்தியும் மற்றொரு பக்கம் ஆத்திரமும் அவருக்கு உண்டாயின. மறு நாள் வருவதாக அழகிரியிடம் விடை பெற்றுக்கொண்டு சிவராமன் தம் தமக்கையின் வீட்டுக்குச் சென்றார்.

* * * *

வீட்டுக்குச் சிவராமன் சென்றதும், "ராமநாதன் இருக்கிறானா?" என்று விசாரித்தார். சங்கரி நிமிர்ந்து பார்த்து, சற்று ஆச்சரியப்பட்டவள்போல், "மாமா வந்திருக்கிறாரா என்று மருமான் விசாரிக்கிறான். மருமான்

எங்கே என்று மாமாக்காரனாகிய நீ விசாரித்துக்கொண்டு வருகிறாய். இதென்ன அதிசயமாக இருக்கிறது!" என்றாள்.

"நான் வந்திருக்கிறேனா என்று விசாரித்தான் ராமநாதன்? என்னை எங்கே பார்த்தானாம்?"

"அவன் வாடகை சைக்கிளை எடுத்துக்கொண்டு எங்கேயோ காலையில் அவசரமாகப் போய்க்கொண்டிருந்தானாம். எதிரே டிராம் வண்டியில் நீ உட்கார்ந்திருந்ததைப் பார்த்தானாம்."

"பலே புளுகு! என்னையா டிராம் வண்டியில் பார்த்தான்? இப்போது எங்கே அந்தப் புளுகன்?"

"ஏனடா, என்ன சமாசாரம்? என்ன புளுகு? நீ தான் இருக்கட்டும், ஊரிலிருந்து எப்போது வந்தாய்? நீ போய் இரண்டு மூன்று நாட்கள்தானே ஆகின்றன; இப்போதுதான் ரெயிலிலிருந்து வருகிறாயா? மணி பதினொன்று ஆகிவிட்டதே! வேறு எங்கேயாவது இறங்கி விட்டு வருகிறாயா? அவனோ உன்னைப் பார்த்தேன் என்று சொல்லுகிறான். நீயோ புளுகு என்கிறாய். எனக்கு ஒன்றும் புரியவில்லையே."

"நான் எல்லாவற்றையும் விவரமாகச் சொல்லுகிறேன், அக்கா. அவன் எங்கே போயிருக்கிறான்?"

"அது எங்கே போச்சோ எனக்குத் தெரியாது! வந்தால் வந்ததில் சேர்த்தி, வராவிட்டால் இல்லை. அந்த நாளில் நீ இப்படித்தான் வீட்டில் வயிற்றெரிச்சலைக் கொட்டிக்கொண்டாய். உன்னைக் கொண்டு பிறந்திருக்கிறான் உன் மருமான்!"

"சங்கரி, உன் வாய்க்குச் சர்க்கரை போடவேண்டும். அகத்தில் இருக்கிறதா, அல்லது ஒரு வீசை வாங்கி வரட்டுமா?"

"அது கிடக்கட்டும். நீ வந்த காரியத்தைச் சொல்லு. இல்லாவிட்டால், வீண் பேச்சு வேண்டாம்; சாப்பிட உட்காரு."

"நான் வந்த காரியத்தைச் சொல்லுகிறேன், கேள். நான் இங்கிருந்து ஊருக்குப் போனதும் எனக்கு ஒரு ரிஜிஸ்டர் நோட்டீஸ் காத்துக்கொண்டிருந்தது."

"யாரிடமிருந்து?"

"என் பிரதிவாதியினுடைய வக்கீலிடமிருந்து."

"உனக்குப் பிரதிவாதி யார்?"

"அதை இப்போது கேட்காதே. அப்புறம் சொல்லுகிறேன். நான் ரெயிலை விட்டு இறங்கியதும் நேராக நோட்டீஸ் கொடுத்த வக்கீலிடம் போய்ப் பிரதிவாதியையும் சந்தித்துக் காரியங்களைப் பேசி முடித்துவிட்டு வருகிறேன்."

"பின்னே நீ வரும்போது ராமநாதனை விசாரித்துக்கொண்டு வருவானேன்? நீ ஊருக்கு வந்திருப்பதைத்தான் அவன் எப்படித் தெரிந்துகொண்டான்?"

"நான் போயிருந்த இடத்துக்கு அவன் முன்னதாகவே வந்திருந்ததாகத் தெரிகிறது. நான் போனதும் என் கண்ணில் படாமல் அவன் மறைந்துவிட்டதாகவும் தெரிகிறது. அவனை வைத்துக்கொண்டு இப்போது எல்லா ரகசியங்களையும் உடைத்துப் பேசிவிட வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன்."

"நீ சொல்லுகிறதையெல்லாம் பார்த்தால், உன் விவகாரம் நரஸிம்மராஜபுரத்தில் நீ வாழ்ந்த வாழ்வுக்குச் சம்பந்தப்பட்டதாக இருக்கும்போல் இருக்கிறதே!"

"நன்றாகச் சொன்னாய்!"

"ஜீவனாம்ச வியாஜ்யமோ?"

"ஆமாம்."

"அவள்தான் ஓடிப்போய்விட்டாளாமே. அப்புறம் ஏது வியாஜ்யம்?"

"அவளுக்குப் பெண் இருக்கிறதோ இல்லையோ?"

"அது அல்பாயுஸில் போகலையா?"

"சபிக்காதேடி, சங்கரி. அவள்தான் உன் நாட்டுப் பெண்."

சங்கரியம்மாள் திடீரென்று அப்படியே உட்கார்ந்துவிட்டாள்.

"ஐயோ சிவராமா! இதென்னடா குடியைக் கெடுக்கிற வார்த்தை! நிஜந்தானா? வாஸ்தவந்தானா? இது அவர் காதில் விழுந்தால், என்ன பாடு படுத்திவைக்க மாட்டார்! அவரும் ஊரில் இல்லையே! என்னடா நடந்தது, சிவராமா? நிஜத்தைச் சொல்லடா! நான் செல்லத்தைப் பண்ணிக் கொள்ள மாட்டேனென்று ஏதோ விளையாட்டாகச் சொன்னதற்காக நீ இப்படி என் குடும்பத்தைக் கவிழ்க்க ஏற்பாடு பண்ணிவிட்டாயோடா? இந்தத் தத்தாரிப் பிள்ளை அந்த எழவுக்குத்தான் போர்ஜரி பண்ணி, பாங்கிலிருந்து ஆயிரம் ரூபாய்ப் பணத்தை வாங்கி, அங்கே கொண்டுபோய்த் தொலைச்சுடுத்தோடா! அந்தச் சாதுப் பிள்ளை சீதாராமன் பேரில் எல்லோரும் சந்தேகப்பட்டேளே! உங்க அத்திம்பேர் மட்டும் ஒரே உறுதியாக இந்தத் தத்தாரிப் பயல் தான் ஏதோ எக்கச்சக்கம் பண்ணியிருககிறான் என்று சொல்லிக்கொண் டிருந்தாரே! எனக்கு இப்போது தானடா புரிகிறது. ஏண்டா, சிவராமா! இப்போதாவது அதுக்கு ஒரு கல்யாணத்தைப் பண்ணிவைத்து, நல்ல வழியில் திருப்ப முடியுமாடா! இல்லை, உனக்கும் உன் மருமான் இம்மாதிரி அழிந்துபோவதில் சந்தோஷந்தானா?"

"இந்தா சங்கரி! வீணாக அங்கலாய்க்காதே! எனக்கு ஒன்றும் விஷயம் தெரியாது. பத்மா என்ற ஒரு பெண் இவனுக்குக் கிளாஸ்மேட். அவள் சிநேகத்தை வைத்துக்கொண்டு இவன் அவள் வீட்டுக்குப் போகத் தொடங்கியிருக்கிறான். அந்தப் பத்மா என்பவள் தனலக்ஷ்மியின் தமக்கை பெண்."

"உன் வைப்பு தனலக்ஷ்மியா?"

ஆமாம்! அங்கே என் வைப்பின் மகளை இவன் பார்த்திருக்கிறான். இருவருக்கும் சிநேகம் உண்டாயிருக்கிறது. இன்று காலையில் நான் அந்தப் பெண்ணுக்காக ஜீவனாம்ச விவகாரம் தொடர்ந்த அவள் தாத்தாவுடன் பேசிக்கொண்டிருந்தபோது, அங்கே வந்திருந்த இந்தப் பயல் என்னைக் கண்டு ஓடிவிட்டதாகத் தெரிகிறது. இவ்வளவுதான் சமா

சாரம். நான் இருக்கும் வரையில் அவன் இங்கே கண்ணில் படமாட்டான் என்றுதான் நினைக்கிறேன். இந்தப் பயல் இப்படிப் போவான் என்று நான் சொப்பனத்தில்கூட நினைக்கவில்லை.''

''ஆனால் இப்போ மேலே நாம் என்ன பண்ணுகிறது! அவனை எங்கே போய்த் தேடிப் பிடிப்பது? எங்கேயாவது போய்ப் பிடித்து, அவனைக் கொண்டுவந்து ஓர் அறைக்குள் போட்டுப் பூட்டி விட்டாயானால், எனக்கு மனசுக்குத் திருப்தியாக இருக்கும். பிற்பாடு அவன் தகப்பனார் வந்து செய்கிறபடி செய்துகொள்ளட்டும்.''

''அத்திப்பேர் எப்போது வருவார்?''

''காந்திமதிக்கு வரன் நிச்சயம் பண்ண நாக்பூர் போயிருக்கிறார். காரியத்தை முடித்துக்கொண்டு நாலைந்து நாட்களில் வருவதாகச் சொன்னார். போய் இரண்டு மூன்று நாள் ஆகிவிட்டது.''

''நாளைக்கே அந்தக் கிழவன் இரண்டு பெண்களுக்கும் ரிஜிஸ்டர் கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்யப்போவதாகச் சொன்னான்.''

''ஐயையோ! அவரும் ஊரில் இல்லையே! இந்தப் பயலும் ஒளிந்துகொள்ள ஆரம்பித்துவிட்டானே! இந்த அக்கிரமத்தை எப்படித் தடுப்பது?''

''அக்கா, நீ விசாரப்படாதே! அதற்கு விசை என் கையில் இருக்கிறது. அந்தக் கிழவன் என்னைச் சாட்சியாக வைத்துக்கொண்டுதான் ரிஜிஸ்டர் ஒப்பந்தத்தை நடத்தப் போகிறான். நானும் வரன் இன்னாரென்று தெரிந்துகொள்வதற்குமுன் கன்னிகாதானத்தை நடத்தித் தருவதாக ஒப்புக்கொண்டேன். பிற்பாடுதான், வரன் நம்ப ஆசாமிதான் என்று ஊகித்து அறிந்தேன். அந்தக் கிழவன் அந்த விவாகச் சடங்குகளை நடத்தத் தீர்மானிக்கும் தேதியில், எனக்குத் தகவல் வரும். நான் சரியானபடி இதற்கு முட்டுக்கட்டை போட்டுவிடுகிறேன். அதற்கு வேண்டிய யோசனைகளைச் செய்து வைத்திருக்கிறேன்.''

"நீ மட்டும் சிவராமா, அந்த மாதிரி அந்த விலங்கி லிருந்து அந்தப் பிள்ளையை விடுவித்துக்கொண்டு வந்து விட்டாயானால், செல்லத்துக்கும் காந்திமதிக்கும் ஒரே முகூர்த்தத்தில், ஒரே பந்தலில், விவாகங்களை நடத்தி விடுவோம். நான் அப்போது சொன்னேனே என்பதை மனத்தில் வைக்கவே வைக்காதே. இப்போது நான் சொல்லுகிற வார்த்தை உறுதி. அவரும் ஒருபோதும் ஆட்சேபிக்கமாட்டார்."

"சரி அக்கா, இலையைப் போடு; சாப்பிட்டுவிட்டு எங்கேயாவது தேடி அந்தப் பயலைக் கொண்டுவந்து விடுகிறேன்."

சிவராமன் இலையில் உட்கார்ந்து பரிமேஷசனம் பண்ணும் முன், வாசலில், "ஸார், யார் வீட்டில்?" என்ற அதிகார தோரணையோடு கூடிய குரல் கேட்டதுடன் கதவும் தடதடவென்று இடிக்கப்பட்டது.

* * *

சிவராமன் வாசல் கதவைத் திறந்ததும் 841 லக்க மிட்ட சிவப்புத் தலைப்பாகை காட்சி யளித்தது.

"யார்? என்ன விசேஷம்?" என்றார் சிவராமன் திடுக்கிட்டுப் போய்.

சங்கரியும் பின்னே வந்து நின்றாள்.

"இந்த வீட்டு எஜமான் ஊரிலேயிருந்து வந்து விட்டாங்களா என்று ஸப் இன்ஸ்பெக்டர் ஐயா பார்த்துக் கிட்டு வரச்சொன்னாங்க."

"ஐயா இன்னும் வரவில்லை. வர இரண்டு நாட்கள் ஆனாலும் ஆகலாம். ஏன்? என்ன விசேஷம்?"

"இல்லிங்க, எசமான் மகன் ஸ்டேட்மெண்டுக் கொடுத்துட்டாருங்க. அதைத்தான் சொல்லிவிட்டு வரச் சொன்னாங்க."

"ஏது ஸ்டேட்மெண்டு? யார், ராமநாதனா கொடுத் திருக்கிறான்?"

"ஆமாங்க. உங்களுக்குத் தெரியாதுபோல் இருக்கு. நீங்க யாருங்க?"

"நான் அந்தப் பையனின் மாமன். என்ன கேஸ் அவன் பேரில்? ராமநாதன் போலீஸ் வசத்திலா இருக்கிறான்?"

"போர்ஜரி கேஸுங்க. இரண்டு நாள் முன்னேயே அரெஸ்டு பண்ணி ஜாமீன் பேரிலே விட்டுதுங்க. நேத்திக்குப் பாங்கியிலேயிருந்து கேஸைப்பற்றிக் கேள்வி வந்ததன் பேரில் பையனைத் தேடி இன்னிக்கு ஸ்டேஷனில் ஆஜர்ப் படுத்தினேனுங்க."

"யார் ஜாமீன் கொடுத்தது?"

"யாரோ அழகிரிசாமியாம். அதையெல்லாம் என்னைக் கேட்காதீங்க."

"யாரடா அழகிரிசாமி?" என்றாள் சங்கரி பின்னாலே இருந்து.

"அப்புறம் சொல்லுகிறேன், அக்கா" என்று அவளுக்குப் பதில் சொல்லிவிட்டுச் சிவராமன் 841ஐ மேலும் வினவினார்.

"என்ன ஸ்டேட்மெண்டு?"

"நீங்க வந்தீங்கன்னா, இன்ஸ்பெக்டர் ஐயா கிட்டே அதெல்லாம் கேட்டுக்கொள்ளலாம்."

"சிவராமா, நீ போய் அவனை அழைத்து வா. உன் அத்திம்பேர் அப்போதே இந்தப் போர்ஜரியைக் கண்டுபிடிக்காமல் விடப் போவதில்லை என்று சொன்னார். அதுதான் விஷயமாக இருக்கும். நீ நேரில் போனால் எல்லாவற்றையும் விசாரித்துக்கொண்டு இந்தக் கழிவடையையும் சாப்பாட்டுக்கு அழைத்து வந்துவிடலாம்" என்று சிறிய குரலில் பின்னேயிருந்து தூண்டுதல் செய்து முடிக்கும் முன்னமேயே சிவராமன் 841 - உடன் போலீஸ் ஸ்டேஷனுக்குப் புறப்பட்டார்.

போலீஸ் ஸ்டேஷனில் ராமநாதன் ஒரு வட்ட மேஜையின் ஒரு புறத்தில் நாற்காலியில் வீற்றிருந்தான். அவன் எதிரில் இன்ஸ்பெக்டர் உட்கார்ந்திருந்தார். மேஜையின் மேல் காகிதம், மைக்கூடு, பேனா இவைகள் தென்பட்டன. சிவராமனுக்கு இன்ஸ்பெக்டர் நல்வரவு கூறித் தம் பக்கத்தில் அவரை உட்காரச் செய்தார். ராமநாதன் சிவராமனைப் பார்த்து ஓர் உவர்ப்பான சிரிப்புச் சிரித்துக்கொண்டான். பின்பு அவன் கண்கள் இன்ஸ்பெக்டர் மேலும் மேஜையின் மேலிருந்த காகிதத்தின் பேரிலும் விழுந்தன.

"என்னடா ராமநாதா?" என்று கேட்டுக்கொண்டே உட்கார்ந்தார் சிவராமன்.

"வாருங்கோ மாமா. அப்பா ஊரில் இல்லாததால், உங்களைத்தான் அழைத்து வருவான் 841 என்று எனக்குத் தெரியும்" என்றான் ராமநாதன் திடத்துடனும் அலக்ஷ்யத்துடனும்.

ராமநாதன் இனிக் குழந்தை அல்ல. ஆளாகி விட்டான் என்பதைச் சிவராமன் உணர்ந்தார். அவர் ஸப் இன்ஸ்பெக்டருடன் சம்பாஷிக்கலானார்.

ராமநாதனின் ஸ்டேட்மெண்டு அவர் பார்வைக்குக் கொடுக்கப்பட்டது. முதல் நாள் சீதாராமன் மாற்றிய செக் தன்னால் ஓர் அவசர நிமித்தம் போர்ஜரி செய்யப் பட்டதென்றும், இரண்டாவது நாள் செக் ருஜுவானது தான் என்றும், அதில் தொகை அளவு மட்டும் எழுத்தால் எழுதப்படாததால், தன்னால் எழுதப்பட்டதென்றும் ராமநாதன் வாக்குமூலம் கொடுத்திருந்தான்.

சிவராமன் ராமநாதனைக் கண் விரித்து நோக்கினார். ராமநாதன் உறுதியுடன் அவரைத் திரும்பி நோக்கினான். ராமநாதனிடம் முன்போல் பேசச் சிவராமனுக்கே பயமாக இருந்தது. சிவராமன் இன்ஸ்பெக்டரைப் பார்த்து,

"இந்த ஸ்டேட்மெண்டை என்ன செய்யப்போகிறீர்கள்?" என்று கேட்டார்.

"ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் பாங்குக்குத் தகவல் கொடுத்திருந்ததன் பேரில் இந்த விசாரணை நடத்தப்பட்டது. மேல் நடவடிக்கை ஐயர் அவர்களின் அபிப்பிராயப்படி நடத்த வேண்டியதுதான்."

"சரி, கிழித்தெறியுங்கள் இந்த ஸ்டேட்மென்டை; விஷயம் புரிந்துவிட்டது. இனி இதனால் புண்ணியம் இல்லை."

"எதற்கும் ஐயர் வரட்டும்."

"சரி வரட்டும். ராமநாதனை நான் அழைத்துச் செல்லலாமல்லவா?"

"அழைத்துச் செல்லலாம்."

* * *

சிவராமனும் ராமநாதனும் ஒரு டாக்ஸியில் ஏறிக் கொண்டார்கள்.

"ஏன்டா ராமநாதா, போர்ஜரி பண்ணிப் பணம் பெறும்படி உனக்கு அவ்வளவு முடை என்ன வந்தது?"

"எல்லாம் அந்தக் கிராதகன் அழகிரியால் வந்தது தான்."

சிவராமன் விவரம் கேட்க ராமநாதன் ஒன்றையும் ஒளியாமல் அன்று ஸினிமாப் பார்க்கப் போய்த் தான் அகஸ்மாத்தாக அழகிரியிடம் எலி, பொறியில் மாட்டிக் கொண்டதுபோல் மாட்டிக்கொண்டு வைரப் பித்தான்களைப் பறிகொடுத்த பரிதாபக் கதையை எடுத்துக் கூறினான். மறு நாள் அந்த அடகை மீட்கவும் தன் ரகசியத்தைக் காக்கவும் தான் போர்ஜரி செய்ய நேரிட்டதையும் சீதாராமனைத் தான் அறியாக் கருவியாக உபயோகப்படுத்திக்கொண்டதையும் ராமநாதன் சிவராமனுக்குச் சொன்னான்.

"சீதாராமனுக்கு உன் மர்மங்கள் தெரியுமோ?" என்று கேட்டார் சிவராமன்.

"அன்று சாயந்தரம் காலேஜில் எல்லா விருத்தாந்தங்களையும் அவனிடம் சொல்லிவிட்டேன். அதனால்தான் அவன் அப்படியே ஊருக்குப் புறப்பட்டுவிட்டான்."

"அவன் வீட்டுக்கு வந்து உடனே உன் குட்டை வெளிப்படுத்தியிருக்க வேண்டும்."

"அப்பேர்ப்பட்ட சிநேகிதன் அவன் அல்ல. தான் ஓடிப்போனதால் என் குற்றத்தைத் தன்மேல் சுமத்திக் கொண்டான். திருடனை என்னைக் காண்பித்துக் கொடுக்காமல் என் இஷ்டம்போல் நான் கபடமாக நடந்துகொள்ள இருள் கவசத்தை எனக்கு அளித்தான்."

"கதையில் வரும் குரங்கு, குளக்கரையில் தூங்கும் எஜமானனின் கட்டுச் சாதத்தைத் தின்றுவிட்டு ஆட்டின் வாயில் தயிர்ப்பசையைத் தடவி வைத்து அந்தக் குற்றத்துக்குத் தண்டனையை ஆட்டுக்கு வாங்கிக் கொடுத்ததுபோல் நீ, நண்பனுக்கு நட்பைச் செலுத்தினாய் போலும்!"

"என் வேலை இனிமேல் சீதாராமனை மீட்பதுதான். அவன் முக விலாசத்தை அழுக்கில்லாமல் தேய்த்துத் தெளியவைப்பதே என் கடமை. அவன் என் விஷயத்தில் தியாகம் செய்த பெருந்தன்மைக்குக் கைம்மாறு அவனுக்குச் செய்வதே முக்கியமான என் வாழ்க்கைப் பயன்."

"சரி, இப்போது அழகிரி உனக்கு மாமனாராக மகிழ்ச்சியுடன் இருப்பதாகத் தெரிகிறதே. உன்னைப் போலீஸிலிருந்துகூட ஜாமீன் கொடுத்து மீட்டுக் கொண்டு போனாரே! எதிரி உறவானது எப்படி?"

"அழகிரி என்னிடம் பகை கொண்டது பத்மாவை நான் நேசிக்கிறேன் என்ற சந்தேகத்தால்தான். அவளுக்குச் சக்கரபாணியை அவன் தயார் செய்துவைத்

திருக்கும்போது நான் சந்தேகாஸ்பதமான வேளையில் அவ ளுடன் உரையாடிக்கொண்டிருந்ததை அவன் சகிக்கவில்லை. இந்த உறவு வெளியே தெரிந்துவிட்டால் சக்கரபாணி பத் மாவை நிராகரித்துவிடுவாரோ என்ற பீதி அவனுக்கு. சக்கர பாணி பணக்காரனானதால் அவனைப் பிடித்துப் போட அழகிரி தீர்மானமாகப் பிளான் போட்டிருந்தான். இதெல் லாம் எனக்குப் பின்னால்தான் தெரியவந்தது. நான் பத்மா விடம் சாதாரண நட்புக்கு மேற்பட்ட கட்டத்தை எட்டிப் பார்க்க நினைக்கவே இல்லை. ஆனால், உஷாவை நான் பார்த்தபோது என் நிலைமை வேறு திணுசாகி விட்டது. நூறு பத்மாவைக் கொடுத்தாலும் என் உஷாவை விட நான் இப்போது சம்மதிக்க மாட்டேன்.''

''சட், இதெல்லாம் என்ன தறிதலைத்தனம்?''

''மேலும் அவள் என் மாமா பெண் என்று தெரிந்த போது...''

''சட் காலிப்பயலே! இதெல்லாம் என்ன ஒழுங்கு? நம்ம குடும்பத்துக்கு யோக்கியமாக ஒரு விவாகம் பண்ணிக் கொண்டுவிடவேண்டியது முதல் அவசியம். பிற்பாடு வீட்டில் டிபன் ருசிக்குத் தகுந்தாற்போல் கிடைக்கா விட்டால் கிளப்பில் நுழைவது நியாயமாகும்.''

''அந்த நியாயம் உங்கள் காலத்தில். இப்போது புது நாகரிகத்தில் வீடானால் வீடு, கிளப்பானால் கிளப்பு என்ற ஒரே உறுதிதான் மதிக்கப்படுகிறது.''

''ஆனால் இப்போது என்ன செய்வதாக உத்தேசம்?''

''உங்கள் மாப்பிள்ளையாகவே தீர்மானித்திருக் கிறேன்.''

''செல்லத்தைக் கல்யாணம் செய்துகொள்கிறாயா? உன் தாயாரும் இன்றுதான் மனப்பூர்வமாக அந்த விவாகத்தை அநுமதித்திருக்கிறாள்.''

''உஷா உங்கள் பெண் அல்லவா?''

''செல்லத்துக்குப் பிறகுதானே உஷா?''

"வயதிலா?"

"சீ காலிப்பயலே!"

"மாமா, நீங்கள் அழகிரியிடம் பேசியதை யெல்லாம் நான் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். இரண்டு குழந்தைகளும் உங்களுக்குச் சமம் தான் என்றும் உஷாவுக்கு நீங்கள் சொத்து ஏற்படுத்தி வைக்கப்போகிறீர்களென்றும் தெரிந்துகொண்டேன்."

"சொத்தா? ஆமாம், என் குழந்தைக்கு நான் கொடுக்க இந்தப் பயல் என்னை என்ன கேட்கிறது? அந்தக் கருமியிடம் வாங்க வேண்டியதை முதலில் வாங்கி விடவேண்டுமென்று எனக்கு உத்தேசம். இல்லாவிட்டால் அவன் நிர்த்தாக்ஷிண்யமாக நாமத்தைச் சாத்திவிடுவான். பெற்ற பெண்ணை அவன் எவ்வளவு பாடு படுத்தி வைத்திருக்கிறான்! எனக்கும் அவனுக்கும் வெகு நாளாகவே ஆகாது. அந்தக் காலத்திலெல்லாம் என்னைக் கண்டால் இந்தப் பயலுக்கு [illegible]. பணம் ஒன்றே குறி அவனுக்கு. பேராசை பிடித்த பேய். எந்த அக்கிரமத்துக்கும் பின்வாங்க மாட்டான்; கிராதகன். நெஞ்சில் ஈவு இரக்கம், பச்சாத்தாபம் இல்லாத பாவி. பேச்சு மட்டும் சர்க்கரையாகப் பேசுவான். கபடமாகப் பேசி ஆளைக் குடைகவிழ்த்து விடுவான். நீ வேண்டுமானால் பார். அவன் சக்கரபாணியை உறிஞ்சிக் கொண்டு உதறிவிடுவான்."

"மாமா, அதைமட்டும் நான் நம்ப முடியாது. பத்மா, அழகிரியைக் காலை வாரி விட்டு விட்டு ஒழுங்காகக் கௌரவமாகச் சக்கரபாணியுடன் வாழ்க்கை நடத்துவாள் என்பது நிச்சயம். அவளுடைய ஆழ்ந்த உயர்குணங்களை அழகிரி அறியச் சக்தியற்றவன்."

"அந்தப் பயல் உன்னைப் பலாத்காரம் செய்து ரூபாய் ஆயிரம் வாங்கியதை நான் திருப்பி வாங்காமல் விடப் போவதில்லை. அதையும் சேர்த்து அவன் உஷாவுக்கு

ஆறாயிரம் கொடுக்க வேண்டும். நாளைக்கு அவனைக் கண்ணில் விரல் கொடுத்து ஆட்டிவிடுகிறேன், பார்."

"எனக்கும் உங்களுக்கும் உள்ள உறவு அவனுக்குத் தெரியாதே?"

"எப்படித் தெரியும்?"

கார் வீடு வந்து சேர்ந்தது.

"அம்மாவிடம் எல்லாவற்றையும் சொல்லப் போகிறீர்களா?"

"சொல்லாமல் என்ன பண்ணுகிறது? உனக்கு மண்டகப்படி இருக்கிறது; வா உள்ளே."

"மாமா, நீங்கள் என் பக்ஷம் பேசவேண்டும். எப்படியும் உங்கள் பெண்தானே. செல்லம் என்னை விரும்பவே மாட்டாள். நீங்கள் வேண்டுமானாலும் கேட்டுப் பாருங்கள்."

"செல்லம் இல்லாவிட்டால் ஒரு செங்கு எவளையாவது கட்டிப்போடுகிறோம். அதற்காகத் தேவடியாக் குட்டியை..."

"மாமா, மாமா என்ன இப்படி ஆரம்பித்துவிட்டீர்களே. இந்தக் காலத்திலே எதுதான் நடக்கவில்லை? நீங்கள் இப்படிப் பேசுவீர்களென்று தெரிந்தால் நான் அகத்துக்கே வந்திருக்கமாட்டேனே."

மாமா சிவராமன் ராமநாதனின் வார்த்தைகளையே காதில் வாங்காதவர்போல், "அக்கா, பிள்ளையை அழைத்துக்கொண்டு வந்துவிட்டேன். மஞ்சநீர் கரைத்துக் கொண்டு வா; சுத்திக் கொட்டு" என்றார்.

"ஆமாம்; குறைச்சலில்லை! எல்லாம் இருக்கட்டும்; உள்ளே அழைத்துவா; சோறு ஆறிப்போறது."

* * * *

ராமநாதன் அதிக எதிரிகளைத் தனக்குச் சுற்றிலும் எழுப்பிக்கொள்வதில் ஈடுபட்டவன்போல் தோன்றினான்.

சங்கரி அவன்பேரில் சீறி விழுந்தாள். "ஏண்டா! வீட்டோடே, வாசலோடே, ஒழுங்காக இருக்கப்போகிறாயா. அல்லது சந்தி சிரிக்கக் கெட்டழிந்து போகப்போகிறாயா?"

"வீட்டோடே, வாசலோடே இருந்தால்தான் ஒழுங்கு என்றும் வெளியில் புறப்பட்டால் சந்தி சிரிக்கக் கெட்டழிந்து போகவேண்டுமென்றும் சொல்லும் பத்தாம் பசலிச் சித்தாந்தத்தை நான் ஒப்புக்கொள்ள வில்லை. வெளியில் போயும் ஒழுங்குடன் வாழலாம்."

"ஆனால், நீ அந்தத் தேவடியாள்..."

"இல்லை, என் மாமா பெண்ணைத்தான்..."

"அவள் அம்மா என்ன அருந்ததியோ?"

"அருந்ததியோ, ரம்பையோ? அவள் என் அம்மாமி. உன் தம்பியின் அகமுடையாள்."

"அடே, உன்னைக் கட்டேலே வைக்க! உன் மூஞ்சியிலே முழிக்க இனிமேல் யோக்கியதை இல்லை. சரி, உன் அப்பா வரட்டும்."

"அம்மா! எனக்குப் பணம் காசு வேண்டாம். அப்பா அதைத்தானே இல்லை என்று சொல்ல முடியும்?"

"ஆனால், அதை இல்லை என்று சொல்லிவிட்டாலும் உனக்குத் தைரியந்தானே? பணம் இல்லாவிட்டால் தேவடியாள் வீட்டில் என்ன காரியம்?"

"அம்மா! காதலின் மர்மம் உனக்குத் தெரியாது. பணத்துக்கும் அதற்கும் சம்பந்தமே கிடையாது. காதலுக்காக நான் எதையும் துறக்கத் தயார்."

"என்னத்தைத் துறக்கிறது? இரும்புப் பெட்டியை மறு சாவி போட்டுத் திறக்க வேண்டியதுதான். அல்லது செக்கில் போர்ஜரிக் கையெழுத்துப் போட வேண்டியது தான்."

"அம்மா, அதைப்பற்றிப் பேசாதே. நான் மாட்டிக் கொண்டிருந்த விபத்தில் யாரும் எதையும் செய்யத் துணிந்திருப்பார்கள்."

"ஆமாம், அந்த விபத்து ஏன் வந்தது? நேர் வழியில் நடந்தால் அப்படி மாட்டிக்கொள்ளும்படி ஏற்படுமா?"

"நான் போனது நேர்வழிதான். அதிலும் துரதிருஷ்ட வசத்தினால் விபத்துக்கள் வருவது உண்டு. அதை அநுதாபத்துடன் ஆராய்ந்து பார்க்காமல் என்னைப் போலீஸிடம் மாட்டிவைத்து அவமானப்படுத்தியது அப்பாவின் கடின சித்தத்துக்கு அத்தாட்சியாகிறது. என்னை அதட்டிக் கேட்க அவருக்குப் பாத்தியம் உண்டு. நானே உண்மையை ஒப்புக்கொண்டு மன்னிப்புக் கேட்டுக்கொள்ளவும், சீதாராமனுக்கு என்னால் ஏற்பட்ட இன்னல்களை விலக்கிவிடவும் சங்கல்பித்துக்கொண்டிருந்தேன். என் விஷயத்தில் துளி அநுதாபம், ஆதரவு, விட்டுக்கொடுக்கவும் பொறுத்துக்கொள்ளவும் மன்னிக்கவும் இளகிய மனப்பான்மை சிறிதாவது காண்பிக்கப்பட்டிருந்தால் நான் இன்று வேறு மாமநாதனாக இருப்பேன். நான் தவறிப்போயிருந்தாலும் திருந்தி வர எனக்கு நீங்கள் சந்தர்ப்பம் அளிக்கவில்லை. வியாதி கண்டால் அதை இன்னது என்று ஆராயாமல் தொத்துவியாதி ஆஸ்பத்திரிக்கு அனுப்பிவிடத் தயாராக இருக்கும் சுற்றத்தார் துறக்கப்பட வேண்டியவரே. இப்போது நான் உலகத்தை எதிர்த்து நின்று போராடத் தைரியம் உள்ளவனானேன். அதற்கு நீங்களே காரணம். எனக்கு நானே துணை என்பதை உணர்ந்தேன். இனி ஒருவர் உதவியும் வேண்டாம்."

"வேண்டாவிட்டால் உன் பெண்டாட்டி நாட்டியமாடி உனக்குச் சம்பாதித்துப் போடுவாளோ?"

"போடலாம். இது பெண்கள் காலந்தானே! அவர்கள் சம்பாதித்துப் போட்டுப் புருஷர்கள் சாப்பிடும் காலம் ஏன் வரக்கூடாது?"

"குசாலாய் வரட்டும்! நீயும் ஆடுகிறவளுக்குப் பின்னே தாளம் போட்டுக்கொண்டு வயிற்றை வளர். உன்னைப் பெற்ற வயிறு எரிகிறதடா!"

சங்கரிக்குத் துக்கம் குமுறிக்கொண்டு வந்தது. விம்மி விம்மி அழத் தொடங்கினாள். சிவராமன் அவளைத் தேற்றுவதில் முனைந்தார். ராமநாதன் மாடிக்குச் சென்றுவிட்டான்.

* * * *

அன்று அந்த வீட்டில் கோரமான அமைதி நிலவியது. ஒருவருடன் ஒருவர் பேசவோ, கண்ணெடுத்து ஒருவரை ஒருவர் பார்த்துக்கொள்ளவோ அஞ்சினார். எல்லார் உள்ளத்தையும் ஒரு திகில் பற்றிக்கொண்டிருந்தது. பெரிய மின்னலைக் கண்டதும் பெரிய இடி இடிக்கப்போகிறதென்று எதிர்பார்க்கும் மக்களின் பீதி கொண்ட நிலைமை யாவரிடமும் காணப்பட்டது.

செல்லமும் காந்திமதியும் வழக்கம்போல் பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும், தன் தன் ரூமில் இரவு வரக் கண்ட பக்ஷிகள்போல் பதுங்கினர். மதுரப்பாட்டு வெடிமறந்து உற்பத்திசாலையில் நடமாடுபவள்போல் எச்சரிக்கையுடன் நடந்துகொண்டாள். சிவராமனும் தம் சுபாவமான கலகலப்பைச் சிறிது அமுக்கியே வைத்துக்கொண்டார். ராமநாதனின் குற்றம் பாதி தன்னைப் பாதிக்குமோ என்ற கவலை அவருக்கு இருந்தது. செல்லத்தை வேண்டாமென்று சொன்னதற்குப் பிரதி, தானே ராமநாதனுக்கு உஷாவைத் தயார் செய்திருக்கலாம் என்று அக்காவும் அத்திம்பேரும் சந்தேகிக்க நேர்ந்தால், அது மனத்துக்கு மிகுந்த ஆதங்கத்தை விளைவிக்குமே என்று அவர் ஏங்கினார். அப்படிச் சந்தேகிக்க இடம் இல்லை என்றாலும், ஆத்திரப்படுபவர்கள் காரணங்களை எங்கே விசாரிக்கிறார்கள்?

சிவராமன் செல்லத்தை நினைத்து மிகவும் துயருற்றார். அவள் ராமநாதனின் நூதனப் பற்றுக்களை உணர்ந்து மனம் உடைந்துபோவாள் என்று அவர் எண்ணினார். அன்றே

அவளைச் சியாமளாம்பாபுரத்துக்கு அழைத்துச் சென்று விடலாமா என்றுகூடத் தீவிரமாக யோசிக்கலானார். ஆனால் அழகிரியிடம் மறுநாள் உஷாவின் எதிர்கால க்ஷேம நிதி ஏற்படுத்துவதற்காகப் போகவேண்டிய அவசியத்தை உத்தேசித்து ஊருக்குப் போகும் வேகத்தை நிறுத்திக் கொண்டார். இருந்தாலும் செல்லத்தை அவள் ரூமில் சந்தித்துச் சிறிது சல்லாபத்தைத் தொடர அவர் சமயத்தை எதிர்பார்த்தார்.

சிவராமன் செல்லத்தைக் காண உள்ளே புகுந்த போது காந்திமதி அவள் பக்கத்தில் இருந்தாள். செல்லம் துயரத்தில் ஆழ்ந்திருந்ததும் காந்திமதி அவளுக்குத் தேறுதல் செய்யப் பிரயத்தனப்படுவதும் அவர் பார்த்த நிமிஷத்தில் அவருக்குப் புலனாயின. சிவராமன் காரணத்தை ஊகித்தார். ராமநாதனின் புது விருத்தாந்தங்கள் அவள் இருதயத்தைத் தாக்கியிருக்க வேண்டும் என்பது அவர் ஊகம். தாமும் பக்கத்து நாற்காலி ஒன்றில் அமர்ந்து பரிவுடனும் அநுதாபத்துடனும் தயவுடனும் மிருதுவான குரலில செல்லத்தினிடம் பேசலானார்.

"நாம் இன்றைக்கோ, நாளைக்கோ ஊருக்குப் போய் விடலாமா? செல்லம்!"

"இன்றைக்கே போகலாம், அப்பா."

"சரி, போவோம்; உனக்கு என்ன உடம்பு?"

"உடம்பு ஒன்றும் இல்லை."

"பின் ஏன் சுணக்கமாக இருக்கிறாய்?"

"சுணக்கம் ஒன்றும் இல்லை. சிறிது மயக்கம்போல் இருக்கிறது. பள்ளிக்கூடத்தில் இன்று விளையாட்டு நேரத்தில் பந்து அடித்தேன். அப்போது ஓடியாடினதில் படபடப்பு ஏற்பட்டது. திடீரென்று ஆட்டத்திலிருந்து விலகிக் கொள்ள முடியவில்லை. சற்றுப் பொறுத்துச் சிரமம் தாங்காமல் ஆட்டத்தினின்று விலகிக்கொண்டேன். காந்திமதி சோடா வரவழைத்துக் கொடுத்தாள். உடனே

இருவரும் வீட்டுக்கு வந்தோம். அதுமுதல் களைப்பும் மடக்கமுமாக இருக்கிறது."

"புருஷர்களுக்கு ஏற்பட்ட சரீரப் பயிற்சிகளை எல்லாம் பெண்களுக்கு விதிப்பது எப்படி நன்மை தரும்? ஈசுவரன் இனத்தை இரண்டாகப் பிரித்திருப்பதை நாம் உதாசீனம் செய்துவிட முடியாது. இந்த அர்த்தமற்ற சமத்துவ வாதம் ஆனர்த்தத்தில்தான் முடியும். இப்போது படபடப்பு எப்படி இருக்கிறது?"

"படபடப்பு இல்லை."

"டாக்டரை வரவழைக்கட்டுமா?"

"வேண்டாம் அப்பா! நாம் ஊருக்குப் போவோம். டாக்ஸியை வரவழையுங்கள்."

"செல்லம், நாளைக்கு ஊருக்குப் போவோம். இன்று நீ ஓய்வு எடுத்துக்கொள்வது அவசியம். நாளைக்குத்தான் பிரயாணம் செய்யச் சௌகரியமாக இருக்கும். மேலும் எனக்கு ஒரு கோர்ட் விவகாரம் நாளைக்கு இருக்கிறது. அதை முடித்துக்கொண்டு புறப்பட்டுவிடுகிறேன்."

"எனக்கு இங்கே இருப்பதே என்னவோபோல் இருக்கிறது."

காந்திமதி சிவராமனைப் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிவிட்டு, ஒரு புன்முறுவல் பூத்தாள்.

சிவராமன் அதன் தாத்பரியத்தைப் புரிந்துகொண்டதாக அவளுக்குக் கண் ஜாடை காண்பித்துவிட்டுத் தலையைக் கவிழ்த்துக்கொண்டு மேஜையின்மேல் சாய்ந்துகொண்டிருந்த செல்லத்தை முதுகில் தடவிக்கொடுத்துவிட்டு, மோவாய்க்கட்டையை அன்புடன் நுனிவிரலால் நிமிர்த்திப் பேசலானார்.

"செல்லம்! காந்திமதி உன் பக்கத்தில் இருக்கும்போது உனக்கு வீணாக ஏன் வெறுப்பும் வியாகுலமும்?

மேலும், ராமநாதன் வழிக்கு வந்துவிடுவான். அதைப் பற்றி உனக்குக் கவலை வேண்டாம்.''

"சிவராமன் மேலே பேசப்போகுமுன் காந்திமதியின் தலை பலமாக அசைந்தது. செல்லத்தின் தலை மறுபடியும் கீழே கவிழ்ந்தது. காந்திமதி ஏதோ தனியே தன்னிடம் சொல்ல விரும்புபவள்போல் சிவராமனுக்குத் தோன்றிற்று. தான் கொண்ட அபிப்பிராயங்களை அவள் திருத்தக் கருதியவள்போல் காணப்பட்டாள்.

"கொஞ்சம் காபி கொண்டுவருகிறேன் செல்லம்! மனத்தில் ஒன்றையும் நினைத்து ஆயாசப்படாதே. எதை வேண்டுமானாலும் தாராளமாக மனத்தைவிட்டுச் சொல், உன் இஷ்டப்படி நடத்திவைக்கிறேன். துளிகூட நீ சிந்திக்க வேண்டாம்; இதோ வருகிறேன்'' என்று சிவராமன் எழுந்திருந்தார்.

"நீங்கள் இருங்கள் மாமா! நான் காபி வாங்கி வருகிறேன்'' என்று காந்திமதியும் கூடவே எழுந்திருந்தாள்.

இருவரும் நடு ஹாலுக்குப் போனதும் வாசலிலே ஒரு ஹாரன் சப்தம் கேட்டது. உடனே ஒரு கார் கேட்டின் வழியே உள்ளே நுழைந்தது.

சிவராமன் வாசலுக்குச் சென்றார். காந்திமதி பின்னே தொடர்ந்தாள். செல்லம் உள்ளே விட்டு வெளியே வந்தாள். சங்கரி பின்கட்டில் இருந்தபடி எட்டிப் பார்த்தாள். மதுரம் இடதுசாரி ரூம்களைத் தாண்டிக்கொண்டு முன்பக்கம் ஜன்னல் ஒன்றை அடைந்து வந்தவர்களை ஆராயப் புகுந்தாள்.

*　　　　*　　　　*

**ஸ்ரீ**மான் வேங்கடசுப்பையர், பெண், மாப்பிள்ளை, பேரன், பேத்திகளுடன் எதிர்பாராத விதமாக வந்துவிட்டாரென்றே எல்லோரும் நினைத்தார்கள். ஆனால் கார் நின்றதும் அதற்குள்ளிருந்து இரண்டு பெண்களும், சற்று வயதான, பருமனும் உயரமுமுள்ள ஒரு மனிதனும் இறங்கினார்கள். அந்தப் பெண்கள் ஸர்வாபரண

பூவிதைகளாக ஜொலித்தார்கள். இளம் பெண், நீலப் பட்டுப்புடைவையும், யுவதியான மற்றொருத்தி ரோஸ் பட்டுப் புடைவையும் கட்டிக்கொண் டிருந்தார்கள். அவர் களை அழைத்து வந்த பெரிய மனிதர் காதில் வைரக் கடுக்கனுடனும் கையில் வீரச் சங்கிலியுடனும் விளங்கினார். அவன் உடுத்திருந்தது ஒரு தூய வஸ்திரம்; போட்டுக் கொண்டிருந்தது ஒரு டுவில் ஷர்ட்; அதன் மேல் மடிப்புப் பிரிக்காத ஒரு துண்டு தொங்கிக்கொண் டிருந்தது; காலில் அரை பூட்ஸ் அணிந்திருந்தார்.

இந்தக் கோஷ்டியைப் பார்த்ததும் சிவராமன் சற்றுத் திடுக்கிட்டுப் போனார். இருந்தாலும் தைரியத்தைக் கைவிடாமல், "வாருங்கோ அழகிரிசாமி! வாங்கோ குழந் தைகளா!" என்று அழைத்தார்.

அழகிரிசாமி வரும்போதே, "இன்றைக்குப் போலீஸ் இன்ஸ்பெக்டரிடமிருந்து காலையில் நம்ப ஐயா குழந்தையைத் தேடிக்கிட்டு ஆள் வந்தது. என்ன ஆச் சுன்னு விசாரிக்க ஸ்டேஷனுக்குப் போனேன். அங்கே இன்ஸ்பெக்டர் ஐயா நீங்க வந்து ஐயா குழந்தையை அழைச்சுக்கிட்டுப் போனதாகச் சொன்னாங்க. அவர் சொல் லித்தான் அந்தக் குழந்தை உங்க மருமான்னு தெரிஞ்சுக் கிட்டேன். இந்த விஷயம் தெரிஞ்சதுலே இருந்து நம்ப குட்டிகளுக்கு எல்லாரையும் வந்து பார்க்கணுமனு ஆசை. அத்தோடே இன்னொரு முக்கியமான காரியமும் சேர்ந்துக் கிட்டுது..." என்று பேசிக்கொண்டே போனார்.

சிவராமன், "உட்காருங்க அழகிரிசாமி, உட்கார்ந்து கொண்டு பேசலாம். வாருங்க இப்படி" என்று உபசாரம் பண்ணி ஹால் மத்தியிலுள்ள ஸோபாவில் அவரை உட்கார வைத்துவிட்டு, "வா அம்மா பத்மா, வா உஷா" என்று கூப்பிட்டுக்கொண்டு, அடுத்த கட்டில் ஆச்சரியத்தினால் இன்னது செய்வதென்று புரியாமல் திக்பிரமை பிடித்த வன்போல் சற்று மறைவிலேயே நின்றுகொண் டிருந்த

சங்கரியிடம் சென்று, "அக்கா, இவள்தான் ராமநாதன் கிளாஸ்மேட் பத்மா. இவள் யார் தெரியுமோல்லியோ? நான் சொல்லவேண்டாம் உனக்கு" என்று அறிமுகம் செய்துவைத்தார்.

பத்மாவும் உஷாவும் சங்கரியை வணக்கத்துடன் நமஸ்கரித்தனர். சங்கரி உஷாவைப் பார்த்து அறிந்து கொண்டதும் என்ன என்ன நினைத்தாளோ அது ஈசுவர னுக்குத்தான் தெரியும். ஆனால் உஷாவின் சௌந்தரியம் அவளைப் பிரமிக்க வைத்தது என்பதில் சந்தேகமில்லை. சங்கரியம்மாள் மருதரத்தைக் கூப்பிட்டு ஜமக்காளத்தை விரிக்கச்சொல்லி, அதில் பத்மாவையும் உஷாவையும் உட்காரவைத்துத் தின்பண்டங்கள், பழங்கள், குங்குமம், வெற்றிலை, சீலை முதலியன வழங்கினாள். அழகிரிசாமியும் சிவராமனிடம் தான் வந்த முக்கியமான காரியத்தைப் பற்றிச் சொல்லலானார். டைரக்டர் சக்கரபாணி தயாரித் துக்கொண்டிருந்த ஒரு படத்தில் சங்கீதமும் பரத நாட்டி யமும் முக்கியத்வத்தைப் பெற்றிருந்ததாகவும், பரத நாட்டிய நடிகை ஏதோ காரணத்தினால் தன் 'பார்ட்டைப்' பூர்த்தி செய்ய இயலாதவள் ஆகிவிட்டதாகவும், அவளுக்குப் பதிலாக அந்தப் படத்தில் உஷாவைச் சேர்த்துக்கொள்ளச் சக்கரபாணி சம்மதித்திருப்பதாகவும், அன்றிரவே ஸ்டுடியோவில் ஒரு ஒத்திகை நடக்கப்போவ தாகவும், அதற்குச் சிவராமன், ராமநாதன் முதலியவர்களை வரும்படி அழைக்கவே தாங்கள் வந்ததாகவும் தெரிவித் துக்கொண்டார்.

இதன் மத்தியில் ராமநாதன் மாடியிலிருந்து கீழே இறங்கி வந்தான். அவன் சீதாராமனுக்கு ஒரு கடிதமும் ஒரு தந்தியும் வரைந்திருந்தான். தந்தியில், 'எல்லாம் வெட்ட வெளிச்சமாக்கிவிட்டேன். நீ உடனே புறப்பட்டு வர யாதொரு தடையும் இல்லை. கடிதமும் எழுதியிருக் கிறேன்' என்ற வாசகம் எழுதப்பட்டிருந்தது. நடந்த விஷயங்களையெல்லாம் கடிதத்தில் விரிவாகக் கூறியிருந்

தான். கார் வரும் சப்தம் கேட்டதும் தன் எழுத்து வேலையை விரைவில் முடித்துக்கொண்டு அவன் கீழே இறங்கி வந்தான். பத்மாவும் உஷாவும் உள்ளே அம்மா வுடன் சல்லாபித்துக்கொண்டிருப்பதையும், அழகிரிசாமி சிவராமனுடன் பேசிக்கொண்டிருப்பதையும் கண்டு அவன் ஒருவாறு வியப்படைந்தாலும், மனத்தில் திருப்தியையும் அடைந்தான். ராமநாதன், சிவராமன் பக்கத்திலுள்ள மற்றொரு நாற்காலியில் போய் உட்கார்ந்தான். அழகிரிசாமி சொன்ன விருத்தாந்தத்தைச் சிவராமன் மனக்குழப்பத் துடன் காதில் வாங்கிக்கொண்டார். ராமநாதன் நடுவில் ஏதோ கேட்கப் புகுந்தபோது, சிவராமன் அவனைத் தடுத்து, "எல்லாம் நான் பிறபாடு உனக்குச் சொல்லு கிறேன். இப்போது ஒன்றும் பேசாதே" என்று ஜாடை காண்பித்தார்.

அழகிரிசாமி விடை பெற்றுக்கொள்ளுமுன் முந்திய தினத்தில் அவர்கள் இருவரும் செய்துகொண்ட ஒப்பந்தத் தைச் சிவராமன் அவருக்கு ஞாபகப்படுத்தினார். மறுநாளே ஐயாயிரம் ரூபாயை அழகிரி அந்தப் பெண்ணின் பேரிலா வது அவளுடைய காரியனுகைத் தன் பேரிலாவது பாங்கில் போடவேண்டுமென்று வற்புறுத்தினார். அதற்கு அழகிரி சம்மதித்தார். அத்துடன் ராமநாதனிடமிருந்து அழகிரி ஒரு சந்தர்ப்ப விசேஷத்தில் பெற்றுக்கொண்ட ஆயிரம் ரூபாயையும் சேர்த்துப் பாங்கில் போடும்படியும் சிவராமன் அழகிரியைக் கேட்டார். அழகிரி சிரித்துக்கொண்டு, "அப் படியே ஆகட்டும்" என்று அதையும் ஒப்புக்கொண்டார். தான் காலையில் அழகிரியிடம் வருவதாகச் சொல்லிச் சிவ ராமன், அழகிரியை வழியனுப்பினார். அழகிரி ராமநாதனைத் தங்களுடன் வரவேண்டுமென்றார், ஒத்திகை முடிந்ததும் காரில் அவனை வீட்டுக்கு அனுப்பிவிடுவதாகவும் சொன்னார். ராமநாதனை அவர்களுடன் அனுப்புவதில் சிவராமனுக்குச் சம்மதம் இல்லை. ஆனால் ராமநாதன் சீதாராமனுக்குத் தந்தி யும் தபாலும் அனுப்புவதற்காகத் தான் தபாலாபீஸ் வரை யில் போய்விட்டு வருவதாகவும், ஒத்திகைக்குப் போக

உத்தேசமில்லையென்றும் சொல்லிக்கொண்டு அழகிரியின் பக்கத்தில் காரில் ஏறி உட்கார்ந்தான்.

பத்மாவும் உஷாவும் சங்கரியம்மாளால் செல்லம், காந்திமதி இருவருக்கும் அறிமுகப்படுத்தப்பட்டு, சிறிது நேரம் காந்திமதியின் அறையில் பேசிக்கொண்டிருந்து விட்டு அழகிரியுடன் புறப்பட்டார்கள்.

வந்தவர்கள் திரும்பிப் போன பிறகு வீட்டில் உள்ளவர்கள் வந்தவர்களைப்பற்றி ஒருவருக்கொருவர் அபிப்பிராயங்களைப் பரிமாறிக்கொள்ள ஆரம்பித்தார்கள். உஷா மிக அழகு வாய்ந்த பெண்ணென்று சங்கரி ஒப்புக்கொண்டாலும், ராமநாதன் ஒரு நாட்டியக்காரியை மணக்க நினைத்ததுபற்றி நொந்துகொண்டாள்.

''அந்தக் கூத்தாடிக் கூட்டத்தைக் கண்டதும் இந்தப் பித்துக்குளி உன் வார்த்தையையும் தட்டிவிட்டு, பல்லை இளித்துக்கொண்டு, பின்னோடு புறப்பட்டுவிட்டதே! இதெங்கே உருப்படப்போகிறது'' என்று சொல்லிப் பிள்ளையை வெறுத்துக்கொண்டாள்.

காந்திமதியும் செல்லமும் உஷாவின் அழகையும் குழந்தை உள்ளத்தையும் மிகப் புகழ்ந்து பேசினார்கள். சிவராமனின் யோசனைகள் புதிய பாதையில் ஓட ஆரம்பித்தன. அழகிரியின் இனிமையான வார்த்தைகளில் பெருத்த மோசடி ஒளிக்கப்பட்டிருப்பதாகச் சிவராமன் எண்ணலானார். டைரக்டர் சக்கரபாணி தயாரிக்கும் படத்தில் உஷாவைச் சேர்த்துவிடுவதைப்பற்றி அவன் பிரஸ்தாபித்தது ஒரு பெரிய சூழ்ச்சியின் அடிப்படை என்பது அவருக்குப் புலனாயிற்று. உஷா சினிமா நடிகை ஆவதையாவது சக்கரபாணி டைரக்டராக இருக்கும் கம்பெனியில் ஊழியம் செய்வதையாவது அவர் விரும்பவில்லை. அழகிரி உஷாவுக்காகக் கொடுக்கப்போகும் தொகையை அவனைக்கொண்டே வசூலித்து, முடியுமானால் அதில் லாபத்தையும் அடைய ஒரு பெரிய மோசடியைத் துவக்கியிருக்கிறான் என்றே சிவ

ராமனின் மனத்தில் பட்டது. இந்த மர்மங்களை அறிய இயலாத ராமநாதன் பரம முட்டாள் என்றே அவர் கருதினார். தான் தடுத்தும் தன்னை மீறி அவன் அழகிரியுடன் சென்றதில் அவர் மனம் கோபத்தால் கொதித்தது.

அடுத்தாற்போல் உஷாவின் நிலைமையை நினைத்த போது அவர் இருதயத்தில் துக்கம் ததும்பியது. உண்மையில் அவள் சினிமாவில் பரத நாட்டியக்காரியாக நடிக்கச் சம்மதித்திருப்பாளா என்பது அவருக்குச் சந்தேகந்தான். அந்த முரடன் வசத்தில் இருக்கும்வரையில் அவள் அவனுடைய அநீதியான கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டியவளாகிறாள். ஆதலால் முதலில் தந்திரமாக உஷாவை அழகிரியிடமிருந்து பிரித்துத் தன்வசம் ஆக்கிக் கொள்வது எங்ஙனம் என்பதை அவர் யோசனை தீவிரமாக நாடியது. ராமநாதனைக் கொண்டு உஷாவை அழகிரியிடமிருந்து பிரித்துவிடலாம் என்றாலோ ஒருவிதமான யுக்தி யோசனைகளுக்கும் ராமநாதன் லாயக்கில்லாதவனாக வெறும் மோகம் பிடித்தவனாகவும் முட்டாளாகவும் நடந்துகொள்வது அவர் மனத்தை வாட்டியது. இருந்தாலும் மறுநாள் அழகிரி தான் சொல்லியபடி தொகையைப் பாங்கில கட்டுகிறானா இல்லையா என்பதைப் பொறுமையுடனிருந்து பார்த்துக்கொண்டு, பிற்பாடு மேலே செய்யவேண்டியதை யோசிக்க வேண்டுமென்று அவர் தீர்மானித்தார். ஆனாலும் அன்றிரவு சினிமா ஒத்திகைக்கு உஷாவை அழகிரி கூட்டிக்கொண்டு போவதைத் தடுக்க முயல வேண்டுமென்று சங்கல்பித்துக் கொண்டார். அதற்காகவாவது சிறிது நேரம் முன்னதாகவே புறப்பட்டுப் போய், உஷாவைத் தனிமையில் சந்தித்து ஒத்திகைக்குப் போகவேண்டாமென்று உபதேசிக்கலாமா என்று எண்ணினார். தான் அப்படி இடையூறு செய்வது அழகிரிக்குத் தெரிந்துவிட்டால் மறுநாள் அவன் பாங்குக்கு வருவதாகச் சொன்ன வார்த்தையைப் பொய்யாக்கிவிட்டால் என்ன செய்வதென்று ஒரு பக்கம் அவருக்குப் பயம் உண்டாயிற்று. இவ்விதக் குழப்பத்தில்

அவர் ஆழ்ந்து கிடந்தபோது செல்லமும் காந்திமதியும் குழந்தைச் சுபாவத்தால் சூது வினைகளை அறியாதவர்களாக அழகிரியின் அழைப்புக்கு இணங்க உஷாவின் பரத நாட்டிய ஒத்திகைக்குப் போகவேண்டுமென்ற ஆசையை வளர்த்துக்கொண்டு சிவராமனிடம் தெரிவித்துக்கொள்ள வந்தார்கள்.

"நான் ஸ்டூடியோ பார்த்ததே இல்லை அப்பா" என்றாள் செல்லம்.

"'கட்டாயம் வரவேண்டும். உங்கள் இருவரையும் நான் அவசியம் எதிர்பார்க்கிறேன். வரத் தவறமாட்டீர்களே; அந்த டயத்துக்குக் கார் அனுப்பட்டுமா?' என்று பல தடவை வற்புறுத்தினாள் பத்மா" என்றாள் காந்திமதி.

"ஆமாண்டி; அவசியம் போக வேண்டியதுதான். உன் அண்ணா பின்னாடி தானம் போடுவான்; அதையும் பார்க்கவேண்டாமா?" என்றாள் கடுகடுப்புடன் சங்கரி.

"என்னவோ குழந்தைகள் ஆசைப்பட்டால் போகட்டுமே. இதிலென்ன காசா பணமா செலவு?" என்று குறுக்கிட்டாள் மதுரப்பாட்டி. மதுரப்பாட்டி பேசியது சங்கரிக்குச் சகிக்கவில்லை.

"உங்களை ஒருவரும் சிபார்சுக்குக் கூப்பிடவில்லை பாட்டி. வாயை மூடிக்கொண்டு உங்கள் வேலையைப் பாருங்கோ. எரிகிற இடத்தில் எண்ணெயை விடத்தான் உங்களுக்கு நன்றாகத் தெரியுமே" என்று அந்தப் பாட்டியின்மேல் சீறி விழுந்தாள் சங்கரி.

"அந்தப் பாட்டிக்கு ஸ்டூடியோ பார்க்க வேண்டுமென்று ஆசையாக இருக்கும்போல் இருக்கிறது. நான் போவதானால் கட்டாயம் உங்களை அழைத்துக்கொண்டு போகிறேன் பாட்டி! கவலைப்படாதேயுங்கோ" என்றார் சிவராமன்.

"எனக்குப் பரதநாட்டியம் வேறே பார்க்க வேணுமா? நான்தான் இவ்வளவு பேர் சொல்றபடியும்

தினமும் நாட்டியம் ஆடிக்கொண் டிருக்கிறேனே'' என்று சலிப்புடன் முணுமுணுத்துக்கொண்டு மதுரப்பாட்டி அவ்விடம் விட்டு அகன்றாள். அவள் வார்த்தைகளைக் கேட்டும் அவள் கோபத்துடன் நடந்த நடையைப் பார்த்தும் காந்திமதியும் செல்லமும் கைகொட்டி நகைத்தார்கள். சிவராமனுக்கும் சிரிப்பு வந்தது.

"கடைசியில் என்ன மாமா சொல்றேள்?'' என்று கறாராகக் கேட்டாள் காந்திமதி.

"போகலாம் வாங்கோ அப்பா'' என்று செல்லம் கொஞ்சினாள்.

"அதிருக்கட்டும் காந்திமதி; பத்மா உன்னை அழைத்ததாகச் சொன்னாயே. செல்லத்தையும் அவள் அழைத்திருப்பாள். என்னை அழகிரி அழைத்தான். எல்லாம் வாஸ்தவமே. ஆனால், பரத நாட்டியம் ஆடப்போகிற பெண் வந்திருந்தாளே, அவள் என்ன சொன்னாள்? அதைச் சொல்லுங்கள். 'நான் ஆடப் போகிறேன். நீங்களெல்லாம் அவசியம் வந்து பார்க்கவேண்டும்' என்று அவள் நேரில் உங்களை அழைத்தாளா? அதைத்தான் நான் தெரிந்துகொள்ள வேண்டும். அவள் அழைக்க வேண்டியது முறையல்லவா?'' என்றார் சிவராமன்.

"அவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை'' என்று செல்லமும் காந்திமதியும் ஒரே சமயத்தில் சொன்னார்கள்.

"அதனால் நீங்கள் என்ன புரிந்துகொண்டீர்கள்?'' என்றார் சிவராமன்.

"அவள் வெட்கத்தினால் பேசாமல் இருந்திருக்கலாம். மாமியாரையும் நாத்தனாரையும் இப்போதுதானே முதல் தடவையாகப் பார்க்கிறாள்'' என்றாள் காந்திமதி.

இவர்கள் இப்படிப் பேசிக்கொண் டிருக்கும்போது ராமநாதன் தனியே திரும்பி வந்தான்.

"ஏண்டா திரும்பி வந்துவிட்டாய்?'' என்று கேட்டார் சிவராமன்.

"நான் சீதாராமனுக்குத் தந்தியையும் அடித்துவிட்டு தபாலையும் போட்டுவிட்டுத் திரும்பிவிட்டேன்" என்றான் ராமநாதன்.

"நல்ல வேலையாகப் போச்சு" என்று குதூகலத்துடன் சப்தம் போட்டாள் காந்திமதி.

"என்ன நல்ல வேலை?" என்று கேட்டான் ராமநாதன்.

"ராத்திரி பரதநாட்டிய ஒத்திகைக்கு மாமா எங்களை அழைத்துப் போகத் தகராறு பண்ணிக்கொண் டிருக்கிறார். உன்னுடன் நாங்கள் வந்துவிடலாமல்லவா?" என்றாள் காந்திமதி.

"இன்று ஒத்திகை இல்லை" என்றான் ராமநாதன்.

"இல்லையா! நல்ல வேலை!" என்று நாற்காலியி லிருந்து எழும்பிக் குதித்தார் சிவராமன்.

"ஏன் இன்று இல்லை? அவர்களெல்லாம் கூப்பிட்டு விட்டுப் போனார்களே" என்றாள் காந்திமதி.

நான் தபாலாபீஸில் இருக்கும்போதே, சுக்ரபாணி அவ்விடம் காரில் வந்து அழகிரியைச் சந்தித்துத் தான் இரண்டு தினங்களுக்கு அவசரமாகப் பம்பாய் போகவேண் டிய ஜோலி இருப்பதாகவும், ஆகையால் ஸ்டுடியோ காரியங் களை ஒரு வாரத்துக்கு ஒத்திப்போடவேண்டியது அவசிய மாக இருப்பதாயும் தெரிவித்துக்கொண்டார்" என்றான் ராமநாதன்.

# 7

# மந்திராலோசனை

சிவராமன் ராமநாதனைத் தனியே மாடிக்கு அழைத்துச் சென்று அழகிரிசாமியிடம் தான் கொண்டிருக்கும் சந்தேகங்களை விளக்கிக் கூறினார். ராமநாதனுக்கும் உஷா ஸினிமாவில் நடிப்பதைப்பற்றி மனக்குழப்பங்களைக் கிளறிவிட்டார். உஷாவுக்கே அவ்விஷயத்தில் அருவருப்பு இருப்பதைத் தாம் உணர்வதாகச் சாதித்தார். ராமநாதன் ஏற்கனவே அழகிரியின் மேற்பார்வையில் தான் அடிமைத்தனமாக வாழ்வதைப் பற்றி உஷா தன்னிடம் குறை கூறிக்கொண்டதை ஞாபகப்படுத்திக்கொண்டான். மாமா சிவராமனின் வார்த்தைகளில் அவனுக்குப் பூரண நம்பிக்கை உண்டாயிற்று. உஷாவைப்பற்றிய கவலை அவன் மனத்தைப் பற்றிக்கொண்டது. மாமாவுடன் அவளுடைய விடுதலையைப்பற்றிச் சிந்திக்கலானான். சிவராமனும் ராமநாதன் மூலமாக உஷாவை விடுவிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்து, அவன் உஷாவை ரிஜிஸ்டர் விவாகம் செய்துகொள்வதற்குத் தான் உடந்தையாயிருப்பதாகவும், குடும்ப மனஸ்தாபங்கள் ஏற்பட்டாலும் கூடிய மட்டும் அவைகளைச் சாந்தப்படுத்த முயல்வதாகவும் ராமநாதனுக்கு வாக்களித்தார். வேங்கடசுப்பையரிடம் பேசி, ராமநாதனுக்கு அநுகூலமான ஒரு குடும்பப் பிரிவினை ஏற்பாட்டைச் செய்துவைப்பது சாத்தியமாகுமென்றும் அவர் கூறினார். ராமநாதன் அவருடைய பக்க பலத்தினால் அழகிரி என்னும் முதலை வாழும் அகழைத் தான் தாண்ட முடியும் என்று உணர்ந்தான். தான் காதலித்த உஷாவை அடையும் விஷயத்தை வெகு சுலபமாக மதித்து, இடையூறுகளை எதிர்பாராமல் தன்னம்பிக்கை கொண்டிருந்தது

எவ்வளவு சிறுபிள்ளைத்தனம் என்பது அவனுக்கு அப்போதுதான் பிரகாசமாயிற்று.

ஸ்ரீ கிருஷ்ணபகவானின் புத்திரனான அநிருத்தன் உஷாவை முதலில் சித்திரலேகை மூலம் சந்தித்துக் காதலித்ததற்கும், பின்பு உஷாவின் பிதாவான பாணாசுரனின் கொடுமையான ஆக்ஞைக்கு உள்ளாகித் துன்பங்களை அநுபவித்ததற்கும், ராமநாதனின் சரித்திரத்துக்கும் இருக்கும் ஒற்றுமையைச் சிவராமன் அவனுக்கு விளையாட்டாக எடுத்துக்காட்டினார்.

"உனக்குப் பாணாசுரன் அமுகிரி! ஜாக்கிரதை ராமநாதா! அந்த உஷாபரிணயம், மகா விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீ கிருஷ்ணனும் பாணாசுரனின் உபாஸனா தெய்வமான ஸ்ரீ பரமேச்வரனும் இறுதியில் ஒற்றுமைப்பட்டு அநுமதித்ததால் நடந்தது. உன் உஷாபரிணயமும் சிவவிஷ்ணுஸ்வரூபியான - சிவராமனான - என் பிரயத்தனத்தால்தான் நடைபெறப் போகிறது" என்றெல்லாம் மாமா சிவராமன் ராமநாதனுக்குக் கதைகள் சொல்லிக்கொண்டு தமாஷாக இரவைக் கடத்தினார்.

ராமநாதன் தூங்கிவிட்டபின் சிவராமன் வெகுநேரம் தூக்கம் வராமல் படுக்கையில் புரண்டுகொண்டு ஆலோசனைகள் செய்துகொண்டிருந்தார். 'நான் செல்லத்தின் கல்யாணத்துக்காகப் பிரயத்தனம் செய்யத் தொடங்கி உஷாவின் கல்யாணத்தை உடனே முடித்துவைப்பதில் ஆர்வம் கொண்டிருக்கிறேன். அதுமட்டும் அல்லாமல் என் அருமைப் புதல்வி செல்லத்துக்கு வெகு நாளாகச் சங்கல்பித்து வைத்திருந்த வரனை நானே இப்போது என் ஒழுக்கத்தில் படிந்த மாசுமறுப்போல் உதித்த ஓர் கன்னிகைக்கு அமர்த்திவிடத் தீவிரமாக முனைந்திருக்கிறேன். என்ன ஆச்சரியம்! மனுஷ்ய சங்கல்பம் தெய்வ சங்கல்பத்தின் முன் காற்றில் அகப்பட்ட பஞ்சுபோல் பறக்கிறது. இதனால் எனக்கு எவ்வளவு தொல்லைகள் ஏற்படப் போகின்றன என்பது கணக்கிட

முடியாது. முதலில் அக்கா அத்திம்பேர்களுக்குப் பொல்லா விரோதியாவது நிச்சயம். அவர்கள் பிள்ளையை நான் கெடுத்துவிட்டதாகத்தான் அவர்கள் நினைப்பார்கள். என் குழந்தைக்கு ஆராத் துயருண்டுபண்ணுவது இரண்டாவது. எவ்வளவு பெரிய குடும்பத்தில் உயரிய வாழ்க்கை நடத்த இருந்த பாக்கியத்தை அவள் இப்போது இழக்க நேரிடுகிறது. அவள் பிராப்தம் எப்படியோ? அக்கா சங்கரி ஆதிமுதல் என்னோடு சம்பந்தம் செய்வதைச் சுமுகமாக அங்கீகரிக்கவில்லை என்றாலும், ராமநாதன் செல்லத்தின் விஷயத்தில் உதாசீனமாயிருந்தான் என்றாலும், இதையெல்லாம் சொல்லாமல் காரியம் கெட்டுப்போன பிறகு - சிவராமன் கெடுத்துவிட்டான் என்றுதான் எல்லோரும் ஏகோபித்துப் பறையறைவார்கள். ஊர் ஜனங்கள் என்னை வெறுத்து வாயில் கொட்டிக்கொள்வது நிச்சயம். தன் சொந்தப் பெண் கல்யாணத்தைப்பற்றிச் சிரத்தை எடுத்துக்கொள்ளாமல் தன் வைப்பாட்டி மகளுக்கு முதலில் விவாகத்தைச் செய்துவைக்கும் புண்ணியவான் என்று என்னைச் சந்தி சந்தியாகக் கேலி செய்யத் தொடங்குவார்கள். எல்லாம் வாஸ்தவம். எல்லாம் எனக்கும் தெரியும். இருந்தாலும் முன்வைத்த காலைப் பின்வைக்க முடியாத ஒரு நிலையில் காலப்போக்கு என்னை, மிதக்கும் பிராணியைப் பிரவாகம் ஒரு சுழலில் கொண்டுபோய்ச் செருகுவது போல் மாட்டிவிட்டிருக்கிறது. என் நிலைமையில், என் நிர்ப்பந்தங்களின் மத்தியில், என் திருஷ்டிக்கு எது நீதியோ, எது மதியோ, எது உசிதமோ, எது தக்கதோ, அதைத்தானே நான் நிச்சயம் செய்ய முடியும்? பிறர் ஏசுவதையும் பேசுவதையும் நினைத்து என்ன பிரயோஜனம்? உலகம் பல விதம். எல்லோருடைய நோக்கங்களையும் யுக்திகளையும் நம்பிப் பின்பற்றி ஒருவன் நடந்தால், கழுதை விற்கப்போன கிழவன், அதை ஆற்றோடு போக விட்டுவிட்டு வீடு திரும்பின கதையாகத்தான் ஆகும்.

மறுநாள் காலையில் வெகு சீக்கிரமாகவே மாமாவும் மருமானும் வெளியே புறப்பட்டார்கள். சிவராமன் அழகிரியின் வக்கீல் விசுவநாத ஐயரின் வீட்டுக்குச் சென்றார். அழகிரியை அவ்விடம் அழைத்துவர ராமநாதனை அனுப்பினார்.

சிவராமன் வக்கீலிடம் உஷாவின் சங்கட நிலைமையைப் பற்றி அந்தரங்கமாகப் பேசினார். வக்கீல் தம்மால் இயன்றமட்டும் அழகிரியை வளைத்துக்கட்டி ஒப்பந்தத்தை நிறைவேற்றி விடும்படி செய்வதாக வாக்களித்தார்.

ராமநாதன் சற்றுத் தாமதித்துப் போயிருந்தால் அழகிரியை வீட்டில் கண்டுபிடித்திருக்க முடியாது. அழகிரிக்குத் தான் வாக்குறுதி செய்தபடி உடனே நிறைவேற்றிவிடும் ருசுவான எண்ணம் இல்லை. தட்டிக் கழித்துவிடுவதிலும், பின்னால் சந்தர்ப்பம்போல் நடந்து கொள்வதிலுந்தான் நோக்கம். ஆனால் ராமநாதன் அழகிரியை அதிகாலையிலேயே போய்ச் சந்தித்தான். மாமா சிவராமன் வக்கீல் விசுவநாதையர் வீட்டுக்குப் போயிருப்பதைத் தெரிவித்தான். தன்னுடன் உடனே புறப்பட்டு வர வேண்டுமென்றும் வேண்டினான். அழகிரி வெளிப்படையாக உயர்ந்த நெறியுடன் நடந்துகொள்வதில் முயற்சியுள்ளவராதலால், ராமநாதனுடன் புறப்படத் தயாரானார். மத்தியில் ராமநாதன் உஷாவிடம் பேசாமல் இருக்கவில்லை. மாமா சிவராமன் சொன்னபடியே அவளுடைய மனப்போக்கு இருப்பதை நன்கு அறிந்துகொண்டான். ராமநாதனுக்கு மாமாவின் பாதையையே பின்பற்றி, அவருக்கு எவ்விதத்திலும் உதவியாக இருப்பதே தன் நலம் என்பது தெளிவாயிற்று.

ராமநாதனுடன் அழகிரி, வக்கீல் வீட்டுக்கு வந்து சேர்ந்ததும் முதல் நாள் பேசிய ஒப்பந்தத்தை ஸ்திரப்படுத்தும் வகையில் சிவராமனுக்கும் அழகிரிக்கும் வக்கீலுக்கும் இடையே பேச்சுவார்த்தைகள் துவக்கமாயின. வக்கீல்

ஓர் ஒப்பந்தமாக எழுதி அந்த நிபந்தனைகளை ஊர்ஜிதப் படுத்த இரு தரத்தாரையும் தூண்டினார்.

அழகிரி, "அது அவசியமில்லை. ஒருவரை ஒருவர் நம்பாவிட்டால் அல்லவா தஸ்தாவேஜி செய்யவேண்டும்? இவரோ பெண்ணின் தகப்பனார். நானோ அவளுக்குத் தாத்தா. இருவரும் கண்ணியமுள்ளவர்கள். யார் யாரை மோசம் செய்துவிடப்போகிறார்கள்? பேசின வார்த்தையே போதும். அதற்கும் நீங்கள் சாட்சியாக இருக்கிறீர்கள். உங்கள் முன்னிலையில் ஒன்று சொல்லிவிட்டுப் பின்னால் பேசசுப் பிறழ்வது என்பது சாத்தியமாகுமா? இன்று நேற்று நான் உங்கள் கட்சிக்காரயின் ஆருக்கிறேனா? தஸ்தாவேஜி ஒன்றும் வேண்டாம். இருவரும் பேசியபடி தொகையைப் பாங்கில் கட்டிவிட்டால் தீர்ந்தது விவகாரம். அதைச் செய்ய முதலில் யத்தனிப்போம்" என்று உபந்யசிக்கலானார்.

"யார்பேரில் பாங்கில் போடுவது?" என்று வக்கீல் கேட்டார்.

"ஏன்? அந்தக் குழந்தைக்காக அவள் கார்டியனாக இருக்கும் என்பேரில் பணத்தைப் போட்டுவைத்தால், பிற்பாடு அவளுக்கு வயது வந்ததும் அவள்பேரில் அந்தப் பணத்தை மாற்றிவிடுகிறேன். அதுதானே கிரமம், நியாயம்? அதுதானே வழக்கம்? இதில் சந்தேகமென்ன? ஐயாவுக்குத் தெரியாதா? நான் சொல்லியா தெரிய வேணும்!" என்று அழகிரி அதிகத் தொனி கொடுத்து அழுத்தமான தன்னம்பிக்கையுடன் பேசினார்.

சிவராமன் முகத்தில் சாயை மாறி, திகில் குடிகொண்டதைக் கடைக்கண்ணால் கவனித்த வக்கீல் பேசலானார்.

"நல்லது, அழகிரிசாமி! பணத்தைப் பாங்கியில் போடுவதற்கு ஆதாரமான தஸ்தாவேஜி ஒன்று அவசியந் தான். அப்படியே சிவராமையரும் நினைக்கிறார். அவ்வித தஸ்தாவேஜி அதிகப்படியான முன் ஜாக்கிரதை என்று

நீங்கள் நினைக்கிறீர்களே ஒழிய, அப்படி ஒரு தஸ்தாவேஜு ஏற்படுத்தக்கூடாது என்றாவது, அதை ஏற்படுத்தினால் அசௌகரியம் உண்டாகும் என்றாவது நீங்கள் நினைக்கவில்லையே?'' என்று வக்கீல் கேட்டார்.

''நான் அதை ஆக்ஷேபிக்கவில்லை; ஏன் அவ்வளவு பிரயாசை என்றுதான் சொன்னேன்'' என்று கொஞ்சம் தணிந்த குரலில் அழகிரி பதிலளித்தார்.

வக்கீல் அதையே சம்மதமாக வைத்துக்கொண்டு தஸ்தாவேஜு எழுத ஆரம்பித்தார். அதன்படி சிவராமனும் அழகிரியும் உஷாவுக்குத் தலைக்கு ரூ. 5000 மூலதனம் ஏற்படுத்தி, ஒரே கணக்கில் பாங்கில் அவளுக்காக அவள் கார்டியன் பேரில் அந்த ரூ. 10,000 த்தையும் உடனே போட்டுவைப்பது என்றும், அவள் மெஜாரிடி அடைந்ததும் அந்தப் பணம் அவள் பேருக்கு மாற்றப்பட வேண்டுமென்றும், அவள் விவாகம் செய்துகொண்டால் அவள் புருஷனே அவளுக்குக் கார்டியனாகிவிடுவானென்றும் நிபந்தனைகள் ஏற்படுத்தப்பட்டன.

ராமநாதன் தனக்கு அழகிரி கொடுக்க வேண்டிய ரூபாய் ஆயிரத்தை ஞாபகமூட்டினான். வக்கீல் அதை மேற்படி தொகையுடன் சேர்க்கவேண்டாமென்றும் அதற்கு அழகிரி ராமநாதனுக்குத் தனியே ஒரு செக் கொடுத்து விடலாமென்றும் ஆலோசனை சொன்னார். அழகிரி அப்படியே ஒப்புக்கொண்டார்.

ஆனால் தஸ்தாவேஜு பூர்த்தியடைய உஷாவின் கார்டியன் யாராக இருக்க வேண்டுமென்பது விவாதிக்கப்பட வேண்டியதாயிற்று. அழகிரி அந்த விஷயத்தில் தன் உரிமையே முதன்மையானது என்று வற்புறுத்தினார். சிவராமன் தனக்கே அந்த உரிமை உண்டென்றும், வேறு யாரும் அதைப் பாதிக்க முடியாதென்றும் வாதாடினார். ராமநாதன், ''இருவருக்கும் வேண்டாம். உஷாவைக் கல்யாணம் செய்துகொள்ள இருக்கும் நானே கார்டியனாக

வேண்டும்" என்று தெரிவித்துக்கொண்டான். வக்கீல் ராமநாதனை உடனே கார்டியனாக நியமிக்கச் சட்ட பூர்வமான சில ஆக்ஷேபங்களைத் தெரிவித்தார். அவன் மறுதினமே உஷாவை விவாகம் செய்துகொள்வதன் மூலம் கார்டியனாகலாமென்றாலோ, என்ன ரீதியில் விவாகம் செய்துகொள்வது என்பது சங்கடமான பிரச்னை என்றும் எடுத்துக்காட்டினார். அவள் 15 வயது மைனரானபடியால் ரிஜிஸ்டர் விவாக ஒப்பந்தத்துக்கு லாயக்கில்லாதவள் என்று நிரூபித்தார். இதனால் ராமநாதனின் கோரிக்கை ஒதுக்கிவைக்கப்பட்டது. சிவராமனுக்கும் அழகிரிக்கும் கார்டியன் உரிமை விஷயத்தில் ஒருவருக்கு ஒருவர் விட்டுக்கொடுக்கும் மனோபாவம் இல்லை. சிவராமன் அழகிரியை நம்பவில்லை. அழகிரி சிவராமனிடம் உஷாவையும் பணத்தையும் ஒப்பிக்க இஷ்டப்படவில்லை. மேலும் உஷாவைத் தன் கார்டியன் ஆதிக்கத்திலிருந்து விடுவிக்கப் பல இடையூறுகள் இருப்பதாகவும் அழகிரி ஒரு புதிர் போட்டார். வக்கீல் தந்திரமாகக் கேள்விகள் கேட்டு அழகிரியிடமிருந்து சில வாக்குமூலங்களை வாங்கினார். அப்போது அழகிரி சக்கரபாணியின் சினிமாக் கம்பெனியில் மூன்று வருஷத்துக்கு உஷாவுக்கு ஓர் ஒப்பந்தத்தைக் கார்டியன் முறையில் செய்திருப்பதாக வெளியாயிற்று.

அந்த ஒப்பந்தம் உஷாவின் முற்போக்குக்கும் கீர்த்திக்கும் அந்தஸ்து உயர்வுக்கும் அநுகூலமாகுமென்றும், வேறு கார்டியன் ஏற்படுத்துவது அந்த ஒப்பந்த முறிவுக்குக் காரணமாகுமென்றும், அந்த முறிவினால் ஏற்படும் நஷ்டங்களுக்குத் தான் உத்தரவாதியாக நேரிடும் என்றும் மிகுந்த ஆவேசத்துடன் அழகிரி கட்சியாடினார். இந்த விவாதங்களினால் எழுதப்பட்ட ஒப்பந்தம் கையொப்பமிடப்படாமல், பேச்சு முறிந்துபோய் விட்டது.

வக்கீல் இரு தரத்தாரையும் சமாதானப்படுத்தும் முறையில், "நாளைக்கு நான் உங்கள் இருவருக்கும் சம்மதமாகும்படியான ஒரு வழியை ஆலோசித்துச் சொல்கிறேன்.

இந்தப் பேச்சு மனஸ்தாபத்தில் முடியக்கூடாது. மைனரும் தாயில்லாக் குழந்தையுமான உஷாவின் நன்மையை உத்தேசித்து நீங்கள் சிறிது தணிந்து போகவேண்டும். நாளையதினம் நான் உங்களுக்குச் சொல்லியனுப்புகிறேன். வாருங்கள்; ஒரு முடிவு செய்துவிடுவோம். அதுவரையில் தயவுசெய்து இந்த விஷயமாகப் பரஸ்பரம் வாக்குவாதம் செய்துகொள்ள வேண்டாம்'' என்று கேட்டுக்கொண்டார்.

* * * *

அன்றிரவு சிவராமனுக்கும் ராமநாதனுக்கும் நடுவே வெகு நேரம்வரையில் அழகிரியைப்பற்றிப் பேச்சுக்கள் காரசாரமாக நடந்துகொண்டிருந்தன. சிவராமன் உஷா விஷயமாகக் கோர்ட்டில் கார்டியன் விண்ணப்பம் செய்துகொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்றார். ராமநாதன் அந்த விசாரணையில் கோர்ட்டில் வாக்குமூலம் கொடுக்க உஷாவைத் தான் தைரியப்படுத்தி விடுவதாக ஏற்றுக்கொண்டான். உஷாவைச் சினிமா நடிகையாக்க அழகிரி ஒப்பந்தம் செய்துகொண்டிருப்பது ஒன்றே, அவன் கார்டியனாக இருக்கலாயக்கில்லை என்பதற்கு அத்தாட்சியாகும் என்று சிவராமன் கர்ஜித்தார். ராமநாதன், உஷாவை அவர்கள் வீட்டில் எவ்வளவு கேவலமாக நடத்துகிறார்கள் என்பதற்கு வேலைக்காரக் கிழவியைச் சாட்சி போடலாம் என்று அபிப்பிராயப்பட்டான்.

இவ்விதம் இருவரும் மனக்கோட்டை கட்டிக்கொண்டிருந்தபோது அஸ்திவாரம் ஆட்டம் கொடுத்ததுபோல் ஓர் உணர்ச்சி இருவரையும் தனக்குள் சிந்திக்கச் செய்தது. சிவராமன் நினைத்தார்: 'கோர்ட்டுக்குப் போனால் ஜயந்தான். நானே கார்டியனாகலாம்; அல்லது வேறு கார்டியனைக் கோர்ட்டார் மூலம் நியமிக்கச் செய்யலாம். இருந்தாலும் பகிரங்கமாகக் கோர்ட்டில் என் முறைமையையும், உறவையும், என் பழைய சரித்திரங்களையும் பிரமாண மூலமாய்ச் சொல்லி, சாசுவதமான ரிகார்டுகள் ஏற்படுத்தி

வைப்பது எவ்வளவு வெட்கக்கேடு? உலகம் சிரிக்கும் அல்லவா? உற்றார் உறவினர் வெறுப்பார்கள். அறிந்தவர் தெரிந்தவர் அவமதிப்பார்கள்.

'இப்போது சொல்லவோ, சுட்டிக்காட்டவோ, கேட்கவோ பயந்துகொண் டிருப்பவர்கள், நாளைக்குப் பேப்பர்களில் படித்துவிட்டு, என்னைக் குசலப்ரச்னம் செய்யத் துணிவார்களே! ஊர்ப் பெண்களுக்கு இது ஒரு பெரிய வம்பாகி விடுமே! ஊரில தலையை வெளியில் காட்ட முடியாதே! ஆகையால் கோர்ட்டில் நேராக எப்படிப் போய் நிற்கிறது? பின்னாலிருந்து வேலை செய்யலாம்; செலவு எதுவானாலும் ஏற்றுக்கொள்ளலாம். நானே மனுதாரராக முன்னால் போய் நிற்பது நடவாத காரியம். மிரட்டலிலேயே காரியத்தைச் சாதிக்கவேண்டியதுதான். வக்கீல் விசுவநாதையர் அழகிரியின் வக்கீலாக இருந்தாலும் நியாய புத்தி உடையவர். ஏதாவது சமரசப்படுத்திவிட வழிதேடுவாரென்று நினைக்கிறேன்.'

ராமநாதன் ஆலோசித்தான்: 'வக்கீல் சொல்வதைப் பார்த்தால், கார்டியன் பிரச்னை தீராமல் மைனரான உஷாவைச் சட்டப்படி ரிஜிஸ்டர் விவாகம் செய்துகொள்வது சாத்தியமில்லை என்று தெரிகிறது. கார்டியன் பிரச்னைக்குக் கோர்ட்டு விவகாரம் நடத்தவேண்டும். அது அவ்வளவு சுலபமான காரியமல்ல. ஆனால், அவள் இப்போது இருக்கிறவர்களிடம் மேலும் இருந்து காலம் தள்ளுவது சாத்தியமில்லை. அவளுடைய அடிமைத்தனம் எப்படி நீங்கும்? அழகிரி அவளைத் தன் சுயாலத்துக்காக எப்படியெல்லாம் ஆட்டி வைக்கப்போகிறானோ! அவள் மனத்திலிருக்கும் பீதியும் வேதனையும் அளவிட முடியாது. இருந்தாலும் உஷா பிடிவாதக்காரி. தனக்கு இஷ்டமில்லாத காரியத்தில் லகுவில் ஈடுபட மாட்டாள். ஆனால், ஒரு சிறு பெண், ஓர் அநாதைக் குழந்தை, எவ்வளவு தூரம் அழகிரியைப் போன்ற ஓர் அசுரனை எதிர்த்துப் போராட முடியும்? அவளுக்காக நான் எந்தக் கஷ்டங்களையும் வரவேற்க

வேண்டுமென்று உறுதிகொண்டாலும், என் நிலைமை என்ன? நான் எவ்வளவு கட்டுப்பாடுகளில் சிக்கிக்கொண்டிருக்கிறேன்? எனக்குப் பணம் ஏது! செல்வாக்கு ஏது! சுதந்தரம் ஏது! உலக அநுபவம் ஏது! தாயார், தகப்பனார், அக்கா, அத்திம்பேர், பந்துக்கள், அக்கம்பக்கத்தவர்கள் இவ்வளவு பேர்களையும் மீறி, குல சம்பிரதாயத்துக்கு விருத்தமாக நூதன முறையில் விவாகம் செய்துகொள்வது எப்படிச் சாத்தியமாகும்! மேலும், மாமா ஆத்திரத்தில் பேசுகிறாரே ஒழிய, காரியம் வரையில் துணிவாரா என்பது சந்தேகம். மாமா கோர்ட்டுக்குப் போவாரா! தாமே நேரில் நின்று உஷாவின் பிதா என்ற ஹோதாவில் காரியனாக வாதாடுவாரா! வக்கீல்களுக்கும் சாட்சிகளுக்கும் பணத்தை வாரிவிடுவாரா? அக்கா அத்திம்பேர்களை விரோதித்துக்கொள்வாரா? ஊம், ஊஹும்! ஒரு நாளும் அவர் அத்திம்பேர் முன்னே பதில் வார்த்தை பேசினது கூட இல்லை. மாமா வாயால் கொட்டி அளப்பவரே ஒழிய, காரியத்தின் கிட்டப் போனால் வழுவழுவென்று விட்டுவிடுவார். அப்பாவைச் சாதாரணமாக மதிக்க முடியாது. வாயால் பேசாமல் காரியத்தில் நசுக்கிவிடுவார். என்னிடத்தில் இப்போது தப்பபிப்பிராயம் கொண்டிருக்கிறார். அந்தச் செக் போர்ஜரி விஷயமாக என்னைப் போலீஸின் கையில் நிர்த்தாட்சிண்யமாக ஒப்பிக்க அவர் தயங்கவில்லை. ஊரிலிருந்து இன்று வருகிறாரோ, நாளை வருகிறாரோ? வந்ததும் பாங்கு மூலமாகப் போலீஸாரிடம் நான் கொடுத்த ஸ்டேட்மெண்டு அவர் பார்வைக்கு வரும். என் நடவடிக்கைகளை அறிந்துகொள்வார். அம்மாவும் சொல்லுவாள். மாமா சிவராமன் அப்பாவிடம் ஒளித்துப் பேசவோ, மறுத்துப் பேசவோ தைரியம் இல்லாதவர். அப்பா எனக்கு என்ன தண்டனை விதிக்கப்போகிறாரோ! ஒருவேளை அக்காவும் அத்திம்பேரும் குறுக்கிட்டு, ஏதாவது சமாதானம் செய்தாலொழிய, என்னை வீட்டை விட்டு விரட்டிவிடுவார். அப்படி விரட்டிவிட்டால் என் கதி என்ன? படிப்பும் அரைகுறையாக நிற்கிறது. உலகத்தில்

தனியே நின்று போராடிப் பிழைத்துக்கொள்ளத் தைரியமோ சாமர்த்தியமோ அநுபவமோ இல்லை. உஷாவை நான் அடையவேண்டி, அப்போது அழகிரியைச் சரணமடைய வேண்டி வரும். அதைவிடத் தற்கொலை செய்துகொள்ளலாம். ஆனால், ஒருவேளை சமாதானமாகப் போய் அப்பா என்னை மன்னித்தால், எனக்கு அவர்கள் இஷ்டப்படி ஒரு விவாகத்தைச் செய்துவைக்க உடனே பிரயத்தனப்படுவார்கள். என உஷாவைப் பறிகொடுத்துவிட்டு, வேறு விவாகம் பிறர் திருப்திக்காகச் செய்துகொள்வதைவிடத் தற்கொலை செய்துகொள்ளலாம். எந்த வழியிலும் என்னை இருள் சூழ்ந்து நிற்கிறது.'

மறுநாள் விடிந்ததும், ராமநாதன் முதல் நாள் இரவு முடிவு பெறாமல் விட்டுவிட்ட சிந்தனைகளை அப்படியே நிறுத்திவிட்டு அழகிரி தான் கொடுப்பதாக ஒப்புக்கொண்ட ஆயிரம் ரூபாயையும் அவனிடம் கேட்டுப் பார்க்கலாம் என்ற ஒரு புதிய சங்கல்பத்தை மேற்கொண்டு, மாமாவிடம் தெரிவித்துவிட்டு, வெளியே புறப்பட்டான். மாமா வக்கீல் வீட்டுக்குப் போவதாகச் சொன்னார்.

ராமநாதன் அழகிரியை வீட்டில் பார்த்தபோது வீட்டில் வேறு யாருமே இருப்பதாகத் தெரியவில்லை. ராமநாதன் வந்த காரியத்தை அழகிரியிடம் தெரிவித்தான். வக்கீலிடம் தாம் ஆயிரத்துக்கு ஒரு செக் எழுதிக் கொடுப்பதாகவும் அதை வக்கீலிடமிருந்து பெற்றுக் கொள்ளும்படிக்கும் ராமநாதனுக்குச் சொல்லி, அழகிரி அவனை அனுப்பிவிடப் பார்த்தார். ராமநாதன் உஷாவைப் பார்க்க விரும்பினான். அழகிரி, "பெண்கள் யாரும் வீட்டில் இல்லை. வெளியே போயிருக்கிறார்கள்" என்று பதில் கூறினார். ராமநாதன் எழுந்திருக்கவில்லை. அழகிரி தன்னை ஏமாற்றுகிறார் என்று நினைத்தான். செக் விஷயமும் தப்பு சால்ஜாப்பு என்று அவனுக்குத் தோன்றிற்று. அவன் விழிகள் சிவந்தன. உதடு துடித்தது. பல்லை இறுகக் கடித்தான். மூக்கு நுனியில் கோபம்

திரண்டு வந்தது. அழகிரி, ராமநாதனின் முகவிகாரத்தைக் கவனித்தார். புன்னகை புரிந்தார். "என்ன தம்பி, கோபமா? உள்ளே வந்து பாரு; நான் பொய்யா சொல்லு கிறேன்!" என்றார். ராமநாதன் தன் படபடப்பைச் சற்று அடக்கிக்கொண்டு, "உஷா முதலியவர்கள் எங்கே போயி ருக்கிறார்கள்?" என்று வினவினான். அழகிரி கூறிய தாவது: "பாக்கியலக்ஷ்மிக்கு மாமன் வந்திருக்கிறார். அவர்தான் கேதார நல்லூர் பொன்னுசாமிப்பிள்ளை. பரதநாட்டியத்தில் பழைய ஜாம்பவான். அவருடைய சீடர் களை இப்போது பல இடங்களில் பரத நாட்டிய ஆசிரியர் களாக இருந்து, பெண்களை அந்தக் கலையில் தேர்ச்சி பெறச் செய்துவருகிறார்கள். அவர் கலைஞர்களான சில நண்பர் களைப் பார்க்கப் போயிருக்கிறார். குழந்தைகளும் கூடப் போயிருக்கிறார்கள். நீ சற்று நேரம் இருந்தால் அவர்கள் திரும்பி வந்துவிடுவார்கள்."

ராமநாதன் அழகிரியின் வார்த்தைகள் யதார்த்தந் தான் என்று அறிந்துகொண்டான். அழகிரி நிஜம் பேசக் கூடியவனானால் முழு வாசியும் அசுரனல்ல. சிறி தளவு மனுஷ்யனும் ஆகலாமென்று நம்பிக்கை கொண் டான். அதனால் அழகிரியிடம் உஷாவைப்பற்றிப் பேச அவன் துணிந்தான். "மிஸ்டர், அழகிரிசாமி! என்னைப் போலீஸிலிருந்து ஜாமீன் கொடுத்து நீர் அழைத்து வந்ததிலிருந்தே உமக்கு என்னிடம் அன்பு உண்டென் றும், நான் உஷாவை விவாகம் செய்துகொள்வதில் உமக்குத் திருப்திதான் என்றும் உணர்வேன். அப்படி யிருக்க எங்கள் இருவருடைய சுக வாழ்க்கைக்குச் சாதக மான ஓர் ஏற்பாட்டைச் செய்து வைக்க நீர் இடையூறு கள் சொல்லிக் கடத்திவிட்டது ஏன்?"

"அப்படிக் கேள், தம்பி, சொல்கிறேன். உன் மாமா நடக்காத காரியத்தைச் சொல்கிறார். நான் நடக்கிற காரியத்தைச் சொன்னேன். நான் பேசின பேச்சிலிருந்து பிறழப் போவதில்லை. உஷாவின் பேரில் இப்போதே

ரூ. 5000 த்தைப் போட்டு வைக்கத் தயாராக இருக்கிறேன். உன் மாமாதான் தன் பங்கைப் பூர்த்தி செய்வதைத் தட்டிக் கழிக்கப் பார்க்கிறார். யோசித்துப் பார் தம்பி; உன் மாமா தாம் கார்டியனாக வேண்டுமென்றும், பணம் தம் பேரில் போட்டு விட வேண்டுமென்றும் சண்டை போட்டாரே. அவர் உஷாவுக்குக் கார்டியனாக ஏற்படுத்தப்பட்டால், அவளைத் தம் வீட்டில் அழைத்து வைத்துக்கொள்வாரா? தம் மற்றொரு பெண்ணைப்போல் வளர்ப்பாரா? இல்லையேல் அவர் கார்டியனாக விரும்புவதில் என்ன அர்த்தம் இருக்கிறது? இந்த விஷயத்தை அவராவது நீயாவது யோசித்த துண்டா? ஏன் வெட்டி விவகாரம் பேச வேண்டும்! உஷா எங்கள் வீட்டுப் பெண். எங்கள் ஜாதி. எங்கள் குலம். உன் மாமா அவளுக்குத் தகப்பனார் என்பது உண்மையானாலும் அவளுடைய பாதுகாப்புக் கார்டியனாக அவர் கட்சி பேசுவது அர்த்தமற்றது. அவளுக்குப் பிதாவானதற்கு அவளுக்கு அவர் சட்டப்படி ஜீவனாம்சம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார். நான் அவரைக் கொடுக்கும்படி தூண்டவும் முடியும். தாட்சிண்யத்தினலும், நீ உஷாவை விவாகம் செய்துகொள்ளப் போவதை உத்தேசித்தும் அவர் கொடுக்கும் தொகையை நானும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டேன். கோர்ட்டுக்குப் போவதானல் அவரிடம் தொகையை வசூலிக்க என்னல் முடியுமே ஒழிய என்னைக் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்க அவரால் முடியாது. வேண்டுமானல் வக்கீல்களைக் கேட்டுப் பார்க்கட்டும். ஆகையால் விவகாரம் இல்லாமல் நேற்று நான் சொன்னபடி ஒப்பந்தத்தை அவர் நிறைவேற்றினல் நல்லது. இல்லையானல் நான் நோட்டீஸ் விட்டதைத் தொடர்ந்து, அவர் பேரில் வியாஜ்யம் போடுவது நிச்சயம். நீயும் உன் மாமாவை நம்பாதே! அவர் தாம் கொடுக்க வேண்டியதைக் கொடுக்காமல் நான் கொடுப்பதையும் கபளீகாம் செய்துவிட்டு அந்தக் குழந்தையைச் சந்தியில் நிறுத்திவிடுவார். அவர் எவ்வளவோ கொடுக்கல் வாங்கல், நிலபுலம், நகை நட்டு, வீடு வாசல் எல்லாம்

ஆண்டவர். இப்போது என்ன நிலைமைக்கு வந்திருக்கிறார்! அவரை நம்பிப் பணத்துக்குக் கார்டியனாக நியமிக்கலாமா? சரீரப் பாதுகாப்பு பற்றினவரையில் அவர் கார்டியன் கடமையை உண்மையில் செலுத்துவது அசாத்தியம் என்று ஏற்கனவே சொல்லிவிட்டேன். நீ படித்த பிள்ளை. தீர்க்காலோசனை செய்து பாரு.

"உன் மாமா உன்னிடம் உண்மையில் பிரியமுள்ளவராக இருந்து, நீ அவர் பெண் உஷாவை விவாகம் செய்துகொள்வதில் திருப்தி உடையவராகவும் இருந்தால் அவரிடம் இந்தக் காரணங்களை எடுத்துச் சொல்லிப் பார். பணத்தை வக்கீலிடம் கொடுக்கச் சொல். நானும் முன் பேசியபடி கொடுக்கிறேன். வக்கீலிடம் பணத்தைப் பொறுக்கட்டி ஒப்பந்தம் எழுதி, அவரைக் கொண்டே பாங்கியில் உஷாவுக்குக் கார்டியனாக என்பேரில் கணக்கு வைக்கச் செய்வோம். இந்தக் காரியம் நிறைவேறிய பின் உன் ரிஜிஸ்டர் விவாகத்தை நடத்தி வைப்போம். நான் கார்டியனாக இருந்து உஷாவை உனக்கு ரிஜிஸ்டர் விவாகம் செய்துகொடுக்கச் சம்மதித்து, விவாக ரிஜிஸ்ட்ரார் முன் ஒப்பந்தத்தில் கையெழுத்துப் போடுகிறேன். உன் மாமா கார்டியனானால், அவர் கையெழுத்துப் போட வேண்டும். இல்லாவிட்டால் உஷா மைனரானபடியால் விவாகம் ரிஜிஸ்டர் ஆகாது. அப்போது மாமா உன் ரிஜிஸ்டர் விவாகத்தைத் தடுக்கத் தன் கையில், 'பவரை' வைத்துக்கொண்டவர் ஆவார். அவர் ஒருவேளை கபடமற்று இஷ்டப்பட்டாலும், உன் தாய் தகப்பன்மார்கள் அவர் இந்த மைனர் விவாகத்துக்குச் சம்மதம் அளிக்காதபடி தடுத்துவிடுவார்கள்; இது நிச்சயம். மாமா உன்னிடத்தில் கபடமாகப் பழகி வருகிறார். நீ அவரை நம்பியிருக்கிறாய். அவர் சொந்தப் பெண்ணை - உன் மருமானை - நீ விவாகம் செய்துகொள்ளாமல் வேறு வழியில் திரும்பினது அவருக்கு ஆத்திரத்தை மூட்டியிருக்கிறது. உன்னைத் தன் கைவசத்தில் வைத்துக்கொண்டு, தன் இஷ்டத்தை நிறைவேற்ற அவர் பிளான்

போட்டிருக்கிறார். நீ அதை அறியவில்லை. அழகிரி தான் மோசக்காரன் என்று நினைக்கிறாய்..."

அழகிரி ஒரு மோகனப் புன்புரிப்புச் சிரித்தார். ராமநாதன் அழகிரியின் யுக்திகளைக் கேட்டுத் திகைத்துப் போனான். மாமா சிவராமன் எதைத்தான் செய்யமாட்டார் என்று அவன் மனத்தில் தோன்றிற்று.

* * * *

ராமநாதன் வக்கீல் விசுவநாதையரிடமிருந்து செக்கை வாங்கிக்கொள்ள ஆவலுடன் விரைந்து சென்றான். மாமா சிவராமன் அதுவரையில் அங்கே வரவில்லை என்று தெரிந்து கொண்டான்.

செக், ஒரு வாரம் தள்ளித் தேதி போட்டுத் தன்னிடம் கொடுக்கப்பட்டிருப்பதாகவும், அதற்குள் ராமநாதன் தன் மாமாவை வழிக்குக் கொண்டுவந்து ரூபாய் ஐயாயிரத்தையும் வாங்கித் தரவேண்டுமென்றும், அது சாத்தியமாகா விட்டால் வியாஜ்யம் தொடரும்படி அழகிரிசாமி தனக்குச் சொல்லியிருப்பதாகவும் விசுவநாதையர் சொன்னார்.

ராமநாதன்: ஆனால் அந்த ஆயிர ரூபாய்ச் செக்கை இப்போது என்னிடம் கொடுக்கும்படியாக அழகிரி சொல்லவில்லையா?

வக்கீல்: இல்லை.

ராம: நான் மாமாவை அழகிரி இஷ்டப்படி வழிக்குக் கொண்டுவராவிட்டால் எனக்குச் செக் கொடுபட மாட்டாது போலும்!

வக்: ஆமாம்.

ராம: இதற்கும் அதற்கும் என்ன சம்பந்தம்? மாமாவின் போக்குக்கு நானா ஜவாப்தாரி? இந்தப் பணம் எனக்கு வரவேண்டியதுதானே?

வக்: அது எனக்குத் தெரியாது.

ரா: செக்கை நீங்கள் என்னிடம் கொடுத்துவிட்டால் அழகிரி என்ன செய்வான்!

வக்: உன்னிடத்தில் நான் இந்தச் செக்கைக் கொடுத்தாலும் அது உனக்குப் பிரயோசனப்படாமல் செய்துவிட அழகிரியால் முடியும்.

ராம: அழகிரியால் எதுவும் செய்ய முடியும்...

வக்கீல் சிரித்துக்கொண்டார். ராமநாதன் ஆத்திரத்துடன், "ஆகையால் இந்தச் செக் மாரீசன் மாயையான தங்கமான் என்று சொல்லுங்கள்"

வக்: (புன்சிரிப்புடன்) ஆமாம், உஷாவும் அப்படித்தான்.

ராம: ஆனால் உண்மையில் உஷாவை எனக்குக் கொடுக்கும் உத்தேசமும் அழகிரிக்கு இல்லை என்று சொல்லுங்கள்.

வக்: போகப் போகத் தெரியும்.

ராம: இப்போதே தெரிகிறதே; சரி, நான் போய் வருகிறேன்.

வக்: நல்லது.

ராமநாதன் போக மனமில்லாமல், "நீங்கள் எப்படியாவது மத்தியஸ்தம் பண்ணிவிடுவதாகச் சொன்னீர்களே!" என்றான்.

வக்: நான் இரண்டும் மனித உருவங்கள் என்று நினைத்தேன். ஆனால், அதில் ஒன்று நிழல் - உருவத்தின் தொடர்பில்லாத நிழல்! அதன்பின் ஓடி ஓடிப் பார்த்தேன். அதைக் காலால் மிதிக்கவும் முடியவில்லை; கையால் பிடிக்கவும் முடியவில்லை. அது கல், முள், மரம், செடிகளில் சிக்கிக்கொள்வதுமில்லை. ஆகையால், அந்த வேட்டை அசாத்தியமென்று விட்டுவிட்டேன்.

ராம: ஆனால் அந்த நிழலுக்கு வக்காலத்து வாங்கிக் கொண்டு என் மாமாமீது ஜீவனாம்ச வியாஜ்யம் தொடரப் போகிறீர்கள்?

வக்: ஆத்திரப்படாதே, ராமநாதா! நான் அந்த வியாஜ்யத்தில் சாட்சியாக வரக்கூடுமாதலால், அழகிரிக்கு வக்காலத்து வாங்கிக்கொள்வது நிச்சயமில்லை.

ராம: என்ன சாட்சி?

வக்: உன் மாமாவுக்கும் அழகிரிக்கும் ஏற்பட இருந்த ஒப்பந்தத்துக்கு நான் 'டிராப்ட்' எழுதினேன் அல்லவா?

ராம: அந்த டிராப்டை என்ன செய்தீர்கள்?

வக்: வைத்திருக்கிறேன். இரு கட்சிக்காரர்களிடமும் அதைக் கொடுக்கமாட்டேன்.

ராம: என் செக்கை என்ன செய்யப்போகிறீர்கள்?

வக்: அதுவும் என்னிடமே இருக்கும்.

ராம: நான் அழகிரி பேரில் கிரிமினல் கேஸ் தொடர்ந்தால், அதையும் அது உங்களிடம் வந்த விவரத்தையும்பற்றி நீங்கள் என் பக்கத்தில் சாட்சி சொல்லலாம் அல்லவா?

வக்: அதற்கென்ன? பிற்பாடு யோசித்துக்கொள்வோம்.

ராம: மாமாவை நான் இங்கே அனுப்பட்டுமா?

வக்: அவசரமில்லை. பார்த்துக்கொண்டு மேல் நடவடிக்கை எடுக்கலாம்.

* * * *

ராமநாதன் வீட்டுக்கு வந்ததும் மாமாவிடம் விருத்தாந்தங்களை ஒப்பித்தான்.

சிவராமன், "அழகிரி ஒரு முதலை" என்றார்.

ராமநாதன், "அவன் ஒரு மாரீசன்" என்றான்.

இருவரும் சற்று மௌனமாக ஆலோசனையில் ஆழ்ந்தார்கள்.

ராமநாதன் மாமாவைக் கேட்டான்: "ஆனால் அழகிரி நீங்கள் உஷாவை வீட்டில் அழைத்து வைத்துக்கொள்வீர்களா என்று கேட்கிறானே! அது சரியான கேள்வி தானே? அப்படியானால் நீங்கள் உஷாவுக்குச் சரீரப் பாது காப்புக் கார்டியனாக எப்படி இருக்க முடியும்?"

சிவராமன்: அட போடா பைத்தியமே! அவன் சொன்னான் என்று நீயும் கேட்கிறாயே! நான் அவளுக்குக் கார்டியனாவது உனக்கு அவளை உடனே விவாகம் செய்து கொடுப்பதற்குத்தானே? நடுவில் பத்து இருபது நாள் அவள் தங்கவேண்டுமென்றாலும் எனக்கு அவளை வைத்துக் காப்பாற்ற இடமா இல்லை? விவாகமானால் உன்னிடம் இருந்துவிடுகிறாள். அல்லது முதலிலேயே உங்களுக்கு ஒரு ஜாகை ஏற்பாடு செய்துவிட்டால் போகிறது. நான் கார்டியன் என்பது பேச்சுக்கு. உன்னிடம் அவளை உடனே ஒப்பித்துவிடத்தான் நான் கார்டியன்.

ராம: அழகிரியும் இதே மாதிரி பேசினான். என்ன வஞ்சகம்! வகீல் சொன்னார், 'இந்தச் செக்கைப்போல் உன்னை ஏமாற்ற உஷாவையும் முன் தோற்றுவிக்கிறானே ஒழிய, உனக்கு அவளை உண்மையில் கொடுத்து விவாகம் செய்துவைக்கும் உத்தேசம் அவனுக்குக் கிடையாது' என்று.

சிவ: அதற்கென்ன சந்தேகம்! எனக்கு அது முதலிலேயே தெரியும். அவளைச் சினிமா ஒப்பந்தத்தில் மாட்டிவிட என்ன முடை?

ராம: இன்று காலையில் அவள் வீட்டில் இல்லை. கேதாரநல்லூர் பொன்னுசாமி பிள்ளையாம் ஒருவர்.

சிவ: ஆமாம். அழகிரிக்கு பச்சினன் முறை.

ராம: அவருடன் பத்மா, உஷா முதலியவர்கள் எங்கேயோ போனார்களாம்.

சிவ: சரிதான். அந்தக் கிழவன் வந்திருக்கிறானா? அவன் ஏதோ பரத நாட்டிய ஸ்கூல் ஒன்று ஆரம்பித்

திருப்பதாகக் கேள்வி. பரத நாட்டியம் இந்தக் காலத்தில் சம்பாத்தியத்துக்கு நல்ல வழியல்லவா!

ராம: இதற்கு மேல் யோசனை என்ன மாமா! நான் ஒரு கிரிமினல் கம்ப்ளெயிண்டும், நீங்கள் ஒரு கார்டியன் மனுவும் கொடுக்க வேண்டியது அவசியந்தானே!

சிவ: ராமநாதா! ஒன்றும் இப்போது முடியாது.

ராம: அவன் உங்கள் பேரில் ஜீவனாம்ச வியாஜ்யம் தொடுப்பது நிச்சயம்.

சிவ: தொடுக்கட்டும். அதற்குமேல் யோசித்துக் கொள்வோம். அப்படித்தானே வக்கீல் விசுவநாதையரும் சொல்லியிருக்கிறார்?

ராம: அதுவரையில் உஷா...?

சிவ: இருக்கிற இடத்தில் இருக்கவேண்டியதுதான்.

ராம: ஆனால் நீங்கள் என்ன செய்யப்போகிறீர்கள்?

சிவ: நான் உன் அப்பாவைப் பார்த்துவிட்டு இன்று சாயங்காலமே முடிந்தால் செல்லத்தை அழைத்துக்கொண்டு ஊருக்குப் புறப்படப் போகிறேன்.

ராம: அப்பா இன்றைக்குள் வந்தால்தானே?

சிவ: இன்றைக்குத்தான் வருகிறார். ஸ்டேஷனுக்குக் கார் போயிருக்கிறது.

ராம: கடிதம் வந்ததா?

சிவ: ஆம்; கடிதம் வந்தது. அதனால்தான் நான் காலையில் வக்கீல் வீட்டுக்குப் புறப்படவில்லை; கோமதி, கோபிநாத் எல்லோரும் வருகிறார்கள்.

ராம: நீங்கள் என் ஊருக்குப் போகவேண்டும்!

சிவ: காந்திமதி கல்யாணம் நிச்சயமாகிவிட்டது. செல்லத்துக்கு நான் வரன் பார்க்க வேண்டாமா? அவளை ஊருக்கு அழைத்துவரும்படி அவள் தாயார் அடிக்கடி சொல்லிக்கொண்டிருக்கிறாள். செல்லமும் ஊருக்குப் புறப்பட ஆயத்தமாக இருக்கிறாள்.

ராம: காந்திமதி கல்யாணத்தைப்பற்றியும் இன்று வந்த லெட்டரில் எழுதியிருக்கிறாரா? வரன் யார்? ஜகந்நாதனா? கடிதம் எங்கே?"

சிவ: ஆம்! கடிதம் உன் அம்மாவிடம் இருக்கிறது.

ராம: அப்பா வந்தால் எனக்கு ஒரு கடுமையான விசாரணை கட்டம் ஏற்படுவது நிச்சயம். நான் எங்கேயாவது ஓடிப்போய் விடட்டுமா! அழகிரியிடம் சரணாகதியடைவதில் பிரயோஜனம் இல்லை. அதைவிட முதலை வாயில் பிரவேசிக்கலாம். நான் என்ன செய்வது, மாமா! நீங்களாவது எனக்கு...?

சிவ: அட, அசடே! ஏன் பயப்படுகிறாய்? இதைவிடக் கடும் குற்றம் செய்த பிள்ளைகளை எல்லாம் தகப்பனார்கள் மன்னிப்பதில்லையா என்ன? பதைபதைக்காதே! என்ன நடக்கிறது பார்ப்போம்!

ராம: என்ன நடக்கும்! எனக்கும் ஒரு பெண் பார்த்துக்கொண்டு வந்திருப்பார்......

சிவ: அப்படியானால் என்ன குறை? பெரியவர்கள் சொல்படி நட. அதோ கார் சப்தம் கேட்கிறது. எப்போதும்போல் குஷியாக இரு. சமயத்தில் நான் உன்னைக் கைவிடமாட்டேன் என்பதை நம்பு. ஆடு திருடினவன் மாதிரி விழிக்காதே! உன் அக்காவும் அத்திம்பேரும் வருகிறார்கள். உன் தங்கைக்குக் கல்யாணம். நீ வீட்டில் இளவரசன். ராமநாதா, என்னைப் பார். தலையைத் தொங்கப் போடாதே! உஷா எங்கும் ஓடிப் போய்விடமாட்டாள். சோகம் வேண்டாம்; பயம் வேண்டாம்.

கேட்டுக்குள் நுழையும்போது பாம் என்று கார் அதி குதூகலத்துடன் ஒரு சப்தம் போட்டது. ராமநாதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. "இறங்கி வா, ராமநாதா! அழுகைக் குறி வேண்டாம்! ஜாக்கிரதை" என்று எச்சரித்துக்கொண்டு சிவராமன் துள்ளி எழுந்து கீழே ஓடினார்.

# 8

## முன்னேற்பாடுகள்

ஸ்ரீமான் வேங்கடசுப்பையரின் வராஹல் வீட்டில் கோலாகலமாக இருந்தது. சங்கரி அம்மாள் முகமலர்ச்சியுடன் மூத்த பெண்ணை வரவேற்றாள். செல்லமும் காந்திமதியும் குழந்தை ராதாவுடன் பேசி விளையாடி மகிழ்ந்தார்கள். கோபிநாத்திடம் சிவராமன் பேசலானார். ராமநாதன் அத்திப்பேர் சுச்ரூஷையில் சிரத்தை எடுத்துக் கொண்டான்.

வேங்கடசுப்பையர் எப்போதும்போல் ராமநாதனிடம் நடந்துகொண்டதால், அவன் நிமிஷத்துக்கு நிமிஷம் தேறுதல் அடைந்து, ஸ்வபாவ நிலைமையில் எல்லோருடனும் கலந்துகொண்டான். வீட்டில் விருந்து உபசாரம் பலமாக நடந்தது. அன்று மதுரப்பாட்டிக்கு வேலை ஜாஸ்திதான். ஆனால் பாட்டியிடம் ஒரு குணம் உண்டு. ஜனங்கள் வருவதிலும் குதூகலமாக இருப்பதிலும் பாட்டிக்கு அருவருப்பு இல்லை. விசேஷ ஏற்பாடுகள் நடந்தால் அவைகளில் உற்சாகமாகவே வேலை செய்து, இனிய பண்டங்களைத் தயார் செய்வதில் அவள் அலுத்துக்கொள்ள மாட்டாள். கல்யாணம், மாப்பிள்ளை அழைப்பு, விருந்து என்றால் அவளுக்குக் கொண்டாட்டம்.

மத்தியான்னம் டிபன் அமர்க்களம். எல்லாம் அமுதமாக அமைந்திருந்தது.

பின்பு ராதாவின் பரத நாட்டியக் கச்சேரி. குழந்தைக்குப் புன்னைமரத்தின் கீழே புல்லாங்குழல் வாசிக்கும் கிருஷ்ணனைப்போல் நிற்கத் தெரியும்; இன்னும் இரண்டொரு சமிக்ஞைகள்; இவ்வளவுதான். இது ஒரு மணி நேரம் அப்ளாஸ்களுடன் நடந்தேறியது. மதுரப்

பாட்டி போட்டோக்காரனை வரவழைக்க வேண்டுமென்றாள். சங்கரி, "திருஷ்டியாகப் போய்விடும்" என்றாள். குழந்தை சங்கோசத்தினால் சரியாகச் செய்யவில்லை என்றாம் இன்னும் எவ்வளவோ விதரணையாக நடத்துவாள் என்றும் கோமதி உறுதி கூறினாள். தாம் ராதாவின் சாமர்த்தியம் இவ்வளவு என்று அதுவரையில் தெரிந்துகொள்ளவில்லை என்றும், உத்தியோகப் பொறுப்புக்களினால் வீட்டில் தங்குவதே இல்லையென்றும் கோபிநாத் பெருமையுடனும் சலிப்புடனும் சொல்லிக்கொண்டார். ஸ்ரீமான் வேங்கட சுப்பையர் குழந்தைக்குக் கைகால்கள் வலிக்கும் என்றும், உடனே தூங்கப் பண்ணுவது நலமென்றும் அபிப்பிராயப்பட்டார். சிவராமன் தம் பெண் உஷாவை நினைத்துக்கொண்டு ஒரு பெருமூச்சு விட்டார். பாதநாட்டியம் இந்தப் பாடு படும்போது அவள் பராதீனமாக, அநாதையாக இருக்கவேண்டியது ஏன் என்று அவர் மனத்தில் ஓர் எண்ணம் கல்லை வைத்து அழுத்துவதுபோல் வேதனை தந்தது. ராமநாதன் படிப்பைப் பற்றிக் கோபிநாத் அவனைக் கேட்டுக்கொண்டிருந்தார். சீதாராமனைப்பற்றியும் அவர் விசாரித்தார். தாற்காலிகமாகத் திருப்தி தரக்கூடிய சாமர்த்தியமான பதில்கள் அளிக்கப்பட்டன.

அன்று ஞாயிற்றுக்கிழமையானதால் டவுனில் விசேஷக் கச்சேரி புரோக்ராம்கள் இருந்தன. பெரும்பாலோர் சங்கீதத்துக்கும் சிலர் சமுத்திரக் காற்று வாங்கவும் சாயங்காலம் புறப்பட்டார்கள்.

* * *

ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் சங்கரி அம்மாளிடம் தாம் நாக்பூர் போய்வந்த விருத்தாந்தங்களைப்பற்றித் தனிமையில் பேசிக்கொண்டிருந்தார்.

"வெள்ளிக்கிழமை பாக்கு வெற்றிலை வாங்கியாகி விட்டது. முகூர்த்தம் வைத்து லெட்டர் எழுதுவதாகச் சொல்லிவிட்டு வந்திருக்கிறேன். மாப்பிள்ளை கோபிநாத்

மூன்று மாத லீவில் வந்திருக்கிறார். கல்யாணத்துக்கு இருந்துவிட்டுப் போவார். காந்திமதிக்குக் கிடைத்திருக்கும் இடம் மிக உயர்ந்தது. தகப்பனார் இஞ்சினீயர்; பையன் இஞ்சினீயருக்கு வாசிக்கிறான். இன்னும் இரண்டு வருஷத்தில் படிப்பு முடிந்துவிடும். நல்ல லட்சணமாக இருக்கிறான். படிப்பில் சூரன். எல்லாப் பரீட்சைகளிலும் இதுவரையில் முதல் வரிசையில்தான் தேறி வந்திருக்கிறான். பெண்ணைப் பார்க்கவேண்டாம் என்று சொல்லிவிட்டார்கள். அவர்களுக்கு இப்போது வரச் சௌகரியப்படவில்லை. முகூர்த்தம் ஒரு மாதத்துக்குள் பார்க்கும்படி சொல்லியிருக்கிறார்கள். பாக்கு வெற்றிலை வாங்கும்போது ஆயிரம் ரூபாய்க்கு ஒரு செக் எழுதிக் கொடுத்தேன். சம்பந்தி அதை வாங்கமாட்டேனென்று பிடிவாதம் செய்தார். 'என் பிள்ளைக்குக் கல்யாணமென்றால் எனக்குச் செலவு வேண்டாமா! உங்களிடம் ஏன் நான் வாங்கிச் செலவு செய்ய வேண்டும்? உங்கள் பெண்ணுக்கு நீங்கள் உங்கள் இஷ்டப்படி எது வேண்டுமானாலும் சீர் முதலியன செய்யுங்கள். அது விஷயத்திலும் நான் ஒன்றும் சொல்லப்போவதில்லை!' என்று அவர் கூறிவிட்டார். அவர் பண விஷயத்தில் பேராசை பிடித்தவர் என்று சிலர் என்னைப் பயமுறுத்தினார்கள். அது விரோதிகளின் பேச்சு. உண்மையில் மனுஷ்யர் மிகவும் உயர்ந்த சுபாவமுடையவர். நமக்குத் தகுந்த சம்பந்தம்."

"அவர் கேட்காததற்காக நாம் செய்ய வேண்டியதைச் செய்யாமல் இருக்கப் போகிறோமா? நம் ஆசைக்கு நாம் செய்கிறோம்" என்றாள் சங்கரி.

"இதை அறிந்து எவ்வளவு பேர்கள் பெருந்தன்மையாக இருக்கிறார்கள்? காக்கை, கழுகுபோல் பிடுங்கித் தின்னும் பனுதிகளைச் சம்பந்திகளாக அடைந்து பெண்ணைப் பெற்றவர்கள் உலகத்தில் எவ்வளவு கஷ்ட நிஷ்டூரங்களுக்கு உள்ளாகிறார்கள்!" என்று வேங்கடசுப்பையர் உபந்நியசித்தார்.

பின்பு செல்லத்தின் கல்யாணம் நிச்சயமாகாததைப் பற்றி இருவரும் பேசிக்கொண்டார்கள்.

"சிவராமன் அதற்காகத்தான் மறுபடி வந்திருக்கிறானோ?" என்று கேட்டார் வேங்கடசுப்பையர்.

சங்கரி அம்மாள் சிவராமன் வந்த காரியத்தை விளக்கிக் கூறினாள். நரஸிம்மராஜபுரம், தனலக்ஷ்மி, உஷா, அழகிரி எல்லாப் பிரஸ்தாபங்களும் வந்தன. வேங்கடசுப்பையர் ஆச்சரியத்துடன் விஷயங்களைக் கேட்டுக் கொண்டார்.

"ஜீவனார்ச விவகாரம் முடிவு பெற்றதா இல்லையா?"

"என்னவோ தகராறில்தான் இருக்கிறதுபோல் இருக்கிறது. வக்கீல் வீட்டுக்குப் போய்விட்டு ஒன்றும் முடிவாகாமல் திரும்பி வந்து ராத்திரிஎல்லாம் மாமாவும் மருமானும் தடாபுடாவென்று மாடியில் சத்தம் போட்டுக் கொண்டிருந்தார்கள்."

இதிலிருந்து ராமநாதன் கதையைச் சங்கரி எடுத்துக் கொண்டாள். உஷாவிடம் ராமநாதன் காதல்கொண்டு தறிதலைத்தனமாகத் தாறுமாறான கட்சிகள் பேசிக்கொண்டு திரிவதைப்பற்றியும், போலீஸிலே அவன் மாட்டிக்கொண்டு ஏதோ ஸ்டேட்மெண்டு எழுதி வைத்துவிட்டு மாமாவுடன் வீடு வந்து சேர்ந்ததைப்பற்றியும் சங்கரி பிரஸ்தாபித்தாள்.

உஷாவும் பத்மாவும் அழகிரியுடன் அகத்துக்கு வந்ததையும் இன்னும் மற்ற வரலாறுகளையும் தெரிவித்தாள். உஷாவைப்பற்றித் தனக்குத் தோன்றினதையும் கூறினாள்.

"அந்த இடத்தில் தப்பிப் பிறந்துவிட்டாள். பெண் ரொம்ப அடக்கம், சமர்த்து, உயரிய குணம். அழகில் அப்ஸரஸ்தான். சங்கீதத்திலும் நாட்டியத்திலும் மிகத் தேர்ச்சிபெற்றிருக்கிறாள் என்று சொல்லுகிறார்கள். அந்தப் பெண்ணைப் பார்த்தால் எனக்குப் பரிதாபமாக இருக்கிறது."

சங்கரி அந்த விஷயத்தைப் பற்றித் தனக்குத் தெரிந்த அளவு எடுத்துச்சொன்னாளே ஒழிய்த் தொடர்பாகவோ தீர்மானமாகவோ எல்லாவற்றையும் அவளால் கூற முடியவில்லை. வேங்கடசுப்பையர் அவள் சொன்னவற்றை எல்லாம் மனத்தில் வாங்கிக்கொண்டார், தன் உணர்ச்சிகளை வெளியிடும் வார்த்தைகளைப் பேசவில்லை.

சிவராமனைக் கேட்டால் எல்லாம் காலோடு தலை கோவையாய்த் தெரிந்துகொள்ளலாம் என்றாலும் அவர் சிவராமன் இல்லாமலே தம் விசாரணைகளை நடத்திக்கொள்ளத் தீர்மானித்தார்.

செல்லத்துக்கும் காந்திமதியுடன் சேர்த்து விவாகத்தை நடத்திவிட வேண்டுமென்றும், சிவராமன் தன் மதிப்புள்ளவனாகையால் அப்படி வெளிப்படையாகத் தன் விருப்பத்தை அறிவிக்காவிட்டாலும் அவனுடைய தற்கால ஸ்திதியில் தனியே விவாகத்தை நிர்வகிக்க அவனால் சாத்தியமில்லை என்றும் சங்கரியும் வேங்கடசுப்பையரும் ஒரே மனோபாவத்தை வெளியிட்டார்கள். செல்லத்துக்கு வரன் தேட அவன் யாதொரு பிரயத்தனமும் எடுத்துக்கொள்ளவில்லை என்பதுபற்றி வேங்கடசுப்பையர் வருத்தப்பட்டார். ராமநாதனுக்குச் செல்லத்தைப் பண்ணிக்கொள்ளவில்லை என்று தன்னைக் குறை கூற அவனுக்கு இடமில்லாமல் போனதைக் குறிப்பிட்டார். ஆனால் மற்றொரு விதத்தில் ராமநாதன் சிவராமனுக்கு மாப்பிள்ளையாகவே ஆக நினைப்பது குறும்புத்தனமான தெய்வத்தின் திருவிளையாட்டு என்று வியந்துகொண்டார்.

செல்லம் தனக்கு வரனைத் தானே தேர்ந்தெடுத்திருப்பதாகவும், அவள் படிக்கும் பள்ளிக்கூடத்து ஹெட்மாஸ்டர் மூலம் அந்த வரனைத் திட்டம் செய்யலாமென்றும் காந்திமதியின் சில வார்த்தைகளிலிருந்து தெரிய வருவதாகச் சங்கரி தெரிவித்தாள்.

வேங்கடசுப்பையர், 'சிறு குழந்தைகளானாலும் இளம் கன்றுகளைப்போல் பலமாகக் குடும்ப சகடத்தை வெவ்

வேறு பக்கம் இழுத்து ஓட்டுபவனுக்குத் தொல்லை கொடுக்க அவர்களுக்கு எவ்வளவு வல்லமை இருக்கிறது!' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார்.

* * *

மறுநாள் திங்கட்கிழமை காலையில் வேங்கடசுப்பையர் ஆபீசுக்குப் போகும் வழியில் வக்கீல் விசுவநாதையரைப் பார்த்துப் பேசினார். அவரிடமிருந்து சிவராமனுக்கும் அழகிரிக்கும் நடந்த பேச்சுவார்த்தைகளையும், கார்டியன் பிரமாணபத்தில் தோன்றிய சிக்கல்களையும் அறிந்துகொண்டார். உஷாவை ரிஜிஸ்டர் விவாகம் செய்துகொள்வதில் ராமநாதனின் மன உறுதியையும் வக்கீல் சொல்லக் கேட்டுக்கொண்டார். மேலும் அழகிரி ராமநாதனுக்கு ரூபாய் ஆயிரத்துக்கு ஒரு செக் கொடுத்திருப்பதையும் பிரஸ்தாபித்து, மைரபித்தான் பறிமுதலில் ஆரம்பித்து, போர்ஜரி செக்கில் உச்சநிலையடைந்து, மாயப் பொன்மான் போன்ற அந்தச் செக்கை இறுதிக் காட்சியாகக் கொண்டிருக்கும் விந்தையான சரித்திரத்தை வக்கீல் விசுவநாதையர், வெகு சுவாரஸ்யமாக வேங்கடசுப்பையருக்கு வர்ணித்தார்.

முடிவாக அவர் கூறியதாவது: "மின்சார சக்தி மூன்று துனிகளில் இப்போது கனமாகத் தங்கிப் பளீர் பளீர் என்று ஜொலிக்கக் காத்துக்கொண்டிருக்கிறது. சிவராமன் கார்டியன் மனுப் போடவும், அழகிரி ஜீவனாம்ச வியாஜ்யம் தொடரவும், ராமநாதன் மாஜிஸ்டிரேட்டிடம் கம்ப்ளயிண்டுக் கொடுக்கவும் தயாராக இருக்கிறார்கள்!"

"நாலாவது துனியை மறந்துவிட்டீர்களே! போர்ஜரி செக்கினால் பாங்கை மோசம் செய்து பணத்தைத் திருடியதற்குப் பரிகாரம் தேட வேண்டியவரை நாலாவது மின்சாரத் தேக்கமாகக் கணக்குப் பண்ணுங்கள்" என்றார் வேங்கடசுப்பையர்.

சிறிது நேரத்துக்கெல்லாம் வேங்கடசுப்பையர் அங்கிருந்து புறப்பட்டுப் பாங்குக்குச் சென்றார். ராமநாதன்

போலீஸில் கொடுத்த ஸ்டேட்மென்டை ஏஜென்டிட மிருந்து பெற்றுக்கொண்டார். அப்போது மணி சாஸ்திரி என்பவர் சியாமளாம்பாபுரத்திலிருந்து டிராப்டு மூலம் ரூபாய் ஆயிரம் வேங்கடசுப்பையா கணக்குக்கு அனுப்பி யிருந்ததை ஏஜென்டு சொல்ல அவர் கேட்டு மிக வருத்த மடைந்தார். சீதாராமனை நினைத்துப் பெருமூச்சு விட்டார். ஒருவன் வழிதவறிப் போக எவ்வளவு பேர்களைச் சந்தியில் கட்டி அவன் இழுக்கிறான் என்று நினைத்து அவர் வெறுப்புற்றார். சீதாராமனுக்குச் சமாதானக் கடிதம் எழுதுவதா? மணிக்குப் பணத்தைத் திருப்பி அனுப்புவதா? என்று ஆலோசித்தார். முதலில் நெருக்கடியாக உள்ள சொந்தச் சிக்கல்களை நிவர்த்தி செய்துகொண்டு பிறகு சீதாராமனுக்கு ஏது செய்வது என்று தீர்மானித்துக் கொண்டு தம் ஆபீஸை அடைந்தார்.

வேங்கடசுப்பையருக்கு அன்று ஆபீஸ் வேலையில் மனம் அதிகம் நாடவில்லை.

தம் கிளாஸ்மேட்டும் பிரபல வக்கீலுமான முகுந்த ராஜையங்காரிடம் கலந்து ஆலோசிக்க விருப்பங்கொண்டு கோர்ட்டு லஞ்சு டயத்தில் ஹைகோர்ட்டுக்குச் சென்று மேற்படி ஐயங்காரை அவர் சேம்பரில் சந்தித்தார்.

ஒரு மணி நேரத்தில் மேல் நடக்க வேண்டியதற்குத் திட்டமான தீர்மானங்களுடன் வேங்கடசுப்பையர் வெளிக் கிளம்பினார்.

ஆபீஸிலிருந்து வழக்கத்துக்கு மாறாக அன்று அவர் நாலு மணிக்கெல்லாம் வீடு வந்து சேர்ந்தார். சிற்றுண்டி எடுத்துக்கொண்ட பிறகு அவர் சிவராமனை அழைத்து, "உன் பெண் உஷாவை நான் பார்க்க வேண்டும். காரை எடுத்துக்கொண்டு போய் அவளை அழைத்துவா" என்று சொன்னார்.

சிவராமன் அத்திம்பேர் ஏதோ பரிகாசம் செய்வதாக நினைத்து அவமானப்பட்டுக்கொண்டு அங்குமிங்கும் பார்த்

தார். வேங்கடசுப்பையர் சங்கரி வருணிர்த்ததிலிருந்து தமக்கு அந்தப் பெண்ணை ஒரு முறை பார்க்கவேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டதாயும் வேறு ஒன்றும் விசேஷமில்லை என்றும் கூறி வற்புறுத்தினார். அதன் பேரில் சிவராமன் அப்படியே சம்மதித்துக் காரில் புறப்பட்டார். ஆனால் அழகிரி உஷாவைத் தனியே அனுப்ப ஆக்ஷேபிப்பாரோ என்று ஐயமுற்றார். 'வேண்டுமானால் அவனும் கூட வரட்டுமே; அல்லது பத்மாவையும் அனுப்பட்டுமே' என்று சமாதானம் செய்துகொண்டார்.

இருந்தாலும் அந்தரங்கத்தில் சிவராமன் ஏதாவது தடை ஏற்பட்டு உஷாவை அத்திம்பேரிடம் அழைத்து வரமுடியாமல் போய்விட்டால் அது தெய்வானுகூலம் என்று நினைத்தார்.

சிவராமன் அழகிரியின் ஜாகைக்குச் சென்றபோது வேறு ஒரு கார் வாசலில் நின்றுகொண்டிருந்தது. உள்ளே பல பேர்கள் பேச்சுக் கேட்டது.

சிவராமன் பொன்னுசாமிபிள்ளை முதலிய நட்டுவகோஷ்டியை ஹாலில் பார்த்தார். அழகிரி சிவராமனை வரவேற்றார். சிறிது நேரம் பொன்னுசாமி பிள்ளை, அழகிரி இவர்களுடன் லோகாபிராமமாகப் பேசிக்கொண்டிருந்துவிட்டு, சிவராமன் தாம் வந்த காரியத்தைச் சொன்னார். பொன்னுசாமிபிள்ளை உஷாவின் கலைத்திறமையை மெச்சிக்கொண்டார். மேலும் கொஞ்ச காலம் நல்ல சிக்ஷையிருந்தால் அவள் நிகரற்ற பரத கலா ராணியாக விளங்கக் கூடியவள் என்று கூறினார். அழகிரி உஷாவை அனுப்புவதைப்பற்றிப் பதில் கூறவில்லை. ஆனால் பொன்னுசாமி பிள்ளை, "ஏன், ஐயர்வாள் பார்க்க விரும்பினால் குழந்தை போய் வரட்டுமே. நாம் ரெயிலுக்குப் புறப்பட இன்னும் மூன்று மணி நேரம் இருக்கிறதே" என்று ஆதரவுடன் மொழிந்தார். சிவராமன், "நான் அரைமணி நேரத்தில் அவளைக் கொண்டுவந்து விட்டுவிடுகிறேன்" என்று உறுதி கூறினார். அழகிரி கூடப் போகத் தைரியம் அடையவில்லை.

ஏனெனில் அவன் மனத்தில் உறுத்திக்கொண்டிருந்த குற்றம் அப்போது ஒரு திவலைப் பரப்பியது. பத்மாவைக் கூட அனுப்புவதும் உசிதமில்லை என்று நினைத்தான். அனுப்ப முடியாதென்று மறுத்தாலும் உடனே மனஸ்தாபம் வருமென்றும், பெரிய மனுஷ்யனின் விரோதம் எப்படி முடியுமோ என்றும் அவனுக்குப் பயம் இருந்தது. பொன்னுசாமிப்பிள்ளை சிபார்சு செய்ததனாலும் அவன் பின்வாங்க முடியவில்லை. உஷாவைக் கூப்பிட்டு, "குழந்தை! உன் தகப்பனாரோடு போய் உன் மாமனாரைப் பார்த்துவிட்டு உடனே திரும்பி வந்துவிடு. மாமா தாத்தா ஊருக்குப் போகிறபடியால் அவர் புறப்படு முன் அவசியம் வந்துவிடு" என்று வற்புறுத்திச் சொல்லி அவளுக்கு அனுமதி அளித்தார்.

உஷாவுக்குத் தன் தகப்பனாருடன் புறப்படும்போது இருந்த முகமலர்ச்சி அபாரத்துசமாக இருந்தது. காரில் வந்துகொண்டிருக்கும்போது உஷா சிவராமனிடம் சொன்னதாவது: "நல்லவேளை! நீங்கள் வந்தீர்கள். என்னை ஊருக்குப் புறப்படும் அந்தத் தாத்தாவுடன் அனுப்பிவிட ஏற்பாடாகி இருக்கிறது. அவர் ஒரு பரத நாட்டியப் பள்ளிக்கூடம் ஆரம்பித்திருக்கிறாராம். அவருடைய பேத்தி கல்யாணி என்பவள் பரத நாட்டியப் பயிற்சி பெற்று வருகிறாளாம். அவளுக்கு என்னை ஜோடி சேர்த்து இரண்டொரு வருஷம் தயார் செய்து வெளியில் கச்சேரிகளுக்கு அனுப்பிக் கொள்ளைச் சம்பாத்தியம் சம்பாதிக்கலாம் என்று பிளான் போட்டுக்கொண்டிருக்கிறார்கள், இரண்டு தாத்தாக்களும். நீங்கள் இந்த நிமிஷம் வராவிட்டால் என்னை அப்புறம் கண்டுபிடிக்க முடியாது."

சிவராமன் இந்த விருத்தாந்தத்தைக் கேட்டுப் பிரமித்துப் போனார். "உஷா! நீ போகச் சம்மதித்தாயா?"

"நான் சம்மதிக்கவாவது, மறுக்கவாவது? என்னை இதுவரையில் ஒருவராவது அது விஷயமாகக் கேட்கவே இல்லை. எல்லா ஏற்பாடுகளும் பிரஸ்தாபங்களும் நடந்துகொண்

டிருக்கின்றன. என் பெட்டி, படுக்கை சாமான்கள்கூடச் சித்தமாக எடுத்து வைக்கப்பட்டிருக்கின்றன.''

''இருக்கட்டும், அத்திம்பேர் என்ன சங்கல்பித்திருக்கிறாரோ தெரியவில்லை. பொதுவாக உனக்கு நல்ல காலம் பிறக்குமென்றுதான் நம்புகிறேன். எல்லாவற்றுக்கும் நீ கவலைப்படாதே. உனக்கு ஆதரவு பெருகி வருகிறது.''

கார் பங்களாவை அடைந்தது.

* * * *

உஷா ஸ்ரீ வேங்கடசுப்பையரின் பாதங்களில் பணிந்து நின்றாள். அவள் தலை கவிழ்ந்து கண்கள் கீழ் நோக்கின. முகத்தில் நாணம் தாண்டவமாடிற்று. இடது கையை இடுப்பில் லேசாகப் பொருத்தியும் வலது கையைச் சுபாவமாகத் தொங்கவிட்டுக்கொண்டும் விறைப்பில்லாமல் வணங்கிய கொடிபோன்ற சரீரத்துடன் இடது கால் கட்டைவிரலால் தரையைக் கீறிக்கொண்டு அவள் நிற்கும் நிலை வேங்கடசுப்பையரின் உள்ளத்தைக் கவர்ந்தது. ராமநாதன் மறைவாய் மாடிப்படியில் நின்றுகொண்டு, அவள் புருவத்தின் வில்போல் வளைந்த கூரிய கோடுகளையும் அஷ்டமி சந்திரன் போன்ற நெற்றியையும், அரை வாசி மூடிய கண் இதழ்களின் அடர்ந்த இமைகளையும், துளிர் போன்று மெல்லியதும் அழகுக் குமிழ் போன்ற நுனியை உடையதும் எடுப்பாய் விளங்குவதுமான நாசியையும் அச்சடித்து வரையப்பட்டதுபோன்ற உதடுகளின் வசீகரமான கடைவுகளோடு கூடிய ரேகைகளையும் தளதள வென்று பிரகாசிக்கும் நிர்மலமான கபோலங்களையும் முக மாகிற கண்ணாடிக்குப் பிடிபோன்ற எழில் நிறைந்த தாவாக்கட்டையையும் விரிந்த கண்களால் பருகி ஆனந்த பரவசனானான்.

அவள் கருங் கூந்தலைப் பிணைத்து முதுகு நடுவே நீண்டு தொங்கும்படி விடப்பட்ட பின்னலைத் தன்னை அறியாமலே கிட்டே வந்து தடவிக்கொடுத்த காந்திமதி,

"உஷா" என்று அருமையாய் அழைத்துத் தன் சகோதரித் தன்மையை உணர்த்துபவள் போல் முகத்தைக் குனிந்து நோக்கினாள். "நானல்லவா சகோதரி" என்று போட்டிக்கு வருபவள் போல் செல்லம் உஷாவின் மறு பக்கத்தில் வந்து நின்றுகொண்டு அவள் இடது புஜத்தை லேசாகப் பற்றிக்கொண்டாள். சகுகரி அம்மாள் கண்குளிர அந்தத் திவ்விய ரூபத்தைப் பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தாள். கோபிநாத் கோமதியைத் தனியே அழைத்து, "இவள் யார்?" என்று விசாரிக்கலானார். குழந்தை ராதா தாத்தாவின் காலடியில் நின்றுகொண்டு உஷாவை ஆச்சரியத்துடன் நோக்கி அவள் நிருத்த நிலையை அப்யஸிக்கலானாள். மதுரப்பாட்டி, "இது ஏதாடி! அதிசயம்!" என்று மூக்கில் ஒரு விரல் சேர முகத்தில் ஒரு கோணல் தோன்ற முழங்கை விரிய இடுப்பில் மற்றொரு கையை முட்டுக் கொடுத்துக்கொண்டு எதிர் நாட்டியத்துக்குத் தயாராக இருப்பவள் போல் ஒரு பக்கத்தில் காட்சி அளித்தாள்.

சிவராமன் அத்திம்பேர் என்ன சொல்லப் போகிறாரோ என்று அவருடன் அவர் முகத்தைப் பார்ப்பதும் உஷாவைக் கவனிப்பதுமாக இருந்தார்.

வேங்கடசுப்பையர் சிவராமனை நிமிர்ந்து பார்த்தார். "சிவராமா! இந்தக் குழந்தையை எட்டு, ஒன்பது வயது வரையில் நீதானே ஸம்ரக்ஷித்து வந்தாய்!"

"ஆமாம்."

"இவள் தன் பெரியாயியிடம் வந்து ஒரு வருஷந்தானே ஆகிறது?"

"ஆமாம்."

"இவளுக்குச் சங்கீதமோ நாட்டியமோ அழகிரி ஒன்றும் வாத்தியாரை வைத்துச் சொல்லிக்கொடுக்கவில்லையே?"

"இல்லை. உஷா தானே தாயாரிடத்திலும் அவளுக்குப் பந்துவான வேறொரு நட்டுவனிடத்திலும் சிட்சை சொல்லிக்கொண்டாள்."

"அழகிரி இவளுக்கு ஒரு வருஷம் சாப்பாடு போட்டிருக்கிறேனே?"

"ஆம், அவ்வளவுதான்."

வேங்கடசுப்பையர் அரை நிமிஷம் மௌனமாக இருந்துவிட்டு, காந்திமதியைப் பார்த்து, "காந்திமதி! உஷாவுக்கு உங்களுக்குப் பக்கத்தில் ஒரு ரூம் ஒழித்துக் கொடு" என்று ஆக்ஞாபித்தார்.

"அவள் இப்போது சத்தியாக என் ரூமிலேயே இருக்கட்டும்" என்று சொல்லிச் செல்லம் உஷாவின் கையைப் பிடித்துத் தன் பக்கம் அவளை இழுத்துக்கொண்டாள்.

வேங்கடசுப்பையர்; "சரி, சிவராமா! ஒரு காரியம் முடிந்தது. இரண்டாவது என்னவென்று கேள்" என்று ஆரம்பித்தார்.

சிவராமன் ஒன்றும் புரியாமல் விழித்தார். உஷாவுடன் செல்லமும் காந்திமதியும் பக்கத்து ரூமுக்குச் சென்றுவிட்டார்கள். சங்கரி தான் அங்கே இருக்கலாமோ, இருக்கக்கூடாதோ என்று சந்தேகங்கொண்டவள்போல் பின்னே இரண்டடி நகர்ந்தாள். வேங்கடசுப்பையர் அந்த ஜாடை அறிந்து அடுத்ததான மந்திராலோசனைக்கு அவள் இன்றியமையாதவள் என்று தெரிவிக்க நினைத்தவர்போல் அவள் பக்கம் திரும்பி, "நீ ஏதோ சொன்னாயே, ஹெட் மாஸ்டரை விசாரித்தால் தெரியும் என்று. அதுதான் இரண்டாவது விஷயம்" என்று வியாக்கியானம் பண்ணினார்.

"ஆமாம். காந்திமதி சொன்னதுதான் எனக்குத் தெரியும்" என்றாள் சங்கரி, ஏதோ பொறுப்பை ஒப்புக் கொள்ளப் பயந்தவள்போல்.

"காந்திமதி சொன்னது போதும்" என்று அவளுக்குப் பதில் சொல்லிவிட்டு, வேங்கடசுப்பையர் சிவராமனைப் பார்த்து, "சிவராமா! நீ போய் இந்தக் குட்டிகள் படிக்கும் பள்ளிக்கூட ஹெட்மாஸ்டரை அழைத்து வா, கார்

டிரைவருக்கு அவர் வீடு தெரியும்" என்று கட்டளை யிட்டார்.

சிவராமன் சற்றுத் தயக்கத்துடன் மென்று விழுங்கிக் கொண்டே, "போகும்போது உஷாவைக் கொண்டு போய் அவள் வீட்டில் விட்டுவிட்டுப் போகலாமல்லவா? அரை மணியில் அவளைத் திருப்பிக் கொண்டுவந்து விட்டுவிடுவ தாகச் சொல்லி அழைத்து வந்தேன்" என்று தெரி வித்துக்கொண்டார்.

வேங்கடசுப்பையர் லேசாகச் சிரித்துக்கொண்டு, "அந்தப் பொறுப்பை என்னிடம் விட்டுவிடு, சிவராமா! நீ போய் நான் சொன்ன காரியத்தைக் கவனி" என்று கூறினர்.

சிவராமன் புறப்பட்டுப் போன பிறகு அழகிரி அனுப் பிய ஆள் ஒருவன் சைக்கிளில் வந்து உஷாவைப் பொன்னு சாமி பிள்ளை பார்த்துவரச் சொன்னதாகத் தெரிவித்து விட்டுக் காத்திருந்தான்.

மதுரப்பாட்டியைத் தவிர மற்றவர்கள் அந்தத் தூதன் வரவைக் கண்டு அஞ்சினர்கள். ஐயர் என்ன பதில் சொல்லப் போகிறாரோ என்று எல்லோரும் ஆவலுடன் எதிர்பார்த்திருந்தார்கள். ஐயருக்குத் தூதன் வரவைப் பொக்கையன் தெரிவித்தான்.

இரவு அவள் அங்கேயே சாப்பிட ஏற்பாடாகியிருப்ப தாக வேங்கடசுப்பையர் பொக்கையன் மூலமாக வந்த வனுக்குப் பதில் அனுப்பினர். இந்தப் பதில் உஷாவுக்கு உயிர்ப் பிச்சை அளிப்பதுபோல் இருந்தது. அவள் தோழி கள் கவலை நீங்கினர்.

இரண்டு நாழிகை சென்ற பின், முகுந்தரா மையங்காரின் குமாஸ்தா வந்தார். அவருடன் வந்தவன் கதிர்வேல் ஆசாரி என்ற பத்தர்.

குமாஸ்தா வேங்கடசுப்பையரிடம், தாம் கொண்டு வந்த பேப்பர் ஒன்றை நீட்டினர். அதைப் படித்துப்

பார்த்துவிட்டு வேங்கடசுப்பையர் ராமநாதனைக் கூப்பிட்டார். அந்தப் பேப்பரை அவன் கையில் கொடுத்தார். ராமநாதன் அதைப் படித்துப் பார்த்தான். அது மாஜிஸ்ட்ரேட் முன் அழகிரிபேரில் தான் கொடுக்கும் தாவாவாக இருந்தது. அதில் தன்னிடமிருந்து பலாத்காரமாக அழகிரி வைரப்பித்தான் செட்டை அபகரித்துக் கொண்டதாக மட்டும் எழுதியிருந்தது. வேங்கடசுப்பையர் ராமநாதனை அதில் கையெழுத்திடும்படி சொன்னார். குமாஸ்தா அவன் கையெழுத்துப் போடவேண்டிய இடங்களைச் சுட்டிக்காட்டினார். இது முடிந்ததும் வேங்கடசுப்பையர், "உன் வைரப் பித்தான் செட்டைக் கழற்றிக் கொடு" என்று ராமநாதனைக் கேட்டார். ராமநாதன் மூன்று பித்தான்கள் இரண்டு கப் பித்தான்கள் இவைகளைத் தகப்பனாரிடம் கழற்றிக்கொடுத்தான். வேங்கடசுப்பையர் ஆசாரியிடம் அவைகளைக் கொடுத்தார். ஆசாரி வணக்கத்துடன் பித்தான்களைப் பெற்றுக்கொண்டான்.

குமாஸ்தா போகும் முன் வேங்கட சுப்பையரிடம், "ராத்திரியே போலீஸுக்குச் சொல்லிவிடுகிறேன். பொழுது விடிந்ததும், 'ஸர்ச் ரெடி'யாக இருக்கும்" என்றார். வேங்கட சுப்பையர் தலையை ஆட்டினார்.

குமாஸ்தா போகும்போது ராமநாதனைத் தம்முடன் அழைத்துச் சென்றார்.

ஆசாரி உத்தரவு பெற்றுக்கொள்ளும்போது வேங்கடசுப்பையர் அவன் கையில் ஒரு கத்தை நோட்டுகளைத் திணித்தார்.

அழகிரியிடமிருந்து, "உஷா சாப்பிட்டாகிவிட்டதா?" என்று விசாரிக்க ஸைக்கிள் ஆசாமி மறுபடி வந்தான். "அவள் இன்னும் சாப்பிடவில்லை" என்று அவனுக்குப் பதில் அளிக்கப்பட்டது. "அவளுக்குக் கார் அனுப்பட்டுமா?" என்று அழகிரி கேட்டுவரச் சொன்னதாக ஸைக்கிள் ஆசாமி தெரிவித்துக்கொண்டான். "கார் எங்களிடமே இருக்கிறது" என்று அதற்குப் பதில்

கூறப்பட்டது. மேலே என்ன கேட்பது அல்லது சொல்வது என்று புரியாமல் சைக்கிள் ஆசாமி சற்றுத் தயங்கி நின்றான். உஷாவும் அவன் கண்ணில் படாமல் பதுங்கியிருந்தாள். சிறிது நேரத்தில் சைக்கிள் ஆசாமி தன் வாகனத்தைச் செலுத்திக்கொண்டு மறைந்தான்.

சிவராமன், "போன காரியம் பிரயோஜனப்படவில்லை" என்று சொல்லிக்கொண்டு இரவு எட்டு மணி சுமாருக்குத் திரும்பினார். "ஹெட்மாஸ்டர் வீட்டில் இல்லை. அவர் ஒரு மீட்டிங் சம்பந்தமாகப் பள்ளிக்கூடத்தில் தாமதிப்பதாயும், வர நேரமாகுமென்றும் அங்கிருந்த ஒரு பையன் சொன்னான். நான் வெகுநேரம் காத்திருந்தேன். அவர் வாராததால், நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம் என்று திரும்பி வந்துவிட்டேன்."

"அந்தப் பையன் யார் என்று விசாரித்தாயா?" என்று கேட்டார் வேங்கடசுப்பையர்.

"நான் அவ்வளவு தூரம் விசாரிக்கவில்லை. பையன் அவர் வீட்டோடு இருப்பவனைத் தெரிந்தது. அவருக்குப் பந்துவாக இருக்கலாம். அல்லது ஆச்ரிதனை வேறு ஏழைப்பையனை இருக்கலாம். ஹெட்மாஸ்டரை அவன், 'அப்பா' என்றாவது, 'மாமா' என்றாவது சொல்லிக்கொள்ளவில்லை. பொதுவாக 'ஸார்' என்றுதான் குறிப்பிட்டுப் பேசினான்."

"நானாக இருந்தால் அவன் குலம் கோத்திரம் வரலாறுகளைக் கிண்டிக் கேட்காமல் வரமாட்டேன். இவ்வளவு நேரம் அவனோடு உட்கார்ந்திருந்தாயே! இருவரும் எதிரும் புதிருமாக மௌன ஜபம் நடத்தினீர்களோ?"

"இல்லை, அத்திம்பேரே! அவன் என்னை யார் என்று விசாரித்தான்."

"கெட்டிக்காரன்."

"கெட்டிக்காரன்தான். கட்டுக் குடுமியும் அவனும் கண்ணுக்கு மன்மதனைப்போல் இருக்கிறான்."

"சரி. நீ என்ன உன்னைப்பற்றிச் சொல்லிக்கொண்டாய்?"

"நான் ஒரு 'பேரண்ட்'. ஹெட்மாஸ்டரைப் பார்க்க வந்தேன்" என்றேன்.

"நீ அமுத்தலாய்த்தான் பேசியிருக்கிறாய்" என்றார் விஷமமாக வேங்கடசுப்பையர்.

"உங்கள் பையன் எந்தப் பாரத்தில் வாசிக்கிறான்?" என்று கேட்டான் அவன்.

"பேஷ்! நல்ல கேள்வி."

"என் பையனல்ல. என் பெண் என்று நான் சொல்ல வேண்டியதாயிற்று!"

"சரி! மேலே."

"பெண்ணா?" என்று சொல்லிக்கொண்டு அவன் பின்பு மௌனமாயிருந்துவிட்டான்."

"அது முதல் மௌன ஜபம் ஆரம்பமோ?" என்றார் தமாஷில் ருசியுடன் வேங்கடசுப்பையர்.

"இல்லை அத்திம்பேரே! அவனை அத்துடன் நான் விடவில்லை. 'நீ ஸ்கூலில்தான் வாசிக்கிறாயா?' என்று நான் அவனைக் கேட்டேன். 'ஆம், ஆறாவது பாரம் வாசிக்கிறேன்' என்று அவன் பதில் சொன்னான். 'உனக்குச் செல்லம், காந்திமதி என்ற பெண்களைத் தெரியுமா?' என்று கேட்டேன். அவன் ஆச்சரியத்துடன் என்னை உற்று நோக்கிவிட்டு, 'தெரியும்' என்று தலையசைத்தான். 'நான் செல்லத்தின் தகப்பனார்!' என்றேன். அவன் முகத்தில் ஒரு பயம் தோன்றி மறைந்ததுபோல் இருந்தது. சற்றுப் பொறுத்து அவன் என்னிடம், 'நீங்கள் ரொம்ப நாழிகையாகக் காத்திருக்கிறீர்களே! சில சமயம் ஹெட்மாஸ்டர் இரவு பத்து மணிக்குக்கூட வருவார்!' என்று சொல்லி என்னை அனுப்பிவிடுவதில் சிரத்தை காட்டினான். நானும் 'காரை' எடுத்துப்போனதால், அதிகம் தாமதிக்கக்கூடா

தென்று நினைத்தேன். மேலும் அகாலமாகிவிட்டால் ஹெட்மாஸ்டர் வந்தாலும் அவரை அழைத்து வருவது அசௌகரியமாக இருக்குமென்று தோன்றிற்று. 'நான் வந்துவிட்டுப் போனதாக அவரிடம் சொல்' என்று அந்தப் பையனிடம் சொல்லிவிட்டுப் புறப்பட்டேன். 'காலையில் அவரை வரச்சொல்' என்றும் சொன்னேன்."

"ஸ்ரீ நான் வேங்கடசுப்பையர் வீட்டுக்குத்தானே?" என்று கேட்டான் அந்தப் பையன்.

"பலே! அவன் புத்திசாலி என்று தெரிகிறது. நீயே அல்லவா உன் அட்ரஸைக் குறிப்பிட்டிருக்க வேண்டும்!"

"நான் காந்திமதி பேரைச் சொன்னதால் அவன் என் அட்ரஸைத் தெரிந்துகொண்டான்."

"அதுதான் புத்திசாலித்தனம் என்றேன்."

"மேலும், அவனுக்குச் சீதாராமனைத் தெரியும்போல் இருக்கிறது. 'சீதாராமன் ஊரிலிருந்து வந்துவிட்டானா?' என்று விசாரித்தான். 'இன்னும் வரவில்லை' என்று நான் பதில் சொன்னேன். அத்துடன் கார் சப்தம் போட்டுக் கொண்டு நகர்ந்தது."

"அவன் பெயரை நீ கேட்கவில்லையா?"

"இல்லை."

* * *

ஹெட்மாஸ்டர் வீட்டில் சிவராமனுக்கு ஜவாப்புச் சொன்ன பையன் கி. முத்துசாமிதான் என்பதை வாசகர்கள் ஊகித்திருக்கலாம். முத்துசாமி அங்கிருக்கக் காரணம் என்ன என்ற கேள்விக்குப் பதில் அறிய நாம் சில நாட்களுக்கு முற்பட்ட சில விருத்தாந்தங்களை ஆராய்வது அவசியமாக இருக்கிறது. முத்துஸ்வாமி தன் பந்துவான சிவஸ்கந்த சர்மாவுடன் தனிவீட்டில் இருந்ததாகக் குறிப்பிட்டோம் அல்லவா?

சிவஸ்கந்த சர்மா வசித்த வீட்டுக்கு நேர் எதிர்வீட்டில் வெளியூரிலிருந்து ஒரு பிரபு தன் சரீர சிகிச்சைக்காக வந்திருந்தார். அவருக்குச் சுச்ரூஷைக்கு வந்திருந்த அவருடைய பெண் கமலி ஒரு பால்ய விதவை.

சர்மா ஆறடி உயரமும், சிவந்த நிறமும், பரந்த மார்பும், நல்ல முகப்பொலிவும் உள்ள திடமான வாலிபன். அவன் வயது இருபத்தாறு ஆகியும் விவாகமாகாதவன். எதிர் வீட்டில் சூரியநாராயண ஐயர் குடிவந்து சில தினங்கள்வரையில் சர்மா, அங்கிருந்துவந்த முக்கல் முனகல் தொனிகளையும் டாக்டர் வந்து போவதையும் வேலையாட்கள் அடிக்கடி சைக்கிளை எடுத்துக்கொண்டு வெளிக்கிளம்புவதையும் அறிந்தானே ஒழிய, ஒரு பெண் அவ் வீட்டுக்குள் இருப்பதை அறியவில்லை. ஒரு நாள் சர்மா தன் ரூமில் உட்கார்ந்து விச்ராந்தியாகத் புகைப் படலங்களை ஊதிக்கொண் டிருந்தபோது பக்கத்து வீட்டு ஸ்திரீ சூரியநாராயண ஐயர் ஜாகைக்குள் நுழைவதைப் பார்த்துச் சிந்திக்கலானான். அவன் சிந்தனையாகிற இஞ்சின் ஓட்டத்துக்கு அறிகுறியாக அவன் ஊதிய புகைத்திரள்களின் அடர்த்தியும் தொடர்ச்சியும் விரைந்து விரைந்து விருத்தியடைந்தன. 'ஓ! இந்த வியாதியஸ்தர் தேவலையே! பலே ஆளாக இருப்பார்போல் இருக்கிறதே! இந்த முப்பது வயது சுந்தரியின் உறவை எப்போது பிடித்தார்! சரி, இதை ஸி. ஐ. டி. பண்ணி ஆசாமியின் குட்டை வெளிப்படுத்திவிட வேண்டும். வியாதி சொஸ்தமாகிவிட்டதோ? அல்லது இந்த அம்மாள் 'நர்ஸு' உத்தியோகம் பார்க்கிறாளோ? புருஷன் தனியே இருக்கும் வீட்டில் இவளுக்கு என்ன வேலை? ஒருவேளை சொந்தக்காரியாக இருப்பாளோ? அப்படித் தோன்றவில்லையே! நான் சில மாதங்களாக இங்கே குடியிருந்தும் என்பேரில் ஒருவர் திருஷ்டியும் விழவில்லையே! எல்லாம் பணம் செய்கிற வேலை அல்லவா?' இவ்விதமாகத் தமோமயமான துராலோசனைகளைப் புகைப்படலங்களைப்போல் சுருள் சுருளாகச் சர்மா சிருஷ்டித்துக்கொண்டு, மதிமயக்கத்தில்

இருக்கும்போது உள்ளே சென்றிருந்த அம்மாள் ஒரு யுவதியால் வழி கொண்டுவந்து விடப்பட்டு வெளியே வருவதை அவன் பார்த்தான். முப்பது வயதுச் சுந்தரியிடமிருந்து இருபது வயதுக் கட்டழகியிடம் அவன் வெறிபிடித்த கண்கள் சுழல ஆரம்பித்தன. 'இவள் யார்! இந்த வீட்டிலேயே இருப்பவள்போல் இருக்கிறதே! பால்ய வயதைக் கவனித்தால வியாதியஸ்தருக்குப் பெண்ணாக இருக்கலாம் என்றல்லவா தோன்றுகிறது! இவர் தம் உதவிக்குப் பெண்ணை அழைத்துவந்திருக்கிறார்போல் இருக்கிறது. இவ்வளவு நாட்களாக என் கண்ணில் இவள் படவில்லையே! இப்போதும் மின்னல்போல் தோன்றி மறைந்துவிட்டாளே! அவள் ஆபரணங்கள் அதிகம் அணியாததை, விசேஷமாய் மூக்கில் ஆபரணம் ஒன்றையும் இல்லாததைக் கவனித்தால் ஒருவிதமான சந்தேகத்துக்கு இடம் உண்டாகிறது. அவன் எனக்கு கொடுத்து வைக்காதவன்! நான் முன்னதாகவே இவள் இருப்பதை அறியாததால் இவ்வளவு நாட்கள் வீணாகி விட்டனவே! நம் வீட்டில் இருக்கும் பையன் வெறும் மக்கு; வெறும் அப்பாவி! அவன் மூக்கைப் பிடித்துக்கொண்டு பொழுதுவிடிந்தாலும் அஸ்தமித்தாலும் உட்கார்ந்துவிடுகிறான். எதிர்வீட்டுச் சமாசாரங்களை விசாரித்து அவ்வப்போது என்னிடம் சொல்லக் கூடாதோ? ஒன்றுக்கும் பிரயோசனமில்லாதவனைச் சாப்பாடு போட்டு வைத்துக்கொண்டிருக்கிறேன்....'

சர்மா அதுமுதல் அதிகம் எதிர்வீட்டு ஜன்னல்கள், கதவுகள் இவைகள்பேரில் கவனம் செலுத்தலானான். மாடியில் நோயாளி படுத்திருந்ததாகத் தோன்றியபடியால் சர்மா தன் வீட்டு மொட்டைமாடியில் காலை மாலைகளில் உலவுவதை ஒரு முக்கிய காரியமாக வைத்துக்கொண்டான். சீட்டியடித்தல், சினிமாப் பாட்டுகளின் அடியைத் தொட்டு ஆவர்த்தி செய்தல், உரத்த குரலில் முத்துசாமியை மாடியில் இருந்தபடி கூப்பிட்டு அதிகாரம் செய்தல் முதலிய சேஷ்டைகளை விஸ்தரிக்கலானான். எதிர் வீட்டு மாடியின் ஜன்னலுக்கு நேராக நின்றுகொண்டு கண்ணாடி

பார்த்துத் தலை சீவிக்கொள்ளுதல், பொட்டு இட்டுக் கொள்ளுதல், வாசனைப் பூச்சுகளைப் பூசிக்கொள்ளுதல், நியூஸ் பேபர் படித்தல், புகை விடுதல் முதலிய நாகரிக நாஸுக்குகளில் அதிக நேரம் செலவழிக்கலானான்.

இவ்வளவு சிரமப்பட்டும் சர்மாவுக்கு எப்போதாவது நிழலோட்டம்போல் உள்ளே ஓர் உருவத்தின் அசைவு மட்டுந்தான் பிரத்தியட்சமாயிற்று. அவன் அன்று மின்னல் தோன்றி மறைந்ததுபோல் கண்ட காட்சியை மனத்தில் நிலை நிறுத்திக்கொண்டு, அசையும் நிழலையும், ஊங்கப்படும் கால் ஓசைகளையும், கேட்கும் மெல்லிய மொழிகளையும் அத்துடன் சம்பந்தப்படுத்தி மனோரதத்தை வளர்க்கலானான். அவன் தானே பேசிக்கொள்வதும் தூக்கத்தில் ஆசைக் கனவுகள் கண்டு பிதற்றுவதும் சகஜமாயின. முத்துசாமி இதையெல்லாம் கவனிக்காமல் இல்லை. சர்மாவின் போதை ஏற ஏற அவனுக்கு அங்கே இருப்பது முள் மேல் வாசமாயிற்று. அஸத்துச் சகவாஸத்தை ஒழித்து விடவேண்டியது சீலத்துக்கு இன்றியமையாதது என்று அவன் நன்கு உணர்ந்தவன். ஆனால் எங்கே போகிறது என்று தெரியாமல் தவித்துக்கொண்டிருந்தான்.

இந்த நிலைமையில சர்மா ஒரு நாள் அக்கம்பக்கத்துச் சிறுமி ஒருத்தியை அதிக அன்புடன் அழைத்து வைத்துக் கொண்டு, அவளுக்குத் தின்பண்டங்கள், விளையாட்டுக் கருவிகள் எல்லாம் கொடுத்து அவளுடன் தாராளஞ் செய்து கொண்டிருந்தான். அதைக் கண்ட முத்துசாமிக்குக் காரியம் முற்றுகிறது என்று எச்சரிக்கை ஏற்பட்டது. சில தினங்களில் அச்சிறுமி எதிர்வீட்டுக்குப் போவதும், அங்கிருந்து சர்மாவிடம் வருவதும் கவனிக்கத்தக்க சம்பவமாயிற்று.

ஓர் இரவு சர்மா வெகு நேரம் தூக்கமில்லாமல் மேஜையின் கீழ் எழுத்து வேலையில் ஆழ்ந்திருப்பதை முத்துசாமி கவனித்தான். மறுநாள் சர்மா பாடிக் கொண்டே எதையோ வாசிப்பதையும், தானே அதை

ரஸித்து ஆனந்திப்பதையும் பார்த்தான். அடிக்கடி ஒரே மாதிரியான இசையும் ஓசையும் காதில் விழுந்துகொண்டிருந்தன. முத்துசாமி வருவதைப் பார்க்கும்போது சர்மா தொனியைக் குறைப்பதும் காகிதத்தை மறைப்பதும், சம்பந்தமில்லாத ஏதாவது ஒரு விஷயத்தைக் குறித்துக் கடுகடுப்புடன் சப்தம் போடுவதும் சந்தேக ஆஸ்பதமாக இருந்தன. அன்று சாயங்காலம் சர்மா வெளியே சென்றிருந்தபோது முத்துசாமி சர்மாவின் ரூமில் நுழைந்தான். சர்மாவின் மேஜைக்கு அவன் கால்கள் அவனை இழுத்தன. அவன் கண்கள் மேஜையின்மேல் ஒரு குறிப்பிட்ட காகிதத்தைத் தேடப் பிரயத்தனப்பட்டன. கைகள் புஸ்தகங்களையும் பேபர்களையும் புரட்டிப் பரிசோதிப்பதில் முனைந்தன. 'ஆ! இது என்ன! 'நண்டு விடு தூது' என்ற புத்தகத்தில்! பாட்டுக்கள்போல் இருக்கின்றனவே!'

முத்துசாமி அந்தக் கையெழுத்துப் பிரதியை உற்று நோக்குமுன் சர்மா வீடு வரும் சைக்கிள் சத்தத்தைக் கேட்டு விரைவில் அந்தக் காகிதத்துடன் தன் இருப்பிடத்துக்கு நழுவிவிட்டான். அன்றிரவு தான் படித்துக்கொண்டிருந்த ஸ்கூல் லைப்ரரிப் புத்தகமான, 'நாட்டு வளமும் செய்நேர்த்தியும்' என்ற புத்தகத்துக்குள் அந்தக் காகிதத்தை ஒளித்து வைத்துக்கொண்டு சிறிது சிறிதாக அதில் எழுதப்பட்டிருந்த கவிதையைப் படித்துப் பார்த்தான்.

சர்மா பி. ஏ. வரையில் தமிழ் படித்தவனாதலாலும், தமிழ்க் கவிதைகளை அடிக்கடி உத்ஸாகத்துடன் படித்து வந்ததனாலும் பாக்களை இயற்றும் ஆற்றல் பெற்றிருந்தான். சர்மா அந்தக் காகிதத்தைத் தேடுமுன் அதை இருந்தபடி திருப்பி வைத்துவிட வேண்டுமென்று முத்துசாமி கவலைகொண்டான். ஆனால் பொழுது விடிந்தபின் பழக்கப்படி தன் வீட்டு ஜோலி, பள்ளிக்கூட ஜோலிகளில் ஈடுபட்டிருந்தபடியால் அவன் தன் விசேஷப் பொறுப்பை ஞாபகம் வைத்துக்கொள்ளவில்லை. அன்று லைப்ரரிக்குத் திருப்

பிக்கொடுக்கவேண்டிய, 'நாட்டு வளமும் செய்நேர்த்தியும்' என்ற கனத்த புத்தகமும் அவசர ஜோலிகளின் நடுவே திருப்பிக் கொடுக்கப்பட்டது. அதற்குள் ஒளிக்கட்டப் பட்டிருந்த சர்மாவின் அகவல்பா முத்துசாமியின் நினைவுக்கு வரவில்லை.

சர்மா தன் கவிதையின் சுத்தப் பிரதியைத் தேடித் தேடிப் பார்த்து அது கிடைக்காததால் எங்கே தவறி வைத்துவிட்டோமோ என்று நினைத்துக்கொண்டு முதல் குறிப்பிலிருந்து மறு காபி எடுத்து அதனைத் தன் சங்கல்பப்படி பிரயோகிப்பதற்குத் தயாராக வைத்துக்கொண்டான். அந்தி நேரத்தில் தன் தூதியான சிறுமியிடம் கொஞ்சம் புஷ்பங்களுக்குள்ளே அதை மறைத்துவைத்துக் கொடுத்து, "எதிர் வீட்டு மாமியிடம் இதைக் கொண்டு போய்க் கொடு. என்ன சொல்லிக் கொடுக்கிறாய்? 'கோவிலிலிருந்து எங்காத்துக்குப் புஷ்பம் வந்தது. இதை எங்கம்மா உங்களிடம் கொடுக்கச் சொன்னாள்!' என்று சொல்லிக் கொடு. அவாத்து மாமாவுக்குத் தெரியாமே கொடு. அந்த மாமி கீழே இறங்கி வருகிற சமயம் பார்த்துக் கொடு. உனக்கு ஒரு பொட்டலம் பப்பரமிட்டு வாங்கி வைத்திருக்கிறேன் இதோ பார். நீ வீட்டுக்குப் போகும்போது தருகிறேன். ஜாக்கிரதையாகப் போய் வா" என்று அவளைத் தாஜா பண்ணி அனுப்பினான்.

பாமா என்ற அந்தச் சிறுமி கமலிக்குக் கைக்கு ஒத்த சுச்ரூஷை செய்யவும், அவளுடன் துணைக்கு இருக்கவும் அவளுடைய தாயாரால் அநுமதிக்கப்பட்டுக் கொஞ்ச காலமாகக் கமலியிடம் வந்து போவதைச் சர்மா கவனித்துக் கொண்டிருந்தான். சிறுமியான, விவரம் தெரியாத பாமாவைக் கமலியிடம் மதன தூதியாக உபயோகப்படுத்திக்கொள்ள அவன் பிளான் போட்டுக்கொண்டு அவளைச் சிநேகம் செய்துகொண்டு மெல்ல மெல்ல அவள் விசுவாசத்தைப் பெற்றான். பாமாவுக்கு அடிக்கடி ஹூக்கு, ஸோப்பு, சீப்பு, ப்ரூச், பௌடர், ஸ்நோ, சாக்கட்டி,

பொம்மை, புத்தகம், மிட்டாய் முதலிய திருப்தி தரக் கூடிய பரிசுகளை அளித்து வந்தான். இவைகள் இன்னு ரால் கொடுக்கப்பட்டவை என்று பாமா கமலியிடம் சிலா கித்துச் சொல்ல நேரலாம் என்று சர்மா எதிர்பார்த்தான். கமலியே ஒரு நாள், பாமா அணிந்துகொண்டிருந்த கிளிப் புரூச்சை, 'இது ஏது?' என்று விசாரித்ததாகத் தெரிந்து கொண்டபோது சர்மாவுக்கு உத்சாகம் உச்ச நிலையை அடைந்தது. அன்று முதல் எதிர்வீட்டில் வாசல் பக்க மான கீழ் ரூம் ஒன்றில் எப்போதும் அடைபட்டுக் கிடந்த ஒரு ஜன்னல் ஒவ்வொரு சமயம் திறக்கப்படுவதும், அந்த ரூமில் கமலி நடமாடுவதும் புலனாயின. சந்திரன்போன்ற அவள் முகம் தினம் அஸ்தமன சமயத்துக்கு அந்த ஜன்ன லில் ஒரு க்ஷணமாவது உதயமாகாமல் இருப்பதில்லை. இந்த அநுக்கிரக இங்கிதத்தால் சர்மாவின் தபஸ் தீவிரமாயிற்று. காரியசித்தியில் நம்பிக்கை வந்தது. அவனுடைய கவிதைக் கலை ஆவேசம் பெற்று எழுந்தது. தன் பரிதாப நிலைமையை மிகத் தாழ்மையுடன் தெரிவித்துக்கொண்டு அவன் அந்தக் கவிதையில் தன்னை, 'வெந்த உள்ளம்' என்று வருணித்துக்கொண்டான்.

பாமா கைநிறையப் புஷ்பங்களுடன் அஸ்தமன சமயத்தில் எதிர்வீட்டில் நுழைந்தாள். வழக்கப்படி கீழ் ரூம் திறக்கப்படும் சமயம் கமலி அங்கே வருவாள் என்று எதிர்பார்த்துச் சர்மா தூதியை அனுப்பினார். பாமா மாடிப்படி ஓரமாகக் கமலியின் வரவை எதிர்பார்த்துக் கொண்டு சற்றுத் தயங்கி நின்றாள். எதேச்சையாக அன்று சூரியநாராயண ஐயர் கம்பை ஊன்றிக்கொண்டு கீழே இறங்கி வந்தார். பாமா ஏதோ சாமானைக் கைகொள்ளா மல் வைத்துக்கொண்டு அவஸ்தைப்படுவதாக அவர் கண் ணில் பட்டது. "அது என்ன குழந்தை?" என்று அநு தாபத்துடன் வினவினார். பாமா, "பூக்கொண்டு வந்தேன். பின்னிக்க வேண்டும். மாமி எங்கே?" என்றாள்.

ஐயர், "மாமி மாடியில் இருக்கிறாள்" என்று சொல்லி விட்டு இறங்கும்போது பாமா கூண்டிலிருந்து விடுபட்ட

எலிபோல் ஒரே பாய்ச்சலாக மாடிப் படிக்குச் சென்றான். அவள் அருகில் வந்ததும் ஐயர் அவள் கைப்பூவில் ஒன்றைப் பொறுக்கி அது என்ன பூ என்று மோந்து பார்க்க நினைத்தார். அப்போது அவர் நீட்டிய இரண்டு விரல்களில் பூவுடன் ஒரு மடித்த காகிதமும் சிக்கிக்கொண்டது. பாமா மேலே சொல்லவில்லை. ஐயர் அவளை ஏறிட்டுப் பார்த்தார். மனத்தில் சந்தேகம் கொண்டு கடிதத்தைப் பிரித்துக் கூடத்து எலெக்டிரிக் வெளிச்சத்தில் அதை வாசித்துப் பார்த்தார். "இது யார், வெந்த உள்ளம்?" என்ற வார்த்தைகள் அவர் வாயிலிருந்து எழுந்தன. பாமாவை அவர் அதட்டி விசாரித்தபோது அவள் சாமாவின் தூண்டுதலை வெளியிட்டாள். அவர் முகக்கடுப்பைப் பார்த்து அச்சம் கொண்டு பாமா புஷ்பங்களை அப்படியே போட்டுவிட்டுத் தன் வீட்டுக்கு ஓடிவிட்டாள்.

சர்மா அவள் ஓடியதைப் பார்க்கவில்லை. எதிர்வீட்டுக் கீழ் ரூம் ஜன்னலையே ஏகாக்ரசித்தனைக் கவனித்துக்கொண்டிருந்தான்.

அந்த ஜன்னலின் பின்னிருந்து அவனை ஆராய்ந்துகொண்டிருந்த ஐயரின் நெருப்பைக் கக்கும் இரு கண்களை அவன் அறியவில்லை!

சர்மாவுக்கு ஹோட்டலிலிருந்து இரவுச் சாப்பாடு வந்துவிட்டது. ஆனால் சர்மா தன் ரூமை விட்டு எழுந்திருக்கவில்லை. முத்தசாமி வந்து ஸந்தியாவந்தனாதிகளை முடித்துக்கொண்டு, இலையைப் போட்டுச் சாப்பாட்டை இருவருக்கும் பிரித்து வைத்துவிட்டுக் கூப்பிடும் வரை பாமா போன தூது விஷயம் என்னவாயிற்று என்று அறியக் காத்திருப்பதாகச் சர்மா சங்கல்பித்துக்கொண்டான். அன்று முத்துசாமி வெகு நேரமாகியும் வரவில்லை. காரணம் நாம் முன்னமேயே அறிந்ததுதான். 'வெந்தஉள்ள'த்தின் கவிதையைச் செல்லத்தினிடமிருந்து திருப்பிப் பெற அவன் முதலில் அவளை ஸ்கூலில்

சந்தித்துவிட்டுப் பிற்பாடு அவன் வீட்டுக்குச் சென்றான் அல்லவா?

சர்மா முத்துசாமி வரவேண்டியதற்காக வாசல் கதவைத் தாழிடாமல் விட்டிருந்தான். 'ஒருவேளை கமலியே வருவதானாலும்......'

தடதடவென்று வீட்டிக்குள் யாரோ சில பேர் நுழைவது சர்மா காதில் விழுந்தது.

சர்மா எழுந்து பார்க்குமுன் உள்ளே நுழைந்த மனிதர்கள் வாசல் கதவை உள்புறம் தாழிட்டுக்கொண் டார்கள். கயிறும் கயிறும் சாட்டையும், டார்ச்சு லைட்டும் வைத்துக்கொண் டிருந்த நான்கு தடி ஆட்களைச் சர்மா ரேழியில் பார்த்தான்; உடல் நடுக்கமுற்றான். நாக்குக் குழற, 'யார்?' என்று அவன் கேட்குமுன் லைட்டுகள் அணைக்கப்பட்டன. வேண்டும்போது டார்ச்சுலைட் ஒளி வீசியது. இரண்டு ஆட்கள் சர்மாவைக் கட்டிப் பிடித்து வாயில் துணியை அடைத்துக் கூடத்துக்கு இழுத்து வந் தார்கள். அங்கே அவன் ஒரு பெஞ்சியின் மேல் குப் புறப் படுக்க வைக்கப்பட்டான். அவனை அந்தப் பெஞ்சி யுடன் தலைப்பக்கத்திலும் கால்பக்கத்திலும் இறுக்கிக் கட்ட அவன் மேல்துண்டும் அரைத்துணியுமே உபயோகப்படுத் தப்பட்டன. இருவர் அவன் தலையையும் கால்களையும் அழுத்திப் பிடித்துக்கொண்டார்கள். மற்ற இருவர் அவன் இரு பக்கங்களிலும் கையில் சாட்டையுடன் நின்று கொண்டார்கள்.

''எஜமான் சொன்னபடி எண்ணிக்கொள்'' என்றான் சாட்டை வைத்துக்கொண் டிருந்த ஒருவன்.

''சரி. ஆரம்பி, நேரமாகிறது'' என்றான் தலைப்பக்கம் அழுத்திக்கொண் டிருந்தவன். உடனே சாட்டைக்காரர் கள் இருவரும், 'வெந்த உள்ளம்', 'வேகாத உள்ளம்' என்று முறை வைத்துக்கொண்டு மாறி மாறிச் சர்மாவின் முதுகில் சவுக்கடி கொடுத்தார்கள். தலைப்புறம், கால்புறம்,

தான். உள்ளே இருந்து பதில் வராததால் அவன் பலவிதமாகக் காரணங்களைக் கற்பனை செய்துகொண்டு மனம் வெறுத்துப்போய்த் திண்ணையிலேயே பட்டினியாகப் படுத்துக் கொஞ்ச நேரத்தில் அயர்ந்து நித்திரை போனான்.

'தடிகொண்டு அடித்து நொறுக்கி வீழ்த்தப்பட்டாலும் கழுதை விரைவில் வலியை உதறிவிட்டு எழுந்திருந்து மேயக் கிளம்பிவிடும்' என்று பஞ்சதந்திரம் சொல்லுகிறது. மனிதர்களிலும் அத்தகையோர் உண்டு. சர்மா நடு நிசிக்கு மேல் பிரக்ஞை திரும்பி மெல்லத் தம் கைகளைக் கட்டினின்று விடுவித்துக்கொண்டு பிறகு மற்றப் பந்தங்களையும் அகற்றிவிட்டுச் சுதந்தரம் பெற்று எழுந்தான். தன் உடல் நிலைமையை முதலில் ஆராய்ந்து அறிந்தான். ரத்தம் கசிந்த துணிகளை அகற்றிவிட்டு உடையை மாற்றிக்கொண்டான். உடம்பு எரிச்சலும் காங்கையும் அதிகமாக இருந்தபடியால் தனக்குத்தானே அவசர சிகிச்சை செய்துகொண்டு சாப்பாட்டுப் பாத்திரங்களைப் பிரித்துச் சிறிது அன்னமருந்தினான். சிறிது நேரம் மேஜையின் மீது சாய்ந்து வலியாற்றிக் கொண்டு மேல் நடவடிக்கைகளைப் பற்றிச் சிந்திக்கலானான்.

பொழுது விடியுமுன் அந்த வீட்டைவிட்டு வெளியேறுவது என்பது அவன் செய்த முதல் தீர்மானம்.

ஹாஸ்டலில் ட்யூடோரியல் ஸிஸ்டம் இருந்ததால் தான் ஒரு ட்யூடர் ஆகச் சேர்ந்து ஹாஸ்டலில் அதற்கேற்பட்ட ரூமிலேயே இருந்துவிடுவது என்பது இரண்டாவது தீர்மானம்.

மூன்றாவது தீர்மானம், கமலியைக் கைப்பற்றுவதன் மூலம் சூரியநாராயண ஐயர் மீது பழி வாங்குவது என்பது. சர்மா போலீஸ் கம்ப்ளெயிண்டு கொடுக்க விரும்பவில்லை.

விடியுமுன் சர்மா தன்னால் இயன்றவரை பார்ப்பவர்கள் சந்தேகிக்காதபடி டிரஸ் பண்ணிக்கொண்டு,

வீட்டைவிட்டு வெளிக்கிளம்பித் தனக்கு நண்பரான ஒரு டாக்டரிடம் சென்று தாத்காலிகமாகச் சிகிச்சை பெற்றுக் கொண்டு ஹோட்டலில இட்லி காபி சாப்பிட்டுவிட்டு, காலேஜ் பிரின்ஸிபாலிடம் சென்று தன்னை ட்யூடர் ஜாப்தாவில் சேர்த்து ஹாஸ்டலில் ரூம் கொடுக்கும்படி கேட்டுக் கொண்டான். அது அநுமதிக்கப்பட்டதும் ஹாஸ்டலில் தன் வாசத்தை ஸ்தாபித்துக் கொண்டு ஹாஸ்டல் பியூனை அனுப்பி முத்துசாமிக்கு வீட்டைக் காலி செய்துவிடும்படிக்கும் தன் சாமான்களை ஹாஸ்டலுக்கு அனுப்பி விடும்படிக்கும் எழுத்து மூலம் அறிவித்தான். முத்துசாமி, திடீரென்று இந்த மாறுதல் ஏற்பட்டதற்கு ஒருவாறு காரணத்தை ஊகித்து அறிந்துகொண்டு, சர்மாவின் சாமான்களை அன்று சாயந்தரம் வண்டிவைத்து ஹாஸ்டலில் சேர்ப்பித்துவிட்டுத் தன் நிலைமையைப்பற்றிச் சர்மாவிடம் ஆலோசனை கேட்டான். சர்மா இரண்டொரு தினங்கள் அவன் தன்னுடன் ஹாஸ்டலில் சாப்பிடலாமென்றும், அதற்குள் வேறு வசதி அவன் செய்துகொள்ள வேண்டுமென்றும் கூறினான். முத்துசாமி அதற்கு இஷ்டப்படாமல் படிப்பை நிறுத்திக்கொள்வதென்று தீர்மானித்து ஹெட்மாஸ்டரிடம் போய் அது விஷயமாகத் தெரிவித்துக்கொண்டான்.

ஹெட்மாஸ்டர் பெரிய ஸம்ஸாரி. கஷ்ட நிஷ்டூரங்களை அறிந்தவர். "என்னடா! பைத்தியக்காரா! பரீட்சை சமீபிக்கும்போது ஊருக்குப் போகவேண்டுமென்கிறாய்! போன வருஷம் ஒன்று வீணாய்ப் போனது போதாதா! நீ சாப்பாட்டைப்பற்றிக் கவலைப்படாதே! என் வீட்டில் இருந்து இந்த இரண்டு மூன்று மாதங்களைக் கழித்துவிடு. பிற்பாடு காலேஜ் படிப்பு பிராப்தமிருந்தால் நடக்கிறது" என்று அவர் அவனுக்கு மிக்க அன்புடன் அபயமளித்தார். அன்று முதல் முத்துசாமி ஹெட்மாஸ்டர் வீட்டில் குருகுல வாசம் செய்யலானான். ஹெட்மாஸ்டர் அவனை வெகு பிரியத்துடன் வரவேற்றதற்கு அந்தரங்கக் காரணம் ஒன்று உண்டு.

ஹெட்மாஸ்டருக்குப் பெண்கள் ஐந்து. அவர் தம்பி பெண்கள் இரண்டும், மைத்துனிகள் இரண்டும் அவர் வீட்டில் இருந்துகொண்டு பள்ளிக்கூடத்தில் படித்து வந்தார்கள். இந்த நவ கன்னிகைகளும் பன்னிரண்டு முதல் பதினெட்டுக்கு உட்பட்ட வயதுள்ளவர்கள். ஹெட்மாஸ்டர் வெகுநாளாக முத்துசாமியைக் குறி வைத்திருந்தார். அவனுக்கு மேல்படிப்புக்கு ஒத்தாசை இருந்தால் அவன் எம். ஏ. மட்டுமல்லாமல் எப். ஸி. எஸ். பரீட்சையில்கூட அநாயாசமாகத் தேறக் கூடியவன் என்பது அவர் நம்பிக்கை.

* * *

முத்துசாமி ஹெட்மாஸ்டர் வீட்டில் வசிக்கப் புகுந்த சில நாட்களுக்குள்ளேயே பள்ளிக்கூட மாணவிகளிடையே விளையாட்டு நேரங்களில் அவன் ஹெட்மாஸ்டருக்கு மாப்பிள்ளையாகப் போகிறான் என்ற பிரஸ்தாபம் கிளம்பியது. இதைக் கேட்டுக்கொண்டிருந்த செல்லம் ஒரு நாள் பந்து விளையாடும் மைதானத்தில் மூர்ச்சை அடைந்து காந்திமதியால் உபசரிக்கப்பட்டு வீடு கொண்டு வந்து சேர்க்கப்பட்டாள். செல்லத்தின் துயரம் ராமநாதனின் உதாசீனத்தினால் ஏற்பட்டதென்று சிவராமன் நினைத்து அவளுக்குச் சமாதானம் சொன்னதும், காந்திமதி அதை மறுத்து உண்மையை விளக்கப் போகும் சமயத்தில் அதற்கு இடம் கொடாமல் வேறு விருத்தாந்தம் குறுக்கிட்டதும் முன்னமேயே வருணிக்கப்பட்டிருக்கிறது.

முத்து சாமி ஒருவாரத்துக்கு முன் செல்லத்தினிடம் 'வெந்த உள்ள'த்தின் கடிதத்தை வாங்கிக்கொள்வதற்காக ஐயர் பங்களாவுக்கு வந்தபோது காவல்காரன், "ஓடி விடுங்க, ஐயா! இங்கே இப்போ வந்தா உமக்கு ஆபத்துத்தான்" என்று எச்சரிக்கை செய்து விரட்டியதுமுதல் உள்ளூற மிகப் பயந்து போனான். 'அந்தக் குடியைக் கெடுக்கும் கடிதம் யார் கையில் சிக்கியதோ? அதற்கு என்ன அர்த்தம் செய்துகொண்டார்களோ? அதை

எழுதியவன் நான் என்று நினைத்தால் அவர்கள் எனக்கு என்ன தண்டனை விதிக்க நினைப்பார்களோ?

'துர்ஜன ஸஹவாஸம் தலைக்கு வந்துவிட்டதே! நான் ஏன் அந்தக் கடிதத்தைக் கையில் எடுத்தேன்! ஏன் அதைப் படிக்க ஆவல் கொண்டேன்! "விநாசகாலே விபரீதபுத்தி!" என்பது சரியாகப் போய்விட்டதே! துஷ்ட சகவாஸமும் புத்தி சபலமும் எனக்குச் சம்பந்தமில்லாத குற்றத்தை என்பேரில் சுமத்தி என்னைச் சந்தியில் நிறுத்த மூல காரணமாகிவிட்டனவே! இப்படி நான் கடிதம் எழுதின தாக என்னைப்பற்றிப் பேச்சு வெளியாகுமானால், அந்த அவமானத்தை நான் எப்படித் தாங்குவது! ஹெட்மாஸ்டர், வீட்டில் பல பெண்களுக்கு மத்தியில் இருக்கும் என்னை அவநம்பிக்கையால் உடனே வெளியேற்றிவிடு வாரே! தஸ்தாவேஜு எனக்கு விரோதமாக இருக்கும்போது நான் ஒரு பாபசிந்தனையும் அற்றவன் என்று யாரிடம் முறையிடுகிறது! எனக்குப் போதாத காலம் வலுவாகச் சுழன்று வருகிறது. இதை மானம் இழக்காமல் கடந்து விட்டால் போதும். இந்தப் படிப்பு எனக்கு வேண்டாம். சோற்றுக்கு நான் ஒருவரை அண்டி நிற்கவேண்டாம். அசத்துக்களும் அநாசாரமும் நிரம்பிய இந்தப் பட்டண வாசம் எனக்கு வேண்டாம். ஊரில் பாத்து மா நிலமும் ஒரு வீடும் இருக்கிறது. எனக்கும் அம்மாவுக்கும் அது கால க்ஷேபத்துக்குப் போதும். என் தகப்பனாருடைய வழி யில் நான் கொஞ்சம் யோக்கியதையை விருத்தி செய்து கொண்டால் எவ்வளவோ கௌரவமாகவும் பரிசுத்தமாக வும் வாழலாம். ஏன் எனக்கு இந்தப் பீடை பிடித்த ஆங் கிலப் படிப்பு! இதை வேண்டாமென்று முதலில் ஒதுக்கி அத்தியயனம் செய்ய என் தகப்பனார் என்னை நியமித்தார். மறுபடி ஏதோ யோசனை செய்து அத்தியயனம் பூர்த்தியாகு முன் என்னை ஆங்கிலம் கற்கப் பள்ளிக்கு அனுப்பினார். இந்தப் படிப்பில் பல கட்டங்களில் பல இடையூறுகள் வந்து அவ்வப்போது இதைச் சமாப்தி செய்துவிடுவதென்று நான் தீர்மானித்தும் இது என்னை நைச்சியம் பண்ணி

மறுபடி தன்னிடமே இழுத்துக்கொண்டது. ஆனால் இனி இந்தச் சபலத்துக்கு இடம் கொடுக்கமாட்டேன். கயிறு கழுத்துக்கு வந்துவிட்டது. சுருக்கு இறங்குமுன் தப்பிப் பிழைக்கவேண்டும். இந்தக் கடிதம் என்னைத் தூர்த்தனென்று பறையறைவிக்கப் போகிறது. நான் அதை எழுதவில்லை என்று எவ்வளவு பேர்களிடம் மன்றாட வேண்டுமோ! எவ்வளவு சபதங்கள் செய்ய வேண்டி வருமோ! எவ்வளவு சாட்சியங்கள் சேகரிக்க வேண்டுமோ! ஆனால் என்னைச் சந்தேகித்தால் செல்லம் ஒருத்திதானே சந்தேகிக்கலாம்! ஆம், காந்திமதியும் செல்லமுந்தான்! காந்திமதி வேறு, செல்லம் வேறு அல்லவே! இவர்களுக்கு என் பெயரை வெளியிடும் உத்தேசமிருந்தால் அன்று பங்களா வாசலில் என்னைக் காவல்காரன்மூலம் எச்சரிக்கை செய்து காந்திமதி அனுப்பியிருப்பாளா? நான் போன சமயம் அந்தப் பாழாய்ப் போன கடிதம் வீட்டில் பெரிய வர்கள் கையில் சிக்கிக்கொண்டுவிட்டதென்று ஊகிக்கிறேன். அதன் நிமித்தமாகச் செல்லம் ஏதாவது கண்டனம் தண்டனைகளுக்கு உள்ளானாளோ, என்னமோ? என்று நான் சந்தேகிக்கிறேன். இல்லாவிட்டால் காந்திமதி என்னைக் கண்டவுடன் அவ்வளவு பரபரப்புடன் ஓடிவரக் காரணமென்ன? இதனால் அவ்விரு பெண்களும் என் பெயரைக் காண்பித்துக் கொடுக்கும் எண்ணம் உள்ளவர்களாகத் தெரியவில்லை. இதிலிருந்து இந்த அநாமதேயக் கடிதம் அமைதியான குடும்பத்தில் ஏதோ குழப்பங்களை உண்டுபண்ணி யிருக்கிறதென்று நான் நினைக்கிறேன். இவை முற்றி என்ன ஸ்வரூபத்துடன் வெளிக்கிளம்பப் போகின்றன என்பது போகப் போகத்தான் தெரிய வேணும்...'

இவ்விதம் நாளுக்கு நாள் சிந்தனைகளைப் பெருக்கி மனம் கலங்கி, உடல் மெலிந்து கவலை கொண்டிருந்த முத்துசாமிக்குச் செல்லத்தின் தகப்பனார் ஹெட்மாஸ்டரைப் பார்க்க வந்ததும் தன் விசாரணைக் காலம் நெருங்கி விட்டதென்று மனத்தில் பீதி குடிபுகுந்தது. ஹெட்மாஸ்

டரிடம் அக்கடிதம் பரிசீலனைக்கு வருமென்றும், அவர் எழுதினவனைக் கண்டுபிடிக்கும்படி ஏவப்படுவாரென்றும் விசாரணை தொடங்கினால் லைப்ரரி ரிஜிஸ்டர் பதிவின்மூலம் அக்கடிதம் வைக்கப்பட்டிருந்த புஸ்தகம் செல்லம் வாங்கிக் கொள்ளும்முன் என்னிடம் இருந்ததென்று சுலபமாகக் கண்டுபிடிக்கப்படலாமென்றும், அப்போது பிரதிவாதி நிர்ணயிக்கப்பட்டு நடவடிக்கைகள் தீவிரப்படுத்தப்படு மென்றும் முத்துசாமி யோசிக்கலானான். 'ஹெட் மாஸ்டர் வீட்டிலேயே சாப்பிட்டுக்கொண்டிருக்கும் நான் உண்மையை உரைக்காமல் இருந்தால் அதுவே என்மீது குற்றச்சாட்டுக்கு ஆதாரமாகும். ஆகையால் விசாரணை துவக்கு முன் நானே ஹெட்மாஸ்டரிடம் உள்ளதை உள்ளபடி வாக்குமூலம் கொடுத்துவிடுகிறேன். பிறகு எது நடந்தாலும் சம்மதம்' என்று முத்து சாமி தனக்குள் தீர்மானித்துக்கொண்டு மனத்தைத் திடப்படுத்திக்கொண்டான்.

அவ்விதம் நிருபணம் செய்ய மறுநாள் ஹெட்மாஸ் டர் பங்களாவுக்குப் போய்வருவதை எதிர்பார்த்துக் கொண்டிருந்தான்.

* * *

ராமநாதன், இரவு வரவில்லை. சிவராமன், கோபிநாத், வேங்கடசுப்பையர் முதலியவர்களும் குழந்தைகளும் சேர்ந்து முதலில் போஜனம் செய்தார்கள். மதுரப்பாட்டி அஸ்தமனத்திலேயே பலகாரம் பண்ணிவிட்டாள். பெண் கள் வெகு நேரம் வரையில் சம்பாஷணையின் சுவாரஸ் யத்தை அநுபவித்துக்கொண்டு இருந்தபடியால் கோமதி யும் சங்கரியம்மாளும் இரண்டாம் பந்திக்கு உட்கார்ந்தார் கள். உஷாவுடன் செல்லம் காந்திமதிகளுக்குப் போஜனம் செய்விக்கக் கோமதியை ஏவிவிட்டுச் சங்கரியம்மாள் மாடிக் குச் சென்றாள்.

சிவராமன் கோபிநாத்துடன் தன் சரீரத்தில் ரத்தக் கொதிப்பு இருப்பதுபற்றியும், அதன் தீமைகளை முற்ற

விடாமல் இருப்பதற்காகத் தான் அநுஷ்டித்து வரும் ஆகார கட்டுப்பாடு முதலிய முன் எச்சரிக்கைகளைப்பற்றியும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார். கோபிநாத் ரத்தக் கொதிப்பு ஒரு வியாதியில்லை என்றும், அதைப்பற்றிப் புதிய அபிப்பிராயங்கள் வெளிவந்திருப்பதாயும், தாம் நேரில் பரீக்ஷிக்காமல் ஒன்றும் தீர்மானம் சொல்ல முடியாதென்றும் ஆனால் அந்தக் 'கம்ப்ளெயிண்டு' உள்ள பல பேர்களுக்குத் தாம் வைத்தியம் செய்து சொஸ்தம் பண்ணியிருப்பதாயும் விவரித்து, சம்பாஷணையை அதிக நேரம் நீடிக்கச் செய்தார். முடிவில் ராமநாதனைக் காணாதது பற்றிச் சிவராமன் கோபிநாத்தை விசாரித்தார். கோபிநாத் ஒன்றும் திருப்திகரமான விவரம் சொல்லக்கூடியவராக இல்லை. கோபிநாத் உஷாவைப்பற்றிச் சிவராமனை எதுவும் கேட்கத் துணியவில்லை.

இதன் மத்தியில் சங்கரியம்மாள் மாடியில் வேங்கட சுப்பையருடன் குடும்ப விஷயமான மந்திராலோசனைகளில் ஈடுபட்டிருந்தாள்.

"பொழுது விடிந்து உஷாவை என்ன செய்யப் போகிறீர்கள்?" என்பது அவள் கேள்வி. "மதுராப்பாட்டி தன் பிள்ளையிடம் போகவேண்டுமென்றும் ஒரு மாதம் லீவு வேண்டுமென்றும் இன்று அஸ்தமனத்துக்குப் பிறகு திடீரென்று ஒரு வெடியைப் பிரயோகிக்க ஆரம்பித்திருக்கிறாள். அவள் லீவு கேட்கும் காரணம் எனக்குத் தெரியும். கல்யாணமும் அதுவுமாய் வீடு அமளிப்படும் தறுவாயில் நான் காரியக்காரியில்லாமல் என்ன செய்வேன்? பத்து நாளைக்கு நிம்மதியாக இருக்கலாம் என்று வந்திருக்கும் கோமதியை உட்காரவிடாமல் வேலை வாங்கிக் கஷ்டப்படுத்துவதா? இந்தச் சிவராமனாலே நமக்கு வருகிற தொல்லை இவ்வளவு அவ்வளவு என்று சொல்ல முடியாது. எனக்கு நாலு பேர் கேட்கிறவாளுக்கு ஜவாப்புச்சொல்வது கஷ்டமாக இருக்கும்போல் இருக்கிறது. என்ன இருந்தாலும் இதெல்லாம் அவமானந்தானே? நமக்கு ஏன் இந்தச் சின்னை

களெல்லாம்? அவன் பெண்ணேயோ, பெண்களேயோ அழைத்துக்கொண்டு நாளைக்கே ஊருக்குப் போய்விடட்டும். செல்லத்துக்கு வரனைப் பார்த்துக்கொண்டு வந்தானேயானால், காந்திமதி கல்யாணத்துடன் நடத்திவைப்போம். அதற்குமேல்தான் நாம் என்ன செய்ய முடியும்? அவன் கிளறிய குப்பைகளையெல்லாம் அள்ளி நாம் தலையில் போட்டுக்கொண்டு ஏன் அவஸ்தைப்படவேண்டும்?" வேங்கடசுப்பையர் தன் பாரியையின் வியாகுலத்தை அநுதாபத்துடன் பரிசீலனை செய்யப் புகுந்தார்.

"மதுரப்பாட்டியின் பயமுறுத்தல் உன்னை இவ்வளவு குழம்பச் செய்துவிட்டது! அவளைச் சமாதானம் செய்து வைத்துக்கொள்ளும்பொருட்டு நீ உன் தம்பியையும் மருமானையும் வீட்டை விட்டு அனுப்பிவிட்டால் தேவலை என்று நினைக்கிறாய்! ரொம்ப நன்றாக இருக்கிறது யோசனை! இவ்வளவு கோழைத்தனமாக இருந்தால் எப்படி இந்த உலகத்தில் பெயர் சொல்ல முடியும்? மதுரப்பாட்டி கோபித்துக்கொண்டு போய்விட்டால் உலகமே அஸ்தமித்துவிடும் போல் இருக்கிறது! மதுரப்பாட்டி இல்லாமல் எவ்வளவு குடும்பங்கள் நடக்கவில்லை? இன்னும் இரண்டு ரூபாய் கூடக் கொடுத்தால் மற்றொருத்தி வந்துவிடப் போகிறாள். இந்தப் பாட்டியே அடிப்போடுவது பிரமோஷனுக்குத் தான். நீ வேறு விதமாக நினைக்கிறது தப்பு. கல்யாணம் வருகிறபடியால் வேலை அதிகமாக இருக்குமென்றும், இந்த முடையில் பிகு பண்ணிக்கொண்டால் அதிகச் சம்பளம் பெறலாம் என்பதுந்தான் அவள் உத்தேசம். நாளைக்கு நீ வேண்டுமானால் சொல்லிப் பார். இந்த மாதம் ஐந்து ரூபாய் அதிகம் தரப்போவதாக நான் சொன்னதாகச் சொல்லு. பிரயாணம் நின்று போய்விடும்..."

"நீங்கள் சொல்லுகிறபடி இருந்தாலும் இருக்கும். அதையும் நாளைக்குப் பரீக்ஷை பார்த்துவிடுகிறேன். நேனும் கல்யாணத்தை முன்னிட்டு ஒரு சுமங்கலிப் பிரார்த்தனை செய்தால் அதில் ஏழைச் சுமங்கலி ஒருத்திக்கு ஒரு

புடைவை எடுத்துக் கொடுக்கவேண்டுமென்று சங்கல்பித்திருக்கிறேன். இந்தப் பாட்டியின் பெண் கஷ்ட நிலைமையில் இருக்கிறாள். பரம சாது, உபகாரி; சோம்பலே இல்லை. சிரித்த முகம்; அசூயையே இல்லை. அவளுக்குத்தான் அந்தப் புடைவை என்று உத்தேசித்திருக்கிறேன்."

"பேஷாகச் செய். இதையும் அந்தப் பாட்டியிடம் சொல்லிவிடு. பிற்பாடு லீவு கேட்கிறாளா பாரு..."

இந்த உண்மையை அங்கீகரிக்காமல் இருக்கச் சங்கரியம்மாளால் முடியவில்லை. மதுரப்பாட்டியின் ஜாலக்குகளை நினைக்க நினைக்க அவளுக்குச் சிரிப்பு வந்தது.

மேலும் வேங்கடசுப்பையர் பேசலானார்: "சிவராமன் கிளறிய குப்பைகளை நாம் தலைமேல் போட்டுக்கொள்வானேன் என்று நீ கேட்ட கேள்வி சரியான கேள்விதான். ஆனால் நீ சற்று யோசித்துப் பார்த்தால் அதற்குப் பதில் உனக்கே புலப்படும். அந்தக் குப்பையை நாமா வேண்டுமென்று தலைமேல் போட்டுக்கொள்கிறோம்? அது காற்று வாக்கில் நம் பேரில் வந்து விழுகிறது. புழுதி கண்களில் உறுத்துகிறது. சுவாஸத்தை அடைக்கிறது. உடலை மலினமாக்குகிறது. அப்போது நாம் செய்யவேண்டியது என்ன? தூய்மையை விரும்புகிறவர்கள் அசுத்தமான காற்றினின்றும் விலகி ஜலத்தினால் தூசி படிந்த உறுப்புகளைக் கழுவிக்கொள்ள வேண்டியது அவசியமல்லவா? அதற்குத்தான் ஆரம்பித்திருக்கிறேன்."

"என்ன ஆரம்பித்திருக்கிறீர்கள்?"

"பாம்பு கடித்த விரலைத் துண்டித்து எறிந்துவிட்டால் தான் பிழைக்கலாம்."

"அவன் அப்போதே சொல்லிவிட்டான்."

"என்ன?"

"அப்பா பணத்தைத்தானே இல்லை என்று சொல்ல முடியும்! காதலுக்காக நான் எதையும் துறக்கத் தயார்!"

என்று. நானும் பதிலுக்குக் கேட்டேன்; 'பணமில்லாமல் போர்ஜரி பண்ணிச் சம்பாதிப்பாயா? அல்லது பெண் டாட்டி நாட்டியமாடிச் சம்பாதித்துப் போடுவதால் வயிறு வளர்க்கப் போகிறாயா?' என்று. அதுக்கு ரோஷமில்லை. மான அவமானம் தெரியவில்லை. பந்துக்கள் வேண்டாமாம். யார் உதவியையும் எதிர்பார்க்கவில்லையாம். தலைகால் தெரியாமல்தான் துள்ளுகிறான். 'உன்னைப் பெற்ற வயிறு எரிகிறதடா' என்று சொன்னேன்."

"அவன் நினைத்தபடி நான் அவன் பங்கைப் பறிமுதல் செய்துகொண்டு அவனை விலக்கப் போவதில்லை. அவனுக்குத் திருப்திகரமான வழியிலேயே சென்று சகல உதவிகளையும் செய்யப் போகிறேன்."

"எதுக்காக? 'அப்பா என்னைப் போலீஸில் மாட்டிவைத்தது நிர்த்தாக்ஷிண்யமான காரியம்' என்று தூற்றினானே, அதற்காகவா?"

"அவன் எது வேண்டுமானாலும் சொல்லட்டும். நான் அப்படிச் செய்யாவிட்டால் போர்ஜரியின் உண்மை வெளிவராது. அது சம்பந்தமான நடவடிக்கைகளைப் பரம ரகசியமாகத்தான் வைத்துக்கொண்டிருக்கிறேன். போர்ஜரி செய்தது இன்னார் என்றும் இன்ன காரணத்துக் காக அது செய்யப்பட்டதென்றும் தெரிந்துகொண்ட பிறகு அவன் விஷயத்தில் நான் எப்படி நடந்து கொள்ள வேண்டுமென்பதைப்பற்றியும் ஒரு தீர்மானத் துக்கு வந்திருக்கிறேன். பொய், பித்தலாட்டம், துரோகம், வஞ்சனை, நம்பினவரைக் கைவிடுதல், சுயநலம், கபடநாடகம், டம்பப் பேச்சு, ஏமாற்றும் வெளித்தோற்றத்தில் பயிற்சி, உண்மை உணர்ச்சி இன்மை, கண் இருந்த வழி தடுமாறிச் செல்லுதல, தன் குற்றம் மறைத்தல், போலி வீறாப்பு, பெரியோர்களை நிராகரித்தல், படிப்பின் உயரிய பண்பு பொறாமல் இழிவான உலகியலில் உழலுதல் முதலிய கீழ்த்தரமான அவகுணங்கள் நிரம்பிய ஒரு

பின்னை எக்கேடு கெட்டுப் போனால் என்ன என்ற வைராக்கியம் எனக்கு வந்துவிட்டது."

"அவனை இனிமேல் திருப்பவும் முடியாது."

"வக்கீல் விசுவநாதையர் அப்படித்தான் சொன்னார். ஆகையால் எப்படிச் செய்வது மேல்? யோசித்துப் பார!"

"அது எக்கேடு கெட்டுப் போகட்டும் என்று விட்டு விட வேண்டியதுதான்."

"அதைத்தான் நான் உத்தேசித்திருக்கிறேன். கையை விட்டு நழுவியதை நாம் கொடுத்தது போல் பாவனை செய்தால் இழந்த துக்கம் இல்லாமல் கொடுத்த பெருமையைப் பெறலாம்."

"அதற்காகத்தான் உஷாவை இங்கே அழைத்து வைத்துக்கொண்டீர்களா?

"ஆம். உஷாவின் விவாகத்துக்கு, முதலில் கார்டியன் விவாதம் தீர வேண்டும். அதைத் தீர்த்துவிட்டேன்."

"எப்படித் தீர்த்தீர்கள்? நாளைக்கு அழகிரி, 'என் வீட்டுப் பெண்ணை விடுகிறாயா, இல்லையா?' என்று சண்டைக்கு வந்தால்...?"

"வரமாட்டான். பெண் நம் வசம் வந்துவிட்டாள். அவன் கோர்ட்டுக்குப் போக வேண்டியதுதான் ஒரே வழி. பெண் அவன் வசம் இருந்தபோது சிவராமன் கோர்ட்டுக் குப் போவது ஒரே வழியாக இருந்தது. சிவராமன் கார்டியன் மனுவுடன் ஒரு நாளும் கோர்ட்டுக்குப் போக மாட்டான். இப்போது பெண்ணை இங்கே வரவழைத்து நம் வசத்தில் வைத்துக்கொண்டதன் மூலம் அழகிரியைக் கோர்ட்டுக்கு விரட்டும் தந்திரத்தைச் செய்தேன். அவன் கோர்ட்டுக்குப் போகமாட்டான் என்பது நிச்சயம்..."

"ஏன்?"

"கோர்ட்டில் பகுத்தறிவு வந்த மைனரின் சம்மதத் தைக் கேட்பார்கள். உஷா யாரிடம் இருக்க விரும்புவாள்

என்பதில் சந்தேகமில்லை. அழகிரிக்கும் அது தெரியும். மேலும் அவன் நாளைக் காலையில் போலீஸ் வசத்தில் இருப்பான். ராமநாதனைப் பலாத்காரம் செய்து வைரப்பிரத்தான்களைப் பிடுங்கிக்கொண்ட அடாத செயலுக்கு அவனைப் பழிவாங்கவும், சிவராமனுடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை அநுசரித்து உஷாவுக்கு மூலதனம் ஏற்படுத்தும்படி கட்டாயம் செய்யவும் நான் சில ரகசிய நடவடிக்கைகளை எடுத்துக்கொண்டிருக்கிறேன். ராமநாதன் பாதிக்கப்பட்டவனாகையால் அவனே குற்றம் சாட்டுபவனாக இருந்து எதிரியின் பேரில் கேஸ் நடத்துவான்."

"ராமநாதன் ஏன் இன்னும் வரவில்லை?"

"அவன் இன்று இரவு வக்கீல் வீட்டிலேயே தங்குவான்."

"அப்புறம்?"

"நாளைக்கு அழகிரியைக் கூண்டில் அடைக்கும் வேலையில் அவனுக்கு முக்கியப் பங்கு உண்டு."

"அதற்குமேல்?"

"சிவராமன் கல்யாண ரிஜிஸ்ட்ராரிடம் உஷாவின் கார்டியனாக அவள் விவாகத்தைப்பற்றிய நோட்டீஸ் கொடுக்க வேண்டியது."

"உடனே கல்யாணந்தானா?"

"இரண்டு வாரம் சென்றபின்தான் கல்யாணத்துக்கு ஒரு நாளைப் பார்க்க வேண்டும்."

"நாள் பார்க்கிறது வேறேயா? நல்ல சனிக்கிழமையாக, ஸ்திரவாரமாகப் பாருங்கோ! சுத்தகை, பர்தகம் ரிஜிஸ்டர் மாதிரிதானே? நீடித்து நிற்க வேண்டுமோ இல்லையோ! லக்னமும் ராகுகாலத்தில்தான் வைக்க வேண்டும். அஸுர விவாகமோ, இல்லையோ?"

"அக்கினி சாட்சியாகத் தாலி கட்டிச் செய்கிற விவாகம் இந்தக் காலத்திலெல்லாம் கிரமப்படிதான் நடக்

கிறதோ? காலை போட்மெயிலில் மாப்பிள்ளை வந்து இறங்கு கிறான். இரவு போட்மெயிலுக்கு 'ஸெகண்டு கிளாஸ்' ரிஸர்வ் பண்ணிக்கொண்டு பெண்ணுடன் பிரயாண மாகிவிடுகிறான். மந்திரமா, தந்திரமா, சிரத்தையா, ஸம்பிரதாயமா ஒன்றும் இல்லை. அக்கினி சாட்சி என் பது பெயரளவில். எல்லா வைதிகக் கிரியைகளும் வாத்தி யாருக்குள்ளே அடக்கம். அவருக்கு வேண்டிய காசை வாங் கிக்கொண்டு அவர் சௌகரியம்போல் செய்துகொள்ள வேண்டியது. "எல்லாம் ஆச்சா?" என்றால், "ஆச்சு" என்று சொல்லுகிற வாத்தியாருக்கு ஸம்பாவனை அதிகம். கல்யாணம் ஐப்பசி, கார்த்திகை மாதத்திலும் நடக்கிறது. உத்தராயணத்தில்தான் நடப்பதென்பது போய்விட்டது. கன்னிகையின் லக்ஷணத்தைப்பற்றியோ சொல்ல வேண்டிய தில்லை. முதல் கட்டம் தாண்டி ஒரு மகாமகம் வரையில் கன்னிகைதான். சில சமயம் காந்தர்வ விவாகம் முந்திக் கொள்கிறது. இவ்வளவு லக்ஷணத்தில், 'பிராஹ்ம விவாக'த்தின் யோக்கியதையை எங்கே கண்டுகொள்கிறது? அசுராம்சம் பரவாத விவகாரம் இப்போது இல்லை. சிலவற்றில் வெளித்தோற்றம் சுத்தமாக இருக்கிறது. உள்ளே இருப்பது ஊழல்தான். அதைவிட உள்ளும் புற மும் ஒன்றாகக் காலத்துக்கேற்ற கோலமாக அமைந்திருப் பது சிலாக்கியமல்லவா?"

"அது எப்படியாவது போகட்டும். நோட்டீஸ் கொடுத்து இரண்டு வாரம் எதற்காகச் செல்ல வேண்டும்?"

"சட்டம் அப்படிச் சொல்லுகிறது. அந்த நாட்களுக் குள் நோட்டீஸில் கண்ட கல்யாணத்தை ஆக்ஷேபிக்கக் கூடியவர்கள் இருந்தால் தங்கள் ஆக்ஷேபணைகளுடன் முன் வரலாம்."

"யார் ஆக்ஷேபிக்கப் போகிறார்கள்!"

"மைனர் விஷயத்தில் கார்டியன் சச்சரவுக்கு இட மிருக்கலாம். மற்றவர் விஷயத்தில் வேறு ஒப்பந்தங்கள் நிரூபிக்கப்படலாம்."

"புரிந்துகொண்டேன். சிவராமன் நோட்டீஸுக்கு அழகிரியைத் தவிர வேறு ஆக்ஷேபிக்கக் கூடியவர்கள் இல்லை. அவன் ஜெயிலில் மாட்டிக்கொண்டு விட்டால்..."

"ஜெயிலில் இருந்தால் ஆக்ஷேபிக்கக்கூடாது என்பதில்லை. நடவடிக்கைகளின் போக்கை அறிந்துகொண்டு அவன் படிமானத்துக்கு வந்துவிடுவான் என்று எதிர் பார்க்கிறேன். அழகிரி ஜெயிலுக்கே போகமாட்டான். காரியம் முற்றுமுன் ராஜிக்கு வந்துவிடுவான். அவனை ஜெயிலில் வைக்க வேண்டுமென்று எனக்கும் எண்ணமில்லை. இதெல்லாம் ஒரு மிரட்டல்தான். அது இல்லாமல் போனால் துஷ்டர்கள் வழிக்கு வரமாட்டார்கள். ஒரு கவி சொல்லியதுபோல் முட்செடியை வழியே போகிறவன் தீண்டமாட்டான். பூக்கொடியைக் கைச்சேஷ்டையாகச் சின்னபின்னம் பண்ணுவான். துஷ்டர்களுக்குத் துஷ்டனாகவும் சாதுக்களுக்குச் சாதுவாகவும் இருக்கும்படிதான் நம் நீதி சாஸ்திரங்கள் சொல்லுகின்றன. கீதையின் உபதேசமும் அதுதான்."

"சரி, கல்யாணம் ஆகிவிட்டதென்று வைத்துக் கொள்வோம். நாட்டுப்பெண்ணைச் சோபனம் சுற்றி வீட்டுக்குள் அழைக்கிறதா?"

"எந்தச் சட்டத்தின் கீழ் இந்த ரிஜிஸ்டர் விவாகம் நடக்கிறதோ அந்தச் சட்டமே உன் கேள்விக்குப் பதில் கூறிவிட்டது."

"என்ன!"

"இவ்விதம் விவாக ரிஜிஸ்டர் செய்துகொள்பவன் அது முதல் சொத்துக்களைப் பற்றின வரையில் குடும்பத்தி லிருந்து வேறுபட்டவனாகிறான். போக்குவரத்து நம் ஸௌஜன்யத்தைப் பொறுத்தது."

"ஆனால் இப்போதே நீங்கள் அவனுக்குப் பாகம் பிரித்துக் கொடுக்க வேண்டுமென்று சொல்லுங்கள்."

"என் சொத்துக்களெல்லாம் என் சுயார்ஜிதமாகையால் நான் இஷ்டப்பட்டுக் கொடுத்ததை அவன் அடைய வேண்டியது."

"இல்லை என்றும் சொல்லிவிடலாம்."

"சொல்லிவிடலாம். நான் அவனுக்குக் கண்யமான முறையில் ஏற்பாடு செய்ய உத்தேசித்திருக்கிறேன். வக்கீலிடம் தஸ்தாவேஜு தயாராகிறது."

"அவனை வக்கு வகையில்லாமல் தெருவில் நிறுத்தினாலல்லவா அவனுக்கு நல்ல புத்தி வரும்? அவன் செய்திருக்கிற அடாத காரியத்துக்கு அவனிடம் உங்களுக்குத் தாக்ஷிண்யம் எதற்கு?"

"முதலில் கோபத்தினால் அப்படித்தான் தோன்றும். இரு முறை ஆலோசித்துப் பார்த்தால தயவும் தாக்ஷிண்யமுந்தான் காரிய முறைக்கு ஒத்ததாகும். மேலும் செல்வத்தின் நடுவே வளர்ந்து வருகிற ஒருவனுக்கு நற்குணங்களும் படிப்பில் ஊக்கமும் வெகுவாக அமைவதில்லை. ஏழைமையில்தான் சீலத்தின் செழிப்புக்கும் வித்தியாபிவிருத்திக்கும் வேண்டிய உரம் இருக்கிறது. எனக்கு ஆசிரியர் அடிஸன், 'ஸ்பெக்டேடரி'ல் எழுதியகதை ஒன்று ஞாபகத்துக்கு வருகிறது. இரு நண்பர்கள்; ஒருவன் ஐசுவரியத்தையும் மற்றொருவன் வித்தையையும் தேடினார்கள். தனவந்தனுக்குப் புத்திரனும் வித்துவானுக்குப் பெண்ணும் பிறந்தார்கள். புத்திரன் படிப்பும் சீலமும் பெறவேண்டித் தனவந்தன் குழந்தையை வித்துவானிடம் வளர்க்க விட்டுவிட்டு அவர் பெண்ணைத் தான் எடுத்துக் கொண்டான். மகன் படிப்பில் பாரங்கதனாகவும் சீலவானாகவும் ஆன பிறகு அவனுக்கு உண்மையைத் தெரிவித்து அந்த வித்துவானின் பெண்ணை மணம் செய்வித்தானாம். லக்ஷ்மி மூன்று தலைமுறைக்குத் தங்காது என்று சொல்வதெல்லாம் பணக்காரன் வீட்டுப் பிள்ளைகள் அட்டூழியம் செய்து அழிந்துபோவார்கள் என்பதைத்தான் உணர்த்து

கிறது. லக்ஷ்மி மதமானது நீதி, நியதி, தர்மம், நியாயம், தயை, தாக்ஷிண்யம் எல்லாவற்றையும் மீறச் செய்யும் லாகிரி போன்றது.''

''சரியாகத்தான் இருக்கிறது. நம் பிள்ளையைப் பார்த்தால் வேறு உதாரணம் வேண்டாம். எவ்வளவு சொத்து அவன் பேரில் எழுதிவைக்கப் போகிறீர்கள்?''

''ரொக்கம் இருபத்தையாயிரமும்...''

''இன்னும் என்ன?''

''நான் வாங்குவதாக ஒப்பந்தம் செய்திருக்கிற கல்யாணப் பிரஸ் என்ற அச்சாபீஸும். அதன் கட்டடம் உள்பட அதன் பெறுமானம் 25 ஆயிரம் ரூபாய். அவனுக்கும் ஒரு தொழில் வேண்டுமல்லவா? வசிக்க வீடும், ஒரு தொழிலும், கையில் முதலும், அவனுக்குப் பிடித்த பெண்டாட்டியும் - ஏதோ என்னால் ஆனது - எனக்குப் பிள்ளையாகப் பிறந்த பந்தத்துக்காக...''

''எல்லாம் சரி. இதையெல்லாம் வைத்துக் கொண்டு கௌரவமாக வாழத் தெரியவேண்டுமே?''

''இனிமேல் புத்தி வந்துவிடும். மேலும் பெண்டாட்டி ஒருத்தி இருக்கிறாளல்லவா?''

''ஐம்பதினாயிரம் ரூபாயை வழி கெட்டு விலகிப் போகும பிள்ளைக்கு அநுதாபப்பட்டு நீங்கள் கொடுத்து விட்டால் மற்றும் உள்ள குழந்தைகளுக்கு அந்தத் திட்டத்துக்குக் கிடைக்குமா?''

''சங்கரி, கவலைப்படாதே! ஈசுவரன் கொடுத்திருக்கிறார். எல்லாருக்கும் கண்டு சீதாராமனுக்கும் கொஞ்சம் மிஞ்சும். அவனைக் கைவிட்டுவிடுவதாக உத்தேசமில்லை.''

''எல்லாரும் பிள்ளைகள், அவனும் பிள்ளையா! பெற்றவர்களுக்கு அவன் பெருமை தெரியவில்லை. நம்மிடம் அண்டினவனை நாம் பெற்ற பிள்ளைக்குச் சமமாகத்தான் பாவிக்க வேண்டும். அவன் போனது

முதல் வீட்டை வெறிச்சென்றாகி விட்டது. அவளை அழைத்து வாருங்கள்......"

"சங்கரி, இன்னும் ஒரு சமாசாரம். கேட்டால் உனக்குத் தூக்கி வாரிப்போடும். சீதாராமன் ஊருக்குப் போனவுடன் தன் மாமனைக்கொண்டு பாங்கில் என் கணக்குக்கு ரூபாய் ஆயிரம் டிராப்டு மூலம் அனுப்பச் செய்திருக்கிறான்."

"அவன் மானி! நம் பிள்ளை செய்த துரோகத்துக்கு அவன் நஷ்டஈடு செய்திருக்கிறான். அந்தப் பணத்துக்கு என்ன செய்யப்போகிறீர்கள்?"

"ஒன்றுக்கு இரண்டாகத் திருப்பிக்கொடுக்கப் போகிறேன். ஒரு சந்தர்ப்பத்தை எதிர்பார்க்கிறேன். அவனுக்குக் கல்யாணம் நிச்சயமாகலாமல்லவா?"

"அவன் மாமாவுக்குத்தான் பெண் இருக்கிறாளே! இதற்கு எப்போ மாமா தலை கொடுத்தாரோ, அப்போ அந்தப் பெண்தான் அவனுக்கு வாழ்க்கைப்படப் போகிறவள். பெண் ஸரஸ்வதி என்றால் ஸரஸ்வதிதான். பாரதம், ராமாயணம் எல்லாம் தானே வாசிக்கிறாளாம். சீதாராமனுக்கு ஏற்ற சம்சாரம். அந்தக் குழந்தைகளை நாம் கொஞ்ச நாளைக்கு அழைத்து வைத்துக்கொண்டு நம் பிள்ளை இழைத்த மானக்கேட்டுக்கு ஆறுதல் பெற வேண்டும்."

"கொஞ்ச நாளைக்கென்ன? நம்மோடேயே இருக்கட்டும். என் ஆபீசில் சீதாராமனுக்கு வேலை தயாராக வைத்திருக்கிறேன். எல்லாம் கூடிய சீக்கிரத்தில் என் சங்கல்பப்படி நடத்திவிடுகிறேன், பார். திருமலை ஆண்டவன் என் சங்கல்பத்துக்கு ஒரு நாளும் பங்கம் வரச் செய்ததில்லை."

# ௭

# சந்தேக நிவர்த்தி

நாம் சியாமளாம்பாபுர விருத்தாந்தத்தை அறிந்து ஐந்தாறு நாட்கள் ஆகிவிட்டன. அதைத் தொடர்வோம்.

சேஷு சாஸ்திரிகள் மணியை ரெயிலுக்கு அனுப்பி விட்டுத் தம் புதல்வனைப்பற்றிய உண்மைச் செய்தியை உணர ஆத்திரத்தினால் ஒரு நாளை யுகமாகக் கழித்தார். ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் தந்தி வந்ததா, தபால் வந்ததா, மணி திரும்பி வந்தாரா என்று விசாரிக்க நாகுவிடம் ஆள் அனுப்பிக்கொண் டிருந்தார். தபால் காரனையும் பரிதாபத்துடன், 'எனக்கு ஒன்றும் கிடையாதா?' என்று கெஞ்சினார். ஒவ்வொரு நாளும் ஒன்றும் தகவல் கிடைக்காததால் ஏமாற்றமடைந்தார். கடைசியில் நான்காவது தினம் காலையில் ஒரு தந்தியையும் தபாலையும் சீதாராமன் பெயரை விசாரித்துக்கொண்டு தபால்காரன் சேஷு சாஸ்திரிகள் கையில் கொடுத்தான். சேஷு சாஸ்திரிகள் தன் பேருக்குத் தந்தியும் தபாலும் வரவேண்டி யிருக்க, சீதாராமன் பெயருக்கு அவை வந்திருப்பதைப் பார்த்துத் திகைத்துப்போனார். "அவை மணியால் அனுப்பப்பட்டவைகளானால் தன் பேருக்கல்லவா வர வேண்டும்! பின்னை இந்தத் தந்தியும் தபாலும் சீதா ராமனுக்கு அனுப்பினது யார்? அவன் ஏதாவது லீவில் இங்கே வந்திருப்பதாக நினைத்து யாராவது ஒரு நண்பன் அனுப்பி யிருக்கலாமோ? அப்படி அனுப்பும் நண்பன் கடிதம் எழுதலாமே ஒழியத் தந்தி அனுப்புவது அசம்பா விதமாச்சே! ஒருவேளை ஏதாவது பரீட்சை தேறிய விஷயமாகத் தந்தி வந்திருக்கலாமோ என்றால் பரீட்சை கள் இன்னும் ஆரம்பிக்கப்படவில்லையே. இதென்ன

மாயத் தந்தி! ஒருவேளை ஏதாவது அபாய எச்சரிக்கையாக இருக்கலாமோ? சீதாராமனைக் காணவில்லை என்ற வதந்திக்கு இந்தத் தந்தியும் தபாலும் ஆதாரம் அளிக்கின்றனவே! எந்த ஊர்த் தந்தி என்று தபால்காரனைக் கேட்கவும் மறந்துவிட்டேன். நேற்றிரவே தந்தி வந்திருப்பதாகத் தெரிகிறது. இன்று காலையில்தான் தபாலுடன் பட்டுவாடாவாகியிருக்கிறது. தந்தியும் தபாலும் சேர்ந்தாற் போல் யாரோ அனுப்பியிருக்கிறார்கள். தந்திக்கு வியாக்கியானம் தபாலில் இருக்கிறது. இவைகளை அனுப்பினவர், சீதாராமன் இங்கே வந்திருக்கலாம் என்று நம்புவதாகத் தெரிகிறது. அவனோ இங்கே வரவில்லை. அவனைப் போலீஸ் தேடிக்கொண்டிருப்பதாகப் பரவியிருக்கும் வதந்திக்கும் இந்தத் தந்திக்கும் அவசியம் சம்பந்தம் இருக்க வேண்டும். அவனை யாரோ நண்பன் எச்சரித்திருக்கிறான். வேறு யார்? ராமநாதன்தான் எச்சரித்திருப்பான். அவன் தகப்பனார் சீதாராமனைக் கண்டுபிடிக்க எடுத்திருக்கும் போலீஸ் நடவடிக்கைகளுக்கு இவனை ஒளிந்துகொள்ள எச்சரிக்கை செய்து அனுப்பிய தந்திதான் இது. இதை யாரைக் கொண்டு வாசிக்கச் சொல்லலாம்? விஷயமோ பரம ரகசியம். பட்டாமணியக்காரனுக்கு இங்கிலீஷ் தெரியும். என்றாலும் அவன் ஊரில் தண்டோராப் போட்டு விடுவான். மேலும் போலீசுக்கே எழுதி ரகசியமாக விஷமம் வேலை செய்துவிடுவான். மணிக்கு ஆங்கிலம் தெரியும். அவனோ ஊரில் இல்லை. சென்னைக்குப் போன மணி எனக்குக் கடிதம் எழுதாததற்குக் காரணம் நல்ல சமாசாரம் ஒன்றும் இல்லை என்பதுதான் என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் மூன்று நான்கு நாட்களாக மணி ஒன்றுமே எழுதாமலும் ஊருக்குத் திரும்பி வராமலும் இருப்பானா? மணி அங்கே போனவன் பணத்துக்கு ஈடு செய்துவிட்டுச் சமாதானம் செய்ய ஏன் தாமதிக்கிறானோ? பணத்தினால் சமாதானம் ஆகக் கூடியதாக இல்லைபோல் இருக்கிறது. ஒருவேளை ஐயரிடம் நேரில் போகப் பயந்துகொண்டு அங்குமிங்கும் தப்பு விசாரித்துக்

கொண்டிருக்கிறான் போலும். இதனால் சீதாராமன் பட்டணத்திலும் நிச்சயமாக இல்லை என்று தெரிகிறது. சியாமளாம்பாபுரத்திலும் இல்லை. பின்னே எங்கேதான் போய் விட்டான்? அம்பிகே! என்னை இப்படித் தவிக்கவிட்டு நீ வேடிக்கை பார்க்கிறாயே. உனக்குத் தயவு இல்லையா? உன்னை நான் அல்லும் பகலும் ஜபத்திலும் தபத்திலும் உபாசிக்கவில்லையா?'' இவ்விதம் பிரலாபித்துக்கொண்டு சேஷா சாஸ்திரிகள் மூர்ச்சை அடைந்தவர்போல் உட்கார்ந்த இடத்திலேயே பின்னால் சாய்ந்தார். வேம்பு அவர் பக்கத்திலிருந்த விசிறியை எடுத்து விசிறி ஆசுவாசப்படுத்தினாள். சற்று அவர் கண் திறந்ததும், "வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழுவானேன்? போஸ்ட்மாஸ்டரிடம் காண்பித்து விவரம் தெரிந்துகொண்டால் போகிறது. ஒரு வேளை நல்ல சமாசாரமாகவே இருக்கலாமல்லவா? நீங்கள் எப்போதும் கெட்டதையே நினைத்துக்கொண்டு புலம்புவது சுபாவமாக இருக்கிறது. எனக்கு என்னவோ இதில் அச்சம் ஒன்றும் இருக்கும் என்று தோன்றவில்லை. இங்கிலீஷ் படிப்பை எப்போதும் தூஷித்துக்கொண்டிருப்பீர்களே; அது இருந்தால் அதுவும் ஒரு சமயத்துக்கு உதவத்தான் உதவும். போஸ்ட்மாஸ்டர் நல்லவர். மேலும் அவர் அறியாமல் தந்தி வரமுடியாது. அவரிடமே முதலில் தந்தியையும்-பிறகு காண்பிக்கலாம் என்று தோன்றினால்-லெட்டரையும் காண்பித்து விஷயத்தைத் தெரிந்துகொள்ளுங்கள். மத்தியான்னம் அகத்துக்குச் சாப்பாட்டுக்கு அவர் வருவார். அவரைப் போய்ப் பார்த்து வாருங்கள்'' என்று உபதேசம் செய்தாள்.

சேஷா சாஸ்திரிகள், "கொஞ்சம் மோர்த்தீர்த்தம் கொண்டு வா'' என்று கேட்டு வாங்கிச் சாப்பிட்டுவிட்டு, பஞ்சகச்சத்தைச் சரிப்படுத்திக்கொண்டு, அங்கவஸ்திரத்தையும் பிரித்து மேலே போர்த்துக்கொண்டு, தந்தி தபால்களைப் பத்திரமாக ஒரு துணியில் சுற்றி இடுப்பில் செருகிக்கொண்டு போஸ்ட்மாஸ்டரைப் பார்ப்பதற்காக வெளியே கிளம்பினார்.

போஸ்ட்மாஸ்டர் வீட்டில் மனுஷ்ய நடமாட்டம் இருப்பதாகவே தெரியவில்லை. சாஸ்திரிகள் சற்றுத் திண்ணையில் உட்கார்ந்து பார்த்தும் சற்று ரேழியில் நின்று கொண்டு பல கனைப்புகள் கனைத்துப் பார்த்தும் ஒன்றும் பயன்படாததனால் இரண்டு வாசற்படி தாண்டி உள்ளே சென்று முன்னடித் தாழ்வாரத்தில் நின்றுகொண்டு, "போஸ்ட்மாஸ்டர் வந்துவிட்டாரா?" என்று சந்தேகத் துடனும் பயத்துடனும் குரல் கொடுத்தார். அப்போது சமை யல் அறையிலிருந்து தலையைச் சிறிது வெளியே நீட்டிய ஒரு மாது, "அவர் இன்று வரவில்லை என்று சொல்லிக் கையில் டிபன் எடுத்துக்கொண்டு போய்விட்டார்" என்று பதிலளித்தாள். சாஸ்திரிகள் மிக்க ஏமாற்றத்துடன் உடனே தாம் வந்த வழியே திரும்பினார். வேம்புவின் வார்த்தைக்காக அவர் போஸ்ட்மாஸ்டரைப் பார்க்க நினைத்தாரே ஒழிய, உண்மையில் அவருக்கு அந்தத் தந்தி, கடிதங்களின் ரகசியத்தைத் தாம் அறியாமல் பிறருக்குப் பிரகடனம் செய்வதில் கொஞ்சங்கூட இஷ்டம் இல்லை. சாஸ்திரிகள் வீட்டுக்குத்தான் திரும்பினார். ஆனால் நடுவே குறுக்கிட்ட ஒரு சந்து, மணி இருக்கும் தெரு வுக்குக் கொண்டுபோய் விடக்கூடியது. அந்தச் சந்தைத் தாண்டும்போது சேஷு சாஸ்திரிகள், "இவ்வளவு தூரம் வந்ததுதான் வந்தோம். மணி வீட்டைப் பார்த்து விட்டுத்தான் போவோமே. ஏதாவது கடிதம் இன்று வந் திருக்கலாம் அல்லவா?" என்று நினைத்துக்கொண்டு அந் தச் சந்தில் நுழைந்தார்.

மணி வீட்டு வாசல் கதவு அடைத்திருந்தது. 'புரு ஷர்கள் யாரும் வீட்டில் இல்லை என்பது நிச்சயம். நாம் புறப்பட்ட வேளை அப்பேர்ப்பட்டது' என்று நொந்து கொண்டு சேஷு சாஸ்திரிகள் நேராக நடந்தார். மேற்கே சென்று குளக்கரை வழியே போனால் தம் வீடு சமீபமா கையால் அந்த வழியை அநுசரித்தார்.

அந்தத் தெருக்கோடியில் ஜோஸ்யம் ராகவையங்கார் வீடு. சேஷு சாஸ்திரிகளுக்கும் ஐயங்காருக்கும் நல்ல

நட்பு. அந்த ஊருக்கே ஐயங்கார்தான் ஜோஸ்யம். அவர் பெயர் அந்த ஜில்லாவிலேயே பிரசித்தம். சேஷ சாஸ்திரிகள் ஐயங்கார் வீட்டு வாசலில் ஐயங்காரின் புதல்வன் ரங்கசாமியைப் பார்த்தார். ஏதோ மனத்தில் சங்கல்பம் செய்துகொண்டு அவர் ஜோஸ்யர் வீட்டுப் படி ஏறினார். ரங்கசாமி விநயத்துடன் அவரை வரவேற்றுத் திண்ணையில் உட்காரச்செய்து, "அப்பாவைக் கூப்பிடட்டுமா?" என்று கேட்டான். சாஸ்திரிகள் ஏதோ ஜாதகம் பார்க்க வந்திருப்பதாக அவன் நினைத்ததில் ஆச்சரியமில்லை.

"அப்பா என்ன செய்கிறார்?" என்று கேட்டார் சாஸ்திரிகள்.

"இப்போதுதான் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டார். இன்று சேவல்பட்டி, பாடியூர் முதலிய ஊர்களுக்குப் போய்விட்டு வெகு நேரம் கழித்துத்தான் வீட்டுக்கு வந்தார்" என்றான் ரங்கசாமி.

"சரி. அப்படியானால் அவரைத் தொந்தரவு செய்ய வேண்டாம். படுத்துக்கொண்டிருக்கட்டும். நானும் ஒன்றும் விசேஷ காரியமாக வரவில்லை. உன்னால்தான் எனக்கு ஒரு காரியம் ஆகவேண்டும்."

"என்னாலா? என்ன காரியம்?"

"ஒன்றுமில்லை. இன்று ஒரு தந்தி வந்தது. அதைப் படிக்க எங்கள் தெருவில் ஒருவரும் இல்லை. அதற்காகத் தான் இந்தப்பக்கம் வந்தேன்."

"அடடா, இதற்கா இவ்வளவு சிரமம், வெயிலிலே! இங்கே கொடுங்கள் பார்ப்போம்."

சாஸ்திரிகள் தந்தியை ரங்கசாமியிடம் கொடுத்தார். கொடுக்கும்போது அவர் கை நடுக்கமுற்றது; கண்கள் குழம்பின; நெஞ்சில் வார்த்தை அடைத்துக்கொண்டது.

ரங்கசாமி தந்தியை ஆராய்ந்து பார்த்தான்: "மெட்ராஸிலிருந்து ராமநாதன் அடித்திருக்கிறான் - சீதாராமனுக்கு."

"சரிதான்! நான் நினைத்தது சரியாகப் போய்விட்டது. போலீஸ் தொடர்கிறார்கள் ஜாக்கிரதை என்ற எச்சரிக்கை தானே? சரி போதும்; கொடு" என்று துடிப்புடன் சேஷு சாஸ்திரிகள் எழுந்து தந்தியை ரங்கசாமியிட மிருந்து கைப்பற்ற முயன்றார்.

ரங்கசாமி அதற்கு இடங்கொடாமல் பேசினான்: "இருங்கோ, மாமா! அவசரப்படுகிறீர்களே! அப்படி யெல்லாம் ஒன்றும் இல்லை. நான் வாசித்துச் சொல்கிறேன், கேளுங்கள்; 'எல்லாவற்றையும் வெளிப்படுத்திவிட்டேன். நீ இனிப் புறப்பட்டு வரலாம்' என்பதுதான் விஷயம். கடிதம் எழுதியிருப்பதாகவும் கண்டிருக்கிறது."

"எது எல்லாம் வெளிப்படுத்தப்பட்டது? ஒன்றும் புரியவில்லையே?"

"கடிதம் ஒன்று வந்திருக்கிறதா?"

"ஆம். வந்திருக்கிறது."

சாஸ்திரிகள் அவநம்பிக்கையுடனும் அச்சத்துடனும் கடிதத்தை ரங்கசாமியிடம் மெல்ல மெல்ல நீட்டினார். ரங்கசாமி கடிதத்தை வாங்கிப் படித்துப் பார்த்தான். பின்வருமாறு சாஸ்திரிகளுக்கு மொழிபெயர்த்துச் சொன்னான்:

"என் அருமையான நண்பன் சீதாராமனுக்கு; முதலில் நான் செய்த அடாத செயல்களால், நிரபராதியான, அவைகளில் சிறிதும் சம்பந்தப்படாத உனக்கு அசௌகரியமும் அபவாதமும் விளைவித்ததற்கு உன்னை நான் ஆயிரம் தடவை மன்னிப்புக் கேட்டுக்கொள்கிறேன். இன்று மாமா சிவராமன் இங்கே வரவும் எல்லாம் வெட்ட வெளிச்சமாகி விட்டது. அப்பா ஊரில் இல்லை; காந்திமதியின் கல்யாணம் நிச்சயம் செய்ய நாக்பூர் போயிருக்கிறார். மாமாவிடமும் அம்மாவிடமும் ஒன்றையும் ஒளிக்காமல் வெளியிட்டுவிட்டேன். அம்மாவுக்குக் கடும் கோபம். அப்பா வந்தால் என்ன நடக்குமோ தெரியாது. நான் குடும்

பத்தை விட்டு வெளியேறுவது நிச்சயம். என் நடத்தைகளுக்கு நானே ஜவாப்தாரி. உனக்கு ஒன்றும் இடைஞ்சல் இல்லை. உடனே புறப்பட்டு வா. ஆண்டு முடிவுப் பரீட்சைக் காலமாகையால் இந்த வருஷப் படிப்பை வீணாகக் கெடுத்துக்கொள்ளாதே. என் படிப்புக்கு நான் முற்றுப் புள்ளி போட்டுவிட்டேன். நான் பெரிய சுழலில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். ஆனால் நீ அப்படியல்ல. பரீட்சை எழுதக்கூடியவன். வேறு சிக்கல் இல்லாதவன். நான் கெட்டதுமல்லாமல் உன் படிப்பையும் கெடுத்துவிட்டதாக எனக்குத் தோன்றினால் நான் மிகவும் துக்கப்படுவேன். இந்தக் கடிதம் கண்டவுடன் புறப்பட்டுவிடு. உன் வரவை எல்லோரும் ஆதரவுடனும் அநுதாபத்துடனும் எதிர்பார்க்கிறார்கள். உன்னை உடனே நேரில் சந்திக்க ஆவலுடன் இருக்கும்,

உன் அருமைத் தோழன்,
ராமநாதன்.''

''என்ன மாமா ரொம்பப் பயந்தீர்களே? நல்ல சமாசாரமாகத்தானே இருக்கிறது!'' என்றான் ரங்கசாமி.

''நல்ல சமாசாரந்தான் என்று வைத்துக்கொள்ளலாம். இருந்தாலும் சீதாராமன் பட்டணத்தில் இருப்பதாக நான் நினைத்துக்கொண்டிருக்கப் பட்டணத்தில் இருக்கும் ராமநாதன் அவன் இந்த ஊரில் இருப்பதாக நினைத்துக்கொண்டிருப்பது மனத்துக்குச் சமாதானத்தை அளிக்கவில்லை. சீதாராமன் மீது ஏதோ அரைகுறையாகக் குற்றச்சாட்டு இருந்து அது விலகியதாகத் தெரிகிறது. ஆனால் சீதாராமன் இருக்குமிடந்தான் தெரியவில்லை!''

சேஷு சாஸ்திரிகள் தம் மனக்கலக்கம் தெளிவதும், மறுபடி மனம் குழம்புவதும் தொனிக்கும்படியான இந்த வார்த்தைகளைப் பேசி முடிக்கு முன் உள்ளேயிருந்து ஜோஸியம் ராகவையங்கார் எழுந்து வெளியே வந்து, ''சீதாராமன் உங்கள் வீட்டிலேயே இருக்கிறான்'' என்று

அசரீரி வாக்குப்போல் பதில் கொடுத்தார். சாஸ்திரிகள் ஜோஸ்யர் வருவதைக் கண்டு, "தூங்கி எழுந்திருந்து விட்டீர்களா? உங்களைத் தொந்தரவு செய்ய வேண்டாம் என்று நினைத்தேன். வரும்போதே ஜோஸியம் சொல்லிக் கொண்டு வருகிறீர்களே! வாருங்கோ" என்றார்; சுப வாக்குக் கேட்டதில் அந்தரங்க சந்தோஷத்துடன்.

"தொந்தரவு என்ன! ஏண்டா பயலே! சாஸ்திரிகள் வந்ததும் என்னை எழுப்பக்கூடாதோ? தூக்கம் கிடக்கிறது. தூக்கம். என் வீட்டுக்கு நீங்கள் வரும் பாக்கியம் கிடைக்க வேண்டாமா! வந்து ரொம்ப நாழிகையாகிறதோ? பையன் சமர்த்துப் போதாது. உங்களோடு இவ்வளவு நாழிகை பேசிக்கொண்டிருந்தானே ஒழிய என்னை ஒரு குரல் கூப்பிடப்படாதோ? எனக்கு ஆழ்ந்த தூக்கம் ஏது? இன்று பல ஊர்களுக்கு அலைந்துவிட்டுத் திரும்பி வந்ததால் சற்று அசதியில் படுத்துவிட்டேன். அகத்தில் கல்யாணம் வருகிறதுபோல் இருக்கிறது. கோபாலையர், ராமஸ்வாமி ஐயர் எல்லோரும் வந்திருக்கிறார்களே. நான் திரும்பி வரும்போது எல்லோரும் உங்கள் மச்சினர் வீட்டுத்திண்ணையில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருந்தார்கள். நான் க்ஷேமம் விசாரித்தேன். ராமஸ்வாமி ஐயர் பேத்தியின் விவாக விஷயமாக உங்களைப் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னார். ரொம்ப சந்தோஷம். நான் இரண்டு வருஷம் முன்னமேயே மணி சாஸ்திரிகளிடம் சொல்லிவிட்டேன்; அவர் பெண் அத்தானுக்குத்தான் வாழ்க்கைப்படப் போகிறாள் என்று..." ஜோஸ்யர் நிமிஷத்துக்கு நூற்றிருபது வார்த்தைகள் பேசுகிறவரானபடியாலும் அவருடைய குரல் சங்கநாதம்போல் பாம் என்று ஒலிக்கக் கூடியதானதனாலும் சேஷு சாஸ்திரிகள் அவருடைய வாக்பிரவாகத்தில் அடிபட்டு ஆச்சரியத்தின் கரைகாண இயலாது தவித்துக்கொண்டிருந்து கடைசியில் மூச்சுத் திணறுபவர்போல், "ராமஸ்வாமி ஐயரா? கோபாலையரா? எங்கே வந்திருக்கிறார்கள்! மணி ஊரில் இருக்கிறானே? சீதாராமனைப்பற்றி என்ன செய்தி? நீங்கள்

பார்த்தீர்களா? உங்களுக்குத் தெரியுமா?'' என்று பாதிக் காற்றும் பாதி சப்தமுமாக உச்சரித்தார்.

அப்போது ஜோஸ்யர் ஆச்சரியத்திஞல் திக்குமுக் காடும் கட்டம் ஏற்பட்டது.

"ஆனல் உங்களுக்குத் தெரியாதோ? நீங்கள் பார்க்க வில்லையோ? இப்போது அகத்திலிருந்துதானே வருகிறீர் கள்?"

"எனக்கு ஒன்றும் தெரியாதே! என்ன விவரம்? நான் அகத்தை விட்டுப் புறப்பட்டு இரண்டு நாழிகை ஆகிறது. இரண்டு மூன்று தெருக்களைப் பிரதக்ஷிணம் பண்ணிக்கொண்டு வருகிறேன்."

"சரியாகப் போச்சு! அப்போ அவர்கள் உங்களு டைய அகத்தில் உங்களை எதிர்பார்த்துக்கொண்டு காத் திருக்கிறார்கள். அதோ பாருங்கள்; ஐயாப்பயல் ஓடிவரு கிறான்."

ஐயாப்பயல் ஓடி வந்தான். "ஜோஸ்யர் மாமா, எங்க வாத்தியார் இங்கே வந்தாரோ?'' என்றான்.

சேஷு சாஸ்திரிகள், "எலே யாரைடா தேடுகிறாய்?'' என்று பரபரப்புடன் எழுந்தார்.

"உங்களைத்தான் மாமா. சீதாராமன் வந்திருக்கிறான். அன்னிக்குப் பொய் சொன்னேன் என்று என்னை அடித் தீர்களே. வந்து பாருங்கோ. மணி மாமா, உங்களைத் தேடிப் பார்த்துக் கூட்டிக்கொண்டு வரச்சொன்னார். முதலில் போஸ்ட்மாஸ்டர் வீட்டுக்குப் போனேன். அப்புறம் போஸ்டாபீஸுக்குப் போனேன். அப்புறம் தெருத் தெருவாகத் தேடினேன். நீங்கள் என்ன மாமா ஜோஸ்யர் வீட்டில் வந்து உட்கார்ந்துகொண் டிருக்கி றேளே! ஸரஸ்வதிக்குத் தாத்தா வந்திருக்கார். போலீஸ் கோபால மாமா வந்திருக்கா. அம்மாமி ரவாவும் முந்திரிப் பருப்பும் கடையிலிருந்து வாங்கிவரச் சொன்னாள். வாங்

கிக் கொண்டுபோய்க் கொடுத்துவிட்டு, உங்களைத் தேடப் புறப்பட்டேன். இத்தனை நாழிகை டிபன்கூட ஆறிப் போயிருக்கும். நீங்கள் என்னவென்றால் ஜோஸ்யர் வீட்டில் வந்து சொஸ்தமாக உட்கார்ந்துகொண் டிருக் கிறீர்கள்” என்று முடிவில்லாமல் பேசிக்கொண்டே இருந் தான் ஐயாப்பயல்.

சேஷு சாஸ்திரிகள் ஐயங்காரிடம் சொல்லிக் கொண்டு கிளம்பினார். ஐயங்கார் சேஷு சாஸ்திரிகளை அனுப்பினார். ஐயாப்பயல் பேச்சுக்களைக் காதில் வாங்கி னதும் வாங்காததுமாகச் சேஷு சாஸ்திரிகள் விரைந்து வழி நடந்தார். கூடவே ஐயாப்பயல் பேசிக்கொண்டே ஓடிவந்தான். இப்போது சேஷு சாஸ்திரிகள் அவனை அடிப்பார் என்ற பயம் அவனுக்கு இல்லை. இருவரும் வீடு சேரும்வரையில் அவன் ஊதல் தொனி சாஸ்திரிகளின் காதுகளைச் செவிடுபடுத்தி வந்தது. ஆனால் சாஸ்திரிகள் அவனைக் கடிந்துகொள்ளவில்லை. சாஸ்திரிகளின் மனோ ரதங்கள் வானளாவப் பறந்துகொண் டிருந்தன. சந்தோ ஷப் பூரிப்பினால் அவர் வழி நடந்ததே அவருக்குத் தெரி யாது.

தம் வீட்டில் அவர் நுழைந்ததும் அவர் கண்ட இன்பக் காட்சியும் அவர் காதில் பட்ட உத்சாக மொழி களும் அவரை ஆனந்த பரவசமாக்கிவிட்டன.

சாஸ்திரிகளைக் கண்டதும் எல்லோரும் எழுந்து மரியாதை செய்து அழைத்தார்கள்.

சீதாராமன் பிதாவின் கால்களில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தான்.

இன்ஸ்பெக்டர் கோபாலனின் தகப்பனாரும் மணி சாஸ்திரிகளின் மாமனாருமான ராமஸ்வாமி ஐயர் ஒரு கண்யமான மிராசுதார். அவருடைய வரவினால் சேஷு சாஸ்திரிகள் மிகுந்த பெருமையை அடைந்தார். பெரிய வர்கள் கூடினால் பேசுவதற்குக் கேட்பானேன்! மனத்துக்கு

மலர்ச்சி தரக்கூடிய, மேன்மை வாய்ந்த பல பழைய கதைகள் பரஸ்பர உபசரணை ரீதியில் ஞாபகப்படுத்திக் கொண்டு பிரஸ்தாபிக்கப்பட்டன. போட்டியின்மேல் போட்டியாக இருவரும் ஒரு தலைமுறைக்கு முந்திய உலகத்தையும், அக்காலத்து மனிதர்களையும் இளைஞர் வியக்குமாறு வருணிக்க அலுக்கவில்லை. இருவரும் ஒரு சுருதியில் பாடும் பாடகர்களைப்போல் ஒற்றுமையாகப் பேசினார்கள். ஒருவர் பொதுவிதியை மற்றொருவர் ஆமோதித்து உதாரணத்துடன் விளக்கினார். இரு குலங்களின் பெருமைகளும் ஒரே அளவுக்குப் பெருக்கெடுக்கும் இரண்டு கிளை நதிகள்போல் பிரவகித்தன.

பிரஸ்தாபப் பேச்சுத் துவக்கத்துக்குப் பூர்வ பீடிகையாக இந்த ரஸமான விவரணங்கள் நடந்துகொண்டிருக்கும் போது, சீதாராமன் ராமநாதனால் தனக்கு அனுப்பப்பட்ட தந்தி தபால்களைத் தகப்பனாரிடமிருந்து பெற்று ஆராய்ந்துகொண்டிருந்தான்.

'என்ன விதமாக வெட்டவெளிச்சமாக்கினான்? அதன் விளைவுகளை இவன் எப்படித் தாங்கி நிற்கப் போகிறான்? சிவராமன் வந்ததற்கும் இவன் ரகசியங்கள் வெளிப்பட்டதற்கும் என்ன சம்பந்தம்? தகப்பனார் ஊரில் இல்லையாம்! அவர் வந்த பிறகு தன் நிலைமை எவ்வாறு மாறும் என்பதை இவன் அறிய வல்லவனா? தான் குடும்பத்தைவிட்டு விலகிவிடுவது நிச்சயம் என்கிறானே? அது என்ன விளையாட்டா? மேலே தன் வாழ்க்கைப் பாதை எங்கே நோக்கிச் செல்வது என்பதைப் பற்றிச் சிறிதும் சிந்தித்தானா! கதை கற்பனைகளிலும், கேளிக்கையின் பாசாங்குகளிலும் மட்டும் கஷ்ட நிஷ்டூரங்கள், வீரம், தியாகம், காதலரின் சோதனைகள், இவைகளைப் பார்த்த ஒருவன் அநுபவ உலகத்திலும் அவைகளை அறிந்துகொண்டுவிட்டதாக எண்ணிக்கொள்வது உத்தர குமாரன் சேனை அணிவகுப்புகளைச் சித்திரத்தில் பார்த்து விட்டுக் கௌரவர்களுடன் யுத்தத்துக்குப் புறப்பட்டது

போலல்லவா ஆகும்! நான் இப்போது சென்றால் ராமநாதனை எச்சரித்துத் திருப்பி வழிக்குக் கொண்டு வந்துவிட முடியுமா? அவனோ என்னைச் சிறியவனாகவும் தன்னை உலகறிந்த ஜாம்பவானாகவும் மதிப்பதாகத் தெரிகிறது. அவனுக்குப் படிப்பு முடிந்துவிட்டதாம்! நான் படிப்பைத் தளரவிடாமல் தொடரவேண்டுமாம்! எவ்வளவு பெருந்தன்மையை இவன் கற்றுக்கொண்டு விட்டான்! ஆனால் உலகத்தில் ஒரு தவறு செய்தவர்கள் வாழ்க்கையின் உண்மை இயல்பை உட்புகுந்து அறிவதுபோல், என்றும் கண்கட்டிய குதிரைபோல் பாதையோடு போய்க்கொண் டிருப்பவர்கள் அறிய இயலாதென்பது வாஸ்தவந்தான். ராமநாதன் இரண்டு மூன்று பதுக்கங்களில் தடுமாறி விழுந்துவிட்டமையால் உலக இயலில் என்னைவிட விரிந்த அநுபவஸ்தனாகிவிட்டான் என்பதற்கு ஐயமில்லை. இந்தப் புதிய ராமநாதனை நானும் கண்டு திறம்பட அறிய ஆவல்கொள்கிறேன்...'

இன்ஸ்பெக்டர் கோபாலையர் ராமநாதனுடைய தந்தியையும் கடிதத்தையும் சீதாராமனிடமிருந்து வாங்கிக்கொண்டார். மணி சாஸ்திரிகளும் அவருமாக அதை ஆராயப் புகுந்தார்கள். செக்கின் சரித்திரமும் உஷாவின் உபாக்கியானமும் அவர்களுக்கு ஏற்கனவே சீதாராமன் மூலம் தெரியுமாதலால் கடிதத்தின் போக்கை அறிந்துகொள்வதில் அவர்களுக்கு வித்பத்தி பூர்ணமாக இருந்தது. இருவரும் சீதாராமனைப் பார்த்து ஜாடையாகப் புன்முறுவல் செய்தார்கள். சீதாராமன் தன் நண்பனுக்காக வெட்கித் தலை குனிந்தான்.

இதற்குள் பெரியவர்கள் சம்பாஷணை பிரகிருதத்தை எட்டிப் பிடித்தது. சீதாராமன் திருச்சினாப்பள்ளிக்கு வரவும் மணி அவனைத் தொடரவும் தனக்கு ஆச்சரியம் விளைவித்ததையும், பிறகு தான் எல்லாம் தெய்வத்தின் தூண்டுதல் என்றும், சௌ. சரஸ்வதியின் விவாக காலம் வந்துவிட்டதால் அயர்ந்து இருந்தவர்களை எழுப்பிச்

சுறுசுறுப்புப் படுத்தும் சம்பவங்கள் ஏற்படுகின்றன என்றும் நிச்சயித்துக்கொண்டதாயும் ராமஸ்வாமி ஐயர் எடுத்துரைத்தார். சேஷு சாஸ்திரிகள் மதராஸை மையத்தில் வைத்து வட்டமிட்டுக்கொண் டிருந்த தன் சித்தத்தைத் திருச்சிராப்பள்ளிக்குத் திருப்பச் சிறிது கிலேசப்பட்டுக்கொண்டே உடன்பட்டார். மணியை அப்போது அவர் பார்த்துத் தலை அசைத்துச் சிரித்ததும், "என்னை ஏமாற்றினாயா? இருக்கட்டும். உன்னை லகுவில் விட்டேனா பார்!" என்று எச்சரிப்பதுபோல் இருந்தது. அப்போதும் சேஷு சாஸ்திரிகளுக்குக் கடிதத்தில் ஸூசிப் பிக்கப்பட்ட ராமநாதனின் சரித்திரங்களை யாரும் விவர மாக எடுத்துக் கூறவில்லை. சாஸ்திரிகளும் அவ்வித வியாக்கி யானத்துக்கு அஞ்சினவர்போல், "பெரிய மனுஷ்யன் வீட்டுச் சமாசாரம்; நமக்கு ஏன் வீண் வம்பு? எதுவாக இருந்தாலும் சரி. நம்மகத்துப் பிள்ளைக்கு ஒரு அபவாதமும் இல்லாமல்போனால் நமக்கு அதுவே போதும். மற்ற விசாரம் நமக்கு எதற்கு? எது வந்தாலும் அவர்களுக்குத் தாங்கும். சமாளித்துக்கொள்ளச் சக்தி உண்டு. பலவானுக்குப் பத்தியம் கிடையாது என்பது சாஸ்திரம். நம்போன்ற வயிற்றுவலிக்காரன் ஜாக்கிரதை யாக இருக்க வேண்டும். மேலும் பெரியோர்கள் சொன்னது போல் வைக்கோல்போரில் பிடித்த நெருப்பைப் பரவச் செய்து வீசும் காற்று, கைவிளக்கை அணைத்து விடுமல்லவா! பெரிய தனதனவான்கள் இடையூறுகளையும் எதிர்ப்புகளையும் வென்று மேலும் உயர்வு பெற்று விளங்குவார்கள். நம் போன்ற யாசகவிருத்திகள் தடை களைத் தவிர்க்க முடியுமா! பகைவருடன் போராட முடியுமா! தெய்வானுகூலம் இல்லாவிட்டால் ஒரு மூச்சில் உட்கார்ந்துபோக வேண்டியதுதான். ஆகையால் ராமநாதனுக்கு ஒரு குறைவும் வராது. லக்ஷ்மிகுமார னை அவன் எந்தச் சிக்கலில் மாட்டிக்கொண்டாலும் சோர்ந்து போய்விட மாட்டான். ஜயபேரிகையுடன் வெளிக் கிளம்பிவிடுவான். அவனைப்பற்றி நாம் கவலைப்பட

வேண்டிய அவசியமில்லை. நாம் கவலைப்பட்டும் கையாலாகாத நம்மால் அவனுக்கு உதவி ஒன்றும் கிட்டாது. நம் பிள்ளையாண்டானைப் பற்றிய கவலை நீங்கியதே! அபாண்டமான அபவாதங்களும் மறைந்தனவே! இது ஸ்ரீ சியாமளாம்பாவின் பிரசாதம். இதற்குமேல் நாம் செய்ய வேண்டியதை யோசிக்க வேண்டியது முக்கியமாகும்........" என்று உபந்நியாசித்தார்.

"அபவாதம் என்று நீங்கள் சொன்னதனால் ஒன்று ஞாபகம் வருகிறது" என்று ராமஸ்வாமி ஐயர் பேசத் தொடங்கினார். "இன்று காலை நான் குளத்தில் துணி தோய்த்துக்கொண் டிருந்தபோது சீனு வாத்தியார் என்னை க்ஷேமம் விசாரித்தார். என் பேத்தி கல்யாண விஷயமாக மணி என்னை வற்புறுத்தியதனால் வந்திருப்பதாகச் சொன்னேன். அதை ஆமோதித்து அவர் பேசும்போது, மணி அந்தஸ்துக்கும் மதிப்புக்கும் பெரிய இடமாகப் பார்க்கலாமென்றும் உள்ளூர் உறவு வரனையே நம்பி யிருக்க வேண்டாமென்றும் அது பற்றிச் சில சமீப நிகழ்ச்சிகள் காதில் விழுந்தவரை யாருக்குமே மனவேதனை தரக்கூடியதாக இருப்பதாகவும் ஜாடை மாடையாகப் பிரசாரம் செய்தார். எனக்கு அவர் பேச்சு விரஸமாகவும் விஷமமாகவும் பட்டது. இருந்தாலும் இவ்வளவு நெருங்கின இடத்தில் இப்படி விபரீதப் பிரசாரம் செய்வாரா இவர் என்று சிறிது சந்தேகித்தேன். அவருக்கு மேலே பேச அதிக உத்சாகமளிக்காமல் அந்தச் சம்பாஷணையை அத்துடன் நிறுத்திக்கொண்டு துணியை அறைந்து அறைந்து தோய்த்தேன். அவரும் சற்று அசடு வழியும் முகத்துடன் நின்றுகொண் டிருந்துவிட்டு என்னை உத்தரவு கேட்டுக் கொண்டு சென்றுவிட்டார். அவர் எதை மனத்தில் வைத்துக்கொண்டு பேசினார் என்பது இப்போதுதான் எனக்கு நன்றாக விளங்குகிறது. ஏன் அந்த மனுஷ்யனுக்கு அவ்வளவு க்ஷாத்திரம்? அவனுக்கு யார் என்ன கெடுதி செய்தார்கள்?"

மணி குறுக்கிட்டார்: "இந்தச் சுப சந்தர்ப்பத்தில் அந்தப் பொறாமைக்காரன் பேச்சு நமக்கு வேண்டாம். அவன் உட்கார்ந்த இடத்தில் பூமி ஒரு கஜ ஆழத்துக்கு வெந்து போய்விடும். இந்த அபாண்டப் புளுகுப் பிரசாரம் எல்லாம் அவனே கிளப்பிவிட்டது. சிவராமன் அதற்குக் கால்வாசிகூடப் பொறுப்பாளியல்ல என்று தெரிகிறது......"

ஐயாப் பயல் அங்கே இருந்து ஒட்டுக் கேட்கிறானே என்று சேஷு சாஸ்திரிகள் சற்று அச்சத்துடன் நாலா பக்கமும் பார்வையைச் செலுத்தித் தேடலானார். நல்ல வேளையாக அவன் சமையல் அறையில் வேம்புவுக்கு உதவியாக டிபன் தட்டுக்களை அலம்பிக்கொண்டிருந்தான்.

பின்பு சல்லாபங்கள் சி. சீதாராமன் விவாகத்தைப் பற்றியும் அவன் படிப்பைத் தொடர்வது பற்றியும் விரிந்தன. சௌ. சரஸ்வதிக்கும் சி. சீதாராமனுக்கும் விவாக சம்பந்தமான வாக் நிச்சயத்தை இரண்டு தினங்களுக்குள் நல்ல வேளையில் செய்துகொள்வதென்றும் முகூர்த்தத்தைச் சித்திரை பிறந்து வைத்துக்கொள்வதென்றும் சீதாராமன் படிப்பைக் கத்தரிக்கவிடாமல் தொடர்வதென்றும் அதற்காக ராமநாதனின் அழைப்புக்கு இணங்கி இரண்டொரு தினங்களில் அவன் சென்னை புறப்படுவதென்றும் சர்வ சம்மதமாகத் தீர்மானங்கள் செய்யப்பட்டன.

# 10

## காரியஸித்தி

இப்போது நாம் சியாமளாம்பாபுர விருத்தாந்தங்களை இத்துடன் விட்டுவிட்டுச் சென்னையில் வேங்கட சுப்பையரின் திட்டப்படி உருவாகும் புரட்சிகரமான சம்பவங்களை அநுசரிப்போம்.

செவ்வாய்க்கிழமை காலை $7\frac{1}{2}$ மணிக்குள் அழகிரியின் வீட்டு வாசலில் போலீஸ் கார் வந்து நின்றது. சில கான்ஸ்டேபிள்கள் ஸைக்கிளில் வந்து இறங்கினார்கள். ராமநாதன் இன்ஸ்பெக்டர் கந்தப்பநாயகருடன் காரை விட்டு இறங்கினான். அழகிரியிடம் மாஜிஸ்திரேட்டின் ஸர்ச்சு வாரண்டு ஸமர்ப்பிக்கப்பட்டது. அழகிரி பொன்னு சாமி பிள்ளையுடன் அன்று காலை சென்னையை விட்டுப் புறப்பட ஏற்பாடு செய்துகொண்டிருந்தான். உஷாவைத் தந்திரமாக வேங்கடசுப்பையர் தம் வீட்டுக்கு அழைத்து வரச் செய்து அவளுக்கு அடைக்கலம் அளித்ததிலிருந்து அவனுக்கு மனக் கலவரம் கடலோசைபோல் ஒலிக்க ஆரம்பித்துவிட்டது. ஏதோ ஒரு விலங்கு தனக்காகத் தயாராகிறது என்று அவனுக்குத் தோன்றாமல் இல்லை. ஆதலால் முன் எச்சரிக்கையாகத் தான் பொன்னுசாமியுடன் ஊரைவிட்டு ஓடிவிடுவதென்று தீர்மானித்து அதற்கு மூட்டைகளும் கட்டிவிட்டான். ஆனால் இவ்வளவு விரைவில் தன்னை விலங்கிடும் முன்னேற்பாடுகள் நடக்கக்கூடும் என்று அவன் எதிர்பார்க்கவில்லை. தன் விரோதிகளைத் தன் சுறுசுறுப்பான தற்காப்புத் திட்டங்களால் அவன் ஏமாற்றிவிட நினைத்தான். ஆனால் இவனை விட மின்னல் வேகத்தில் இவனைப் பிடித்தடைக்கும் யந்திரங்களை வேங்கடசுப்பையர் வேலை செய்யச்

செய்திருக்கிறார் என்பது அப்போதுதான் அழகிரிக்குத் தெரிந்தது. அழகிரி ராமநாதனை அப்போது பார்த்த பார்வை மூக்கண்ணன் மன்மதனைப் பார்த்த பார்வையாகத்தான் இருந்தது. ராமநாதனும் சற்று உடல் நடுக்க முற்றுப் போலீஸ் படையின் நிழலில் மறைந்து கொண்டான்.

"என்னிடம் அந்த வைரப் பித்தான்கள் இருப்பதாக இந்த ஐயர் மகன் பிரமாணம் செய்வாரா?" என்று அழகிரி சாமி கர்ஜித்தான்.

"கேஸ் அதுதான். கோர்ட்டு விசாரணையில் இந்தக் கேள்வியை நீர் கேட்டுக்கொள்ளலாம். இப்போது என் வாரன்டை நான் நிறைவேற்றக் கடமைப்பட்டிருக்கிறேன்" என்று அமைதியாகவும் அலட்சியமாகவும் இன்ஸ்பெக்டர் பதிலுரைத்தார்.

"என் வீட்டில் நீங்கள் ஸர்ச்சுப் போடும் சாமான்கள் இல்லாவிட்டால் என்னை அநாவசியமான அவமானத்துக்கும் அசௌகரியத்துக்கும் உள்படுத்தியதற்காக இந்த வாரன்டுப் பிறப்பித்தவர் மேல் நான் தாவா தொடரலாம் அல்லவா?"

"உங்களுக்குச் சட்டப்படி உள்ள பாத்தியதைகளை இல்லை என்று சொல்ல யாரால் முடியும்?" என்று விடை அளித்துக்கொண்டு போலீஸ் இன்ஸ்பெக்டர் தம் சிப்பந்திகளைக் கொண்டு வீட்டுக்கு, 'ரக்ஷா பந்தனம்' செய்தார். அந்தச் சமயம் கொல்லை வழியாக ஓர் ஆள் ஓடப் பிரயத்தனப்பட்டதாகத் தெரிந்ததால் அவன் 734-ஆல் பிடிக்கப்பட்டு ஆஜர் செய்யப்பட்டான்.

அழகிரி, "அவரை ஏன் தொந்தரவு செய்கிறீர்கள்? அவர் எங்கள் வீட்டுக்கு நகைகள் செய்து கொடுக்கும் ஆசாரி. பெண்டுகள் ஏதோ வைர அட்டிகை வேண்டுமென்று கேட்டிருந்ததால் ஒரு இனத்தைக் கொண்டுவந்து

காண்பிக்க வந்திருக்கிறார்" என்று சிபார்சு செய்ய முன் வந்தான்.

"யாராக இருந்தாலும் எங்கள் சோதனைக்கு உள்பட வேண்டியதுதான்" என்று அதிக கோபத்துடன் இன்ஸ்பெக்டர் கர்ஜித்துவிட்டு ஆசாரியைப் பரிசோதனை போட உத்தரவு போட்டார்.

"என்னங்காணும், உமக்கு அவ்வளவு அவசரம்? நாங்கள் எல்லோரும் மெனக்கட்டு உங்களைத் தேடி வந்திருக்கும்போது நீர் சொல்லாமல் கொள்ளாமல் ஓடப் பார்க்கிறீரே? கையில் என்ன ஐயா பெட்டி? வைர அட்டிகையா? எங்களுக்கு வாங்க யோக்கியதை இல்லாவிட்டாலும் அந்தப் பிரகாசமான ஆபரணத்தைக் கண்ணால் பார்த்தாவது சந்தோஷிக்கிறோம். கொண்டுவாரும் இப்படி. 734! இவர் இடுப்பில் ஏதோ செருகியிருக்கிறாரே? அதை வாங்கு. பைகளில் என்ன ஐயா? பயப்படாதேயும்! நாங்கள் தேடும் சாமான்களைத் தவிர மற்ற எதையும் எடுத்துக்கொண்டுவிடமாட்டோம்." இன்ஸ்பெக்டர் உத்வேககரமான தம் நடவடிக்கைகளினால் மனுஷ்ய வர்க்கம் எங்கே மிரளப்போகிறதோ என்று சந்தேகித்து மேற்படி நடவடிக்கைகளை ஒரு சில்லறைத் தமாஷ் போல் நடத்துவதில் சிரத்தை உள்ளவராகக் காணப்பட்டார். தம்முடைய ஹாஸ்யத்தை யார் யார் ரசிக்கிறார்களென்று தம்மைச் சுற்றி அவர் அடிக்கடி பார்த்துக் கொண்டார். அவர் சிப்பந்திகள் வீட்டில் உள்ள பெட்டி பேழை எல்லாவற்றையும் ஒரு பக்கமாக எடுத்துக் கொண்டுவந்து வைத்தார்கள். பொன்னுசாமி பிள்ளையின் பிரயாண டிரங்கும் பிடிபட்ட சாமான்களில் ஒன்றாக இருந்தது. பொன்னுசாமி பிள்ளை ஒரு மூலையில் ஸ்தம்பித்துப்போய் வீற்றிருந்தார். ஏன் மதராஸுக்கு வந்தோம் என்று அவருக்கு வெறுப்பு வந்தது போலும். 734 ஆசாரியின் இடுப்பிலிருந்து ஒரு சிறிய டப்பாவை எடுத்தான். அதைப் போலீஸ் இன்ஸ்பெக்டர் வாங்கித்

திறந்து பார்த்தார். அவர் கண்கள் ஆச்சரியத்தினால் விரிந்தன. ஆசாரியை ஒரு முறை முறைத்துப் பார்த்து விட்டு அவர் ராமநாதனிடம் டப்பாவிலிருந்த சாமான்களைக் காட்டினார்.

ராமநாதன், "ஆம். இவைதாம் என்னுடைய வைரப் பித்தான்கள்" என்று உறுதி கூறினான்.

* * *

"சரிதான்! இப்போது புரிகிறது; ஆசாரி ஏன் எங்களைக் கண்டதும் கொல்லை வழியே கம்பி நீட்டப் பார்த்தார் என்பது. உன் பெயர் என்ன ஐயா?"

"கதிர்வேல் ஆசாரி."

"நீர் இருப்பது?"

"இந்தத் தெருதான்."

"அழகிரிசாமிக்கு ரொம்ப வேண்டியவர்போல் இருக்கிறது?"

"அவங்க வீட்டுக்கு நகை செய்வது, நகை இனங்கள் நல்லதாக வந்தால் வாங்கிக்கொடுப்பது, ஏதாவது மாற்றக்கூடியது இருந்தால் அதை விற்றுக்கொடுப்பது எல்லாம் என் பொறுப்பு."

"ஓஹோ! புரிந்துகொண்டேன். இந்த இனத்தை விற்றுக்கொடுக்கும் பொறுப்பைச் சமீபத்தில் ஏற்றுக் கொண்டீராக்கும்?"

ஆசாரி பதில் கூறாமல் அழகிரியை நோக்கினான்.

"அவரை ஏன் பார்க்கிறீர்? அவர் உமக்குச் செய்ய வேண்டிய சிபார்சைச் சற்று முன்னதாகவே செய்து விட்டார். உம்மைப் பரிசோதனை போடக்கூடாதென்று அவர் ஆத்திரத்துடன் குறுக்கிட்டபோதே சாமான் உம்மிடந்தான் இருக்கும் என்பது எனக்குத் தெரியும். சரி; நான் கேட்டதற்குப் பதில் சொல்லும். ஏய் 46!"

734-உம், 460-உம் ஆசாரிக்கு இரண்டு பக்கங்களிலும் 'பிராக்கெட்டு'ப் போட்டதுபோல் நின்றுகொண்டார்கள்.

ஆசாரி மருண்டார்.

அழகிரி ஆத்திரத்துடன் பேசலானான்: "இன்ஸ்பெக்டர் ஸார்! உலகத்தில் வைரப் பித்தான்கள் எவ்வளவோ! பத்தரிடம் வெவ்வேறு இனங்கள் வந்துகொண்டிருக்கும். உங்கள் கேஸுக்கும் இந்தப் பித்தான்களுக்கும் ஒரு சம்பந்தமும் இல்லை."

"அதைத்தான் பத்தர் சொல்லட்டுமே! நீர் சொல்லிக்கொடுத்தாலும் அவர் சொல்லமாட்டேன் என்கிறாரே!"

ராமநாதன் பேசினான்—"என் பித்தான் ஸெட்டில் ஒவ்வொரு இனத்திலும் பின்னே வி. ஆர். என்று என் பெயர் வரையப்பட்டிருக்கும். அந்த அடையாளத்தைப் பாருங்கள்."

இன்ஸ்பெக்டர் அந்த ஸெட்டில் ஒவ்வோர் இனமாகப் புரட்டிப் பார்த்து மேற்படி இனிஷியல்கள் இருப்பதை அழகிரியிடம் காண்பித்தார்.

பொறியின் விசை அசைக்கப்பட்டுப் படீரென்று கதவு மூடிக்கொள்ளும்போது உள்ளே மாட்டிக்கொண்ட எலி அடையும் திகில்போல் ஒரு திகில் அழகிரியைப் பற்றிக்கொண்டது. அவன் கதிர்வேல் ஆசாரியைக் கண்ணால் துளைத்துவிடுபவன்போல் பார்த்தான்.

இன்ஸ்பெக்டர் பேசினார்: "ஓய்! உம் பார்வையினால் அவரைப் பயமுறுத்தாதேயும். அவர் பொய் சொல்ல அஞ்சுபவர்போல் தெரிகிறது."

"ஏன் சொல்லட்டுமே நிஜத்தை! என்னிடமிருந்தா இந்தச் சாமான்களை அவர் வாங்கிக்கொண்டார்?" என்றான் அழகிரி பரபரப்புடன்.

"சொல்லும் ஐயா! பத்தரே! நிஜத்தைச் சொல்லலாமென்று முதலாளி அநுமதிக்கிறார். நீர் ஏன் தயங்குகிறீர்?"

பத்தர் மிரள மிரள விழித்துக்கொண்டு மௌனம் சாதித்தார்.

"என்னிடமிருந்து இந்தச் சாமான்களைப் பெற்றிருந்தால் நீங்கள் இவ்வளவு விரட்டுவதற்குப் பதில் சொல்லாமல் இருப்பாரா அவர்?" என்றான் அழகிரி.

"ஓய்! என்னங்காணும்! பொழுது போக்குகிறீர். திருட்டுச் சொத்து உம்மிடம் இருக்கிறது. அதற்கு ஜவாப்புச் சொல்லவேண்டியவர் நீர். யார் உம்மிடம் இதைக் கொடுத்தது? அல்லது நீரே திருடினீரா? பதில் சொல்லும். நாழிகையாகிறது" என்று இன்ஸ்பெக்டர் கோபித்துக்கொண்டார்.

"என் தொழில் திருடுகிற தொழில் அல்ல" என்றான் ஆசாரி."

"அப்படியானால் திருட்டுச் சொத்துக்களை வாங்கிக் கொள்வதும் விற்றுக் கொடுப்பதும் உம் தொழிலா?"

"நகைகளை வாங்கிக்கொடுப்பதும் விற்றுக்கொடுப்பதுந்தான் என் தொழில். அவை திருட்டுச் சொத்துக்கள் என்று என்னால் எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? அழகிரி சாமி ஐயாவைப்போல் ஒரு கண்யமான பிரபு ஒரு சாமானை என்னிடம் கொடுத்தால் அது திருட்டுச் சொத்து என்று நான் சந்தேகப்பட முடியுமா?"

"அப்படியானால் உமக்கு விஷயம் தெரியாமல் நீர் இந்த இனங்களை அவரிடமிருந்து வாங்கிக்கொண்டதாகச் சொல்லுகிறீரா?"

"அவுங்க அப்படித் திருட்டுச் சொத்தை என்னிடம் கொண்டு வருகிறவங்களும் இல்லீங்க. நானும் அப்படிச் சந்தேகப்பட்ட இனத்தை வாங்கக்கூடியவனும் இல்லீங்க."

"உம் தொழில்நாணயத்தைப்பற்றி இப்போது ஒருவரும் ஆக்ஷேபிக்கவில்லை ஐயா! இந்தக் கேஸ் சம்பந்தப்பட்ட வரையில் கேட்கிறேன். 'அழகிரிசாமி பெரிய

மனுஷ்யனாச்சே! அவர் எவ்வளவோ ஆயிரம், பதினாயிரம் பெறும்படியான நகைகளை வாங்குகிறவர் ஆச்சே! இந்த அற்ப இனத்தை எங்கே திருடியிருக்கப் போகிறார்' என்று நம்பி இதை அவரிடமிருந்து வாங்கிக்கொண்டு விட்டீர். அப்படித்தானே! இந்தத் திருட்டுச் சொத்து உம் கைக்கு வந்தது அழகிரிசாமி மூலமாகத்தான் அல்லவா? இதற்கு நேரிடையான பதில் சொல்லும். சுட்டை குழப்பாதேயும்.''

ஆசாரி தலைகுனிந்து அழகிரியைக் கடைக்கண்ணால் பார்த்தார்.

''ஓய் ஆசாரி! அவர் தலை குனியவேண்டிய காலம் வந்துவிட்டது. நீர் தைரியமாகச் சொல்லும். எப்போது உம்மிடம் இந்த இனங்களை அவர் கொடுத்தார்? என்ன செய்யச் சொல்லிக் கொடுத்தார்? விவரமாகச் சொல்லும். இவ்வளவு தூரம் வெளியிட்ட பிறகு ஒளிப்பதில் பயனில்லை. ஹும், நேரமாகிறது...''

ஆசாரி மறுபடியும் மென்று விழுங்கினாரே ஒழிய வாய் திறந்து பேசவில்லை.

''ஓய்! ஆசாரி; வெகு நாள் சிநேகமும் தாக்ஷிண்யமும் உள்ள ஒருவரைக் காட்டிக்கொடுக்கவாவது என்று நீர் யோசிப்பது சகஜந்தான். ஆனால், பாரும்! அந்த நண்பர் உம்மை ஒரு சங்கடத்தில் மாட்டிவைக்கத் தயங்கவில்லையே! இப்போது இந்தத் திருட்டுச் சொத்துக்கு ஜவாப்பு நீர் அல்லவா சொல்லியாகவேண்டும்? அல்லது பழைய கதைப்புஸ்தகங்களில் நாம் வாசித்திருப்பது போல் திருட்டுக் குற்றத்தை நீரே ஏற்றுக்கொண்டு நண்பரைக் காப்பாற்றுவதானாலும் காப்பாற்றும்.''

அழகிரி பேசினான்: ''இன்ஸ்பெக்டர் ஸார், நீங்கள் அவர் பேரில் திணிக்கும் சாட்சியத்தை அவர் ஏற்றுக் கொள்ள மனம் துணியவில்லை என்பது ருஜுவாகவில்லையா? இன்னும் ஏன் சிரமப்படுகிறீர்கள்?''

இன்ஸ்பெக்டரின் கண் சிவந்தது; மீசை துடித்தது; "உமக்கு அல்லவா பயப்படுகிறார் இவர், நெஞ்சில் இருப்பதை வெளியில் சொல்ல முடியாமல்? நீர் அப்படி அவரை மிரட்டி வைத்திருக்கிறீர் போலும்! இப்போது என்ன ருஜுவாகிறது பாரும். ஏய் 734! அடேய் 460!..."

மேற்படி இரண்டு போலீஸ்காரர்களும் கதிர்வேல் ஆசாரியைப் பக்கத்து ரூமுக்கு இழுத்துச் சென்றனர்.

அடுத்த நிமிஷம் அங்கிருந்து, "ஐயா, சொல்லிவிடுகிறேன், ஐயா, சொல்லிவிடுகிறேன்" என்ற சத்தம் கிளம்பியது.

பின்னர் 734 உம் 460 உம் உடல் நடுக்கமுற்றுக் கண்ணீர் உதிர்க்கும் கதிர்வேல் ஆசாரியை வெளியே இழுத்து வந்தார்கள்.

"என்ன ஆசாரி. கேட்டவுடன் உண்மையை ஒளிக்காமல் சொல்லிவிட்டால் எவ்வளவு கௌரவமாகப் போய்விடும்!"

"இல்லீங்க! என்னை அடிக்கச் சொல்லாதீங்க! நான் செத்துப்போய் விடுவேனுங்க! சீக்காய்க் கிடந்து ஆறு மாசம் ரொம்பக் கஷ்டப்பட்டேனுங்க! இன்னும் உடம்பு தேறல்லீங்க......!"

"நல்லது ஆசாரி! உம்மை, ஏன் அடிக்கப் போகிறோம்? பேஷாப், எங்களுக்குப் பெண்டாட்டி பிள்ளை இல்லையா? நாளைக்கு நகை நட்டு வாங்கவேண்டுமானால் உம்மிடந்தானே வருவோம்! நீர் தீர்க்காயுஸாக இருக்க வேண்டுமென்பதுதான் எங்கள் விருப்பம். இந்தக் கேஸில் ஒழுங்காகச் சாட்சி சொல்லிவிடும். சிரஞ்சீவியாக இரும்."

"என்ன சொல்லவேணுங்க?"

"இந்தத் திருட்டுச் சாமானை உம்மிடம் கொடுத்தது யார்?"

"இது திருட்டுச் சாமான் என்றும் மற்றொன்று என்றும் எனக்குத் தெரியாதுங்க. என்னங்க நான் சொல்றது. அழகிரிசாமி ஐயா தான் என்னிடம் காண்பித்தார். அவுங்க விஷயத்திலே எப்படி நான் சந்தேகப்படுறதுங்க?"

"நியாயந்தான் ஆசாரி! எத்தனை நாளைக்கு முன் இவைகளை உம்மிடம் காண்பித்தார்?"

"நாலைந்து நாளுக்கு முன் காண்பித்தாருங்க!"

"காண்பித்து என்ன சொன்னார்?"

"இவை எனக்குத் தேவையில்லை. நல்ல விலை வந்தால் கொடுத்துவிடலாமென்று உத்தேசம் என்றார்."

"சரி, நீர் என்ன சொன்னீர்?"

"அதுக்கு விலை மதிப்புப் போடச் சொன்னாருங்க. நான் மதிப்புப் போட்டேன்."

"எவ்வளவு என்று?"

"ரூபாய் ஆயிரத்துக்கு மதிச்சேனுங்க."

"அப்படியா? சரி; மேலே என்ன நடந்தது?"

"இவைகளை வாங்கி வைத்துக்கொண்டேனுங்க. விலை வந்தால் விற்றுத் தருவதாகச் சொன்னேனுங்க."

"ஆனால் விற்கவில்லையோ?"

"நினைத்த மாத்திரத்தில் ஒன்றும் வித்துப்போய் விடாதுங்க. கிராக்கி வந்தால்தானே?"

"கிராக்கி வரவில்லையாக்கும்?"

"ஆமாங்க."

"அதைத் திருப்பிக் கொடுக்கத்தான் இன்று காலையில் வந்தீரோ!"

"ஐயா ஊருக்குப் போவதாயும் அந்த இனங்களை எடுத்து வரும்படியும் எனக்கு ஆள் வந்ததுங்க."

"ஐயா என்ன செய்யச் சொன்னார்?"

"இவைகளின் கற்களைப் பெயர்த்து வேறு இனங்களாகக் கட்டிச் சீக்கிரத்தில் முடித்துவிடும்படி சொன்னாருங்க."

"என்ன வேறு இனம்?"

"மூக்குப்பொட்டு, மோதிரம், கிளாவர், ஏதாவது சாத்தியமானதை அதில் உள்ள தங்கத்தைக்கொண்டே செய்து முடித்து வீட்டில் பெண்டுகளிடம் கொடுக்கும்படிக்கும் கூலி அவர்களிடம் வாங்கிக்கொள்ளும்படிக்கும் சொன்னாருங்க."

"எதற்காக இந்த இனங்களை அழித்துவிட்டு வேறு இனங்களாக இவ்வளவு அவசரத்தில் மாற்றிவிடும்படி அவர் உம்மிடம் சொன்னார்?"

"அது எனக்குத் தெரியாதுங்க. கூலி கொடுத்தால் சொன்னபடி செய்ய வேண்டியவன்தானே நான்! அதற்குமேல் உள் வர்த்தமானத்தை நான் ஏன் விசாரிக்கிறேனுங்க?"

"இவைகளில் எழுத்து வெட்டியிருப்பது அவருக்குத் தெரியுமோ?"

"அதை நான் எப்படிச் சொல்ல முடியுங்க?"

"நீர் அறிவீர் அல்லவா!"

"தெரியுங்க."

"அதை அறிந்தும் நீர் சந்தேகப்படவில்லையா?"

"இல்லீங்க. எழுத்துள்ள இனங்கள் சாதாரணமாக வருகிறது உண்டுங்க."

"பேஷ், ஆசாரி. இதையெல்லாம் முதலிலேயே சொல்லியிருந்தால் உம்மைச் சிரமப்படுத்த நேரிட்டிருக்காது."

"எல்லாம் என் கால வித்தியாசங்க. நான் இவ்வளவு நாள் ஒரு சங்கடத்தில் மாட்டிக்கொண்டது இல்லேங்க.

பச்சைக் குழந்தைகிட்டே ஒடிந்த நகையைக் கொடுத்தனுப்புவாங்க மகாராஜாங்க. நிறுத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டாங்க. இம்மி அளவு பிசகாமல் நானும் வேலை செய்து நாணயஸ்தன் என்று பெயர் வாங்கியிருக்கிறேனுங்க. இன்னிக்கு நேத்திக்கு நான் தொழில் பண்ணலீங்க. முப்பது வருஷமாச்சுங்க. நேட்டாலில் பதினைந்து வருஷம் இருந்தேனுங்க......” ஆசாரியின் பூர்வசரித்திரங்களைக் காதில் வாங்க இன்ஸ்பெக்டருக்கு அவகாசமில்லை.

“மிஸ்டர் அழகிரி! உம்மை அரெஸ்டு செய்திருக்கிறேன்” என்ற வார்த்தைகளை அவர் உறுதியுடன் உச்சரித்தார்.

உடனே இரண்டு கான்ஸ்டேபிள்கள் அழகிரியைக் கைது செய்தார்கள்.

அழகிரியும் கதிர்வேல் ஆசாரியும் காப்புக்கள் அணிந்துகொண்டு போலீஸ் படை சூழ வெளியே புறப்பட்டார்கள். ஸ்திரீகளின் அழுகைக் குரல் லேசாக உள்ளேயிருந்து காதில் பட்டது.

பொன்னுசாமிபிள்ளை இன்ஸ்பெக்டரிடம் ஏதோ பேச நெருங்கினார். இன்ஸ்பெக்டர், “ஸ்டேஷனுக்கு வந்து பேசிக்கொள்ளும்” என்று அவரை உதறித் தள்ளி விட்டு முன் சென்றார்.

தெருவில் வரவேற்புக் கூட்டம் தயாராக இருந்தது. கைதிகள் தங்கள் ரக்ஷகர்களுடன் தனித்தனியே வண்டிகளில் ஸ்டேஷனுக்கு அனுப்பப்பட்டனர்.

இன்ஸ்பெக்டரும் ராமநாதனும் காரில் ஏறிக் கொண்டனர்.

அழகிரி வண்டியில் போய்க்கொண்டிருந்தபோது அவன் சிந்தனைகள் - முதல் கட்டத்துக் குழப்பம் சற்றுத் தெளிந்ததும் - வர்த்தமானங்களின் உட்புறத்தை ஆராய்ந்து அறியத் திறமை பெற்றன. ‘கதிர்வேல்

ஆசாரி எதிர்க்கட்சிக்குக் கையாள் ஆக மாறின மர்மம் என்ன?' காரணம் அழகிரிக்குப் புலப்படாமல் இல்லை. கதிர்வேல் ஆசாரி பல இந்தியத் தொழிலாளிகளைப் போல் தென் ஆப்பிரிக்காவில் நேட்டாலுக்குப் பணம் சம்பாதிக்கப்போய்ப் பதினைந்து வருஷம் நல்ல வருமானத்துடன் இருந்த பின் திடீரென்று காட்டுத் தீப்போல் பற்றிக் கொண்ட ஓர் உள்நாட்டுக் கலகத்தில் வீடு, வாசல், சொத்து எல்லாவற்றையும் பறிகொடுத்துவிட்டு உயிர் தப்பினால் போதும் என்று ஒளிமறைவாக ஓடி வரும்போது தொழில்முறையில் தன் கையில் சிக்கிய சில உயர்ந்த வைரக்கல்களைச் சாமர்த்தியமாகத் தின்பண்டங்களில் ஒளித்து எடுத்துக்கொண்டு ஊர் வந்து சேர்ந்தான்.

அவன் வந்தது முதல் பல பிரமுகர்களால் உயர்ந்த வேலைக்காரன் என்று மதிக்கப்பட்டு ஆதரவளிக்கப்பட்டு வந்தான். அழகிரிக்கும் ஆசாரிக்கும் கொஞ்ச காலத்தில் நட்பு ஏற்பட்டு வளர்ந்து வந்தது. தொழில் முறையிலும் அழகிரியால் ஆசாரி அடிக்கடி பயனடைந்து வந்தான். ஆசாரி தான் நேட்டாலிலிருந்து கொண்டுவந்த வைரங்களை அழகிரியிடம் ஒரு சமயம் காண்பித்து நண்பனைப் பழகிய நம்பிக்கையினால் அவைகளின் வரலாற்றையும் வெளியிட்டான். அந்த அரிய ரத்தினங்களைப் பார்த்ததும் அவைகளின் மர்மமான வரலாற்றை அறிந்ததும் அழகிரியின் பேராசை அவனுடைய துர்ப்புத்தியை ஏவிவிட ஆரம்பித்தது. அது முதல் அழகிரி அவ்வரிய ரத்தினங்களை லகுவாக ஆசாரியிடமிருந்து தட்டி அடித்துக்கொண்டு விடப் பல சூழ்ச்சிகள் செய்யத் துவக்கினான். போலீசுக்குத் தெரிந்தால் மோசம் வந்துவிடும் என்று ரகசியமாக ஆசாரியைப் பயமுறுத்தினான். விலைக்கு யாரோ கேட்பதாகவும் அவைகளைத் தன்னிடம் கொடுத்து வைத்திருந்தால் தக்க லாபத்துக்கு விற்றுத் தருவதாகவும் ஆசை காட்டிப் பார்த்தான். ஆசாரி தான் அவ்வரிய கற்களின் ரகசியத்தை வெளியிட்டது முட்டாள்தனமென்று தெரிந்துகொண்டு அவைகளை அழகிரியிடம் கொடுக்காமல்

சால்ஜாப்புக்கள் சொல்லிக் காலம் கடத்தி வந்தான். அழகிரி அதனால் கோபமடையாமல் ஆசாரியிடம் நாளுக்கு நாள் அதிக நட்பும் அநுதாபமும் காட்டி ஆசாரிக்கு அவ்வப்போது பெரும் செலவுகளுக்குக் கடன் கொடுத்து உதவி வந்தான். ஒரு சமயம் தெய்வாதீனமாக ஆசாரி ஆறு மாத காலம் சிக்காகப் படுத்தபோது அவனுக்கு வைத்தியம் பார்க்கவும் குடும்பச் செலவுகளை நிர்வகிக்கவும் அழகிரி மிகுந்த சிரத்தையுடன் முன்வந்து பரிபூர்ணமாகச் சேவை செய்தான். ஆசாரி உடல் நலம் எய்தியபின் அழகிரி தான் செலவுசெய்த தொகையை ஒன்றுக்கு இரண்டாகப் பில் போட்டுக் கொடுத்து ஆசாரியிடம் வசூல் செய்ய யத்தனம் செய்தான். அத்துடன் பழைய கடன் பத்திரங்களையும் தீர்த்து விடுமாறு ஆசாரியை நிர்ப்பந்திக்கலானான். ஆசாரி பெரிய குடும்பி. உத்சாகமாகச் செலவு செய்து பந்துமித்திரர்களுடன் சுக வாழ்க்கை நடத்துபவன். அவனுக்கு எவ்வளவு வருமானம் இருந்தாலும் மிச்சம் இருக்காது. இதையெல்லாம் அழகிரி அறிந்தவனாகையால் திடீரென்று ஒரே சமயத்தில் பலபட்டறையான கடன்களை ஒன்று சேர்த்து ஆசாரியைப் பணம் கொடுக்கும்படி நெருக்கிக்கொண்டு வந்தான். ஆசாரியின் பேரில் இரண்டொரு நடவடிக்கைகளையும் தொடர ஆரம்பித்தான். ஆசாரியின் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர்களையும் ஏவிவிட்டு எல்லைக்கல், அநுபோகம் முதலிய சில்லறை விவகாரங்களில் ஆசாரியை மாட்டிவைக்க ஏற்பாடு செய்தான். இப்படி இருந்தும் துர்ப்பலனான, ஏழையான ஆசாரி பொறுமையை மேற்கொண்டு, அழகிரியிடம் விரோதத்தை வெளிக் காண்பிக்காமல் படிமானத்துடனும் மரியாதையுடனுமே பழகி வந்தான். ஆசாரியின் இறுதி நிலைவரை தீவிர முயற்சி எடுத்துக்கொண்டால் நேட்டால் வைரங்கள் வெளி வந்துதான் ஆகவேண்டுமென்று அழகிரி எதிர்பார்த்திருந்தான். ஆனால் ஆசாரி பல பெரிய மனுஷ்யர்களின் தயவையும் ஆதரவையும் பெற்றவன் என்பதை அழகிரி மறந்துவிட்

டான். ஆசாரி தன் கஷ்ட நிலைமையைப்பற்றித் தான் வேலை செய்யும் பெரிய இடங்களில் பிரலாபிக்காமல் இல்லை.

நகை செய்யும் தொழிலாளிக்கு எந்த வீட்டிலும் அந்தப்புரத்தில் சலுகை ஏற்படுவது சகஜம். அந்தப்புரத்துக்கு அதிகார முறையற்ற ரீதியில் குடும்ப ஆட்சியில் பூராப் பங்கு உண்டு என்பது யாரும் அறிந்த விஷயமே. கதிர்வேல் ஆசாரியின் இழைப்புக் கலையினால் பிரகாசிக்கும் நவரத்தின ஆபரணங்களை ஆவலுடன் அணியும் ஐச்வரிய வதிகளில் அட்வொகேட் முகுந்தராஜ ஐயங்காரின் ஆலயத்து அரசியும் ஒருத்தி. நேட்டால் வைரங்கள் அந்த மகிளா ரத்தினத்தின் ஒவ்வோர் ஆபரணத்திலும் சுடர் போல் சோதியுடன் திகழ்ந்தன.

வேங்கடசுப்பையர் தம் காலேஜ் நண்பரான அட்வொகேட் ஐயங்கார் அவர்களைச் சேர்பரில் கன்ஸல்டு செய்த தினத்தன்று மாலையிலேயே கதிர்வேல் ஆசாரிக்கு அட்வொகேட் அவர்கள் வீட்டிலிருந்து அழைப்பு வந்தது.

கதிர்வேல் ஆசாரி கடைசியாகத் தன்னைக் காலைவாரிவிடச் சதி செய்துவிட்டான் என்பதை அழகிரி ஊகித்தறிந்தான்.

* * *

அன்று காலையில் அத்திம்பேர் உத்தரவுப்படி சிவராமன் கல்யாண ரிஜிஸ்டிராரின் ஆபீசுக்குச் சென்று உஷா ராமநாதன் விவாகப் பதிவு விஷயமான நோட்டீஸை எழுதிக் கொடுத்தார். உஷாவுக்குச் சிவராமன் கார்டியனாகக் கையெழுத்திட்டார். ராமநாதனுக்கும் ஒரு கார்டியன் தேவையோ என்று ஸ்ரீ வேங்கடசுப்பையா சந்தேகித்தார். அவனுக்கு உண்மையான வயது இருபதுதான். ஆனால் யாருடைய தவறோ அவனுக்குப் பள்ளிக்கூடத்தில் பதிவு செய்யப்பட்டிருந்த வயது ஒரு வருஷம் அதிகமாகவே இருந்தது. அதை அநுசரித்து அவன் 21 வய

தான மேஜர் என்றும் கார்டியன் இல்லாமல் தானே விவாக ஒப்பந்தத்தில் கையெழுத்திடச் சட்டப்படி லாயக்குள்ளவனென்றும் தீர்மானித்து அவர் அதில் தாம் தலையிடாமல் பின்னே நின்று காரியத்தை நடத்தலானார்.

சிவராமன் வெளியே போயிருக்கும்போது கி. முத்துசாமி ஸ்ரீ வேங்கடசுப்பையரிடம் வந்தான். அவன் ஹெட்மாஸ்டரால் அனுப்பப்பட்டிருந்தான். ஹெட்மாஸ்டர் தாம் ஐயர் அவர்களைப் பார்ப்பதற்குக் காலையில் தகுதியாக இருக்குமா, மாலையில் வரலாமா என்று கேட்டுவரச் சொல்லி அவனை அனுப்பியிருந்தார். முத்துசாமி முன்ஹாலில் கால் வைத்ததும் காந்திமதி அவன் எதிரில் வந்து ஆங்கிலத்தில், "தயவு செய்து உட்காருங்கள். அப்பாவுக்குத் தெரிவிக்கிறேன்" என்று உபசரித்தாள். முத்துசாமி அவளுக்கு நன்றி கூறிவிட்டு ஒரு நாற்காலியில் உட்கார்ந்தான். செல்லம் அவன் முன் வரவில்லை. பக்கத்து ரூமில் இருந்து அவனைக் கவனித்துக் கொண்டிருந்தாள். 'வெந்த உள்ளம்' என்று கையெழுத்திட்டுக் கவிதை கட்டிய ஆவேசக்காரன் எவ்வளவு சாதுவாக அங்கே உட்கார்ந்திருக்கிறான் என்று நினைத்துப் பார்த்தபோது அவளுக்குச் சிரிப்பாக இருந்தது. இந்தச் சாதுவுக்குக் 'காந்த சக்தி' என்ற புனைபெயருடன் ஒரு பதில் கவிதையை உருவாக்கி அனுப்பக் கொஞ்ச நாளாகச் செல்லம் முயன்றுகொண்டிருந்தாள். ஆனால் ஒரு வரிகூட அவளால் எழுத இயலவில்லை. அர்த்தத்தைச் சிந்தித்து அல்லவா பதத்தைத் தேடவேண்டும்? அர்த்தம் உசிதமானதாக இருக்கவேண்டியது அவசியம். அது உணர்ச்சியைப் பின்பற்றுமென்றாலும் எல்லா உணர்ச்சிகளையுமே உசிதமானவை என்று சொல்லிவிட முடியாது. செல்லத்துக்கு முத்துசாமியிடம் இருந்த உணர்ச்சி பரிகாசம், விளையாட்டு, இடக்கு, திமிர், அகந்தை, அலக்ஷியம், தற்பெருமை, சஞ்சலம் முதலிய அநுசிதமான கவசங்களை எடுத்துவிட்ட சாத்விக உணர்ச்சி அல்ல. ஆகையால்

எழுதப் புகும்போது உசிதப் பண்பாடுடைய பாவங்களே அவனுக்கு உதயமாகவில்லை. அந்த நிலையில்தான் அவனும் அதை அறிந்தான்; கொஞ்சம் வெட்கினான். தன் உள்ளத்தை மேம்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்தான். அவனுக்குத் தன் சிறுமைத்தனத்தின் அடையாளங்களான சில குறைபாடுகள் உண்மை உணர்ச்சிக்கு மாறானவை என்ற அறிவு தோன்றிற்று. எவ்வளவு உயரிய பண்பாடு இருந்தால் உசிதமான பாவங்கள் நிறைந்த கவிதை கட்ட இயலும் என்பதை அவன் சிந்தித்தான்.

முத்துசாமியின் சிந்தனைகளோ அச்சமும் துடிப்பும் நிறைந்த பாதையில் ஓடிக்கொண்டிருந்தன. தன் விசாரணைக்குப் பூர்வாங்கமாக ஹெட்மாஸ்டரின் அழைப்பு ஏற்பட்டிருக்கிறதென்று அவன் ஊகித்தான். நிஜம் ருசுவானால் தன்னைக் குற்றம் பாதிக்காதென்றாலும் நிஜம் எப்படி ருசுவாகும்? அதை யார் நம்புவார்கள்? பொய்மை நம்பச் செய்யும் சூழ்நிலைகளுடன் நிஜம் போராடி வெற்றிடைவது அரிதல்லவா? பொய்யின் தாண்டிகமும் நிஜத்தின் கோழைத்தனமும் பிரம்ம சிருஷ்டியின் இயல்புகள் என்பதை எவன் மறுக்க முடியும்! "உக்தாந்ருதம் ருஷிம் யதா" என்று வால்மீகி சொன்னது தர்மத்தை அடிப்படையாகக் கொண்டிருந்த காலத்தில்! அர்த்தம் என்ற பணத்தை அடிப்படையாகக் கொண்ட நாகரிக காலத்தில் அந்ருதம் பிரம்ம வித்தையின் பெருமையை அடைந்துவிட்டது. அந்ருதம் பிறரை ஏமாற்றும் நோக்கமுடையது. அதன் பலன் சுயநலம். இந்த அசுப சூசகமான கொள்ளிக்கட்டைச் சுழலை நாகரிக காலத்தின் ஆரம்பத்தில் விளங்கிய ஸ்ரீ காளிதாஸ மகாகவி சுட்டிக் காண்பித்திருக்கிறார்: "பராதிஸந்தான மதீயதே யைர் வித்யேதி தே ஸந்து கிலாப்தவாச:" அங்கே பேசுபவர் ஒரு ரிஷி; பேசப்படுபவர் நாகரிக வாழ்க்கையில் அரசு புரியும் ஒரு மன்னன்.

நாகரிக வாழ்க்கையில் உண்மை உருத் தெரியாமல் பொய் புரட்டுக்களால் பாதாளத்துக்கு அடித்துத் தூரத்தப்

வதை, "மிருச்சகடிகம்" என்ற மிகப் பழைய காலத்து நாடகம், எவ்வளவு பரிதாபகரமாக எடுத்துக் காட்டுகிற தென்று முத்துசாமி ஞாபகப்படுத்திக்கொண்டான்.

முத்துசாமியை ஸ்ரீ வேங்கடசுப்பையரே மாடியின் மேல்புறம் வரையில் மேலே ஏறிவரும்படி அழைத்தார்.

முத்துசாமி மிக்க அடக்க ஒடுக்கமாகப் படி ஏறிச் சென்று ஸ்ரீ வேங்கடசுப்பையர் அறையின் வாசற்படியை அடைந்தான். அவனை உள்ளே வந்து ஒரு நாற்காலியில் உட்காரும்படி வேங்கடசுப்பையர் எவ்வளவு சொல்லியும் அவன் அதற்கு இணங்கவில்லை. அவனுடைய களங்கமற்ற தோற்றமும் விநய சம்பத்தும் வேங்கட சுப்பையருக்கு வியப்பை அளித்தன. இந்தக் காலத் திலும் இந்தப் பட்டணவாசத்திலும் இப்படி ஒரு பிள்ளை உண்டா என்று தமக்குத்தாமே அவர் கேட்டுக்கொண் டார்.

"ஹெட்மாஸ்டர் எப்போது வரச் சௌகரியப்படும் என்று சொல்லி அனுப்பியிருக்கிறார்?" என்று அவர் முத்துசாமியை விசாரித்தார்.

"தங்கள் சௌகரியத்தைத்தான் அவர் அறிந்துவரச் சொன்னார். காலையானாலும் மாலையானாலும் உத்தரவு பெற்றவுடன் அவர் வரத் தயாராக இருக்கிறார்" என்று முத்துசாமி தெரிவித்துக்கொண்டான்.

"அவர் மாலையிலேயே வரட்டும். அவரைப் பார்க்க விரும்பிய சிவராமன் இப்போது வெளியே போயிருக் கிறார்" என்று ஐயர் கூறினார்.

உடனே முத்துசாமி, ஐயருக்கு வந்தனம் சொல்லி விட்டு விடைபெற்றுக்கொள்ள முயன்றான். ஆனால் ஸ்ரீ வேங்கடசுப்பையர் அவனைக் கேள்வி கேட்கத் துவக்கியதால் அவன் எடுத்த காலைத் திருப்ப வேண் டியதாயிற்று.

"நீ எந்தக் கிளாசில் வாசிக்கிறாய்?"

"ஆருவது பாரத்தில்."

அவன் வயதுக்கு அவன் படிப்பு தாமதமாக இருப்பதற்குக் காரணத்தை ஐயர் கேட்டு அறிந்துகொண்டார்.

"உன்னைப்போல் அதிக வயதான பையன்கள் பள்ளிக்கூடத்தில் எத்தனை பேர் இருப்பார்கள்?"

"வயதில் என்னைப்போன்றவர் அநேகம் பேர்கள் இருக்கிறார்கள்; கணக்குத் தெரியாது. ஆனால் அவர்களின் தாமதித்த படிப்புக்குக் காரணங்கள் வெவ்வேறு.........."

வேங்கடசுப்பையர் சிரித்துக்கொண்டார்.

"உன்னைப்போல் அத்யயனத்திலும் பிறரு காரியத்திலும் காலதாமதமானவர்கள் அல்ல?"

"ஆமாம், பள்ளிக்கூடத்திலேயே காலம் கடத்தியிருக்கிறார்கள்" என்றான் குறும்புத்தனமாக முத்துசாமி.

வேங்கடசுப்பையர் இன்னும் விரிவாகச் சிரித்துவிட்டு, "சிலர் பால்ய வயது படிப்புக்கு ஏற்பட்டதென்பதையே அறியாதவர்களாக இருக்கலாம்."

"குலாசாரமும் கலாசாரமும் ஒத்துக்கொள்வதென்றால் வெகு பொருத்தமான புதுமையாகத்தான் இருக்கிறது. ஆனால் வெள்ளிமலை வழுவில் இழுக்கிறது" என்றான் முத்துசாமி, சம்பாஷணையின் சுவாரசியத்தில் உட்புகுந்தவனாய்.

வேங்கடசுப்பையருக்கு அவன் பேரில் ஏற்பட்ட திருப்திக்கு அளவில்லை. அவனை மறுபடி உட்காரச் சொல்லி நிர்ப்பந்தித்தார். அவன் உடன்பட மறுத்தான்.

"அப்படி வயதான பையன்கள் படிப்பதால் பள்ளிக்கூடத்தின் ஒழுங்குமுறை, கட்டுப்பாடு, கலாசார முன்னேற்றம் இவைகள் பாதிக்கப்படலாமோ?" என்று வேங்கடசுப்பையர் தம் பிரச்னமாலிகையைத் தொடர்ந்தார்.

"ஆமாம், விசேஷமாக இரு பாலாரும் படிக்கும் பள்ளிக்கூடத்தில் எல்லாம் பாதிக்கப்படுவது சகஜம்" என்று ஐயரைத் திகைக்க வைக்கும் தீரத்துடன் முத்துசாமி அவர் அந்தரத்தில் ஒளித்து வைத்திருக்கும் பிரச்னையை முன்கூட்டியே அம்பலப்படுத்தினான்.

வேங்கடசுப்பையர் வெட்டவெளிச்சமாக யுத்தம் செய்யத் தாமும் பின்தங்கவில்லை என்று நிரூபிப்பவர் போல், "ஆகையால் காதல் கடிதங்கள் பிறப்பதில் ஒன்றும் ஆச்சரியமில்லை அல்லவா?" என்று கேட்டார்.

"பிறக்கக்கூடியதெல்லாம் பிறக்கும்" என்றான் முத்துசாமி, தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக்கொண்டு.

வேங்கடசுப்பையர் சிரிப்புக்கு இடம் கொடுக்காமல் அவன் பேசும் தோரணையில், 'குற்றமுள்ள நெஞ்சல்லவா, குறுகுறு என்னும்? எனக்கு என்ன பயம்? நீர் எதை வேண்டுமானாலும் கேளும். உம் சந்தேகங்களை நான் சத்திய சக்தியால் தகர்த்து எறிவேன்' என்ற வீரப் பிரதிக்ஞை தொனிப்பதை நிதானித்து அறிந்துகொண்டார். அதற்குமேல் அவனைக் கேள்விகள் கேட்க அவருக்கு யோசனையாகிவிட்டது. செல்லத்துக்கு இவன் காதல் கடிதம் எழுதியிருக்கமாட்டான் என்றும் அப்படி எழுதிய வனாகத் தாம் அவனைச் சந்தேகப்படுவதால் ரோஷம் கொண்டு அந்தச் சந்தேகத்தை தைரியமாக எதிர்த்து விரட்டிவிட அவன் முஸ்தீபுடன் இருப்பதாகவும் அவர் ஊகித்தார். அந்த நிலைமையில் அவனை மேலே கிளறி விடுவது சமயோசிதமல்ல என்று நிர்மானித்துக்கொண்டார். அவன் நுண்ணறிவு வேங்கடசுப்பையரைத் திணர வைத்தது. தனக்கு ஏற்ற எதிர்வாதம் செய்பவன் ஒரு சிறுவன் என்று நினைக்க அவர் ஆச்சரியமடைந்தார். தாம் அவனை நிறைபோட நினைக்குமுன் தம்மை அவன் நிறுத்து அளவையும் குறிப்பெடுத்து வைத்திருப்பதைக் காண அவருக்குச் சிறிது வெட்கமாகவும் இருந்தது.

வேங்கடசுப்பையர் சம்பாஷணையை வேறு வழியில் செலுத்தி முத்துசாமியின் இருப்பிடம், ஆகார வசதி முதலியவற்றைப்பற்றி விசாரித்தார். முத்துசாமி சுருக்கமாகவும் நேர்முகமாகவும் தன் சரித்திரத்தை எடுத்து உரைத்தான். சர்மாவின் பிரஸ்தாபம் வந்ததும், "அவனோடு உன்னால் எப்படி இருக்க முடிந்தது?" என்று வினவினார் வேங்கடசுப்பையர். "துஷ்கரமேவ க்ருதம்" என்றான் முத்துசாமி ஸம்ஸ்கிருதத்தில்: (முடியாததைச் செய்தேன்). மேலும் அவன், "ஹிதோபதேசத்தில் ஒரு கதை இருக்கிறது. ஹம்ஸமும் காக்கையும் ஒரு மரத்தில் உட்கார்ந்திருந்தபோது ஒரு வழிப்போக்கனுக்குக் காக்கை செய்த தீமைக்காக, ஹம்ஸம் அடிபட்டு உயிர் இழந்தது என்பது அந்தக் கதை. எனக்கு அது சில அம்சங்களில் பொருந்தும்" என்றான்.

வேங்கடசுப்பையர் அவன் பேச்சில் உள்ள சோக ரஸத்தை உணர்ந்து மனம் கனிந்தார். அவன் தன் மனத்தில் உள்ள பிரச்னைக்கு மறைமுகமாகப் பதில் அளிக்கப் பிரயத்தனப்படுவதை அவர் நன்கு உணர்ந்தார். ஆனால் சர்மா செல்லத்துக்குக் காதல் கடிதம் எழுத எப்படி நேர்ந்தது என்று கேட்க அவர் துணியவில்லை. முத்துசாமிக்கும் அந்தக் காலித்தனத்துக்கும் யாதொரு சம்பந்தமும் இல்லை என்று அவர் பிரமாணம் செய்யத் தயாராக இருந்தார். அதற்குமேல் அவனைச் சோதிக்கும் மனப்பான்மையுடன் கேள்விகள் கேட்டு அவன் மனத்தைப் புண்படுத்த அவர் விரும்பவில்லை. ஆனால் அவன் அப்படிப்பட்ட அவருடைய வெளிப்படையான கேள்வியை எதிர்பார்ப்பதாகவும், அதற்கு அவன் நேரிடையான பதில் அளிக்க முஸ்தீப்புடன் இருப்பதாகவும் அவர் நன்கு கண்டுகொண்டார்.

மறுபடி வேங்கடசுப்பையர் சம்பாஷணையைச் சாவதானமான பாதையில் நடத்திப்போக முயன்றார். ஆனால் செல்லமும் காந்திமதியும் இவனே அந்தக் காதல் கடிதம்

எழுதியதாக நினைப்பது எதனால் என்று அவருக்கு மனத்தில் இடறிக்கொண்டே இருந்தது. அந்த அஸ்தி வாரத்தில் பிறந்த கேள்வி பின்வருமாறு:

"எல்லாக் காதல் கடிதங்களும் வெறுக்கப்படுவதில்லை; சில வரவேற்கப்படலாம். அப்போது அவற்றைக் குற்றமென்று கருதுபவர்கள் இருக்க மாட்டார்கள் அல்லவா?"

"இருக்கலாம்" என்றான் முத்துசாமி. வேங்கட சுப்பையருக்குத் தூக்கிவாரிப்போட்டது. தம் மதியோட்டத்துக்கு அவன் ஊகம் எப்போதும் ஒரு காத வழி முன்னேயே சென்றுகொண்டிருப்பது அவரைச் சிறியோன் ஆக்குவதுபோல் இருந்தது.

"யார்?" என்ற கேள்வி அவரை அறியாமலே வெளி வந்தது. முத்துசாமியின் பதில் தயாராக இருந்தது.

"தம் வீட்டுப் பெண்ணின் போக்கை அறியாத சுற்றத்தார்" என்றான் அவன்.

வேங்கடசுப்பையர் சிரித்துக்கொண்டார். அவன் பேசியதன் தாத்பரியத்தைச் சற்றுச் சிந்தித்து மன முவந்தார்.

முத்துசாமியிடம் மேலே பேச்சுக் கொடுக்க அவர் முயலவில்லை.

"உனக்குப் பள்ளிக்கூடம் உண்டல்லவா?"

"ஆம்."

"சரி. ஹெட்மாஸ்டர் இன்று மாலை வரட்டும். சிவராமன் அப்போது வீட்டில் இருப்பார்" என்று வேங்கடசுப்பையர் முத்துசாமிக்கு விடை கொடுத்தார்.

அவனும் அவருக்கு வணக்கம் செய்துவிட்டுக் கீழே இறங்கினான்.

அவன் சென்றதும், 'சிவராமன் இவனுடன் பேசி என்ன புரிந்துகொள்ள முடியும்? அசட்டுப் பட்டம்

வாங்கிக்கொள்ள வேண்டியதுதான்' என்று வேங்கட சுப்பையர் தாமே பேசிக்கொண்டார்.

முத்துசாமியோ, 'வேங்கடசுப்பையர் அக்காதல் கடிதத்தைச் சுற்றிச் சுற்றி வந்தாரே ஒழிய, என் நேரிடையாக ஒன்றும் கேட்கவில்லை? நான் நடந்ததை எல்லாம் மேல் விசாரணைக்கு இடம் இல்லாமல் சொல்லிவிடத் தயாராக இருந்தபோதிலும் எனக்கு அவர் கேட்காததைப் புகுத்திப் பேச மனம் துணியவில்லை' என்றவாறு சிந்தனைக் குழப்பத்தில் ஆழ்ந்து பங்களாவின் வாசலை அடைந்தான். அப்போது, திடீரென்று ஏதோ ஓர் உணர்ச்சி உதயமாகி அவனைத் திரும்பிப் பார்க்கச் செய்தது.

அவன் கண்களின் கூரிய பார்வையால், அம்பினால் அடிபட்ட பறவைபோல், செல்லம் ஒரு ஜன்னல் வழியே அவனை நோக்கிக்கொண்டிருந்தவள் சரேலென்று ஜன்னலின் கீழே மறைந்தாள்.

* * * *

அன்று சிவராமன் வீட்டுக்கு வரும்போது பிற்பகல் துவக்கமாகிவிட்டது. கல்யாண ரிஜிஸ்டிரார் ஆபீசில் தம் ஜோலியை முடித்துக்கொண்டு அவர் மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் என்ன நடக்கிறது என்று எட்டிப் பார்த்தார். ராமநாதன், தன் வக்கீல், வக்கீல் குமாஸ்தா முதலியவருடன் ஒரு பக்கமும், போலீஸ் வசம் இருந்த கதிர்வேல் ஆசாரி, அழகிரி, அவருடைய அநுதாபிகளான பொன்னுசாமிபிள்ளை முதலியவர்கள் மற்றொரு பக்கமும் கோர்ட்டில் காத்துக்கிடப்பதை அவர் கண்டார். அழகிரி கண்களில் பட அவருக்குச் சங்கடமாக இருந்ததால் ராமநாதனை ஜாடையாக வெளியே வர வழைத்து இரண்டொரு வார்த்தை பேசிவிட்டு அந்த இடத்தை விட்டுப் புறப்பட்டார். எதிர்பார்த்தபடி அழகிரி ஜாமீனில் விடுதலையடையப் பிரயத்தனப்படுவதாகவும்

ராஜிப் பிரஸ்தாபங்கள் நடப்பதாகவும் பொன்னுசாமி பிள்ளை ஒரு கௌரவமான முடிவுக்கு உடனே வரத் தம்மால் இயன்றமட்டும் பாடுபடுவதாகவும் ராமநாதனிட மிருந்து சிவராமன் அறிந்துகொண்டார்.

சிவராமன் சுமார் இரண்டு மணிக்குப் போஜனம் செய்துவிட்டு, கோபிநாத்துடன் மாடியில் சற்றுப் பேசிக் கொண்டிருந்துவிட்டு அயர்ந்து நித்திரைபோனார்.

தூக்கம் மனுஷ்யனுடைய மன நிலைமைக்கும் தேகஸ்திதிக்கும் அறிகுறியாகும். மனத்தில் வியாகுல மிருந்தால் தூக்கம் வராது. சரீரத்தில் வியாதியிருந்தாலும் தூக்கத்துக்குப் பங்கம் ஏற்படும். உடம்பு ஸ்திதியை விசாரிக்கும் வைத்தியர் பல கேள்விகளின் நடுவே, 'தூக்கம் எப்படி?' என்று கேட்கிறார். மனத்திலிருந்து கவலை நீங்கினால் உடனே நல்ல தூக்கம் வரும். 'நான் அன்றைக் கொள்முதலை விற்றுக் காசாக்கிய வியாபாரி யைப்போல் சுகமாகத் தூங்கப் போகிறேன்' என்று மிருச்சகடிகத்தில் விதூஷகன் சொல்லுகிறான். சிவராமனது அன்றைத் தூக்கம் பகல் தூக்கமானாலும் நிம்மதியும் ஆச்வாசமும் நிறைந்த அற்புதமான, சுவை யுள்ள, ஆனந்தத் தூக்கம் என்பதில் சந்தேகமில்லை. 'உஷாவைப்பற்றிய வரையில் காரியங்கள் கைகூடும் கட்டத்துக்கு விரைந்து வந்துகொண்டிருந்தன, அந்தப் பொறுப்புகள் எல்லாவற்றையும் அந்திம்பேரே மேற் கொண்டது ஆச்சரியம். தன்னை மடக்க நினைத்த எதிரி இப்போது தான் கோரிய நிபந்தனைகளை நிறைவேற்றவும் சரணாகதி அடையவும் சித்தமாக இருக்கிறான். உஷா மீட் கப்பட்டாள். ராமநாதன் அவளை மணக்க அவன் தகப்பனா ரிடமிருந்து யாதோர் ஆக்ஷேபமும் எழவில்லை. அதுமட்டு மல்லாமல் ஸ்ரீ வேங்கடசுப்பையர் ராமநாதனைத் தாராள சித்தத்துடன் நல்ல ஐசுவரிய புஷ்டியுள்ள நிலைமையி லேயே விலக்கிவிடப் போவதால் தான் உஷாவுக்கு இவ்வளவுதான் கொடுத்தாகவேண்டுமென்று யாரும்

வற்புறுத்தப்போவதில்லை. அழகிரி கொடுக்க வாக்குத் தத்தம் செய்ததைக் கையிலங்கு தெறிக்கவேண்டுமானால் அவன் உடனே கொடுத்தாக வேண்டும். செல்லத்தின் கல்யாணமா? அதையுந்தான் அத்திம்பேர் தம் பொறுப்பாகப் நினைத்து பிளான் போட்டுக்கொண் டிருக்கிறாரே!

சிவராமன் நிச்சிந்தையாகத் தூங்கினார்.

கீழே கோமதியும் காந்திமதியும் செல்லத்தின் ரூமில் உஷாவுடன் சல்லாபித்துக்கொண் டிருந்தார்கள். உஷா தன் தாத்தாவுடனும் பெரியம்மாவுடனும் ஒரு வருஷமாக வசித்து வந்த தன் அநுபவங்களை வருணித்துக் கொண்டிருந்தாள். தனக்கு அந்தக் குடும்பத்தில் ஒரு படி குறைச்சலான ஸ்தானம் அளிக்கப்பட்டதையும் பத்மா தன்னிடம் தந்திரமாகப் பழகி வந்ததையும் பெரியம்மா தன் தாயாரைப்பற்றி ஒவ்வொரு சமயம் இழிவாகவும் குத்தலாகவும் வாய் கூசாமல் பேசியதையும் பற்றிக் கூறினாள். தன் பெரியம்மாள் வருகிறவர்களுடன் பேசுவது, பழகுவதுபற்றிச் சற்று ஹாஸ்யமும் செய்தாள் உஷா. அவளுக்கு அபி நயக்கலைசொல்லிக்கொடுத்து வந்த தாகத் தோன்றவில்லை. அது சகஜமாகவே இருந்ததாகத் தோன்றிற்று. அவள் பேசும் மொழிகள் பத்தென்றால் அவள் முகத்தைப் பார்த்துத் தெரிந்துகொள்ளக்கூடிய தாத்பரியம் நூறு. உஷாவின் முத்துப்போன்ற, ஒன்றிரண்டாக உதிரும், அருமையான, கொஞ்சும் குழந்தை மொழிகள் அவளுடைய அழகிய முகத்தில் ததும்பும் நவரஸ பாவங்களில் தோய்ந்து அமிர்தம்போல் இனித்தன. தன் பெரியம்மா பாக்கியலக்ஷ்மிக்கு உஷா ஒரு பெயர் கொடுத்திருந்தாள். அதைப்பற்றி அவள் சொல்லக் கேட்டு எல்லோரும் சிரித்துக்கொண் டிருந்தார்கள். அப்போது பங்களாவுக்குள் ஒரு கார் நுழைந்தது. அது வேங்கடசுப்பையர் கார் அல்ல. அவர் ஆபீசிலிருந்து வர நேரமாகும். கார் சற்று அப்பாலே நிறுத்தப்பட்டது. 'யாரோ புதிதாக வருபவர்போல் இருக்கிறது!'

அதிலிருந்து இறங்குபவர் யார் என்று கோமதி முதலியவர்கள் சற்று வியப்புடனும் ஊக்கத்துடனும் கவனித்தார்கள்.

"பெரியம்மா!" என்றாள் உஷா.

"காட்டுப்பூனையா?" என்றாள் செல்லம்.

காந்திமதி கொல்லென்று சிரித்தாள். மறு நிமிஷம் எல்லோரும் விளையாட்டுக் குணத்தை விடுத்து முகத்தில் உபசாரக் குறியை வரவழைத்துக்கொண்டார்கள். பெரியம்மாவுடன்கூட ஒருவரும் வராதது கண்டு உஷாவும் ஒளியவில்லை.

பாக்கியலக்ஷ்மி கையில் பழங்கள் நிறைந்த வெள்ளித் தாம்பாளம் ஒன்றை வெகு நிதானத்துடன் தாங்கி எடுத்துக்கொண்டு வந்தாள். கார் டிரைவர் ஒரு ஸ்டீல் டிரங்குப் பெட்டியைத் தூக்கிக்கொண்டு பின்னே வந்தான்.

இந்த அபூர்வ வரவு எதைக் குறிக்கிறதென்று ஒருவரும் நிர்ணயிக்க முடியவில்லை. ஏதாவது தன்னைக் கைப்பற்றக் கபட நாடகத்தின் ஆரம்பமாக இருக்குமோ என்று உஷா அஞ்சினாள். உள்ளே பதுங்கிவிடலாமா என்று யோசித்தாள். ஆனால் பாக்கியலக்ஷ்மியின் சிரித்த முகம், கூரிய பார்வையுடன் முதலிலேயே உஷாவை இலக்கு வைத்துவிட்டபடியால் அவள் ஓடி ஒளிந்து கொள்வது சந்தர்ப்ப விரோதமாகிவிட்டது.

சிரித்த முகத்தைச் சிரித்த முகங்கள் வரவேற்றன. பாக்கியலக்ஷ்மி முன் வாசற்படியை மிதித்ததும், "நான்தான் உஷாவின் பெரியம்மா" என்று முன்னே நின்ற பெண்களிடம் தெரிவித்துக்கொண்டாள். உஷா பின் தங்கி நின்றாள். மற்றவர்கள் வந்தவளை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றார்கள். பாக்கியலக்ஷ்மி தான் தாங்கி வந்த தட்டை ஒரு ஸோபாவின் மேல் வைத்துவிட்டு உஷாவிடம் சென்று இரண்டு கைவிரல்களையும் அவள் கன்னங்களில்

வைத்து நெரித்து, "என் கண்ணே!" என்று செல்லம் கொஞ்சி உச்சி மோந்தாள். உஷா ஒரு தரம் பெரியம்மாவை நிமிர்ந்து பார்த்துவிட்டுத் தலைகுனிந்து நின்றாள். "இவ்வளவுதானா? இன்னும் ஏதாவது உண்டா?" என்று அவள் யோசிப்பவள்போல் காணப்பட்டாள். பின்பு எல்லோரும் முன் ஹாலில் உள்ள ஸோபாக்களில் அமர்ந்தார்கள். பாக்கியலக்ஷ்மி பழத்தட்டை அங்கீகரிக்கும்படி காந்திமதியிடம் நகர்த்தினாள்.

பாக்கியலக்ஷ்மிக்குக் காந்திமதி தன் தமக்கையையும் செல்லத்தையும் அறிமுகப்படுத்தினாள்.

ராமநாதன் முகஜாடை காந்திமதிக்கு இருப்பதால் அவள் அவனுக்கு உடன்பிறந்தவள் என்று தான் முதலிலேயே ஊகித்துவிட்டதாகவும் உஷாவுக்கும் செல்லத்துக்கும் இதேமாதிரி முக அமைப்பில் ஒற்றுமை இருப்பதாகவும் பாக்கியலக்ஷ்மி வருணிக்கத் துவங்கினாள். ஆனால் ஒருவரும் செல்லத்துக்கும் உஷாவுக்கும் முகச் சாயையில் ஒற்றுமை இருப்பதாக நம்ப முடியவில்லை. மற்றவர்கள் சந்தேகப்படவே பாக்கியலக்ஷ்மி முன்னிலும் அதிகமாகப் பார்வை, புருவம், மூக்கின் அமைப்பு, முகத்தின் வட்டம், உதட்டின் ரேகைகள், பல் வரிசை முதலிய தனித் தனி அம்சங்களின் ஒற்றுமையைப்பற்றி விஸ்தரிக்கலானாள். அப்படி விஸ்தரிக்கும் அளவில் அடிக்கடி உஷாவின் முகத்தை வீணைத்தந்தியைத் தட்டுவதுபோல் விரல்களால் தட்டிக் காண்பித்தாள். பற்களைப்பற்றி நிரூபிக்கும் கட்டத்தில் உஷாவுக்கு எழுந்திருந்து ஓடிப்போய் விடலாமா என்று ஆத்திரம் வந்தது. மற்றவர்கள் சிரிப்பை அடக்கிகொண்டு சுவாரசியமாகக் கவனிப்பவர்கள் போல் அபிநயித்தார்கள்.

"இவள் என்ன உத்தேசத்தின் பேரில் வந்திருக்கிறாள்?" என்ற பிரச்னை எல்லோர் மனத்திலும் ஒரு புதிராக இருந்தது.

பாக்கியலக்ஷ்மி டிரைவர் கொண்டு வந்த பெட்டியை ஓர் ஓரமாக வைக்கும்படி அவனுக்கு உத்தரவு போட்டாள். உத்தரவிடும் குரல் கணிப்பகவும் கம்பீரமாகவும் இருந்தது. வீட்டில் வேறு யாராவது இருந்தால் அவர்களும் தன் வரவை அறிந்துகொண்டு வெளியே வரவேண்டும் என்று அவள் எண்ணியதாகத் தோன்றிற்று. மறுபடி எதையோ எடுத்துவரக் கார் டிரைவர் திரும்பிப் போன போது பாக்கியலக்ஷ்மி, "படுக்கை எங்கே?" என்று உரத்த குரலில் ஓர் அதட்டல் போட்டாள். ஏதோ திருட்டுப் போய்விட்டதாகச் சந்தேகப்பட்டுக் கூச்சல் போடுவது போல் இருந்தது, அவள் கொடுத்த தொனி.

"அதை எடுக்கத்தான் போகிறேன்" என்றான் கார் டிரைவர், இந்த விரட்டலைச் சகிக்காதவன் போல்.

உஷா பெட்டியும் படுக்கையும் தன்னுடையவை என்று தெரிந்துகொண்டாள். பொன்னுசாமிபிள்ளையுடன் பரஸ்தானம் வைக்கப்பட்ட தன் பிரயாண சாமான்கள் தன்னிடம் அப்போது சேர்க்கப்படுவதன் தாத்பர்யம் என்ன என்று அவள் யோசிக்கலானாள்.

பாக்கியலக்ஷ்மியின் வரவைச் சங்கரி அம்மாள் கவனிக்காமலில்லை. அவளுடைய தோற்றம், பேச்சு, நடவடிக்கை இவைகளினால் அவள் யார் என்று ஊகித்தறிவதிலும் அவளுக்குச் சிரமம் ஏற்படவில்லை. தான் வெளியே வந்து விசாரிக்கவேண்டிய அவசியம் ஏற்படும்வரையில் வெளியே வருவதற்குச் சம்மதமில்லாமல் உள்ளே இருந்தபடியே சங்கரி அம்மாள் கவனத்தை மட்டும் வெளியில் செலுத்திவந்தாள்.

ஆனால் மதுரப்பாட்டி அதிசயங்களை அநுபவிக்கும் ஆர்வமுடையவள். ஆதலால் வந்தவளை ஆராய்ந்தறிய ஒரு பக்கமாக வாசற்படியில் நின்றுகொண்டு காட்சியளித்தாள். பாக்கியலக்ஷ்மி மதுரப்பாட்டியைப் பார்த்ததும் அவளே வீட்டு யஜமானி என்று ஒருகணம் பிரமித்து ஆசனத்தை விட்டு எழுந்து கைகூப்பித் தலை அசைத்து மரியாதை

செலுத்த முற்பட்டாள். இதை கண்டு சுற்றி யிருந்த பெண்கள் நகைக்கவே பாக்கியலக்ஷ்மி தன் தவறுதலை உணர ஆரம்பித்தாள். அப்போது கோமதி, "அம்மா உள்ளே காரியமாக இருக்கிறாள். இந்தப் பாட்டி (மேலே சொல்லச் சற்றுத் தயங்கி) மதுரப்பாட்டி" என்று முடித்தாள்.

பாக்கியலக்ஷ்மி கடகடவென்று சிரித்து நிலைமையைச் சமாளித்துக்கொண்டு தன் ஸோபாவுக்குத் திரும்பினாள். மதுரப்பாட்டி கடுகடுத்த முகத்துடன் சரேலென்று அந்தர்த்தானமானதை அவள் கவனிக்கவில்லை. அதைக் கவனித்த மற்றவர்கள் மட்டும் வெகு நேரம் சிரித்தார்கள். உஷாவும் சப்தமில்லாமல் சிரிப்பை அடக்கிக்கொண்டு சிரித்தாள். பாக்கியலக்ஷ்மி தன் தவறுதலையே சிறு பெண்கள் நினைத்துக்கொண்டு நகைக்கிறார்களாக்கும் என்று எண்ணித் தானும் அவர்களுக்குப் பின் வாங்கக் கூடாதென்று தொடர்ந்து தொடர்ந்து சப்தம்போட்டுச் சிரிப்புப் போட்டியில் வெற்றிபெற விடாமுயற்சி எடுத்துக்கொண்டாள்.

முன்கட்டில் இவ்வளவு சிரிப்புக் கோலாகலம் நடப்பதைத் தாங்க முடியாமல் அருகையை பிடித்துச் சங்கரி உள்ளேயிருந்து முணுமுணுத்துக்கொண்டு, "கோமதி! என்னடி கூடத்தில் அமர்க்களம்?" என்று சற்று உதாசீனமும் நிராகரிப்பும் தோன்றும் குரலில் ஒன்றும் அறியாதவள்போல் ஒரு கேள்வியை ஆகாச வாணியில் அனுப்பினாள்.

* * *

காந்திமதி கோமதியை நோக்கினாள். "அம்மாவுக்கு வந்திருப்பவளைப்பற்றிச் சொல்லி மேலே நாம் நடந்து கொள்வதற்குக் கட்டளை பெற்று வா" என்று அந்தப் பார்வை அறிவித்தது.

கோமதி, "இதோ வந்துட்டேன்" என்று பாக்கிய லக்ஷ்மியிடம் விடைபெற்றுக்கொண்டு எழுந்திருந்தாள்.

"அம்மாள் ஜோலியாக இருந்தால் அவசரப்படுத்த வேண்டாம். நான் காத்திருக்கிறேன்" என்று பாக்கிய லக்ஷ்மி உபசாரம் சொன்னதன் மூலம், தான் வீட்டு யஜ மானி அம்மாளைக் காண விரும்புவதையும் குறிப்பித்தாள்.

கோமதி உள்ளே சென்றதும் சங்கரியின் கடுகடுப் புக்கு இலக்கானாள். "ஏண்டி! என்னடி, அட்ட காசம்? உங்களுக்கெல்லாம் யாரையாவது கண்டு விட்டால் தலைகால புரிவதில்லை. உன் அப்பா ஆபீசி லிருந்து வருகிற சமயம் ஆகிவிட்டது. வெட்டி வம்பு அடித்துக்கொண் டிருக்க வேண்டாம். வந்தவளைக் காரியத் தோடு பேசி அனுப்பிவிடு" என்றாள்.

"வந்தவள் என்ன காரியம் என்ற பிரஸ்தாபத்தையே எடுக்கவில்லை. உன்னைப் பார்க்கத்தான் வந்திருக்கிறாள் போல் இருக்கிறது. பழம் பாக்கு வெற்றிலை மரியாதை யுடன், பெட்டி, படுக்கை வேறு வந்து இறங்கியிருக்கிறது."

"இதேதடி சனியன்! உஷாவோடு தானும் ஜாகை பெயர்த்துக்கொண்டு இங்கே வந்துவிடப்போகிறாளா, என்ன?"

"இல்லை அம்மா! உஷாவின் பெட்டி படுக்கை சாமான்கள் தாம் வந்திருக்கின்றன. எல்லாவற்றுக்கும் நீ கூடத்துக்கு வாயேன். புரிந்து விடுகிறது. வந்தவளை எவ்வளவு நேரம் காக்க வைக்கிறது? நீ வெளியில் வருவா யாக்கும் என்று கொஞ்ச நேரம் பேச்சுக் கொடுத்துப் பொழுது போக்கிக்கொண் டிருந்தோம். நீ வராததனால் மேலே என்ன செய்வது என்று எங்களுக்குப் புரியவில்லை. அவள் உன்னைப் பார்க்காமல் போகமாட்டாள்போல் இருக்கிறது."

"நன்றாயிருக்குடி! நான் வந்து என்ன பண்ணுகிறது! மாடியில் உன் மாமா இருக்கிறான். அவனைப் போய் எழுப்பி அழைத்துக்கொண்டு வா, உன் மைத்துனி வந்திருக்கிறாள் என்று சொல்லி. நான் வரக்கூடாதடி

கோமதி, உனக்குத் தெரியாது! இன்றைக்கோ கேஸ் நடக்கிறது. அதில் எதிர்த்த கட்சியைச் சேர்ந்தவள் இவள். இவள் வந்திருக்கிறாள் என்றால் இதில் ஏதோ வஞ்சனை இருக்கிறது. நல்ல எண்ணத்துடன் இப்போப் பட்டவர்கள் வரமாட்டார்கள். அகத்தில் புருஷன் இல்லாத சமயம் பார்த்து வந்திருக்கிறாள். நான் அவளிடத்தில் பேசி ஏதாவது தத்துப்பித்தென்று உளறி வைத்தால், அவர்கள் வந்த பிறகு என்னை இந்த வீட்டில் வைக்கமாட்டார்கள். ஏதோ நம்மையெல்லாம் சந்தியில் இழுக்கத்தான் இந்த மாயாவி பழுத்தட்டுக் கொண்டு பேட்டி காண வந்திருக்கிறாள். இதில் நான் போய் மாட்டிக்கொள்ளமாட்டேன். உன் மாமாவைப் போய் எழுப்பிக் கூட்டிக் கொண்டு வா. நான் சொல்வதைக் கேள்; தாமதிக்காதே; போ உடனே மாடிக்கு. இப்படியே பின் கட்டுப் படி வழியாக ஏறிப் போ. சிவராமனை இங்கே அழைத்து வா. நானும் அவனுக்குச் சொல்கிறேன்...”

கோமதி மாடிக்குச் சென்று சிவராமனைப் பின்கட்டுப் படி வழியே கீழே அழைத்து வந்தாள். சங்கரி சிவராமனிடம் தன் சந்தேகங்களையும் பயங்களையும் பிரலாபித்தாள்.

சிவராமன் சங்கரியைத் தைரியப்படுத்தி, “அக்கா, நீயும் என்னுடன் வா. நான் அவளிடம் நேரில் பேசினதில்லை. நீ வந்தாயானால் நான் அவளுடைய நோக்கமறிந்து நடக்கவேண்டியபடி நடத்துகிறேன். நீ ஒன்றுக்கும் யோசிக்கவேண்டாம்” என்று அழைத்தான்.

சங்கரி அரைச் சம்மதத்துடன் அவன் பின்னே கூடத்துக்குச் சென்றாள். கோமதி பாக்கியலக்ஷ்மியிடம் முன்னதாகச் சென்று, “மாமாவும் அம்மாவும் வருகிறார்கள்” என்று தெரிவித்தாள். பாக்கியலக்ஷ்மி வெகு வணக்கத்துடன் எழுந்து நின்றாள்.

சங்கரி, “வாருங்கோ! இப்போதுதான் தெரிந்து கொண்டேன்; உஷாவின் பெரியம்மாவாமே?” என்று

பாக்கியலக்ஷ்மியை வரவேற்றாள். சிவராமன் ஒதுங்கி ஒரு நாற்காலியில் உட்கார்ந்தார். மற்றவர்கள் குவிந்து இரண்டு மூன்று ஸோபாக்களில் உட்கார்ந்துகொண்டார்கள். பாக்கியலக்ஷ்மி சங்கரிக்கு வணக்கம் தெரிவித்துவிட்டுச் சிவராமனைக் கண்ணோட்டத்தினால் கௌரவித்தாள். பின்பு அவள் பேசினதெல்லாம் மற்றவர்களை வியாஜமாக வைத்துக்கொண்டு சிவராமனுக்கே கண்ணோட்டத்தினால் அர்ப்பணிக்கப்பட்டது.

"நாளை விடிந்தால் நாங்கள் பம்பாய்க்குப் புறப்பட்டுப் போகிறோம். குழந்தை உஷாவைப் பார்த்துவிட்டு உங்களிடமும் தெரிவித்துக்கொண்டு போகலாம் என்று வந்தேன். உஷா ஒரு நாள் வீட்டில் இல்லாதது ஒரு யுகம் ஆகிவிட்டதுபோல் இருந்தது. வீடு வெறிச்சென்று ஆகிவிட்டது. வீட்டில் இருக்கவே எங்களுக்குப் பிடிக்கவில்லை."

"அதற்காகவா பம்பாய்க்குப் போகிறீர்கள்?" என்று கேட்டாள் சங்கரி, சிவராமனைக் கடைக்கண்ணால் பார்த்துக் கொண்டே.

"அதற்காகவென்று இல்லை. இன்று பம்பாயிலிருந்து தந்தி வந்தது. இரண்டு தினங்களுக்குமுன் ஒரு தபாலும் வந்திருந்தது."

"யாரிடமிருந்து?"

"எங்கள் பத்மாவுக்கு நாயகனாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிற சக்கரபாணி என்பவரிடமிருந்து வந்தது. அவர் தம் சினிமாக் கம்பெனியுடன் மற்றொரு சினிமாக் கம்பெனியையும் சேர்த்துக்கொள்ள நிச்சயித்திருப்பதாகவும், மேற்படி சினிமாக் கம்பெனியின் தலைமை ஆபீசைப் பம்பாயிலேயே அமைத்துக்கொள்ளப் போவதாகவும், நாங்கள் அங்கே வந்திருந்து பத்மாவின் கல்யாணத்தை முடித்துத்தர வேண்டுமென்றும் எழுதியிருந்தார். அதை அநுசரித்து உடனே புறப்படும்படி இன்று தந்தி வந்தது..."

"ஆனால் கல்யாணம் பம்பாயிலா?"

"ஆம்! ஆகையால் உஷாவின் கல்யாணத்துக்குக்கூட நாங்கள் இருப்பதற்கில்லை."

"ஏன்? ஆகாய விமானத்தில் கல்யாண தினத்தன்று வந்து இறங்கினால் போகிறது. உங்கள் விலாசத்தைக் கொடுத்துவிட்டுப் போங்கோ; நான் கடிதம் போடச் சொல்லுகிறேன். அவசியம் நீங்கள் வரவேண்டும்."

"விலாசம் இதுதான்: 'கேர் ஆப் டைரக்டர் மனோரமா அண்ட் ராஜீவ் டாக்கீஸ் யுனைடெட்; பாம்பே' என்று எழுதினால் போதும்."

"நீங்கள் யார் யார் பிரயாணம்?"

"கல்யாணப் பெண் பத்மா, பெண்ணின் தாயாராகிய நான், கார்டியன் முறைமையில் கையெழுத்திட என் தகப்பனார். நாங்கள் மூன்று பேர்கள்தாம். குழந்தை உஷா வந்தால் அவளையும் அழைத்துப்போகலாம் என்று உத்தேசம். 'உஷா இல்லாமல் எனக்குக் கல்யாணமே வேண்டாம்' என்று பத்மா பிடிவாதம் பிடிக்கிறாள். உஷாவுக்கும் தன் கல்யாணத்துக்குப் பத்மா வரத்தான் வேண்டும் என்று ஆசை இருக்கும். அக்கா தங்கைகளுக்குக் கல்யாணம் என்றால் ஒருவர் இல்லாமல் ஒருவருக்கு நடக்கவே கூடாது. இவர்களின் தாத்தா இரண்டையும் ஒரே தினத்தில் மதராஸிலேயே சேர்த்து நடத்திவிடுகிறதென்றுதான் சங்கல்பித்திருந்தார். அதற்குள் இவ்வளவு எதிர்பாராத மாறுதல்கள் ஏற்பட்டுவிட்டன. உஷாவை இப்போது எங்களுடன் அனுப்பினால் கல்யாணம் ஆனவுடன் அவளை நாங்கள் கொண்டுவந்து விட்டுவிடுகிறோம்."

"பத்மா கல்யாணத் தேதி என்ன?"

"அங்கே போய்த்தான் தெரிய வேணும்."

"உஷா கல்யாணம் இன்னும் பதினைந்து நாட்களுக்குள் நடந்துவிடுமென்று தெரிகிறது. அதற்கு நீங்கள் பத்

மாவை அழைத்துக்கொண்டு வந்தீர்களேயானால் போகும் போது உஷாவைப் பத்மா கல்யாணத்துக்கு அழைத்துப் போகலாம்.'' இந்த ஷாராவைச் சேர்த்துவிட்டுச் சங்கரி சிவராமனைத் திரும்பிப் பார்த்தாள். சிவராமன் மிகுந்த முகமலர்ச்சியுடன் கன்னம் உப்பப் புகையிலையை மென்று கொண்டிருந்தார்.

''நீங்கள் சொல்வது நியாயந்தான். இன்று இரவு எங்கள் அப்பாவும் மாமாவும் வருவார்கள், ஐயா அவர்களைப் பார்ப்பதற்கு அப்பாவிடம் அப்படியே செய்யச் சொல்லுங்கள். உங்கள் வார்த்தையை அவர் மீறி நடக்கமாட்டார். ஆனால் உஷா கல்யாணத்தை நீங்கள் ஒத்தி வைத்துக்கொண்டால் நன்றாயிருக்கும் என்று நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். தமக்கைக்கு விவாகம் ஆகித்தானே தங்கைக்கு நடக்க வேணும்?''

''ரிஜிஸ்டர் மாரியேஜுக்குக்கூடவா தர்ம சாஸ்திரம்?'' என்றாள் சங்கரி தன்னை அறியாமல்.

சிவராமன் புகையிலை வாயுடன் எவ்வளவு சிரிக்க முடியுமோ அவ்வளவு சிரித்துவிட்டுத் தாவாக் கட்டையைச் சூரியனைப் பார்க்கும் ஒணான்போல் மேலே தூக்கிக் கொண்டு வெகுண்டையாகப் பேசலானார்.

''புருஷனைவிடப் பெண்ணுக்கு வயது அதிகமாயும் இருக்கலாம். வெள்ளைக்காரர்களுக்குள் பிரசித்திபெற்ற ஷேக்ஸ்பியர் மகாகவியும் சிறந்த வித்வானான ஸாமுவல் ஜான்ஸன் என்றவரும் தங்களுக்குப் பல வருஷங்கள் மூத்தவர்களான ஸ்திரீகளையே விவாகம் செய்துகொண்டார்கள்.''

''குலம் கோத்திரந்தான் பார்க்க வேண்டியதில்லை?'' என்று சங்கரி அந்த வெகுண்டையைத் தொடர்ந்தாள்.

''பர்வியாவில் பண்டைக் காலத்தில் இருந்த ஒரு அரச பரம்பரையில் ஸகோதரியைத்தான் விவாகம்

செய்துகொள்வது வழக்கமாம்'' என்றாள் ஆறாம் கிளாஸ் வரையில் படித்த கோமதி.

பாக்கியலட்சுமி புன்னகை பூத்த முகத்துடன் இந்தச் சம்பாஷணையை ஆமோதித்தாள்.

''குறவன், தொம்பன் முதலிய ஜாதிகளில் இன்னும் எவ்வளவோ விசித்திரமான விவாக சம்பந்தங்கள் உண்டு. எல்லாவற்றையும் ஆலோசித்தால் உயர்ந்த பண்பாடு உள்ள நாகரிகத்தில்தான் விவாக சம்பந்தமான வரம்புகள், நிபந்தனைகள் அதிகமாயிருப்பதாகத் தெரிகிறது. அவை தளரத் தளர மட்ட ரகமான நாகரிகத்தின் அறிகுறிகள் தோன்றுகின்றன'' என்று உபந்நியசிக்கலானார் சிவராமன்.

பாக்கியலக்ஷ்மிக்கு இந்தத் தத்துவ விசாரத்தில் கலந்துகொள்ளப் பிரியமில்லையாதலால் சிவராமன் பேசி முடிந்தபின் தான் வந்த காரியத்தைப்பற்றிய பேச்சை மறுபடி தொடர்ந்தாள்.

''உஷாவின் புடைவைகள், நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் எல்லாம் இந்தப் பெட்டியில் இருக்கின்றன. அவைகளை உங்களிடம் ஒப்பித்துவிட்டுப் போகவேண்டுமல்லவா? இதோ அவள் பெட்டிச் சாவி (உஷா சாவியை வாங்கிக்கொண்டாள்). நீ சாப்பிடும் வெள்ளிப் பிளேட்டும் இதில் இருக்கிறது; படுக்கையையும் எடுத்து வந்துவிட்டேன். அதற்குள் சால்வை இருக்கிறது; (உஷா தலை யசைத்தாள்). உஷாவின் கல்யாணத்தை உத்தேசித்து அவள் தாத்தா அவளுக்கு ஓர் உயர்ந்த ஸில்க் புடைவை எடுத்திருக்கிறார். அவர் வரும்போது அதைக் கொண்டு வருவார். (உஷா தன் கழுத்தில் இருந்த ஓர் இரட்டை வடம் சங்கிலியைத் தொட்டுப் பார்த்துக்கொண்டாள்). இந்தச் சங்கிலியும் வெள்ளிப்பிளேட்டும் உன் விவாகத்துக்கு நான் கொடுத்த சீராக இருக்கட்டும். இரண்டையும் நீயே வைத்துக்கொள்...''

இவ்விதமாகப் பாக்கியலக்ஷ்மியின் சம்பாஷணை இறுதிக் கட்டத்தை அடைந்துகொண்டிருக்கும்போது அதைத் துரிதப்படுத்தவே, "நீங்கள் எல்லோரும் வீட்டைப் பூட்டிக்கொண்டு புறப்படப் போகிறீர்களாக்கும்? பத்மா கல்யாணம் ஆனதும் திரும்பி வந்துவிடுவீர்கள் அல்லவா!" என்று சங்கரி வினவினாள்.

"பத்மா பம்பாயில் வசிக்கப்போவதால் நான் மட்டும் இங்கே என்ன செய்யப்போகிறேன்? அவளுடன் நானும் பம்பாய்க்குப் போகவேண்டியதுதான். நான் இல்லாவிட்டால் அப்பா இங்கே தனியே இருந்து என்ன செய்கிறது? அவரும் பம்பாய்க்கு வந்துவிட வேண்டியதுதான். மேலும், சக்கரபாணி அவரை அவசியம் தம்முடன் வந்து வசிக்கவேண்டுமென்று வற்புறுத்துகிறார். இவர் கூட இருந்தால் அவர் தொழில் அபிவிருத்திக்கு மிகுந்த உதவியாக இருக்கும் என்று அவர் நினைப்பது சகஜந்தானே?

"அப்படியானால் இனி நீங்கள் இந்தப் பக்கம் வருவதே துர்லபந்தான்போல் இருக்கிறது?"

"ஆமாம்."

"அப்போது வீட்டை என்ன செய்யப் போகிறீர்கள்?"

"அதைச் சொல்லுவதும் ஒரு முக்கியமான காரியந்தான். வீடு என் பேரில் இருக்கிறது."

"அதை விற்றுவிட உத்தேசமோ!

"விற்கும் உத்தேசமில்லை. நமக்கு வேண்டியவர்களிடம் ஒப்பித்துவிட்டுப் போக உத்தேசம்."

"ஓகோ! நல்ல குடியாகப் பார்த்து வைக்கலாம் என்று உத்தேசம்போல் இருக்கிறது?"

"இல்லை இல்லை. எனக்கு இதன் வாடகை வந்து என்ன ஆகவேணும்?"

"பின்னே?"

"உஷா அதிலிருந்து குடித்தனம் பண்ணட்டும் என்று தெரிவித்து உங்கள் அநுமதியைப் பெறவே நான் இங்கே வந்தேன். காலக்கிரமத்தில் அந்த வீடு உஷாவுக்குத்தான் என்று சங்கல்பித்துவிட்டேன். என் மாப்பிள்ளைக்குப் பம்பாயில் அநேகம் பங்களாக்கள் இருக்கின்றன. மதராஸிலேயே அவருக்குப் பிதுரார்ஜித வீடு இருக்கிறது. ஆகையால் பத்மா இந்த வீட்டை நான் எது செய்தாலும் தடை சொல்லப் போவதில்லை. இந்தத் தாயில்லாக் குழந்தைக்குத்தான் அந்த வீடு இருக்கட்டுமே என்பது என் உத்தேசம். அப்பா உஷாவுக்கு நன்கொடையாக ரூபாய் ஐயாயிரம் கொடுக்க முன்னதாகவே தீர்மானித்துவிட்டார். அந்தத் தீர்மானத்தை உங்கள் தம்பியிடமும் தெரிவித்திருக்கிறார். (சிவராமன் இந்த இடத்தில் சிரித்துக்கொண்டு தலையாட்டினார்). இன்று இரவு ஐயா அவர்களைக் காண வரும்போது அப்பா மேற்கண்ட ரூபாய் ஐயாயிரத்துக்கு ஒரு செக்கையும், உங்கள் பிள்ளை பேரில் ஏற்கனவே எழுதப்பட்ட ஓர் ஆயிர ரூபாய்ச் செக்கையும் குழந்தை கல்யாணத்துக்காக மற்றச் சீர்களையும் எடுத்துக்கொண்டு வருவார். அவர் பணம் கொடுப்பது போதாதுதான். அதற்காகவேதான் நான் என் வீட்டைக் குழந்தை உஷாவுக்கு இனாம் சாஸனமாக எழுதிக் கொடுத்துவிட உத்தேசித்திருக்கிறேன். அப்பாவையும் மாப்பிள்ளையையும் ஒரு வார்த்தை கேட்டுவிட்டுத் தஸ்தாவேஜி ஏற்படுத்துகிறேன். அதன் மத்தியில் நாளைக்கே விவாகமானதும் தனிக்குடித்தனம் செய்ய உஷா அந்த வீட்டுக்கு ஜாகை வந்துவிட்டாளானால் எனக்குப் பரம திருப்தியாக இருக்கும். எங்கள் சாமான்களில் அவசியமானவற்றை நாங்கள் சௌகரியப்பட்டபோது பம்பாய்க்கு எடுத்துச் செல்கிறோம். உஷாவிடம் நாளைக்கே வீட்டை ஒப்பித்துவிட்டு ஊருக்குப் புறப்பட்டால் என் மனத்துக்கு நிம்மதியாக இருக்கும். இதற்கு நீங்கள் அநுமதி தர வேண்டும்."

சங்கரி இந்த வேண்டுகோளுக்குப் பதில் சொல்லும் பொறுப்பைத் தான் திடீரென்று எப்படி ஏற்றுக்கொள்வது என்று சற்றுத் தயங்கினாள்.

அப்போது சிவராமன் பேசினார்.

"கொடுப்பவர்கள் உலகத்தில் அரிதே ஒழிய வாங்கிக் கொள்ளத் தயாராக இருப்பவர்கள் அரிதல்ல. நியாயமான இந்த ஏற்பாட்டை அத்திம்பேர் அங்கீகரிப்பார் என்பதில் ஐயமில்லை. ஆனாலும் சம்மதம் என்ற முடிவான வார்த்தை அவர் வாயிலிருந்து வரவேண்டும். அவர் முத்திரை வைக்கவேண்டிய இடத்தில் வெறும் கிறல் பேர்வழிகளான நாங்கள் பேனா நாட்டினால் அது முறையாகுமா? இரவு அழகிரி வந்து இந்த விஷயத்தைத் தெரிவித்துக்கொண்டாரேயானால் சந்தேகம் தீர்ந்துவிடும். ஏதாவது வீடு விலைக்கு வந்தாலும் உஷா பேரில் அதை வாங்கிவிடலாம் என்று அத்திம்பேர் சொல்லிக்கொண்டிருந்தார். ஏனென்றால் ராமநாதனுக்கு வாங்கப்போகிற அச்சாபீஸிலேயே குடியிருப்பதில் சில அசௌகரியங்கள் உண்டு."

"சொந்த வீடு இருக்கும்போது ஏன் சிரமப்பட வேண்டும்? அப்படியே சொல்லி ஏற்பாடு செய்து விடுங்கள். திறவுகோலை இங்கேயே கொடுத்துவிடுகிறேன். சரி, நான் போய் வரட்டுமா? டாக்ஸிக்காரன் முணுமுணுக்க ஆரம்பித்துவிடுவான்" என்று சொல்லிக் கொண்டு பாக்கியலக்ஷ்மி எழுந்திருந்தாள். கோமதி தாம்பாளத்தில் பழம், பாக்கு வெற்றிலை எடுத்து வைத்தாள். சங்கரி அதைப் பாக்கியலக்ஷ்மியினிடம் கொடுத்தாள். பாக்கியலக்ஷ்மி சந்தோஷமாகத் தாம்பாளத்தைப் பெற்றுக்கொண்டு உஷாவைத் தழுவி முத்தமிட்டு உச்சி மோந்து ஆச்வாசப்படுத்திவிட்டுக் காரில் ஏறிக்கொள்ள நகர்ந்தாள். எல்லோரும் எழுந்து அவளை வழி கொண்டு விட்டனர். சிவராமனும் புகையிலை நீரை உமிழ்வதற்குப் போகிற ஜாடையாக வெளி வராந்தா வரையில் அவளைப் பின் தொடர்ந்தார்.

பாக்கியலக்ஷ்மியின் ஔதாரித்தனமும் அவள் கொண்டு வந்த நற்செய்திகளும் எல்லோருக்கும் அவளிடம் மதிப்பையும் அன்பையும் அதிகரிக்கச் செய்தன. அவள் வரவைப்பற்றி அவதூறான ஹேஷ்யங்கள் செய்தவர்களின் மனம் வெட்கி வேதனையடைந்தது. இருந்தாலும் அவள் போன பிறகு கூடிய மீட்டிங்கில் எல்லாம் கேலிக் கூத்து என்று சொல்லி நகைத்தவர்கள்தான் மெஜாரிடியாக இருந்தனர். உஷாவைக் கடைசி முறையாகப் பத்மா கல்யாணத்தைச் சாக்கிட்டு அழைத்துப் போய் மறுபடி அடிமைப்படுத்தவே அவள் இந்திர ஜாலமாகப் பேசினதாகத் தீர்மானம் மெஜாரிடியால் நிறைவேற்றப்பட்டது.

ஆனால் பாக்கியலக்ஷ்மி சொன்னது ஒன்றும் பொய்யல்ல. அழகிரி கைதியாக்கப்பட்டதிலிருந்து அவளுக்கு, 'தன் வினை தன்னைச் சுடும்' என்ற முதியவர் மொழி மெய்தான் என்பது புலனாயிற்று. நற்குணங்களை மேற்கொள்ள அவள் ஆவலடைந்தாள். மேலும் சக்கரபாணி தன் மருமகனாகப்போகிறான் என்பது நிச்சயமானதிலிருந்து அவளுக்கு ஒரு பெருந்தன்மை உதிக்கலாயிற்று. பணத்தை லட்சக்கணக்கில் போட்டுப் புரட்டி லாபத்தையும் லட்சக்கணக்கில் எதிர்பார்க்கும் டைரக்டர் சக்கரபாணிக்கு மாமியாராக இருப்பதற்குப் பொருத்தமாக வேண்டுமேயானால் தான் கொஞ்சம் நிமிர்ந்து நின்று ஔதாரித்தனத்துடன் உலகத்தைப் பார்க்கவேண்டும் என்பதை உணர்ந்தாள்.

ஏராளமான ஐச்வரியம் கிடைத்துவிட்டால் சிலருக்கு ஆச்ரிதர்களை ரக்ஷிக்கவும் பலருடைய நன்றியைப் பெறவும் பொதுப்பட்டவர்கள் கொண்டாடத்தக்க வழியில் செலவுகள் செய்யவும் ஆர்வம் ஏற்படுவது சகஜம். அதில் தன் பெருமை கொஞ்சம் கலந்திருந்தாலும் அல்லது அதுவே அடிப்படையான தூண்டுதலாக இருந்தாலும் குற்றமில்லை. நல்ல காரியம் நடைபெறுவதாக இருந்தால் அதன் வேரைக் கல்லி நாம் விசாரிக்க வேண்டிய அவசியம்

இல்லை. அதன் அதிருஷ்டமான பலாபலன்கள் கர்த்தாவைச் சேர்ந்தவை. திருஷ்டமான ஸாதகங்கள் உலகத்தைச் சேர்ந்தவை. அவைகளை மட்டும் நாம் ஆமோதிப்பதுடன் நின்றுவிடுவது மேல். தான் ஐசுவரியவான், எதையும் சாதிக்க வல்லமை உள்ளவன், செல்வாக்கு மிகுந்தவன், ஒருவனைத் தூக்கிவிடவோ தொலைத்து விடவோ சுதந்தரமுடையவன் என்பதை எல்லாம் உலகமறிய வெளிப்படுத்த வேண்டுவானேயானால் தனவந்தன் விரிவாகவும் ஆடம்பரமாகவும் சில செலவுகள் செய்துதான் ஆகவேண்டும். அவை மூலம் சிலருக்கு நன்மை உண்டாவது நிச்சயம். இந்தக் குணத்தை நாம் ஏற்றுக்கொள்ளாமல் இருக்க முடியாது. அந்த அளவுக்குத் தனவந்தர்கள் கீர்த்தியையும் பலர் நட்பையும் சம்பாதித்துக்கொள்கிறார்கள். உரத்துப் பேசச் சக்தியில்லாத ஒரு சாரார் அவர்களின் கொடுமைகளைப் பொறுக்க மாட்டாமல் சபித்துக்கொண்டிருந்தால் என்ன ?......

தன் பெருமையை ஒளித்து வைத்து நற்கருமம் செய்பவர்களைவிட இந்தக் கலிகாலத்தில் தன் குற்றத்தை ஒளித்து வைத்து மேல்பூச்சாக ஜகம் மெச்சும் உதாரத் தன்மையைப் பிரகடனம் செய்பவர்களே பெரும்பான்மையோர்.

'பசுவைக் கொன்று செருப்புத் தானம் செய்வது போல்' என்பது ஒரு பழமொழி. பரலோகத்தை நம்பாதவர்கள்கூட ஒரு அபக்கியாதியை அழிக்கக் கீர்த்தி தரக்கூடிய ஒரு நற்காரியத்தை ஆடம்பரமாகச் செய்து சமாதானம் அடைவார்கள். மேற்குணங்களை எதிர்பார்க்கக் கூடாத இடத்தில் சில சமயம் அரிதான மேற்குணங்கள் எழுந்து ஒளிவீசுகின்றன. லோகத்தில் மேல்தோற்றத்தை நீக்கி உள்தத்துவத்தை ஊன்றிப் பார்க்கும் மதியூகிகள் மிகச் சிலரே. அம்மதியூகிகள் மட்டும் குணமுள்ள ஆவரணத்தின் கீழ் நிலைத்திருக்கும் துர்க்குணங்களை உள்ளங்கை நெல்லிக் கனிபோல் கண்டுகொள்வார்கள். இவ்விதமாகவே

லோபத்தை ஊதாரித்தனமும், இச்சையை வைராக்கியமும், இகழ்ச்சியை ஸ்துதியும், சுயநலத்தைத் தியாகமும், பாபத்தைப் புண்ணியமும், கொடூரத்தைத் தயவும், வைரத்தை நட்பும், அஞ்ஞானத்தை விக்ஞானமும், மூர்க்கத்தனத்தைச் சாந்தமும், சித்த சபலத்தை விரதாநுஷ்டானமும் ஆவரணமாக இருந்து மறைத்து உலகத்தின் கண்ணெதிரே கண்ணியமான லீலைகள் புரிவது வழக்கம்.

தனலட்சுமியின் கடைசிக் காலத்தில் அவளைத் தமக்கையும் தகப்பனும் அநுதாபத்துடன் அணுகினார்கள். அவள் பிழைப்பது சந்தேகம் என்று தெரிந்ததும் அவளுக்குப் பிற்காலம் குழந்தை உஷாவைச் சம்ரக்ஷித்து நல்ல நாயகனிடம் ஒப்பிக்கும் பொறுப்பை அவர்கள் ஏற்றுக்கொண்டார்கள். தனலக்ஷ்மி தன் ஜீவகாலத்தை ரூபாய் ஐயாயிரத்துக்கு இன்ஷ்யூர் பண்ணியிருந்தாள். தஸ்தாவேஜியை உஷாவுக்குக் கார்டியன் முறையில் அவள் அழகிரிக்கு அதிகாரம் அளித்து மாற்றிக் கையொப்பமிட்டுக் கொடுத்தாள். தன் நகைகள் வெள்ளிப் பாத்திரங்கள் முதலிய, ரூபாய் பதினாயிரத்துக்குமேல் பெறுமான முள்ள இனங்களையும் அழகிரியிடம் ஒப்பித்தாள்.

தனலக்ஷ்மி காலமான பிறகு அழகிரி இன்ஷூரென்ஸ் பணம் ஐயாயிரத்தையும் வசூல் செய்து தன் பெயரில் பாங்கில் போட்டு வைத்துக்கொண்டார். உஷாவுக்குத் தன் தாயார் நகையாகக் கிடைத்தவை சுமார் இரண்டாயிரம் பெறுமானமுள்ள இனங்கள்தாம். இந்த ஒரு வருஷ காலத்துக்குள் கதிர்வேல் ஆசாரி பாக்கியலக்ஷ்மியின் மேல்பார்வையில் அநேக நகைகளை மாற்றி அமைத்து இடைவிடாது அவள் வீட்டில் வேலை செய்துகொண்டிருந்தான். பத்மாவும் பாக்கியலக்ஷ்மியும் அநேக புது ஆபரணங்களைப் பூண்டுகொண்டார்கள். உஷா தெய்வமே துணை என்று போட்ட சாதத்தைச் சாப்பிட்டுக்கொண்டு இட்ட வேலையைச் செய்துகொண்டு தாத்தா, பெரியம்மா ஸம்ரக்ஷணையில் காலம் கடத்தி வந்தாள்.

அன்று வேங்கடசுப்பையர் ஆபீஸிலிருந்து வீடு வரும்போது ராமநாதனும் அவருடன் கூடவே காரில் வந்தான். கோர்ட்டு விவகாரம் ராஜிப்பேச்சில் முடிந்தது. அழகிரி உஷாவுக்கு ரூ. 5000-மும் ராமநாதனுக்கு ரூ. 1000-மும் கொடுத்துவிட்டால் கேஸை வாபஸ் வாங்கிக்கொள்வதாக ராமநாதனின் வக்கீல் அழகிரியின் வக்கீலுக்கு உறுதி கூறினார். இந்தச் சம்மதத்தின் பேரில் கேஸ் பைஸல் செய்யப்படுவதற்காக மறுநாளைக்கு ஒத்திப் போடப்பட்டது.

இரண்டு குற்றவாளிகளும் தக்க ஜாமீன்களின் பேரில் விடப்பட்டனர்.

இரவு பொன்னுசாமி பிள்ளை வேங்கடசுப்பையரைக் காண வந்தார். தாமே நேரில் வரமுடியாததற்குப் பல காரணங்களை அழகிரி சொல்லி யனுப்பியிருந்தார். பொன்னுசாமி பிள்ளையிடமிருந்து, ஐயர் அநுமதியின்பேரில் சிவராமன் ரூபாய் ஐயாயிரத்துக்கு ஒரு செக்கையும், ராமநாதன் ரூபாய் ஆயிரத்துக்கு ஒரு செக்கையும் முறையே பெற்றுக்கொண்டார்கள். பின்பு உஷாவின் விவாகத்துக்கு வெகுமதியாக அனுப்பப்பட்டிருந்த பட்டுப் புடைவை முதலியவற்றை உஷாவிடம் கொடுத்துவிட்டுப் பொன்னுசாமிபிள்ளை எல்லாரிடமும் விடை பெற்றுக்கொண்டு வீடு சென்றார்.

இதன் மத்தியில் ஹைஸ்கூல் ஹெட்மாஸ்டர் வந்திருந்தார். அவரிடம் ஐயர் சி. முத்துசாமியின் ஜாதகத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்தார். 'நான் அவன் ஜாதகத்தை வரவழைத்து வைத்திருக்கிறேன். நாளை அதற்கு ஒரு காபி எடுத்துத் தங்களுக்கு அனுப்புகிறேன்' என்று ஹெட்மாஸ்டர் ஐயரிடம் தெரிவித்துக்கொண்டார். ஐயர் தன் மைத்துனன் பெண் செல்லத்துக்காக அந்த வரனை உத்தேசித்திருப்பதாகவும், ஜாதகம் பொருத்தமாக இருந்தால் சிவராமனை நேரில் முத்துசாமியின் உறவினர்களிடம் அனுப்பி விவாக நிச்சயம் செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளப்போவ

தாகவும் ஹெட்மாஸ்டரிடம் சொன்னார். ஹெட்மாஸ்டர் முத்துசாமியின் குணங்களையும் யோக்கியதையையும் வாயார ரப் புகழ்ந்தார். பல கன்னிகைகளுக்குப் பிதாவும் கார்டியனுமான அவருக்குத் தான் குறிவைத்திருந்த வரனை வெகு லேசாக வேறொருவர் அடித்துக்கொண்டு போவதில் ஏமாற்றம் இருந்தாலும் அதை அவர் வெளிப்படையாகக் காண்பித்துக்கொள்ளாமல் உத்சாகத்தையே அபிநயித்துக் கொண்டு தம்மால் இயன்ற மட்டும் மேல் ஆக வேண்டியதற்கு உதவியாக இருப்பதாக வாக்குத்தத்தம் செய்தார்.

மறுநாள் பொழுது காரிய சித்திக்கென்றே விடிந்தது போல் இருந்தது. முதலில் பாக்கியலக்ஷ்மியின் வீட்டு வேலைக்காரி வீட்டுத் திறவுகோலை உஷாவிடம் கொடுக்க வந்தாள். அழகிரி முதலியவர்கள் பம்பாய்க்குப் புறப்பட்டுப் போய்விட்டார்கள். பொன்னுசாமியின்னையும் தம் ஊருக்குப் பிரயாணமானார். உஷா வசிப்பதற்காக வீடு அவள் வசம் விடப்பட்டது. உஷா அங்கே வந்து எப்போதும்போல் வசிப்பதானால் வேலைக்காரி தானும் துணைக்கு இருப்பதாகத் தெரிவித்துக் கொண்டாள். இந்த விருத்தாந்தம் எல்லோருக்கும் மிகுந்த திருப்தியை அளித்தது. பாக்கியலக்ஷ்மி மதிப்புக்கு உரியவள் என்று எல்லோரும் ஏகமனதாக ஒப்புக் கொண்டார்கள். சிவராமன் உஷாவை ஜாகைகொண்டு போய் வைக்க நியமிக்கப்பட்டார்.

முத்துசாமியின் ஜாதகம் கைக்கு வந்ததும் செல்லத்தின் ஜாதகத்துடன் அது ஜோஸ்யரிடம் அனுப்பப்பட்டது. ஜோஸ்யரின் தீர்ப்பு மங்களகரமாகவே இருந்தது. முத்துசாமியின் தாயாரையும் உறவினரையும் கண்டு கல்யாணப் பிரஸ்தாபங்களைச் செய்யச் சிவராமன் அன்று இரவே புறப்படவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

ராமநாதன் அழகிரியின் பேரில் தான் கொடுத்திருந்த பிராதை வாபஸ் பெற்றுக்கொண்டான்.

ரூ. 5000 க்கு அழகிரி கொடுத்திருந்த செக் உஷா வுக்காகக் கார்டியன் முறைமையில் சிவராமன் பேரில் பாங்கில் கட்டப்பட்டது. ராமநாதனுக்கு அழகிரி கொடுத் திருந்த ஆயிர ரூபாய் செக் பாங்கில் வேங்கடசுப்பையர் கணக்கில் கட்டப்பட்டது.

வேங்கடசுப்பையர் சியாமளாம்பாபுரம் மணி சாஸ் திரிகளுக்கு அவருடைய டிராப்டு பணத்தை மறுபடி ஒரு டிராப்டு மூலமாகவே திருப்பி அனுப்பிச் சமாதானமாக ஒரு கடிதமும் எழுதினார்.

சேஷு சாஸ்திரிகளுக்கு ஐயர் அவர்கள் அன்று எழு திய கடிதத்தில் சீதாராமனை உடனே புறப்பட்டு வரச் செய்யும்படி வற்புறுத்தினார்.

# 11
# ரிஜிஸ்டர் விவாகங்கள்

காரியங்களின் சுறுசுறுப்பினால் காலம் விரைந்து செல்வதுபோல் காணப்பட்டது.

ராமநாதனுக்காக உத்தேசிக்கப்பட்டிருந்த அச்சாபீஸ், வீடு முதலியவற்றின் கிரயசாஸனம் இரண்டொரு தினங்களில் முடிவு பெற்றது. அவனுடைய ரிஜிஸ்டர் விவாகத்தை முன்னிட்டு அவனுக்கு ஒதுக்கப்பட வேண்டிய ரொக்கத் தொகையையும் ஐயர் அவர்கள் திரட்டி ஒன்று சேர்த்துப் பாங்கில் தயாராக வைத்தார்.

சீதாராமனும் ஐயர் லெட்டரைப் பார்த்ததும் புறப்பட்டுச் சென்னை வந்து சேர்ந்தான். அவன் எப்போதும்போல் அந்த வீட்டுக்கு உரியவனாகவே எல்லோராலும் வரவேற்கப் பட்டான். சீதாராமன் தன் படிப்பைத் தொடர்ந்துகொண்டான். ராமநாதனின் படிப்பைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை. அவன் வாழ்க்கைப்பொறுப்புள்ளவனாக ஆகிவிட்டான். உஷா தனி ஜாகை போனதிலிருந்து அவன் விவாகப் பதிவுக்கு நாட்களைக் கணக்குப் பண்ணிக்கொண்டிருந்தான். ராமநாதன் தன் சிக்கல்களிலிருந்து அநாயாசமாக வெளியேறினதுமல்லாமல் ஸகல மனோரத பலிதத்துடன் வெற்றிகரமாக விளங்குவதைக் கண்டு சீதாராமன் அவனை, "ராமநாதா! நீ எப்படியும் அதிருஷ்டசாலிதான்!" என்று கூறிப் பெருமைப்படுத்தினான். அவர்களிடையே பழைய சிநேகம் ஊற்று ஜலம்போல் இயல்பிலேயே பெருகியது.

காந்திமதிக்குச் சித்திரை முதலில் முகூர்த்தம் குறிப்பிடப்பட்டது. சம்பந்திகளும் சம்மதிக்கவே கல்யாணக் காரியங்கள் மும்முரமாக நடக்கத் துவங்கின. செல்லத்தின் விவாகப் பிரயத்தனமும் ஸபலமாயிற்று

சிவராமன் நிச்சயப் பாக்கு வெற்றிலையைச் சம்பந்திகளிடம் வாங்கிக்கொண்டு தம் சம்சாரத்துடன் பட்டணம் வந்து சேர்ந்தார். முத்துசாமி ஹெட்மாஸ்டர் வீட்டிலேயே இருந்து மீதியுள்ள ஒரு மாதத்தையும் தள்ளிவிடப் பிரியப்பட்டதால் சிவராமன் அவனை அடிக்கடி போய் விசாரித்து வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்துக்கொண் டிருந்தார்.

முதல் முதல் உஷாவுக்கும் ராமநாதனுக்கும் பதிவு விவாகம் மாசி மாதத்திலேயே நடந்தேறியது. சிவராமன் உஷாவுக்குக் கார்டியனாகக் கையொப்பமிட்டார். கோபிநாத் ஒரு சாட்சி; மற்றொரு சாட்சி வக்கீல் விசுவநாதையர். சீதாராமன் மாப்பிள்ளைத் தோழனாகப் பிரஸன்னமாக இருந்தான். ஆடம்பரமற்ற விவாகச் சடங்கு! கொண்டாட்டம் மிதமானது! அதில் கலந்துகொண்டவர்களுக்குப் பரிசாரகர்களைக் கொண்டு அன்றிரவு உஷாவின் கிருகத்தில் ஒரு விருந்து ஏற்பாடு செய்யப்பட்டது.

ராமநாதன் உயரிய தோரணையில் தன் தனி வாழ்க்கையைத் துவக்கினான்.

அடுத்தபடியாகப் பத்மா சக்கரபாணி விவாகம் பம்பாயில் நடந்தது. அதைப்பற்றிய அறிக்கை தபால் மூலம் வந்ததும் மிஸஸ் உஷா ராமநாதன் பத்மாவுக்குத் தன் மனப் பூர்வமான ஆமோதிப்பைத் தந்தி மூலம் தெரிவித்துக்கொண்டாள்.

* * * *

காலேஜ் லெக்சரர் சர்மா ஹாஸ்டலுக்குக் குடி போய்விட்டாலும் கமலியை மறக்கவில்லை. கமலி, சூரிய நாராயண ஐயரின் மூத்த சம்சாரத்தின் பெண். குழந்தைப் பருவத்திலேயே தாயை இழந்தவள். சூரிய நாராயணையரின் இரண்டாவது சம்சாரம் கீழ்ப்பட்ட நிலைமையிலிருந்து சம்பத்துள்ள குடும்பத்துக்கு எஜமானி

யானதும் தன்னுடைய அற்ப புத்தியையும் கொடூரங்களையும் கமலியின் விஷயத்தில் வெளிக்காட்டி ஒரு துர்த்தேவதைபோல் அந்தக் குழந்தையை ஆட்டிவைத்தாள். சூரியநாராயண ஐயர் தாம் மறு விவாகம் செய்து கொண்டதுபற்றி மிகவும் வருந்தினார். ஆனால் இளையவளுக்குப் பிள்ளைகளும் பெண்களும் வரிசையாக உண்டாகவே ஐயர் அவளை அடக்கியாள முடியாதவரானார். கமலிக்கு விவாகத்தைப் பண்ணிப் புக்ககம் அனுப்பிவிட்டால் கவலை தீரும் என்று அவர் நம்பியிருந்தார். நல்ல வரனைத் தேடி நன்றாகச் செலவு செய்து அவளை விவாகம் செய்து கொடுத்தார். ஆனால் கமலியின் விஷயத்தில் தெய்வ ஸங்கல்பம் மாற்றாந்தாயினுடையதைவிடக் கோரமாக இருந்தது. அவள் மணாளன் விவாகமான இரண்டு வருஷங்களுக்குள் பரலோகம் சென்றான். கமலி வீட்டுக்கு வந்தது முதல் சூரியநாராயண ஐயருக்குச் சுகமில்லை. கல்லும் கரையும் பரிதாபத்துக்கு உள்ளான கமலியிடம் மாற்றாந்தாய் நிர்த்தாட்சிண்யமான சத்ரு பாவனையையே காட்டி வந்தாள். குழந்தைகள்கூடக் கமலியை உதாசீனம் செய்தன. சூரியநாராயண ஐயரை மனோவியாதி பிடித்துக்கொண்டது. அது முதலே அவர் வியாதிகளினால் பீடிக்கப்பட்டு வைத்தியத்துக்கு ஊர் ஊராகப் புறப்பட்டார். அவர் வீட்டில் இருப்பதற்கு அருவருப்புப் பட்டுக்கொண்டே அவ்விதம் வைத்தியத்தைச் சாக்கிட்டு வெளிக்கிளம்பினார் என்று சொல்லலாம். அவருடன் கூடவே கமலி போய்க்கொண்டிருந்தாள். இளையவளும் அவளுடைய சந்தானங்களும் கமலிக்காகவும் சூரியநாராயண ஐயருக்காகவும் அதிகம் கவலைப்படவில்லை. ஐச்வரியமும் சிப்பந்திகளும் வீடு மனைகளும் மாடு கன்றுகளும் யதேஷ்டமாக இருந்ததால் சுக போகங்களுக்கும் நாட்டாண்மைக்கும் குறைவில்லை.

ஐயரும் தமக்கு வேண்டிய பணத்தை எடுத்துக் கொண்டு தம் பந்துக்கள், மித்திரர்கள் இருக்கும் ஊர்களுக்கு வைத்தியத்தைச் சாக்கிட்டுக் கமலியுடன் அடிக்கடி பிரயாணம் போய்க்கொண்டிருந்தார். ஐந்தாறு வருஷங்

கள் இப்படிக் கழிந்தன. பின்பும் ஐயருக்குத் தேக நிலை ஒழுங்குபடவில்லை. வியாதியின் அசௌகரியங்கள் அதிகரித்தன. சென்னையில் இருந்து வைத்தியம் செய்து கொள்வதற்காக அவர் அங்கே ஒரு வீட்டை அமர்த்திக் கொண்டு கமலியுடனும் ஒரு வேலையாளுடனும் ஜாகை வந்தார். டாக்டர்களும் மருந்துக் கடைக்காரர்களும் ஏராளமாக ஐயரின் பணத்தைச் சாப்பிட்டார்கள். ஆனால் ஐயருக்கு உடல்நிலை வரவர மோசமாகிக் கொண்டு வந்தது. ஐயர் பட்டணத்தில் எப்படி இருக்கிறார் என்று அறிந்துகொள்ள அவர் இளைய சம்சாரம் தன் உடன்பிறந்தானை ஒரு முறை இரண்டு முறை அனுப்பினாள். அவர் செய்துகொண்டிருக்கும் செலவை அவள் சகிக்கவில்லை. 'ஊரிலிருந்து வைத்தியம் செய்துகொண்டால் போதாதா? இப்படிப் பணத்தை வாரி இறைக்க வேண்டுமா?' என்று குற்றம் சொல்லிக்கொண்டிருந்தாள். தன்னை அவருக்கு ஆகவிடாமல் கமலி செய்துவிட்டாள் என்று பறை அறைந்துகொண்டு கமலியை வாழாவெட்டி என்றும், துடைகாலி என்றும் கண்டவர்களிடம் எல்லாம் தூற்றிக்கொண்டிருந்தாள். சூரியநாராயண ஐயர் தம் ஜீவன் பிரியும்வரையில் தம் இளைய சம்சாரமும் அவள் குழந்தைகளும் தம் அருகில் வரக்கூடாதென்று சபதம் கூறியிருந்தார். அவருக்கு உடம்பு நிலை மோசமாக மோசமாக, தம் குடும்பத்தில் வெறுப்பு அதிகரித்துக் கொண்டே வந்தது.

அவர் குடியிருந்த தெருவில் இன்ஷ்யூரென்ஸ் நாராயணசாமி ஐயர் என்று பெயர் வழங்கப்பெற்ற அவருடைய பந்து ஒருவர் வசித்துவந்தார். அவர் சூரியநாராயண ஐயரை அடிக்கடி கவனித்துக்கொண்டதுமல்லாமல் அவருடைய வீட்டுப் பெண்டுகள், கமலி அதைரியப்படாமல் அடிக்கடி அவளைக் கவனித்துக்கொண்டு சமாதானம் செய்து வந்தார்கள்.

சர்மாவுக்குத் தண்டனை அளித்த தினத்துக்குப்பின் சில நாட்களில் சூரியநாராயண ஐயர் அடிக்கடி பிரக்

ஞாபகம் அடைவது ஒரு பயங்கரமான அறிகுறியா யிற்று. ஐயரின் பந்துவான இன்ஷ்யூரென்ஸ் நாராயண சாமி ஐயர் ஊருக்குத் தந்தியடிக்க அவசியம் ஏற்பட்ட தாக நினைத்தார். டாக்டரும் அதை ஆட்சேபிக்கவில்லை. ஆனால் ஐயர் தம் நினைவு வந்தபோதெல்லாம், தம் சபதத்தையே வற்புறுத்தினார். இப்படிச் சில தினங்கள் கழிந்தன. ஐயர் அறியாமலே ஊருக்கு ஓர் அபாய எச்ச ரிக்கை அந்தப் பந்துவால் ரகசியமாக அனுப்பப்பட்டது. கமலி அதைச் சந்தேகித்தாள். ஐயர் தெளிவுடன் இருக் கும் சமயத்தில் கமலி தன் பிற்காலத்தைப்பற்றிப் பிரஸ்தாபித்து விம்மி விம்மி அழுதாள்.

'தாங்கள் இந்த நிலைமையில் என்னை விட்டுவிட்டால் எனக்கு ரட்சகன் யார்?' என்று அவள் கதறினாள். 'உயில் எழுதி வைத்திருக்கிறீர்கள். எனக்கு ஸமிருத்தியாக ஐச்வர்யத்தைக் கொடுத்திருக்கிறீர்கள். எல்லாம் இருந்தும் ஒரு ரட்சகன் இல்லாவிட்டால் என் பணமே எனக்குச் சத்துருவாகும். என்னை மோசம் செய்து என் பணத்தை அபகரிக்கவே பலர் வந்து ஹிதம்போல் சுற்றிக்கொள்வார் கள். சிறுதாயாரும் அவள் வர்க்கமும் எப்போதும் எனக்குத் தீங்கிழைக்கவும் என்னைத் தூற்றவும் கங்கணம் கட்டிக்கொண்டிருப்பார்கள். நான் பணமிழந்து, மான மிழந்து, ஈனமடைந்து தெருவில் நிர்க்கதியாக நிற்கும்வரை யில் அவர்களுடைய துவேஷம் என்னைப் பின்தொடரும். என்னை இந்த ஸ்திதியிலா விட்டுவிட்டுப் போகப்போகிறீர் கள், அப்பா!'' என்று பிரலாபித்தாள்.

அவள் பரிதாபத்தைக் கண்டு, ஐயர் மனம் உருகி, ''கமலி, உனக்கு நான் என்ன செய்யவேண்டும்? சொல். இவ்வளவு காலம் நீ கிலேசப்பட்டாலும் துக்கசாகரத்தில் மூழ்கிக்கிடந்தாலும் அன்பும் ஆதரவும் உதவியும் உனக்கு என்னிடமிருந்து தவறாமல் கிடைத்துக்கொண்டிருந்ததால் ஒரு பக்கத்தில் ஆச்வாசத்துக்கு இடம் இருந்தது. இனி அதுவும் அரிதென்றால் நீ எப்படித்தான் ஜீவிப்

பாய்? எனக்கும் புரியவில்லை" என்று சொல்லி அழுதார்.

கமலி, "என்னை யாரிடமாவது நீங்களே ஒப்பித்து விடுங்கள்" என்றாள் உறுதியுடன்.

"நீ உன் புக்ககத்தில் போய் வாழ விரும்புகிறாயா?" என்று கேட்டார் ஐயர்.

"அது சாத்தியமில்லை. அங்கே பெரியவர்கள் இல்லை. மைத்துனர்கள் மூலைக்கு ஒருவராக இருக்கிறார்கள். அவர்கள் பாடே கடினமாக இருக்கிறது. என்னை யார் வைத்து ரட்சிப்பார்கள்? மேலும் ஒருவரிடம் ஒண்டிக்கொள்வதானால் அதற்குத் தகுந்தபடி அடிமைத்தனத்துக்கும் உட்பட்டுத்தான் இருக்கவேண்டும்."

"உன் தாய்வழி பந்துக்கள் யாராவது உன்னை ரட்சிப்பார்களா?"

"அப்படி ரட்சிக்கக் கூடியவர்கள் இருந்தால் உங்களுக்குத் தெரியாதா? எல்லாந்தான் காலியும் கழிவடையுமாக இருக்கிறதே. அதுகளின் குடும்பச் சச்சரவும், ஒழுங்கீனமும் நினைக்கக்கூட வெறுப்பாக இருக்கிறதே."

"பின்னே என்ன செய்யலாம்? யார் இருக்கிறார்கள்? நீதான் சொல்லவேண்டும். எனக்கு ஒன்றும் புரியவில்லை" என்றார் ஐயர். இந்தச் சம்பாஷணைக்குப் பிறகு ஐயர் ஒரு நாள் தம் பந்துவான இன்ஷ்யூரென்ஸ் நாராயணசாமி ஐயரிடம் தம்முடைய கவலையெல்லாம் கமலியைப்பற்றித்தான் என்றும் தமக்கு வியாதியே வேறு இல்லை என்றும் கூறினார்.

நாராயணசாமி ஐயா சில பூர்வ பீடிகைகளுடன் கமலி மறுவிவாகம் செய்துகொள்வதுதான் அவளுடைய பிற்கால வாழ்க்கைக்குச் சாதகமானது என்று எடுத்துக் காட்டினார். ஐயர் இந்த உபதேசத்தை வெறுத்தார். ஆனால் மெல்ல மெல்லக் கமலிக்கும் மறு விவாகத்தில்

அபிப்பிராயம் இருக்கிறதென்று அவரிடம் அறிவிக்கப் பட்டது.

ஐயருக்கு ஜீவதசை நீடிப்பதில் தைரியம் தளரத் தளர மேற்படி அபிப்பிராயத்துக்கு அவருடைய எதிர்ப் பும் தளர்ந்துகொண்டு வந்தது. கடைசியாக அவருடைய வாழ்நாள் குறுகி டாக்டரும் மணிக் கணக்கில் கெடு வைத்துவிடவே தந்தி தபால்கள் பறந்தன. ஐயரும் தம் அந்திய காலத்தை உணர்ந்து, பக்கத்தில் தமக்கு முன் உயிரை விட்டுவிடுபவள்போல் சோக மூர்ச்சையில் ஆழ்ந்து கண்ணீர் பெருகப் பெருமூச்சு விட்டுக்கொண்டு தலையணையின் பேரில் கவிழ்ந்து கிடந்த கமலியைத் தடவிக்கொடுத்து எழுப்பி, "கமலி! உன்னை ஒருவனிடம் ஒப்பித்துவிட்டுப் போனால்தான் என் மனம் நிம்மதி யடையும்போல் இருக்கிறது. உன் ரட்சகனை நீயே குறிப்பிடு. நான் இந்த ஜன்மத்தில் கடைசிக் காரியமாக உன்னை அவனிடம் அடைக்கலம் வைத்துவிட்டுச் செல்லுகிறேன்" என்று மிக்க ஆயாசத்துடன் வார்த்தைகளைப் புரிந்ததும் புரியாததுமாக உச்சரித்துக்கொண்டு சொன்னார்.

சர்மா, இன்ஷ்யூரென்ஸ் நாராயணசாமி ஐயரிடம் சில காலமாக நட்பு வைத்துக்கொண்டிருந்தான். தன் ஆயுளை இன்ஷ்யூர் பண்ணிக்கொள்வதில் தானே சிரத்தை எடுத்துக்கொண்டான். அவரிடம் அடிக்கடி பழகுவதும் அவரோடு கூடவே ஊர் சுற்றுவதும் அவனுக்கு முக்கிய அலுவலாக இருந்தன. மெல்ல மெல்ல அவரிடம் தன் சரித்திரத்தை உள்ளபடியே சொல்லி வைத்தான். தான் அடி வாங்கினதையும் ஒளிக்கவில்லை.

நாராயணசாமி ஐயர் தம் வீட்டுப் பெண்டுகள் மூலம் கமலிக்குச் சர்மாவிடம் ஒரு நோக்கம் இருப்பதாக அறிந்துகொண்டிருந்தார்.

சூரியநாராயண ஐயர் தம் கடைசி மனோபீஷ்டத் தைக் கமலியிடம் சொல்லும்போது நாராயணசாமி

ஐயர் அங்கேதான் இருந்தார். சர்மா அவருடன் அடிக்கடி அந்த வீட்டுக்கே வந்துகொண்டிருந்தாலும் சூரியநாராயண ஐயர் படுத்திருந்த அறைக்கு வர அவன் துணிந்ததில்லை. அன்றும் அவன் வாசலில்தான் இருந்தான். நாராயணசாமி ஐயர் அவனை உடனே உள்ளே அழைத்துவந்தார். சர்மா வியாதியஸ்தரின் சமீபம் சென்று சோகத்துடன் அவர் முகத்தைப் பார்த்தான். மற்றொரு பக்கத்தில் உட்கார்ந்துகொண்டிருந்த கமலி தலைநிமிரவே இல்லை.

ஐயர் இரண்டொரு நிமிஷம் கழித்துச் சிறிது கண்ணைத் திறந்தார். நாராயணசாமி ஐயர் சர்மா வந்திருப்பதை ஐயருக்குத் தெரிவித்தார். ஐயர் சர்மா முகத்தைப் பார்த்தார். சர்மா அழுதுகொண்டிருந்தான். ஐயர் கமலியைப் பார்த்தார். "அப்பா, என்ன வேண்டும்?" என்று கேட்டுவிட்டுக் கமலி கோவென்று அலறினாள்.

அப்போது ஊரிலிருந்து வரும் ஐயரின் ஜனங்கள் வண்டியிலிருந்து இறங்கும் சப்தம் வெளியே கேட்டது.

ஐயர் தம் வலதுகையில் கமலியின் ஒரு கரத்தைப் பற்றிக்கொண்டார். தம் இடது கையால் சர்மாவின் ஒரு கரத்தைப் பிடித்தார். தம் இரு கைகளையும் தம் மார்பின்மேல் ஒன்று சேர்க்க அவர் இழுக்கப் போகிறவர்போல் காணப்பட்டார். ஆனால் அந்த நிமிஷம் கண்களைப் பளிச்சென்று திறந்து கடைசியாக மூடிவிட்டார்.

பக்கத்தில் இருந்தவர்கள், "தீர்ந்து போய்விட்டது" என்று சொன்னார்கள். உடனே அழுகைக் குரல்கள் ஒன்றன்பின் ஒன்றாக விகாரமாக எழுந்தன.

வாசற்படி ஏறிய ஐயரின் இளைய சம்சாரம், அவள் குழந்தைகள், சகோதரன், எல்லோரும் அதில் கலந்துகொண்டு இடி முழக்கம்போல் ஒப்பாரி வைத்துத் தெருவை இரண்டு செய்துவிட்டார்கள்.

மேலே நடத்த வேண்டிய காரியங்களைப் பொறுப்பாளிகள் நடத்திக்கொண்டார்கள். அன்றைக்கு மூன்றுவது நாள், வந்த ஜனங்கள் கமலியுடன் ஊர் போய்ச் சேர்ந்தார்கள்.

சர்மா அந்த வீட்டைத் தானே வாடகைக்கு ஒப்புக் கொண்டான். ஒரு மாதத்துக்கெல்லாம் கமலியுடன் அவன் அங்கே குடித்தனம் செய்யத் துவக்கினான்.

இவர்களின் ரிஜிஸ்டர் விவாகம் இன்ஷ்யூரென்ஸ் நாராயணசாமி ஐயரின் ஆதரவில் நடந்தது.

# 12

# வைதிக விவாகங்கள்

செல்லம் காந்திமதிகளின் கல்யாணத் தேதி நெருங்கிக்கொண்டிருந்தது.

குடும்ப வாழ்க்கையில் கல்யாணமென்பது ஒரு முக்கியமான கட்டம். அது வம்ச விருக்ஷத்தின் வளர்ச்சிக்கு அறிகுறியான போத்து வெடிக்கும் கணுப்போன்றது. வளரும் மரத்தின் சாரம், சத்து எல்லாம் தங்குமிடம் கணுவாவதுபோல், கல்யாண கட்டமும் குடும்பத்தின் ஐச்வரியம், சேர்க்கைபலம் இவற்றின் ஊற்றுக் கண்களைத் திறந்து கொண்டமட்டும் இறைத்துத் தேக்கி உபயோகப்படுத்திக் கொள்கிறது. எவ்வளவு கருமியும் அதன் நிமித்தமாகக் கைவிரித்துச் செலவு செய்ய அஞ்சுவதில்லை. எவ்வளவு எளியவனும் தன் நிலைமையை மீறி அதற்காக எட்டின மட்டும் வீச்சாகக் காலை வைத்துவிடுகிறான். திக்குக்கு ஒருவராகப் பிரிந்து நிற்பவரானாலும் ஓர் இனத்தைச் சேர்ந்தவர்கள் கல்யாணத்தை முன்னிட்டு ஒன்றுகூடிக் களிக்கின்றனர். குடும்பத்தின் சரித்திரத்தில் கல்யாணம் மிக்க ஆவலுடன் எதிர்பார்க்கப்படும் ஒரு சந்தோஷ நிகழ்ச்சி. லௌகிக ரீதியில் பார்த்தால் கொண்டாட்டங்களில் அதுவே முதன்மையானது. சாஸ்திர ரீதியில் பார்த்தால் ஸம்ஸ்காரங்களில் விவாகமே பிரதானமானது. அது வேத மந்திரங்களும் அக்கினியும் சாட்சியாகத் தேவ பித்ரு ருணங்களைப் போக்கிக்கொள்ள ஆரம்பிக்கப்படும் ஒரு மகா விரதமாகிறது. ஸர்வ தர்மாநுஷ்டானங்களுக்கும் சமூகத்துக்குரிய கடமைகளைச் செலுத்துவதற்கும் இன்றியமையாததான கிருகஸ்தாச்ரமத்தை மேற்கொள்ளும் புனிதமான கட்டம் அது.

வேங்கடசுப்பையரைப் போன்ற தனவந்தர்கள் குடும்பங்களில் நேரும் இந்த மங்களகரமான நிகழ்ச்சி ஊருக்கே ஓர் உத்சவம் போன்றது. ஒரு குடும்பம் மட்டுமல்ல; பந்துமித்திரர்கள் மட்டுமேல்ல; அக்கம் பக்கத்தவர்களும் ஏழை எளியவர்களும் அந்த மாபெரும் கொண்டாட்டத்தின் வைபோகங்களைக் கலந்து அநுபவிக்கிறார்கள்.

மானிட வாழ்க்கையில் இன்பம் தரக்கூடியதைத் தத்துவ அறிஞர், 'விஷயம்' என்று கூறுவார்கள். 'விஷய'த்திலிருக்கும் பற்று பிராணிகளுக்கு இயற்கையில் உள்ளது. அதைத் தவிர்க்க யாராலும் இயலாது. மக்களின் 'விஷய'ப் பற்றினால்தான் ஸம்ஸார சக்கரம் அநாதி காலமாகச் சுழன்று வருகிறது. ஈச்வர சங்கல்பத்தினால் விநோதமான இந்தச் சிருஷ்டியில் இரு வகைப்படும் ஸ்திரீ புமான்கள் பரஸ்பரம் நிராகரிக்க முடியாமல் ஐக்கிய பாவத்தை விரும்புவது ஜீவ வாழ்க்கையின் அடிப்படைத் தத்துவமாக இருக்கிறது. இதை அங்கீகரித்தே சாஸ்திர விதிகள் பிறந்திருக்கின்றன. பிரவாகம் பள்ளத்தை நோக்கி ஓடுகிறதென்றாலும் அதற்குக் கரை அமைத்து, செல்லும் வழியை திட்டப்படுத்துவதன் மூலம் தங்கள் சீரிய வாழ்க்கைக்கு அதை மக்கள் பயன்படுத்திக்கொள்வதுபோல் சாஸ்திர விதிகள் சில கோட்பாடுகளின் மூலம் காம போகத்தைப் புடம்வைத்துச் சுத்தி செய்து அதை உயரிய நோக்கங்களுக்கு ஏற்றதாக்கி, உண்மையானதும் நிலையானதுமான இக பர பலன்களை மக்கள் சுலபமாக அடையும்படி உதவவே பிரவர்த்திக்கின்றன. பார்வதி பரமேச்வரர்களும் ஆதி தம்பதிகளாக இருந்து உலகத்துக்கு உதாரணமாக, நெறியுள்ள, நிஷ்களங்கமான இந்த விவாக வைபோகத்தை அநுஷ்டித்துக் காண்பிக்கிறார்கள். அந்த உதாரணத்தைப் பின்பற்றியே உலக மக்கள் தம்பதிகளாகிப் பரிசுத்தமான பாரம்பரியத்தை ஸ்தாபித்து வந்திருக்கிறார்கள். கல்யாண காலத்தில் சுமங்கலிகள், 'கௌரீ கல்யாணம், வைபோகமே' என்று பாடுவது வழக்கம். விவாக தினத்துக்கு முன் ஸௌபாக்கிய தேவதையான

கௌரியின் பூஜையைச் செய்வது கன்னிகையின் முக்கியமான காரியம் என்பது பழைய கதை, புராணங்களில் வெளியாகிறது. இன்றும் விவாகமாகப் போகும் ஒவ்வொரு கன்னிகையும் கௌரியைப்போல் ஸௌபாக்கியவதியாகத் தான் வாழவேண்டுமென்று மனத்துக்குள் பிரார்த்தித்துக் கொள்கிறாள். வாழ்க்கை இன்பத்தின் அடிப்படைத் தத்துவமான தாம்பத்தியத்தைத் தோற்றுவிக்கும் இந்த விவாக மஹோத்சவத்தைச் சிறப்பிக்கச் சந்தனம், புஷ்பம், வஸ்திரம், ஆபரணம், கீதம், வாத்யம், பக்ஷ்யம், போஜ்யம், அன்னபானாதிகள், அன்பர்களின் கோஷ்டி முதலிய சுக போக சாமக்கிரிகள் போட்டிபோட்டுக்கொண்டு சன்னத்தமாகின்றன. வேங்கடசுப்பையர் ஒவ்வொரு வகையிலும் சிறந்ததும் பிரசித்திபெற்றதுமானது எதுவோ அதையே கோரித் தருவித்தார். ஜவுளிக் கடைகள், வெள்ளிப் பாத்திரக் கடைகள், நகைக் கடைகள் இவைகளுக்குப் பணம் பிரவாகமாக ஓடிக்கொண்டிருந்தது.

ஆயிரக்கணக்கில் வந்த ஜனங்களுக்கு நாலு தினங்களிலும் அன்னம் அளிக்கத் திட்டம்போடப்பட்டு மளிகைச் சாமான் சேகரிப்பு இலாகா ஒன்று பிரத்தியேகமாக ஸ்தாபிக்கப்பட்டது. பால் சமுத்திரமாகப் பொங்கி வர ஏற்பாடு செய்யப்பட்டது. முதல்தரமான சங்கீதக் கச்சேரிகளுக்கும் பிரசித்திபெற்ற மங்கள வாத்தியக்கார கோஷ்டிகளுக்கும் அட்வான்ஸ் கொடுக்கப்பட்டது.

முகூர்த்த தினம் நெருங்க நெருங்க ஐயரவர்களின் பங்களா குதூகலமும் சுறுசுறுப்பும் ஆரவாரமும் அலங்காரமும் விசேஷமாகத் தோன்றப்பெற்று அளவற்ற சோபையுடன் விளங்கலாயிற்று. உபாத்தியாயரும் உதவியாளர்களும் பந்துமித்திரர்களும் பணிப்பெண்களும் வேலையாட்களும் வண்டிகளும் போவதும வருவதுமாக இருந்ததால் பங்களா ஜே ஜே என்று இருந்தது. கார் நினைத்தபோதெல்லாம் பங்களாவிலிருந்து கிளம்புவதும் பங்களாவுக்குத் திரும்புவதுமாக இருந்தது. சொந்த வண்டியின் ஊழியம் போதா

மல் டாக்லிகார்களும் ஓடினர். சிவராமனும் கோபி நாத்தும் அக்கம்பக்கத்து வேலையில்லாத தோழர்களைச் சேர்த்துக்கொண்டு கல்யாணத்தை முன்னிட்டு ஐந்தாறு தினங்கள் முன்னதாகவே புகையிலைக் கத்தைகளுடன் சீட்டுக் கச்சேரியில் மெய்ம்மறந்து ஈடுபட ஆரம்பித்தார்கள். டிபனுக்குக் கொண்டுவரப்பட்ட நெய்ப்பட்சணங்களை எடுத் துக்கொள்ளக்கூட அவர்களுக்கு அவகாசம் அரிதாக இருந் தது. இரண்டு முகூர்த்தப் பத்திரிகைகளும் ராமநாதனின் 'கல்யாண'ப் பிரஸ்ஸிலேயே அச்சிடப்பட்டன. அவைகளை விலாசம் எழுதி நேரிலும் தபால் மூலமாகவும் விநி யோகிக்கும் ஏற்பாடுகளில் சீதாராமனுக்கும் ராமநாத னுக்கும் இரண்டு மூன்று நாட்களுக்கு வேலை சரியாக இருந்தது.

விவாகத்துக்குமுன் கடந்து செல்ல வேண்டிய பாக்கி தினங்கள் அந்த நிகழ்ச்சியில் அக்கறையுள்ள எல்லோ ராலும் ஒரே மாதிரியாக அளவிடப்பட்டதாகச் சொல்ல முடியாது. கல்யாண காரியங்களை இரவும் பகலுமாகச் செய்துகொண்டும் ஸம்பாரங்களைச் சேகரித்துக்கொண்டும் நினைத்து நினைத்துத் திட்டங்களை வகுத்துக்கொண்டும் இருந்த சங்கரி அம்மாளுக்கு நாட்கள் விரைந்தோடிப் போவதாகத் தோன்றிற்று. கவலையும் உழைப்பும் அவளுக்கும் மற்ற வீட்டுப் பெண்டிருக்கும் நாளுக்கு நாள் தீவிரமாகிக்கொண்டிருந்தன. ஆனால் கல்யாணப் பெண் களுக்கோ நடுவே நின்ற நாட்கள் வெறும் தூங்குமூஞ்சி களாகத் தென்பட்டன. அவை நகர மறந்துவிட்டனவா என்றுகூட அவர்கள் சந்தேகப்பட்டார்கள். ஒரு தரம் (காலையில்) எண்ணிப் பார்க்க நான்கு தினங்கள் குறுக்கே வழி மறைத்துக்கொண்டிருந்தன. மறு முறை (அன்று மாலையிலேயே!) எண்ணிப் பார்க்கும்போது அந்த நாட்கள் அப்படியே அழிவின்றித் தேய்வின்றி இருப்பது அவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது. அச்சு முறிந்த தேர்போலக் கிடந்த இடத்திலேயே அந்த நாட்கள் கிடப்பதாக எண்ணி அவர்கள் ஏங்கினர்.

அவர்களுக்குள் செல்லம், காலத்தின் மந்த கதியால் ஏற்பட்ட ஜாட்டியத்தை ரகசியமாக 'வெந்த உள்ளத்' தின் கவிதையைப் பாராயணம் செய்வதன் மூலம் சற்று வெல்ல முயன்றாள். காந்திமதிக்கு அவ்வித உபாயம் ஒன்றும் கையில் இல்லாததோடு தன்னைப் பாணிக்ரஹணம் செய்யப் போகிறவன் தோற்றத்தில் வசீகரமுடையவனாக இருப்பானா இல்லையா என்றே அவள் அறியாதவளாதலால் அவள் மனம் பல விகல்பங்களால் சஞ்சலப்பட்டிருந்தது. பேசுகிறவர்கள் - முக்கியமாக அத்திம்பேரும் கோமதியும் - எப்போதாவது புது மாப் பிள்ளையின் நிறம், உயரம், ஆக்ருதி, முகக்களை, குணம் முதலியவற்றைப்பற்றி ஏதாவது வருணிக் கிறார்களா என்று அவள் இருந்து இருந்து கவனித்து ஏமாற்றமடைந்தாள். தன் நாயகன் முத்துசாமிக்குத் தாழ்வில்லாத தோற்றமுடையவனாக வேண்டுமென்றும், அப்படி இல்லாமல் போனால் தான் இன்னது செய்து கொள்வதென்று முன்கூட்டியே சொல்ல முடியா தென்றும் அவள் தனக்குள் சபதம் செய்துகொண் டாள். மாப்பிள்ளைப் பையன் இஞ்சினீயருக்குப் படிப்ப தும் சம்பந்தி ஏராளமான பணத்தேக்குடைய கண்ணிய மான கனவானாக இருப்பதும் அடிக்கடி விஸ்தரிக்கப்பட்ட னவே ஒழிய மணமகனின் அங்க லக்ஷணங்களைப்பற்றிப் பிரத்தியேகமாக யாதொரு புகழும் பிரஸ்தாபிக்கப்படாத தால் அந்த விஷயம் அவளிடம் மத்திமம் என்றே காந்தி மதி முடிவு செய்துகொள்ள வேண்டியதாயிற்று.

* * *

ஆனால் செல்லத்துக்கு உத்தேசிக்கப்பட்ட வரனைப்பற்றி அவள் தாயார் அந்தரங்க திருப்தியுடைய வளாக இல்லை. சிவராமனின் சம்சாரம் மீனா வாழ்க்கை யில் மிகச் சிறுமைப்பட்டவள். சம்பத்துள்ள குடும்பத் தில் பிறந்து, சம்பத்துள்ள குடும்பத்தில் வாழ்க்கைப் பட்டுச் சுகத்தை அறியாதவள். அவள் மாமியார் ஒரு

பக்கம் அருதாபமற்ற சண்டைக்காரியாகவும் புருஷன் மற்றொரு பக்கம் பொறுப்பற்ற தற்தலையாகவும் இருந்ததால் இன்பமாக இல்லறத்தை அநுபவிக்க வேண்டிய பிராயத்தில் துன்பத்தையும் துயரத்தையுந்தான் கண்டுகொண்டாள். அவளுக்குச் சுயேச்சையாகக் குடும்ப நிர்வாகம் கிடைத்த காலத்தில் சிவராமன் சுற்றித் திரிந்து ஆஸ்திபாஸ்திகளைத் தொலைத்துவிட்டு ஆடி ஓய்ந்த பம்பரம்போல் வீடு வந்து சேர்ந்தான். அவனிடத்தில் சில ஜரிகை அங்கவஸ்திரங்களும், கிறுக்குப் பாபாஸம், டாம்பிகமும், விறைப்பும், அட்டகாசச் சிரிப்புந்தான் மிச்சமாக இருந்தன. மீனுவுக்குச் சேர்ந்தாற்போல் நல்ல நாட்களில் கட்டிக்கொள்ளப் பளிச் சென்று இரண்டு பட்டுப்புடைவைகள்கூடப் பெட்டியில் இருப்பில் இல்லை. இந்த நிலைமையில் அவளுடைய பெண்ணின் கல்யாணம் நாத்தனார் அகமுடையானால் நிச்சயிக்கப் பட்டு நாத்தனார் பெண் கல்யாணத்துடன் ஒரே பந்தலில் பராதீனமாக நடத்த ஏற்பாடாகியிருந்ததை அவள் முழு மனத்துடன் அங்கீகரிக்கவில்லை. ஆனால் முரடனான தன் புருஷனுடன் தர்க்கம் செய்தோ நயமாக எடுத்துரைத்தோ அவன் போகிற போக்கைத் தடுத்துவிட முடியுமென்று அவள் நம்பாததால் காலத்தை அநுசரித்துப் படிந்து போனாள். இருந்தாலும் நிச்சயம் செய்யப்பட்ட வரனைக் குறித்து சிலாக்கியமாக அவளுக்குத் தோன்றினால் கொஞ்சம் ஆச்வாசம் ஏற்பட்டிருக்கும். முத்துசாமி பி. ஏ. படிக்க வேண்டிய வயதில் ஆறாவது பாரம் படித்துக் கொண்டிருந்ததும், சாப்பாட்டுக்கு வழி இல்லாமல் மூன்றும் மனுஷ்யன் வீட்டில் ஒண்டிக்கொண்டு தர்மச் சாப்பாடு சாப்பிட்டுக்கொண்டிருந்ததும், மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள குடும்பத்தைச் சேர்ந்தவனாக இருந்ததும், அவளுக்கு அவன் ஒரு சிலாக்கியமான வரன் என்று ஒப்புக்கொள்ளத் தடங்கலாக இருந்தன. ஆனால் மீனு தன் கோபதாபங்களை என்றுமே அடக்கிக் கொண்டு சமயோசிதமாக நடந்துகொள்ளும் பயிற்சி

பெற்றவளாதலால் வெளிப்படையான சுறுசுறுப்பு, உற்சாகம், ஊக்கம், பொறுப்பு இவைகளினால் தன் மனக் குறைவைப் பிறர் கண்டுகொள்ளாமல் சமாளித்துக் கொண்டாள்.

கல்யாணத்துக்கு இரண்டு மூன்று தினங்களுக்கு முன் சம்பந்திகள் இறங்குவதற்காக உத்தேசிக்கப்பட்டிருந்த ஜாகை காலி செய்யப்பட்டுக் கல்யாணக்காரர்கள் உபயோகத்துக்காக விடப்பட்டது. அதைப் பார்வையிட்டு, வருகிறவர்கள் வாசத்துக்கு வேண்டிய சௌகரியங்களை முன்னதாகவே செய்துவைக்க, சிவராமன், சங்கரி முதலியவர்கள் அங்கே சென்றார்கள். சிறுவர்கள் உள்பட மற்றவர்களும் குதூகலத்தின் பேரில் அவர்களுடன் கலந்துகொண்டார்கள். பங்களாவில் மீனுவும் மதுரப் பாட்டியுந்தான் பாக்கி. அப்படி இருவர் தனியே ஓரிடத்தில் கூடியிருக்கும்போது எவ்வளவு நாழிகைதான் பேசாமல் இருக்க முடியும்? மதுரப்பாட்டிக்கு மீனுவின் வாயைக் கிண்டி வம்பு வளர்க்கவேண்டுமென்ற ஆவல் மனத்தை அரித்துக்கொண்டிருந்தது. மீனுவின் மனத்தில் ஓடும் திருப்திக் குறைவுள்ள சிந்தனைகளின் நிழலை மதுரப் பாட்டி அவள் முகத்தில் அவசரத்துக்குத் தருவிக்கப் பட்ட பிரகாசத்தினிடையே சூக்ஷ்ம திருஷ்டியுடன் குறிப் பெடுக்காமல் இல்லை.

"ஏண்டி அம்மா, ஒரு ஜாகை பார்த்திருக்கிறார்களோ? இரண்டு ஜாகைகள் பார்த்திருக்கிறார்களோ?"

"ஏன் பாட்டி கேட்கிறேள்! எனக்கு என்ன தெரியும்?" என்றாள் மீனு சோபையற்ற முகத்துடன்.

"ஏன் கேட்கிறேனா? இரண்டு சம்பந்திகளாச்சே; இரண்டு ஜாகைகள் உண்டோ என்பதற்குத்தான் கேட்கிறேன். அவர்கள் சம்பந்தி ஜாகையை ஆஜர் பார்க்க அவர்கள் போகிறது போல உன் சம்பந்தி ஜாகையை நீ போய் ஆஜர் பார்க்க வேண்டாமா?"

"நானு! நான் எதிலே சேர்த்தி? என்னைக் கேட்டுத் தான் எல்லாம் நடக்கிறதோ?"

"ஏண்டி! நீ பெண்ணைப் பெத்தவள் இல்லையோ? உனக்கில்லாத பாத்தியம் யாருக்கு? நன்று உன்னைக் கேட்க வேண்டாம் என்றாய்! உன்னைத்தான் கேட்கவேண்டும்!"

"என்னைக் கேட்க வேண்டியதற்கெல்லாம் கேட்டாகிவிட்டது! ஜாதகை விஷயத்துக்குத்தான் கேட்கப் போகிறார்கள்."

"ஆனால் உன்னைக் கேட்காமலா கல்யாணம் நிச்சயம் பண்ணினார்கள்! உன் ஆத்துக்காரர் ஊருக்குப் போன போது உன்னைக் கேட்கத்தான் போயிருந்தாராக்கும் என்றல்லவா நான் நினைத்தேன்! எந்தப் புருஷனாவது பெண்ணைப் பெத்தவளைக் கேட்காமல் பெண்ணுக்கு வரனை நிச்சயம் பண்ணுவானோ! இது ஏதடி, அதிசயமா இருக்கு! அப்போ உனக்கு இங்கே என்ன வேலை?"

"அப்பளம் இடுவதும் அதிரசம் தட்டுவதுந்தான் வேலை! நீங்கள் இல்லாவிட்டால் இட்லிக்கு அரைக்கிற வேலையும் எனக்குத்தான் வரும்."

"போகிறது போ! நான் இருக்கிறதை நீ ஒரு பிராணியாவது சாதகமாக நினைக்கிறாயே! அதுவே எனக்குப் போதும். ஆனால் உனக்கு ஒன்றுமே தெரியாது என்று சொல்லு. பட்டணத்துக்கு உன்னை அழைத்து வரும்போதாவது உன் ஆத்துக்காரர் உன் பெண் கல்யாணத்துக்காக உன்னை அழைத்து வருகிறேன் என்று உனக்குச் சொன்னாரோ, அதுவும் இல்லையோ?"

"அவருக்குத் தெரிந்ததை அவர் சொன்னார். அதற்கு மேல் கேட்டால் அக்காவையும் அத்திம்பேரையும் கேட்கவேண்டுமென்று சொல்லுவார். நாம் அதிகப்படியாகப் பேச்சு வைத்துக்கொண்டால் அதற்குமேல் கோபம் வந்துவிடும். ஆகையால் நான் நடக்கிறது நடக்கட்டும் என்று இருந்துவிடுவதுதான் வழக்கம்."

"நீ செய்வது சரி. அடி! மீனு! நானும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். உன் அத்துக்காரர் பரமார்த்தி. புகையிலை உண்டு; அவர் உண்டு. உலக வர்த்தமானம் ஒன்றும் தெரியாது. எல்லாம் அக்கா போடும் திட்டப்படி தான் நடக்கிறது. அவளுக்கு அவ்வளவு பவர் இருக்கிறது. ஆனால் மனுஷி மட்டும் இருக்கிற இடம் தெரியாது. பேசுகிறது மூன்றும் மனுஷ்யாள் காதில் விழாது."

"சாமர்த்தியசாலிகள் எல்லாம் வீண் சத்தம் போடுவார்களா? காரியத்தைக் கொண்டுபோகிற வழி அவர்களுக்குத் தெரியும்."

"இருந்து இருந்து உன் பெண்ணுக்கு வரன் பார்த்தாளே! அதுதான் எனக்கு ஆறவே இல்லை. இந்த வீட்டுக்கு மாட்டுப்பெண்ணாய் வர வேண்டியவளை..."

"அதைத்தான் ஆரம்பம் முதற்கொண்டே அக்கா காரி ஆக்ஷேபித்துக்கொண்டிருந்தாளே! 'ராமநாதனுக்குப் பண்ணிக்கொள்கிறாரா இல்லையா என்று இரண்டில் ஒன்று அத்திம்பேரை நேராகக் கண்டிப்பாகக் கேட்டுக் கொண்டு வந்துவிடுகிறேன்' என்று என்னிடம் சொல்லி விட்டுத்தான் இவர்கள் பட்டணம் வந்தார்கள். இங்கே வந்ததும் அக்கா என்ன பொடி போட்டாளோ தெரியாது. அத்திம்பேரிடத்தில் \அந்தப் பிரஸ்தாபத்தையே எடுக்காமல் செய்துவிட்டாள்."

"செய்ததற்கு அவளுக்கும் கைமேல் பலன் கிடைக்காமல் இல்லையே?"

"அவளுக்கு என்ன குறைவு, பாட்டி!"

"என்ன குறைவா! உனக்கு இல்லை என்று சொன்ன பிள்ளை தேவடியாளைக் கட்டிக்கொண்டு வீட்டை விட்டே தொலைந்தான்."

"அப்படிப் போனாலும் போகட்டும்; என் சம்பந்தம் வேண்டாம் என்கிற எண்ணந்தானே அவாளுக்கு?"

"அது சரி. இப்போது நீ சொன்னாயே! இது நூற்றில் ஒரு வார்த்தை."

"ஒருவிதத்தில் ராமநாதன் அவருக்கு மாப்பிள்ளையாகிவிட்டான். எனக்குத்தானே அவன் மாப்பிள்ளையாகவில்லை. அவருக்குத் திருப்திதான்போல் இருக்கிறது."

"ஐயோ! வெட்கக்கேடு! அந்தப் பேச்சை எடுக்காதே! எனக்கு நாக்கைப் பிடுங்கிக்கொள்ள வேண்டிட்டுப்போல் இருக்கிறது. அது போகட்டும். தன் பிள்ளைக்குத்தான் பண்ணிக்கொள்ளவில்லையே! நாலு இடத்தில் அலைந்து திரிந்து வேறு பிள்ளையைப் பார்த்து மனத்துக்குத் திருப்தியாக ஒரு தீர்மானத்தைப் பண்ணக்கூடாதோ? ஏதோ கதை சொல்லுவார்களே - தூங்கி விழித்துக்கொண்டதும் முதலில் கண்ணில் படுகிறவனுக்குப் பெண்ணை வாழ்க்கைப் படுத்துவதாக ஒருவன் பிரதிக்ஞை செய்ததாக - அது போல், உடனே எவன் கண்ணில் பட்டானோ அவனை இழுத்து மணையில் உட்கார்த்திவிட்டார்களே!—ஆமாம், அவர்கள் என்ன செய்வார்கள்! உன் ஆத்துக்காரரோ புகையிலையைப் போட்டு அரைத்துக்கொண்டு இருந்த இடத்தை விட்டு நகருவதில்லை. காந்திமதிக்கோ முகூர்த்தம் வைத்தாகிவிட்டது. சேர்ந்தாற்போல் கல்யாணத்தை நடத்த வேணுமே! அதற்கு என்ன செய்வது? கிடைத்தவரையில் போதுமென்று தீர்மானித்துவிட்டார்கள்; நாளைக்கு மாற்றுகிற பண்டமா? பெரிய மனுஷ்யாள் போக்கு அப்படித்தான்."

"ஆமாம், ஏழைக்குத் தகுந்தது. என் அந்தஸ்துக்கு இது போதாதா என்றுதான் இப்படி வரன் பார்த்திருக்கிறார்கள். இவர் பராதீனமாக அவாத்துக் கல்யாணத்திலே ஒண்டிக்கொண்டு தானும் கல்யாணத்தை எப்படியாவது முடித்துவிட வேண்டுமென்று அவாளிடத்தில் சரணாகதியாக வந்துவிட்டபடியால் அவர்கள் செய்த தீர்மானப்படி அங்கீகரித்துப் போகவேண்டியதுதானே?"

"ஆனால் பிள்ளை கண்ணுக்கு நன்றாயிருக்கிறான். செல்லத்தின் அழகுக்கு ஏற்ற அழகு. நாளைக்குக் கல்யாணப் பந்தலில் நிற்கும்போது உன் பெண் மாப்பிள்ளை ஜோடி

தான் திருஷ்டியாய்ப் போகிறாப்போல் இருக்கும். அந்தப் பணக்கார ஜோடி அடுத்தபடிதான்.''

“அழகு மட்டும் போதுமா பாட்டி? நாளைக்குப் படிப்பை நிறுத்திவிட்டுத் தர்ப்பைக்கட்டை எடுத்துக் கொண்டு புறப்பட்டுவிட்டானேயானால் அப்போதும் அழகாகத்தான் இருக்கும்!''

“அப்படிப் போக விட்டுவிடுவார்களா? இனி நம்ம சரக்காய்ப் போய்விட்டபடியால் ஆத்தில் கொண்டு வந்து வைத்துக்கொண்டு மேலே படிக்கவைத்து ஒரு வேலையை யும் பண்ணிவைக்கவேண்டிய பொறுப்பு நம்மைச் சேர்ந் ததுதான். அவனுக்கு வேறே மனுஷ்யாளும் இல்லை.''

“சரிதான் பாட்டி! இதையெல்லாம் அவாளாகச் செய் தால்தானே உண்டு. நாம் சொல்ல முடியுமா! அப்படி அவாள் செய்யாவிட்டால் நம்மால்தான் செய்ய முடியுமா?''

“ஏன் செய்ய மாட்டார்கள்? வழியிலே போகிற பிள்ளை ஒருவன் - தாயாதியா? உறவா? - மூன்று நாலு வருஷங் களாகப் பெத்த பிள்ளைக்கு ஒரு படி மேலாகவே வீட்டிலே வளரவில்லையா! செல்லத்தின் அகமுடையானுக்குச் செய்யாமல் என்ன! பேஷாகச் செய்வார்கள். அதில் மட்டும் எனக்கு நம்பிக்கைதான். செல்லத்துக்கு ஒரு முகவெட்டு இருக்கிறது. அவள் விஷயத்தில் எல்லோரும் எதையும் செய்யத் தயாராக இருப்பார்கள்.

“போகிறது, எனக்கில்லாத முகவெட்டு அவளுக் காவது இருக்கிறதே! அவள் அப்பாவைக் கொண்டிருக் கிறாள். அவருக்கும் எல்லா ஆஸ்தியையும் தோற்று விட்டாலும் இன்றைக்கும் முகவெட்டு உண்டு.''

வீடு பார்க்கப் போனவர்கள் திரும்பிவரும் பேச்சுக் குரல் கேட்டதும் மதுரப்பாட்டி அரைகுறையாக விட்டிருந்த தன் வேலையைச் செய்யத் தொடங்கினாள்.

"நாம் பேசிக்கொண்டதெல்லாம் மனசிலேயே இருக்கட்டும், பாட்டி!" என்று மீனு எச்சரிக்கை செய்தாள்.

"எனக்குத் தெரியாதா?" என்ற அர்த்தத்தில் பாட்டி சிரித்துக்கொண்டாள்.

* * *

முத்துசாமி தன் கல்யாணப் பிரஸ்தாபத்தை முதலில் ஏதோ சொப்பனத்தில் கேட்பதாக நினைத்தான். அவனுக்கு ஸ்ரீமான் வேங்கடசுப்பையரிடம் தான் போய் வந்த பிறகு தன்னிடத்திலேயே ஓர் அவநம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. "நான் பெரிய இடங்களில் போய்ப் பழக லாயக்கில்லாதவன். ஐயர் அவர்களின் உயர்வு எவ்வளவு? என் தாழ்வு எத்தகையது? ஏதோ சரிசமனாக நின்று பேச்சுக்குப் பேச்சு எதிர்த்து உரையாடிவிட்டு வந்துவிட்டேனே! நான் போன காரியம் என்ன! நான் பேசினதையெல்லாம் பேசியிருக்க வேண்டிய அவசியம் என்ன! அவர் என்னை வாயைக் கிண்டி வேடிக்கை பார்த்திருக்கிறார். நான் அதை உணராமல் அவருடைய பால்யத் தோழன்போல் மிக்க உலகானுபவம் பெற்ற பழைய பெருச்சாளிபோல் பெரிய பெரிய அபிப்பிராயங்களை யெல்லாம் ஆழ்ந்த ஆலோசனையினால் கடைந்து எடுத்துவிட்டவன்போல் உறுதியும் உதாசீனமும் தொனிக்கும் வகையில் வாயில் வந்ததை எல்லாம் உளறிக் கொட்டிவிட்டேனே! அவர் என் மூடத்தன்மையைப் பார்த்து மனத்தில் எவ்வளவு சிரித்துக்கொண்டாரோ!......"

முத்துசாமி ஐயர் கேட்ட கேள்விகளையும் அவைகளுக்குத் தான் சொன்ன பதில்களையும் பதினெட்டாவது முறையாக ஞாபகப்படுத்திக்கொண்டான். ஒவ்வொரு தடவையிலும் வேங்கடசுப்பையர் அழுத்தமான மனோபாவத்துடன் கேள்விகள் கேட்டதாயும், தான் அவரிடம் தகாத தற்பெருமையுடன் வம்பளந்து அசடு

ரத்னங்களின் ரூபலாவண்யம் சித்திரிக்கப்படவில்லையா? அவர்களின் லீலாவிலாசங்கள் வருணிக்கப்படவில்லையா? சிருங்கார பாவங்களின் வெளி இங்கிதங்களான கடாக்ஷம் முதலியவற்றின் தன்மையை அவன் அறியாதவனா? பச்சைக் குழந்தையா! கல்யாணமாகிற வயதில் பத்துக் கன்னிகைகளை வீட்டிலும் வெளியிலும் தினம் பார்த்துக் கொண்டிருப்பவன் தனக்கு விவாகத்துக்கு உரியவளைப் பற்றிச் சிந்திக்காமல் இருக்க முடியுமா! இருந்தாலும் ஒரு பேச்சுக்கு இடமில்லாமல் எல்லோரும் உத்தமன் என்று கொண்டாடும் ரீதியில் அவன் நடந்துகொண்டதற்குக் காரணம் அவனுடைய சீலம். அவன் ஸத்குலத்தில் பிறந்த நற்சீலன். விநய சம்பத்தைப் பிறவி பாத்தியதையுடன் அடைந்து ஆண்டு வருபவன். புலன்களைச் சீரிய வழியே நடத்தும் பண்புடைய சாரத்ய வீரன். இயற்கையிலேயே தகாத எண்ணத்தைத் தவிர்த்துத் தூய்மையையே நிரந்தரமாக நாடும் சுத்த மனமுடைய ஸாத்துவிகன், கவர்ச்சியினால் அவன் உள்ளம் கொள்ளைகொண்டு போகப்படமாட்டாது. தனிமை அவன் தளர்ச்சிக்கும் காரணமாகாது. இன்பம் நெறியுடன் ஒத்துவிளங்காவிட்டால் அவனுக்குச் சுவைதர வல்லதாகாது. துன்பம் நன்னடத்தைப் பாதையில் பதிந்து கிடந்தாலும் அவனைத் தைரியமிழக்கச் செய்யாது. அழுக்கு அவனை அணுகாது. ஒழுக்கம் அவனைக் கைவிடாது. இழிவான சேர்க்கை அவனுக்குத் தெய்வகதியால் ஏற்பட்டாலும் அவன் சாம்பல் பட்ட கண்ணாடிபோல் தெள்ளிய திருமேனியுடன் வெளிவருவான். இளம் வயதில் விவேகியாகிய முத்துசாமி தாமரையிலையில் நீர்த்துளிபோல் வாழ்க்கையில் ஒட்டாமல் உறைந்துவந்தான்.

அவன் செல்லத்தைத் தனிமையில் சந்தித்துப் பேச வேண்டிய அவசியம் ஏற்பட்டதிலிருந்து அவனுடைய மன நிலைமையில் சிறிது சிறிது மாறுதல் ஏற்பட்டுவந்ததை அவன் ஊகிக்காமல் இல்லை. ஆனால் அந்த ஊகத்தை ஆதாரமாக வைத்துக்கொண்டு அவன் அதற்கு மேல் வட்டிக்கணக்குப் போடவில்லை. 'க: காம: ஸங்கல்ப:'

என்று 'பிரச்னோத்தர மாலிகை' சொல்லுகிறது. முத்து சாமி சங்கல்பத்தை வேரிலேயே அறுத்துவிட்டான். சங்கல்பத்துக்கு அவன் இடம் கொடுத்திருந்தால் பல வேர்கள் ஓடி அவனைக் கட்டி வீழ்த்தியிருக்கும். "பிரமதி புவனே கந்தர்ப்பாக்ஞா விகாரிச யௌவனம், லலித மதுரா ஸ்தேதே, பாவா: க்ஷிபந்திச திரதாம்" என்று பவபூதி மகாகவி சொன்னதுபோல் ஒரு யுவனின் மனத்தைப்பற்றி இழுக்க நாலாபக்கங்களிலும் வசீகரமான இன்பக் காட்சிகள் உலகத்தில் நிறைந்திருக்கின்றன. அவற்றை மனத்தில் புகுந்துகொள்ள விட்டுவிட்டால் பின்பு அவை படுத்தி வைக்கும் பாடு சொல்லவொண்ணாது. தர்மம், நீதி, விநயம் இவைகளின் நியதிக்கு உட்பட்டு நடக்கும் அப்பியாசத்தைச் செய்திருந்தால், சஞ்சலங்களை வெல்லும் உதாசீன புத்தியை உள்ளப் புரட்சிக்குப் போலீஸாக நிறுத்தி மோகம், மயக்கம், ஆவேசம் இவைகளைத் தடுத்துக் கொண்டு துல்யமான வாழ்க்கை நடத்தலாம். ஸர்வ காலத்துக்கும் ஸர்வ லோகத்துக்கும் பொருத்தமானதும் ஹிதமானதுமான உபதேச மொழி ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரால் வழங்கப்பட்டிருக்கிறது. "பெரியோர்களின் சாஸ்திர விதிகள் ஒரு மனுஷ்யனால் அபேக்ஷிக்கப்படும் பெண்டுகள், பிள்ளைகள், உறைவிடம், உணவு, வஸ்திரம், ஆபரணம் இன்னும் இது போன்ற எதுவும் விரும்பத்தகாதது என்று தடுக்கவில்லை. ஆனால் அந்தச் சுக போகங்களை அடையவும் அநுபவிக்கவும் சில சில அவசியமான வரம்புகளை மட்டும் ஏற்படுத்தியிருக்கின்றன. அந்தக் கட்டுப்பாடுகள் விஷயத்தில்கூட ஒருவனுக்குத் துவேஷம் ஏற்படுமேயானால் எல்லாம் வல்ல இறைவன் தக்கபடி அதற்குப் பதில் சொல்லுவான்."

பண்பு என்பதே வரையறைகளினால் சீர்ப்படுத்தப் பட்ட அநுஷ்டான முறைதான். அதுவே சுத்தமானதும் உண்மையானதுமான சுகத்துக்கும் ஆனந்தத்துக்கும் உத்தரவாதியாகிறது. எந்தக் கலைக்கும் அவ்விதப் பண்புதான் ஜீவநாடியாக இருக்கிறது. கட்டுப்பாடுகள் நிறைந்தவை

தாம் கலைகளுக்குள்ள ஆசாரங்கள். ஒழுங்கு, நெறி, உருபு கள், ஒன்றுக்கொன்று கீழ்ப்படிந்து ஒருமைக்குத் தங்கள் பன்மையை அர்ப்பணித்துக்கொள்வது, உண்மை ஒன்றையே குறிக்கோளாகக் கொள்ளுதல், இவைகள் தாம் உறுதியையும், அழகையும் ஆனந்தத்தையும் பிறப்பித்து மானிட உலகத்தைச் சொர்க்கமாகச் செய்கின்றன.

பயிற்சியினால்தான் பண்பு உண்டாகும். பயிற்சிக்கு அடக்கம், திட நம்பிக்கை, கீழ்ப்படியும் தன்மை, பொறுமை, தளரா ஊக்கம், தடைகளினால் பாதிக்கப் படாமை, குறுக்கிடும் போலிப் பயன்களினால் சஞ்சல மின்மை இவை அவசியம். உயரிய, அரிய பலன்களை ஒரு நாள் முயற்சியினாலாவது வெறும் வாய்ப்பேச்சினாலாவது அடைய முடியாது. பலகாலப் பயிற்சி ஒன்றே அந்தப் பண்பைத் தரக்கூடியதாதலால் நம் முன்னோர்கள் ஸம்ஸ்காரங்களின் மூலம் ஒருவன் பிறந்தது முதற் கொண்டே அவனுக்கு அப்பயிற்சியைத் தரக்கூடிய பற்பல விதிகளைச் சிறிது சிறிதாகப் பளுவில்லாமல் அநுஷ்டிக்கக் கூடிய வகையில் ஆக்கித் தந்திருக்கிறார்கள். ஸம்ஸ்காரம் என்ற பதமே பண்புக்குரிய சீர்ப்படுத்தல் என்ற பொருள் படும். இந்தப் பண்பு ஒரு ஜன்மத்தில் அல்ல! பல ஜன்மங் களில்; ஒரு தலைமுறையில் அல்ல, பல தலைமுறையாக அநுஷ்டிக்கப்படும் சீர்ப்படுத்தும் ஸம்ஸ்காரங்களால் படிப்படியாக மேம்பட்டதாகிறது. வாழ்க்கைப் பண்பு களில் இல்லற வாழ்க்கைப் பண்பே முக்கியத்துவம் பெற்றதாகையால் ஸம்ஸ்காரங்களுக்குள் விவாக ஸம்ஸ் காரமே முக்கிய ஸ்தானம் பெற்றிருக்கிறது.

இந்த ஸம்ஸ்காரத்தின் சுத்தியினால் வம்ச சுத்தி ஏற்படுகிறது. சுத்த வம்ச சந்ததிகள் ஆத்மோத்தாரணம், குலோத்தாரணம், லோகோத்தாரணம் என்ற மூன்று க்ஷேமங்களுக்கும் காரணமாகும் யோக்கியதையும் உள்ள வர்கள் ஆகிறார்கள்.

முத்துசாமி அத்தகைய யோக்கியதையைப் பரிபூர்ண மாக, பிறவியினாலும் சகவாசத்தினாலும் பயிற்சியினாலும் பெற்றிருந்தவனாதலால் ஒரு ரிஷிகுமாரன் குருகுல வாசம் செய்வதுபோல் அவன் ஆசாரிய கிருகத்திலிருந்து வித்தியாப்பியாசம் செய்துவந்தான்.

பிரம்மசரிய தர்மத்தில் சிரத்தையுள்ள அவன் கிருகஸ்தாசிரமத்தைப்பற்றிய சிந்தனைகளுக்கு இடம் கொடுக்கவே இல்லை. ஆதலால், ஹெட்மாஸ்டர் தன்னைக் கண்டிக்கவோ தண்டிக்கவோ செய்யாமல் தன் ஜாதகத்தை ஸ்ரீமான் வேங்கடசுப்பையருக்கு அனுப்பியதையும் கல்யாணப் பிரஸ்தாபம் செய்ததையும் பார்த்து முத்துசாமி ஆச்சரியத்துக்கு உள்ளானான்.

தன்னைக் கண்டனை தண்டனைகளுக்கு உட்படுத்தி, 'வீட்டை விட்டுப் போ!' என்று ஹெட்மாஸ்டர் சொல்லியிருந்தால் அதை முத்துசாமி வரவேற்கத் தயாராக இருந்தான். அப்படி ஒன்றும் இல்லாமல் தான் காதல் கடிதம் எழுதினதாகப் பொய்யாக அநுமானிக்கப்பட்டதையே ஊர்ஜிதம் செய்வதுபோல் பிரஸ்தாப கன்னிகையைத் தனக்குக் கொடுக்க நிச்சயித்தது தனக்குத் தான் எதிர் பார்த்ததைவிடக் கடுமையாக விதிக்கப்பட்ட ஒரு தண்டனையாக அவனுக்குத் தோன்றிற்று. ஸ்ரீமான் வேங்கட சுப்பையர் தான் காதலித்ததால் தோஷம் பட்ட கன்னிகையைத் தனக்கே கொடுப்பதைவிட வேறு வழியில்லை என்று தீர்மானித்தார் போலும் என்று நினைத்து அவன் மனக்கிலேசமுற்றான். ஸ்ரீ காளிதாஸர் கண்வரைப்பற்றிக் கூறிய வாக்கியம் அவனுக்கு ஞாபகத்துக்கு வந்தது.

'பிடிக்கப்பட்ட திருடனிடம் அவன் திருடிய பண்டத்தைத் திருப்பிக் கொடுத்து, "சரி, நீயே எடுத்துப்போ" என்று சொத்து உரிமைக்காரன் சொன்னதுபோல்' - இந்த மனப்பான்மையில் செல்லத்தைத் தனக்குக் கொடுக்க அவர்கள் நிச்சயித்திருந்தால் அந்த நிச்சயம் யதார்த்தமில்லாத ஊகத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தது.

இது அவனுக்கு வெறுப்பாயிருந்தது. 'காதல் கடிதம் நான் எழுதவில்லை. அதை அறிந்தும் செல்லத்தை எனக்குக் கொடுப்பீர்களா?' என்று கேட்டுவிட்டால் தேவலை போல் அவனுக்கு ஆத்திரமாக இருந்தது. ஆனால் ஹெட் மாஸ்டர் பேச்சுவார்த்தைகளிலிருந்து ஸ்ரீமான் வேங்கட சுப்பையர் அவரிடம் அந்தப் பாழாய்ப்போன கடிதத்தைப் பற்றிச் சொல்லியிருப்பார் என்றே நினைக்க முடியவில்லை. அப்படியிருக்கும்போது தானாக அதைப்பற்றி எப்படி மறுப்பு வாதத்தைத் தொடர்வது என்று அவன் கலங்கினான். சாருதத்தன், வசந்தசேனையின் நகைகளைத் திருடிக்கொண்டு அவளைத் தான் கொலை செய்ததாக ராஜச்யாலனால் நியாயாதிகாரியின்முன் குற்றம் சாட்டப் பட்டுக் குற்றத்தையும் நம்பத்தகுந்தவை போலுள்ள பொய்ச்சாட்சியங்களினால் அவன் ருசுப்படுத்த முயன்ற போது, நிராசையால் குற்றத்தை ஒப்புக்கொண்டதுபோல், "சரி, அப்படியே நான் செய்ததாக வைத்துக்கொள்ளுங்கள்" என்று கூறி அவன் தண்டனையை ஏற்றுக்கொண்டது போலாகுமா, தான் தன் தலையில் சுமத்தப்பட்ட அந்தக் கடிதக் குற்றத்தை அங்கீகரித்துச் செல்லத்தைப் பெற்றுக் கொள்வது' என்று அவன் நினைத்தான். இந்த எண்ணங்களினால் உதித்த குழப்பம் கொஞ்சம் தெளிந்தபின் அவன் தனக்கு அதற்குள் எதற்கு விவாகம் என்று சிந்திக்கலானான். ஆனால் யாருமே அவன் சம்மதத்தைக் கேட்க நினைத்ததாகத் தெரியவில்லை. யாருமோ அவனுக்கு ஆக்ஷேபம் இருக்கும் என்று எள்ளளவும் சந்தேகித்ததாகத் தோன்றவில்லை. செல்லத்தின் அபிப்பிராயத்தை மட்டும் தெரிந்துகொண்டிருப்பார்கள்போல் இருக்கிறது என்று அவன் மனத்தில் ஓர் எண்ணம் உதயமாயிற்று. காந்திமதியைப்போல் செல்லம் அன்று தன்னை வரவேற்காததிலிருந்தும், ஒளிந்திருந்து தன்னையே கவனித்துக்கொண்டிருந்ததிலிருந்தும் கொஞ்ச நாளாகவே அவன் பள்ளிக்கூடத்தில் கண்ணில் பட்டபோதுகூட நாணத்தின் அறிகுறிகளுடன் தனக்கு எதிர்ப்படாது மறைந்து வந்ததிலிருந்தும்

செல்லத்தின் இருதயம் தன் விஷயத்தில் அபிமுகமான ஒரு மாறுதலை அடைந்திருந்ததாக அவன் ஊகித்தான். 'அந்தக் காதல் கவிதைக்கு நான் கர்த்தா என்ற பிரமை யும் அவளுடைய தாசனாக நான் காத்திருப்பதாக அவ ளுக்குப் போதித்திருக்கிறது போலும்' என்று நினைக்க அவனுக்குச் சிரிப்பு வந்தது. 'நளன் இந்திரனுக்காகத் தமயந்தியிடம் தூது சென்றான். தமயந்தி நளனையே காதலித்தாள்; இந்திரனை உபேக்ஷித்தாள். அதைவிட இது விநோதம். இந்தக் கடிதம் யாரால் யாருக்கு அனுப்பப் பட்ட தூதன்? அதன் மூலம் நான் செல்லத்தைக் காதலிப்பது நிர்ணயமாகிவிட்டது. பிறகு என்னைக் கேட்பானேன்? ஆதலால்தான் என் சம்மதத்தைப் பற்றிய சந்தேகமே ஒருவருக்கும் ஏற்படவில்லைபோலும்!' ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் அன்று சம்பாஷணையின் இறுதியில், 'சில காதல் கடிதங்கள் வரவேற்கப்படலாம். அப்போது அவற்றைக் குற்றமென்று கருதுபவர்கள் இருக்கமாட்டார்கள் அல்லவா?' என்று கேட்டதன் மூலம், 'உன் மனுவை அநுமதிக்க எங்களுக்கு ஆக்ஷே பம் இல்லை என்று தெரிவித்துக்கொண்டார். இதற்கு என் வாயில் வந்த பதில் வாக் தேவதையின் பிரேரணை யினால் தோன்றியதுபோல் அமைந்ததே ஒழிய என் சிந்தனையை அநுசரித்து உதயமானதாகவே சொல்ல முடி யாது. நான் என்ன சொன்னேன்! 'தன் வீட்டுப் பெண்ணின் போக்கை அறியாத சுற்றத்தார் அந்தக் காதல் கடிதத்தைக் குற்றமாக எடுத்துக்கொள்ளலாம்' என்றேன். இதனால் செல்லத்தின் இருதயத்தை நான் அறிந்தேதான் அதற்கு அநுகுணமாகக் காதல் கடிதம் எழுதினேன் என்று தீர்மானித்துக்கொள்ளக் கூடும் அல்லவா! என் வார்த்தையைக் கேட்டு அவர் சிரித்தார். அந்தச் சிரிப்புக்கு என்ன அர்த்தம்? 'எல்லாம் நான் அறிவேன்' என்று அர்த்தம்! உண்மையில் பார்த்தால் ஒரு பிரமைக்கு இன்னுமொரு பிரமை ஆதாரம். உலகமே இப்படித் தான் நடக்கிறது! சரி, எப்படியோ கல்யாணம் வந்து

சேர்ந்தது. பிராப்த காலம் வந்தால் யாரை விடும்?'

முத்துசாமி சிந்தனை அலைகளில் புரண்டு புரண்டு ஒரு மாதிரியாகக் கரை வந்து சேர்ந்தான். வரவர முதலில் தோன்றிய ஆக்ஷேபங்கள் ஆழத்துக்குச் சென்றன. கொதிப்பு ஆறி வந்தது. நெரடல்கள் ஒத்துப் போய் விட்டன. குழப்பம் தெளிந்தது. செல்லத்தின் முகம் சிந்தனை வானத்தில் சந்திரன்போல் பிரகாசிக்க ஆரம்பித்தது. அவன் உள்ளம் சமுத்திரம்போல் பொங்கிற்று.

'செல்லத்தை வேண்டாமென்று சொல்ல முடியும்? லக்ஷ்மியைப் பிரார்த்திப்பவன் லக்ஷ்மியை அடையலாம் அல்லது அடையாமல் இருக்கலாம். லக்ஷ்மியே ஒருவனைப் பிரார்த்தித்தால் அவளுடைய பிரார்த்தனையை நிராகரிப்பவன் ஒருவன் உண்டா?'

சிவராமன் முத்துசாமியைப் பார்க்க வந்தபோது முத்துசாமி மாப்பிள்ளையாகவே தன்னைத் தீர்மானித்துக் கொண்டான்.

பரீக்ஷை முடிவு சமயத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்த அந்த நிர்ப்பந்தம் நீங்கியதும் மாப்பிள்ளையாகவே திரும்பி வரும்பொருட்டுத் தன் தாயார் இருக்கும் ஊருக்குப் புறப்பட்டுச் சென்றான்.

* * * *

சௌ. காந்திமதி, சௌ. செல்லம் இவர்களின் விவாக தினமாகிய வெள்ளிக்கிழமைக்கு முதல் நாள் முதற்கொண்டே மேல மாம்பலம் அலங்கார சோபிதமாக இருந்தது.

பட்டுப்புடைவைகள் உடுத்தி, வைர நகைகள் பூண்டு, வாசனைகள் பூசி, புஷ்பம் தரித்து, தாம்பூலச் சிவப்புடன் விளங்கும் அதரங்களில் புன்சிரிப்புத் தவழக் கையில் வெள்ளிக் கிண்ணி, சிமிழிகள் ஏந்தி ஊருக்குக் கல்யா

ணம் சொல்லும் பெண்கள் தெருவில் தோகை விரித்த மயில்கள்போல் நடந்து வரும் காட்சி அமோகமாக இருந்தது.

வீட்டுக்கு வீடு பெண்கள் மறுநாள் கட்டிக்கொள்ள வேண்டிய புடைவைகளைப் பொறுக்கி எடுப்பதிலும் அவை களுக்கு ஏற்ற ரவிக்கைகளை ஒத்துப்பார்த்துச் சேர்த்து வைப்பதிலும் அதிக நேரத்தைச் செலவு செய்தார்கள்.

யுவ புருஷர்கள் அப்படியே அங்க வஸ்திரம் ஷர்ட்டுகளைத் தீர்மானித்துத் தனியே எடுத்து வைத்தார் கள்.

சாப்பாட்டு ரசிகர்கள், "சமயலூர் சாமிநாதன்தான் ஸெட்டுடன் வந்திருக்கிறான். சாப்பாடு 'ஸ்பெஷாலிடி' என்பதில் சந்தேகமில்லை" என்று உத்சாகத்தினால் குதித் தார்கள்.

சங்கீத ரசிகர்கள் நாயனபுரம் 'பிரதர்ஸ்' நாகஸ் வர கோஷ்டி மாப்பிள்ளை அழைக்கவே வந்து சேர்ந்து விட்டதை விசாரித்தறிந்து குதூகலத்துடன் பரஸ்பரம் பரிமாறிக்கொண்டார்கள்.

கச்சேரிப் பிரஸ்தாபங்களில் மகாவித்வான்கள் விசுவநாதபுரம் மகா ராஜப்பையர் (மூன்று ராஜப் பையர்களுக்குள் மகா பட்டம் பெற்றவர்), கூடலூர் மணி பாகவதர், ரத்னகரம் லக்ஷ்மணையங்கார், ஸங்கீத ஜீவன்ராவ் இவர்களின் பெயர்கள் நடமாடின.

வைதிகர்கள், "ஐயர் நன்றாகச் செலவு செய்யத் திட் டம் போட்டிருப்பதாகக் கேள்வி" என்று தங்கள் சபை அங்கத்தினர்களுக்குள் ஆசீர்வசனங்களுடன் புகழைப் பரப்பினர்.

பெரியவர்கள், சிறியவர்கள் எல்லோருக்கும் வேங் கடசுப்பையர் அகத்துக் கல்யாணமே பேச்சாக இருந்தது.

சிவராமன், வேங்கடசுப்பையர் இவர்கள் முறையே சியாமளாம்பாபுரம் பிரபுவும் மாப்பிள்ளையும் ஆனதால் மேற்படி கிராமத்திலிருந்து ஒரு பெரிய கோஷ்டி வந்து இறங்கியது. அதில் நாம் அறிந்த சீனு வாத்தியார், சேஷு சாஸ்திரிகள், மணி சாஸ்திரிகள், ஜோஸ்யம் ராகவையங்கார், ஐயாப்பயல் இவர்களின் வரவைப் பிரத்தியேகமாக நாம் குறிப்பிடுவது தகும்.

சம்பந்திகள் வந்தார்கள். நாகபூர் சம்பந்தி வந்து இறங்கினது தேவதைகள், தேவ ரிஷிகள், தேவ ஸ்திரீகள் இவர்களுடன் தேவேந்திரன் விமானங்களில் வந்து இறங்கினதுபோல் இருந்தது.

முத்துசாமியுடன் வந்தவர்கள் சிலரே. அவர்கள் ஐயர் பங்களாவுக்கு அடுத்த பங்களாவில் ஒரு பாகத்தில் இறக்கப்பட்டார்கள்.

மாப்பிள்ளை அழைப்பின்போது ஜகந்நாத்துடன் முத்துசாமியை ஒத்துப் பார்த்த ஜனங்கள் ஒருமனதான அபிப்பிராயத்தைக் கொடுக்கவில்லை. எதிலும் நவீனம், புராதனம் என்று இரண்டு உண்டல்லவா! ஒன்றைப் புகழ்கிறவர்கள் மற்றொன்றை இகழ்வது வழக்கம். அநேகமாகக் கட்சி பிரிகிறவர்கள் பக்ஷபாதம் உடையவர்களாகவே இருப்பார்கள். பக்ஷபாதத்தினால் குணதோஷங்களை உண்மையான மனத்துடன் விசாரிப்பதில்லை. இதனால் தோஷத்தைச் சிலாகிப்பதும் குணத்தை நிந்திப்பதும் ஏற்பட்டுவிடுகின்றன; அநீதி பிறக்கிறது; தத்துவ சோதனையில் ஊக்கமுள்ள பெரியவர்கள் பக்ஷபாதமற்ற மனத்துடன் ஒவ்வொன்றையும் பரீக்ஷித்துப் பார்த்துப் பழையது, புதியது என்பதற்காகக் கண்மூடித்தனமாக ஒரு தீர்மானம் செய்யாமல் கட்சிப் பிரிவுகளில் பட்டமான புத்தியுடன் மாட்டிக்கொள்ளாமல் உண்மையான குண தோஷங்களை விளக்கி நன்மையைப் போற்றித் தீமையைத் தவிர்க்கின்றனர். இதையே ஸ்ரீ காளிதாச கவியும் கூறுகிறார்.

வெளித்தோற்றத்தையே மதிப்பிடும் ஸ்தூல திருஷ்டிகள் அலங்காரத்துக்குத்தான் முதல் பரிசு அளிப்பார்கள். "வஸ்த்ரேண வபுஷா வாசாவித்யயா விநயேன ச" என்ற கிரமப்படி முதலில் வஸ்திரம் அல்லது டிரஸ் கௌரவிக்கப்படுகிறது. பின்னர் உருவம், ஒய்யாரம்; அடுத்தபடியாகப் பேச்சுத் திறமை, இவைகள் மூன்றையும் கண்டு யாரும் முதலில் பிரமித்துவிடுவார்கள். வித்தையின் தராதரத்தைச் சிலரே மதிப்பிட முடியுமாதலால் கௌரவிக்கப்படும் வரிசையில் அது நான்காவது ஸ்தானத்தைப் பெறுகிறது. கடைசியாக உள்ள விநயந்தான் உண்மையாகக் கௌரவத்துக்குப் பாத்திரமாக வேண்டியது. ஆனால் பார்த்த மாத்திரத்தில் இதை அறிந்துவிட முடியாது. நன்கு ஆராய்ந்துதான் அறிய வேண்டும். அப்படி ஆராய்பவரும் அறிந்துகொள்பவரும் அரிது. ஆனால் வித்தையின் பலன் விநயம்: "வித்யா ததாதி விநயம்" என்று மற்றொரு சுலோகம் இதைச் சொல்லுகிறது. விநயத்தை உண்டுபண்ணாத வித்தை தன் பலனை அடையாததோடு விபரீதத்தையும் விளைவிக்கும். இப்படியெல்லாம் சூக்ஷ்மமான விசாரம் செய்வது சாமான்யருக்குச் சாத்தியமாகாது. அவர்கள் ஆராய்ச்சி வெளித்தோற்றத்துடன் நின்றுவிடுகிறது. அந்த மோகத்திலிருந்து வெளிச்சத்தை அடைய வேண்டுமானால் மகான்களின் வாக்கியங்களை வழிகாட்டிகளாக அங்கீகரித்துப் பின்பற்ற வேண்டும். ஆனால் இருளே பழக்கமாகிவிட்டால் வெளிச்சத்தைத் தேடும் நினைவே ஒழிந்துவிடும். அத்தகைய மாந்தர் ஞான உணர்ச்சியைப் பெறாமல் பொது உணர்ச்சியிலேயே ஆட்டு மந்தை போல் ஊர்ந்து செல்கின்றனர்.

ஆகையால் அந்தக் கூட்டத்தில் பெரும்பாலோர் மதிப்பு ஜகந்நாத் பேரில் பெருகியது. அவன் முகத்தில் உத்தியோகக் களை ஒளி வீசியது. பருத்த மூக்கும் கரைந்த கன்னங்களும் தடித்த உதடுகளும் கனத்து முன் வந்த மோவாய்க்கட்டையும் விழித்த பார்வையும் மேடிட்ட

நெற்றியும் சிறு வளையமிட்ட காதுகளும் நீண்ட கழுத்தும் மெலிந்து நீண்ட உடலும் மங்கிய மழமழப்பான செம் மேனியும் உயர்ந்த முழங்கால்களும் விரிந்த பாதங்களும் ஜகந்நாதத்தின் அங்க லக்ஷணங்கள். விடாமல் ஜவிச் செப்பனிட்ட தலைக் கிராப்பும் அழகிய வரம்பிட்ட மூக்குக் கண்ணாடியும் தொங்கும் அங்கியும் தழைந்த தொடை உடையும் கனத்த கால் பூட்ஸூம் அவற்றைக் கண்ணிய நிலைக்கு உரியவையாக்கின.

அவன் பக்கத்தில் வீற்றிருந்த முத்துசாமி இவற் றுக்கு முற்றும் மாறான அங்க லக்ஷணம் உடையவன். நுனியில் சற்று வளைந்த உன்னத நாசியும் சதைப்பற் றுள்ள கன்னங்களும் இதழ் போன்ற உதடுகளும் சீரான மோவாய்க்கட்டையும் அரை வாசி மூடிய கண்களும் அகன்று பின் செல்லும் நெற்றியும் பெரிய வளையமிட்ட காதுகளும் சங்கு போன்ற கழுத்தும் அதிகப் பருமனும் உயரமுமில்லாத காத்ரமும் எழில் பொழியும் சுவர்ணச் சாயையும், பதிந்த பொருத்தமான முழங்கால்களும் பத் மம் போன்ற பாதமும் அவனுடைய அங்க லக்ஷணங்கள். அடர்ந்த, தலை நிறைந்த, கரிய குழல்முடிப்பும் நெற்றிச் சந்தன ரேகையும், கழுத்தைச் சுற்றி மாலை போல் அணியப்பட்ட புதிய ஜரிகை துப்பட்டாவும், அரையில் பாதம் வரையில் தழையத் தரித்த சேலம் வேஷ் டியும் காலில் மாட்டிய லேசான செருப்பு ஜோடியும் அவன் சோபையை எடுத்துக் காட்டின.

பர்வத சிகரம்போல் ஓய்யாரமாகவும் உறுதியுடனும் வீற்றிருந்த ஜகந்நாதத்தின் அருகில் சாந்தம் நிறைந்த முத்துசாமியின் முகம் முழுமதிபோல் பிரகாசித்தது. ஐச்வர்ய லக்ஷ்மி ஜகந்நாதத்தின் முகக் களையில் ஜொலித் தாளேயானால் முத்துசாமியின் முகக் களையில் வித்யா தேவதையின் விகாஸ லக்ஷ்மி தாண்டவமாடினாள். ஆனால் உலகம் கவிதையின் கண்ணொளியைப் பெறாதாகையால் வெவ்வேறு விதப் பிரமைக்கு உள்ளாகிறது. அங்கே நின்ற

ஆடவர்களில் பலர் முத்துசாமியைக் கண்காட்சிசாலைக்கு அனுப்பலாமென்றும், பொழுது விடிந்ததும் விவாகத்துக்குப் பூர்வாங்கமான வபனத்தின்போது அவனுக்கு ரங்கூன் கிராப்பை வைத்துவிடும்படி ரகசியமாகப் பரிகாரியிடம் சொல்லிவைக்க வேண்டுமென்றும் அவன் பிதுரார்ஜிதமான முத்துக் கடுக்கனை ஏலத்தில் விட்டால் ஐந்து ரூபாய்க்கு யாரும் சீந்தமாட்டார்கள் என்றும் மூக்குக் குத்திய மாடானதால் அவனைக் கயிறு போட்டு இழுக்கச் செல்லத்துக்குச் சௌகரியமாக இருக்கும் என்றும் அவன் ஸ்திரீபார்ட்டுக்கு லாயக்கானவனென்றும் அவனைப் பார்த்தால் பிருகந்நளை வேஷத்தில் அர்ஜுனனைப் பார்ப்பதுபோல் இருக்கிறதென்றும் இன்னும் பலவிதமாகவும் பரிகாசமாகப் பேசிக்கொண்டு பொழுது போக்கினார்கள்.

பெண்களில் பலர் ஜகந்நாத்தைப்பற்றி அவ்வண்ணமே பரிகாசப் பேச்சுக்கள் பேச விரும்பினாலும் பணக்கார உறவினர்களின் காதில் விழுந்துவிட்டால் என்ன செய்கிறது என்று பயந்து ரகசிய ஜாடைகளினாலேயே தங்கள் விமர்சனங்களை வெளியிட்டுக்கொண்டார்கள்.

"காந்திமதி அகமுடையான் நிறம் எப்படி?" என்றாள் சந்திரா.

"எண்ணெய் தடவிய பயறு போன்று பளபளப்பானது" என்றாள் பதிலுக்கு விமலா.

"மூக்குத்தான் மாப்பிள்ளை முகத்தை மறைக்கிறது" என்றாள் இந்திரா.

"திருவாவடுதுறை நந்திபோல்" என்று ஒட்டிச் சொன்னாள் மனோரமா.

"நெற்றி எப்படி?" என்றாள் பத்மினி.

"முனிசிபாலிடிக்கு எங்க்ரோச்மெண்ட் வரி செலுத்தும் குறடுபோல்" என்று பதிலுரைத்தாள் முத்து மீனாக்ஷி.

"காந்திமதி அகமுடையான் பக்கத்தில் செல்லத்தின் அகமுடையான் உட்கார்ந்திருப்பதைப் பார்த்தால் இது மாப்பிள்ளை அழைப்பா? அல்லது நாலாவது நாள் ஊர்வலமா? என்று சந்தேகமாயிருக்கிறது" என்றாள் மஞ்சுளா.

அதைக் கேட்டுப் பெண்களெல்லாம் சிரிப்பை மறைத்துக்கொண்டு சிரித்தார்கள்.

"இருந்தாலும் செல்லம் முதல் பிரைஸ் தட்டி விட்டாள்" என்றாள் மாலதி.

"உனக்கும் கூடிய சீக்கிரம் இப்படியே கிடைக்கும். ஏங்கிப் போகாதே!" என்றாள் ஸுசிலா, அவளை முழங் கையால் இடித்துக்கொண்டு.

இப்படி உல்லாசமாகச் சல்லாபம் செய்துகொண்டு வழி நடந்தார்கள் பெண்கள்.

ஆண்களின் பகுத்தறிவுக்குப் பெண்களின் இயற்கை அறிவு மேம்பட்டது. இதையேதான் மேற்குறித்த சம்பாஷணைகள் விளக்குகின்றன.

மறு நாள் நடந்த விவாக மகோத்சவத்தின் விமரி சைகளை வருணிக்கத் தேவையில்லை. எல்லாம் வழக்கம் போல்தான். ஆனால் ருசிகரமான சில அம்சங்களை மட்டும் தள்ளிவிட முடியாது.

மாலையிடும்போது மாமா சிவராமன் தோளில் வாகனமேறின காந்திமதி தன்னை எதிர்நோக்கி மாலையும் கையுமாக மற்றோர் உயர்ந்த வாகனத்தில் ஏறிக்கொண்டு விரைந்து வரும் நாயகனை ஆவலுடன் கடாட்சித்தாள்.

புகைப்படம் பிடிப்பவன் விசையை இழுத்ததும் 'லென்ஸ்' ஆகிற கண் திறந்து மூடுவதுபோல் அவ ளுடைய கண் திறந்து மூடியது. உள்ளே பிடிபட்ட சாயையை 'டெவலப்' செய்யக் காந்திமதி சிரத்தை எடுத் துக்கொள்ளவில்லை. சற்றுக் கனத்துத் தொய்யத் துவளும்

அவளுடைய கடாட்ச ரேகை பக்கத்தில் செல்லம் போடும் மாலையைத் தலை வணங்கி ஏற்றுக்கொள்ளும் முத்து சாமியின் முகத்தை நாடியது. பின்பு காந்திமதி கண் என்னும் கருவியை உபயோகப்படுத்தவே மறந்துவிட் டாள் என்று சொல்லலாம். விவாகம் நடந்ததே அவளுக்குச் சொப்பனமாக இருந்தது. உபாத்தியாயர் தன்னை எழுப் பிக் கூறும் வார்த்தைகளை ஒரு யந்திரப் பதுமைபோல் அவள் அநுசரித்து வந்தாள்.

செல்லமோ டார்ச்சு லைட்டைப் போடுவதுபோல் தன் முழுப் பார்வையினாலும் முத்துசாமியை அடிக்கடி கவனித்து வந்தாள். வாத்தியாருடன் போட்டி போடு பவன்போல் அவன் சிரத்தையுடன் திடமாக உச்சரித்து வந்த மந்திரங்களை ஓர் அக்ஷரம் விடாமல் அவள் காதில் வாங்கிக்கொண்டாள். ஹோமம் முதலிய கிரியைகளில் அவன் ஈடுபட்டிருக்கும்போது அவனுடைய காரியங்களைத் தானும் கூடச் செய்பவள்போல் மானசிகமாக அநு சரித்து வந்தாள். பக்கத்தில் இருப்பவர்கள் பரிகாசத்துக் கெல்லாம் அவன் சிரிக்காவிட்டாலும் தான் சிரித்து உத் சாகமளித்தாள். தம்பதிகள் ஒருவருக்கொருவர் கையைப் பிடித்துக்கொள்ள வேண்டுமென்று உபாத்தியாயர் சொன்னபோது விரலைமட்டும் நீட்டாமல் முத்துசாமியின் கையில் தன் முழுக் கையையும் கொடுத்தாள். நெருங்கி உட்காரும்படி உபாத்தியாயர் உத்தரவிட்டபோது அது தனக்குத்தான் என்று ஏற்றுக்கொண்டு அப்ப டியே பிரியத்துடன் அநுஷ்டித்தாள். ஒரு தரம் எழுந் திருந்து உட்காரும்போது உபாத்தியாயர் உத்தரவுக்கு முன்னமே செல்லம் நெருங்கி உட்கார்ந்ததில் முத்து சாமி அக்கினிக்கு நேரில் உட்கார முடியாமல் வடக்கே தள்ளி உட்காரும்படி ஆகிவிட்டது. வாத்தியார் கொஞ் சம் தெற்கே தள்ளி உட்காரும்படி அவளுக்குச் சொல்ல வேண்டியதாயிற்று. அதைக் கவனித்துக்கொண் டிருந்த ஓர் அம்மாமி, "செல்லம் இப்போதே ஆத்துக்காரர் மடியில் உட்கார்ந்துவிடுவாள்போல் இருக்கிறதே!" என்று

சொல்லிப் பக்கத்தில் இருந்தவர்களை நகைக்கச் செய்தாள். செல்லம் இதைக் காதில் கேட்டுக்கொண்டும் கோபித்துக் கொள்ளவில்லை. அவளும் சிரிப்பவர்களுடன் சிரித்துக் கொண்டாள். அப்போது ஒரு பெண், "கிளாஸ்மேட் தானே?" என்று சொன்னது முத்துசாமி காதில் விழுந்தது. அவன் சொன்னவளைக் கடைக்கண்ணால் ஆராய்ந்தான். அதை வெகுமானமாக அவள் நினைத்துக்கொண்டாள்.

சாயங்காலம் நலங்கு இடும்போது ஒரு கேலிக்கூத்து நடந்தது. மதுரப்பாட்டியின் அகத்துக்காரர் கல்யாணத்துக்கு வந்திருந்தார். அவர் மயிலாப்பூரில் ஒரு கனவான் வீட்டில் வெகு காலமாக வேலை செய்துகொண்டு வந்தார். அவர் பெயர் கல்யாணராம ஐயர். வயது எழுபதுக்குக் குறையாது; திடசரீரம்; இப்போதும் அண்டாவை ஒரு மூச்சில் புரட்டுவார்; உத்சாக புருஷர்; யாரோ காலையில் தலையில் சுற்றிய புஷ்பத்தை கழன்றுவிடாமல் நரைமயிரில் சாயங்காலம் வரையில் பாதுகாத்து வந்தார். சிவராமன் நலங்கு வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்த கல்யாணராம ஐயரைக் குதூகலத்துடன் அழைத்தார்: "என்ன கல்யாணராமையர்! குழந்தைகள் நலங்கு இடும் வழி தெரியாமலும் சங்கோசத்தினாலும் திக்குமுக்காடுகிறார்கள். வீண் காலதாமதம் ஆகிறது. பெரியவர்கள் குழந்தைகளுக்கு வழி காண்பித்தால் நன்றாயிருக்கும். என்ன சொல்கிறீர்? பக்கத்தில் ஒரு பட்டுப் பாய் விரிக்கச் சொல்லுகிறேன். நீர் உட்காருவதாக இருந்தால் உமக்கு ஒரு ஜோடி மாப்பிள்ளை வேஷ்டியும் மதுர அம்மாமிக்குப் பட்டுப்புடைவை ரவிக்கையும் இதோ ஸாங்கிஷன் செய்கிறேன். கல்யாண வேடிக்கைதானே! ஏன்? சங்கோசமாயிருக்கோ?" என்று வெகுண்டையாக ஆரம்பித்தார். அங்கிருந்தவர்கள் பூராவாக மிக்க குதூகலத்துடன் சிவராமனின் பிரேரணையை ஆமோதித்தார்கள். கிழவரும், "சங்கோசமென்ன? எனக்கு ஆக்ஷேபமில்லை; நான் ரெடி!" என்று பதில் சொல்லிக்கொண்டு ஒரு தரம் எழும்பிக் குதித்தார். அப்போது அவர், தாம் பதினாறு வயது யுவனாகிவிட்

டதை நிரூபித்தார் போலும். தாழ்வாரம், முற்றம், கூடம் முழுவதும் இருந்த பெண்டுகள், புருஷர்கள் எல்லோரும் கொல்லென்று சிரித்தார்கள். ஒரு சிறு பெண்கள் கோஷ்டி உடனே மதுரப்பாட்டியிடம் சென்று பாட்டியை வட்டமிட்டுக்கொண்டு நலங்குக்கு எழுந்திருக்கும்படி கூப்பிட்டுக் கைகொட்டிச் சிரித்தார்கள். உத்சாக வெள்ளம் அளவு கடந்து பெருகியது. சிவராமன் சம்சாரம் மீனு மட்டிலும், "இந்தக் கேலிக் கூத்தெல்லாந் தான் இவருக்குப் பிடிக்குமே" என்று சற்றுச் சலிப்புடன் முணுமுணுத்தாள்.

மதுரபாட்டி, "போங்கோடி போங்கள்! உங்களுக்கு வேலையில்லை!" என்று முகத்தைத் திருப்பிக்கொண்டாள். அதற்குள் ஒரு பெண் சிவராமனிடம், 'அகத்துக்காரர் வந்து நலங்குக்கு அழைக்க வேணும்டுமாம். அப்போது தான் பாட்டி எழுந்திருப்பாளாம்" என்று செய்தி சொன்னாள். இதைக் கேட்ட கிழவர், "அது எப்படி முடியும்? எல்லாம் சம்பிரதாயப்படி நடக்கட்டும். பெண் தான் பிள்ளையைப் பாட்டுச் சொல்லி நலங்குக்கு அழைப்பது வழக்கம்" என்று கர்ஜித்தார். "என்ன பாட்டு, தாத்தா!" என்று கேட்டாள் ஒரு சிறுமி. உடனே தாத்தா, "நலுகுகு லேசி ராரா நந்தகுமாரா" என்று வணக்கத்தையும் லஜ்ஜையையும் அபிநயித்துக்கொண்டு ஒரு பெண் பாடுவதுபோல் பச்சைக் கிளி கூவும் தொனியில் பாட ஆரம்பித்துவிட்டார். சிரிப்பு தீபாவளிப் பட்டாசுபோல் இடைவிடாமல் வீடெல்லாம் எதிர் ஒலி கேட்கும்படி வெடித்தது. சிவராமன், 'ஒன்ஸ் மோர்' என்று சத்தம் போட்டார். இந்தச் சந்தடியில் செல்லம் முத்துசாமியைப் பார்த்துச் சிரிப்பை அடக்கமுடியாதவள்போல் குலுங்கக் குலுங்கச் சிரித்தாள். முத்துசாமியும் மந்தஹாஸ வதனத்துடன் விநோதங்களை அநுபவித்து வந்தான்.

காந்திமதியும் சிரிக்காமல் இல்லை. ஆனால் அவள் சிரிப்பு, சந்தேகத்துடன் இருதயத்தில் ஒட்டாமல் இருந்

தது. ஏனெனில் ஜகந்நாத், "பார் இந்த முட்டாள்களை" என்று சொல்லுவதுபோல் அவளை நோக்கிச் சிரித்தானே ஒழிய விநோதங்களை அநுபவிக்கும் ரீதியில் சிரிக்கவில்லை.

ஜகந்நாத்துக்கு இந்த விளையாட்டுகள் திருப்தி அளிக்கவில்லை போலும்! கீழ்த்தரத்தவர்களின் விகட விநோதங்களில் மேல்தரத்தவர்கள் கலந்துகொள்வது மதிப்புக்கு ஏற்றதில்லை என்று எண்ணினான்போலும்!

இந்த அமர்க்களங்களுக்கு நடுவே உபாத்தியாயர் புகுந்து, "இப்படிப் பொழுது போக்கிக்கொண்டிருந்தால் என்ன அர்த்தம்? நலங்குக்குப் பிறகு காரியங்கள் இல்லையா? ஹாம், ஹாம், சீக்கிரம் ஆகட்டும்" என்று வெருட்டினார். சில புருஷர்கள், "பாடுகிறவர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். அவர்களைப் பாடச் செய்தாலும் கேட்கலாம்" என்று ஞாபகப்படுத்தினார்கள். அதற்கு மேல் நலங்கு நடந்தது. அதில் உஷாவின் பாட்டு கவர்ச்சிகரமான ஓர் அம்சம்.

கல்யாணத்தில் குறிப்பிடக் கூடிய வேறு விசேஷம் இல்லை.

ஐயாப்பயல் மட்டும் பக்ஷணங்களை நினைத்த போதெல்லாம் அளவுக்கு மிஞ்சித் தின்றுவிட்டு வாந்தியும் சுரமுமாகக் கிடந்தான். சீனுவாத்தியார் அவனால் ஏற்பட்ட கவலையினால் சற்று உத்சாகம் குன்றிக் கிலேசப்பட்டுக்கொண்டார்.

முத்துசாமிக்கு வைரக் கடுக்கன் கல்யாணப் பரிசாக அளிக்கப்பட்டது. மாப்பிள்ளை அலங்காரத்தில் அவனைப் பார்த்தால் திருஷ்டியாகப் போய்விடும்போல் இருந்தது. முத்துசாமியின் தாயார் கண் குளிர அந்தக் காட்சியைப் பார்த்தாள்; ஆனந்தக் கண்ணீர் உதிர்த்தாள்; செல்லத்தைத் தன் வயிற்றில் பிறந்த பெண்ணைப்போல் அபிமானித்தாள்; தழுவி முத்தமிட்டுக்கொண்டாள். மகா ஆசார சீலரான உத்தமமான தன் பர்த்தாவின்

அநுக்கிரகந்தான் இந்த வைபவங்களுக்குக் காரணம் என்று உள்ளம் பூரித்தாள்.

சீதாராமன் பரீக்ஷை முடிந்ததும் ஊருக்குப் புறப்பட்டான். அவனுடைய விவாக முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டு அழைப்புப் பத்திரிகையும் அச்சுப்போட்டுப் பந்துமித்ரர்களுக்கு அனுப்பப்பட்டது. சேஷு சாஸ்திரிகளும் மணி சாஸ்திரிகளும் காந்திமதி கல்யாணத்துக்கு வந்துவிட்டுப் போகும்போது ஸ்ரீ வேங்கடசுப்பையரிடமும் அவர் குடும்பத்தவர்களிடமும், "எங்கள் ஏழைக் கல்யாணத்தை உங்கள் வரவினால் பெருமைப்படுத்தவேண்டும்" என்று பிரார்த்தித்துக்கொண்டிருந்தார்கள். சீதாராமனும் ஐயர் அவர்களின் அடிபணிந்து, நன்றி உணர்ச்சியால் தழுதழுத்த குரலில், "தாங்கள் நேரில் வந்து என்னை அநுக்ரகிக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான்.

ராமநாதனிடம் அவன், "நீ வருவாய் என்று நம்புகிறேன், ராமநாதா! மோசம் செய்துவிடாதே. உன்னைக் காணாவிட்டால் ஆயிரம்பேர் வந்திருந்தாலும் என்னைத் தனிமை உணர்ச்சி தழுவிக்கொள்ளும்" என்று உண்மை நட்புடன் சொல்லி விடைபெற்றுக்கொண்டான்.

சங்கரி அம்மாள் தான் சில தினங்களில் செல்லத்தை அழைத்துக்கொண்டு சியாமளாம்பாபுரம் வருவதாகச் சிவராமனிடம் சொல்லிச் செல்லத்தை நிறுத்தி வைத்துக்கொண்டு சிவராமனை மீனுவுடன் ஊருக்கு அனுப்பியிருந்தபடியால், அவள் சீதாராமனுடன் சியாமளாம்பாபுரத்துக்குச் செல்லத்தைக் கொண்டுபோய் விடுவதற்காகவும் சீதாராமனின் கல்யாணத்தை உத்தேசித்தும் பிரயாணமானாள்.

முத்துசாமி ஸ்தாலீபாகத்துக்குச் சியாமளாம்பாபுரம் போகவேண்டியிருந்ததால் இரண்டு நாள் தங்கி, சீதாராமனின் கல்யாணத்தையும் விசாரித்துக்கொள்ளலாம் என்று யோசித்திருந்தான்.

சியாமளாம்பாபுரத்தில் கல்யாண முழக்கம் முழங்கலாயிற்று. மணி சாஸ்திரி பிரபல தனவந்தர் அல்ல என்றாலும் மனுஷ்ய சகாயம் அதிகம் உள்ளவர். மைத்துனன் கோபாலன், மாமனார் ராமஸ்வாமி ஐயர் இவர்களின் ஒத்துழைப்பினாலும் உத்சாகத்தினாலும் மணியின் பளு மிகவும் குறைந்தது. ஊர் லௌகிகர்களும் வைதிகர்களும் மணி வீட்டுக் கல்யாணத்தைத் தங்கள் தங்கள் கல்யாணமாக நினைத்துப் பொறுப்பு எடுத்துக்கொண்டார்கள். மணி ராமாயண பாகவதப்ரவசனம், காவ்ய சாஸ்திர பாடங்கள் சொல்வது முதலிய ஸாத்விக சேவைகளில் ஊர் வாசிகளுக்கு உபகரித்துவந்ததால் அவர்கள் மதிப்பைப் பெற்றிருந்தார். தம் ஆத்மார்த்த அநுஷ்டானங்களுக்குக் குறைவில்லாமலும் பராச்ரயம் இல்லாமலும், புண்ணியமானதும் கண்ணியமானதும் தனக்கும் பிறருக்கும் இம்மையில் ஆனந்தத்தையும் மறுமையில் நன்மையையும் தரக்கூடியதான ஸத்கதா பிரசாரத்தைத் தம் வாழ்க்கையில் இணைத்துக்கொண்டு அனைவராலும் கௌரவிக்கத் தகுந்தவராக விளங்கி வந்த மணி சாஸ்திரிகள் ஒரு பாக்கியசாலி என்றே எல்லோராலும் கருதப்பட்டார். அவர் பெண் கல்யாணத்தில் காசுச்செலவு செய்து சம்பாதிக்க வேண்டிய சிறப்பெல்லாம் அன்புக்கும் மதிப்புக்கும் அடைக்கலமாகிக் கூடியிருந்தன. ஐசுவரியவான்கள் ஐசுவரியத்தையும், சாமர்த்தியசாலிகள் சாமர்த்தியத்தையும், வித்வான்கள் வித்துவத்தையும் அவருக்கு அர்ப்பணம் செய்யப் பிரியத்துடன் வந்தார்கள். சௌ. ஸரஸ்வதியின் கல்யாணத்தில் ஏராளமான ஜனங்கள் சாப்பாடு; நல்ல வைதிகச் செலவு. சம்பந்திச் சீர்கள் விமர்சையானவை; சங்கீதக் கச்சேரிகள் பல.

ஆசீர்வாதத்தின்போது பிள்ளை வீட்டு வாத்தியார், பெண் வீட்டு வாத்தியார்களைத் தவிர இரண்டு மூன்று பேர்களுக்கு வேலை சரியாக இருந்தது. முதலில் ஸ்ரீ வேங்கடசுப்பையரின் ஆசீர்வாதம் பிள்ளைக்கு ரூபாய் ஆயிரம்; பெண்ணுக்கு ரூபாய் ஆயிரம். ராமநாதன் தான்

நேரில் வரமுடியாததற்கு ஒரு நீண்ட மன்னிப்புக் கோரும் கடிதத்துடன் பிள்ளைக்கு ரூபாய் ஆயிரத்துக்கு ஒரு செக் அனுப்பியிருந்தான். அக்கிரகாரப் பிரமுகர்களும் (சிவராமன் உள்பட) வியாபாரிகள், உத்தியோகஸ்தர்கள் முதலியவர்களும் ஐந்தும், பத்தும், நூறும் ஓதியிட்டார்கள். பல வெள்ளிப் பாத்திரங்கள் பரிசளிக்கப்பட்டன. மணி சாஸ்திரிக்குப் பெண்ணின் கல்யாணத்தில் விரயமும் ஆதாயமும், சரிக்கட்டிப்போகும் நிலையில் இருந்தது.

சேஷு சாஸ்திரிகளுக்கும் வேம்புவுக்கும் நிரம்ப சந்தோஷம். தங்களை மணி ஏமாற்றிவிட்டான் என்று அவர்கள் நினைக்காமல் இருப்பதற்காக மணி கல்யாண வரும்படிகளை எல்லாம் சீதாராமன் பேரில் பாங்கில் போட்டுவிட்டார். அத்திம்பேருக்குச் செலவு ஒன்றும் இல்லாதபடி தானே எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு கணக்குத் தீர்த்தார். சேஷு சாஸ்திரிகளும் அதற்குமேல் ஆசைப்படவில்லை. மணி இவ்வளவு விதரணையாகச் செய்வானென்று அவர் எதிர்பார்க்கவில்லை. வேம்புவுக்கும் திருப்திதான். நாகுவிடம் குணத்தையும், ஸரஸ்வதியினிடம் அழகையும் அவள் புதிதாகக் கண்டுகொள்ள ஆரம்பித்தாள். ஊரார் மதிப்புக்கும் உறவினர் மதிப்புக்கும் அவ்வளவு சம்பந்தம் இருக்கிறது. ஐச்வரியமும் அந்தஸ்தும் வாழ்க்கையின் யௌவனதசைக்குரிய செழுமையை மனிதனுக்கு அளிக்கின்றன. அந்தச் சோபையைப் பெற முடியாதவன் அகாலத்தில் மூப்பும் பிணியும் பிடித்தவன்போல் பந்துக்களால் வெறுக்கப்படுகிறான்.

ஸரஸ்வதியைத் தன் குடும்பத்துக்கு லட்சுமியாகவே வேம்பு மதித்தாள். நாகுவிடம் நாத்தித் தன்மையைக் காண்பிக்காமல் வெகு கண்யமாக நடந்துகொண்டாள். ஆனால் நாகுவுக்கும் வேம்புவிற்கும் ஒரு வித்தியாசம் உண்டு. நாகு முன்னுக்குப் பின் ஒத்துப்பார்த்து நடவடிக்கைகளை நிதானிப்பவள். வேம்பு தற்கால சாதகத்தை மட்டும் குறிவைப்பவள். மனுஷ்ய ஜாதியிலேயே இப்படி ஒரு

ஸூக்ஷ்மமான பாகுபாடு இருக்கிறது. இதற்கு மிருகங்களிலிருந்தே திருஷ்டாந்தம் கொடுக்கலாம். ஸம்ஸ்கிருதத்தில் அஜகஜாந்தரம் என்று சொல்லுவார்கள். இது ஆகிருதி வித்தியாசத்தை மட்டும் குறிப்பதாக நினைக்கக் கூடாது. சுபாவ வித்தியாசந்தான் அதில் முக்கியமானது. கஜம் மானி; தனி மதிப்புக்கு உரியது; தனக்கு ஒருவன் செய்த நன்மை தீமைகளை வெகுகாலம்வரையில் மறக்காது; தீங்கிழைத்த எதிரி மாறுவேஷம் போட்டாலும் அவனை அறிந்துகொள்ளும். அஜம் தழை தின்பதைத் தவிர வேறு உணர்ச்சிகளை அறியாதது; சாதாரண இனத்தைச் சேர்ந்தது. ஸ்திரீகளுக்குப் பழக்கத்தால் பர்த்தாவின் குணங்கள் படியும் என்று வேணீஸம்ஹாரத்தில் கூறப்படுகிறது. அரிய விற்பன்னரான மணி சாஸ்திரிகளின் வாழ்க்கைத் துணைவி நுட்பமான அறிவு உணர்ச்சிகள் உடையவளாக இருந்ததில் வியப்பில்லை.

கல்யாணம் ஆனதும் ஊருக்குப் புறப்படும்போது ஸ்ரீ வேங்கடசுப்பையர் சீதாராமனுக்குத் தம் ஆபீஸில் வேலை ஒன்று ஒதுக்கி வைத்திருப்பதாகவும், அதை அவன் உடனே வந்து ஒப்புக்கொள்ள வேண்டுமென்றும், படிப்பு வேலையை இறுதி நோக்கமாக உடையதாகையால் வேலை கிடைக்கும்போது அதை விட்டுவிட்டுப் படிப்பைத் தொடர்வது முக்கியமில்லை என்றும் வற்புறுத்தினார். சாஸ்திரிகளுக்குப் பரம சந்தோஷம். தான் குடும்பி ஆதலால் பையன் சம்பாதிக்க வேண்டியது மிக்க அவசியம் என்று அவர் எடுத்துக் காட்ட யத்தனித்ததில், தன் குடும்ப யோக க்ஷேமத்தின் அவல நிலையை அதிகம் விஸ்தரிக்கத் தொடங்கிவிட்டார். மணி சாஸ்திரிகள் அதை ஓரளவில் கட்டுப்படுத்தும்பொருட்டுக் குறுக்கே பேசி, தனவந்தர்களின் உபகார சிந்தனை தங்கத் தாமரைப் புஷ்பத்தின் வாசனைபோல் என்ற உபமானத்தை எடுத்துக் கொண்டு, காளிதாஸர், வால்மீகி, நீலகண்ட தீக்ஷிதர் முதலிய மகாகவிகளின் சுலோகங்களை உதாகரித்து உபந்நியாசம் செய்யலானார்.

இப்போது சீதாராமன் ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் கம்பெனியில் தான் பெற்ற ஸ்தானத்திலிருந்து படிப் படியாக ஏறி வலுவாக ஊன்றிக்கொண்டு விட்டான். ஐயர், தாம் 'ரிடையர்' ஆகும்போது தம்முடைய இடத்தில் அவனை அமர்த்திவிட உத்தேசித்திருக்கிறார் என்பதில் சந்தேகமில்லை.

ஸரஸ்வதியும் சீதாராமனும் தனிக்குடித்தனம் செய் கிறார்கள். ஓழிந்த நேரங்களில் நைஷதம், பாரதசம்பு, முராரி நாடகம் முதலிய உயர்ந்த ஸாகித்ய கிரந்தங்களைப் படித்து ஆனந்திப்பது அவர்களின் பொழுது போக்காக இருக்கிறது.

முத்துசாமி ஹைஸ்கூல் இறுதிப்பரீக்ஷையில் ஒப் பற்ற ரீதியில் மார்க்குகள் வாங்கியிருந்ததால் காலேஜில் உபகாரச் சம்பளத்துடன் சேர்த்துக்கொள்ளப்பட்டான். அங்கும் அவன் முதல் பரிசுக்கு உரியவனாகவே எல்லாக் கட்டங்களையும் தாண்டி மேலும் அரசாங்க உபகாரச் சம்ப ளத்துடன் லா காலேஜில் சேர்ந்தான்.

முத்துசாமி தன் தொழில் வழியைத் தேர்ந்தெடுக்கச் சொல்லப்பட்டபோது, வக்கீல் தொழிலையே விரும்பினான்.

அதில் உயர்ந்த கல்வி அறிவு பரந்து கிடப்பதுடன், சேவக விருத்தியில்லாமல், (அதிருஷ்டம் இருந்தால்) அபரி மிதமான வருமானத்துக்கு உத்தரவாதம் இருப்பதனா லும், அது தன் சுயேச்சை, குலாசாரம், பண்பு, தனிப் பட்ட அபிருசிகள் இவற்றையும் குறைவில்லாமல் அநு சரித்துக்கொண்டு நடத்தக் கூடியதாகையினாலும், அதனால் பல பொதுஜனங்களின் பரிசயம், பற்று ஏற்பட்டு மதிப் பும் முக்கியத்துவமும் அடைய ஹேது இருப்பதாலும், அதுவே தனக்கு உசிதமான தொழில் என்று அவன் தீர்மானித்துக்கொண்டான்.

முத்துசாமி ஸ்ரீமான் வேங்கடசுப்பையர் வீட்டில் சில காலம் இருந்து பின்பு, சிவராமன் பட்டணத்தில் தன்

ஜாகையை ஏற்படுத்திக்கொண்டதால் மாமனாருடன் வசிக்கலானான். சிவராமனுக்குக் கடன் தொல்லைகள் ஒழிந்து வரவேண்டிய தொகைகளும் எதிர்பாராத விதமாகக் கைக்கு வந்ததால் தெம்பு உண்டாகிவிட்டது. செலவு விஷயத்தில் சிவராமன் இப்போதெல்லாம் வெகு நிதானம். முத்துசாமியைப் பார்த்துக்கொண்டு ஆசாரம், சீலம் இவைகளின் பெருமையை உணர்ந்து சிவராமன் தம் பழக்க வழக்கங்களை முற்றும் மாற்றிக்கொண்டுவிட்டார். ஸத்காலக்ஷேபம், வேதாந்த பாடம் இவைகளில் ஈடுபட்டு நல்ல பொழுதாகப் போக்கத் துவக்கினார். அதைக் கண்டு மீனா அடைந்த ஆச்வாசத்துக்கு அளவில்லை. மாப்பிள்ளையிடம் மீனுவுக்கு அபார மதிப்பு ஏற்பட்டுவிட்டது.

தன் படிப்பிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தாலும் முத்துசாமி செல்லத்தின் அளவுகடந்த ஆசை வெள்ளத்தையும் பரமேச்வரன் ஆகாயத்திலிருந்து விழும் கங்கையைத் தாங்கினதுபோல் தாங்கிக்கொண்டு அவளைச் சுமுகமாக இருக்கச் செய்வதில் சிரத்தையுள்ளவனாக இருந்தான். ஆரம்பத்தில் அதிலும் ஒரு கண்டம் ஏற்பட்டது. அதிலிருந்து அவன் சாமர்த்தியமாகத் தப்பித்துக்கொண்டான். சிவஸ்கந்த சர்மா ஒரு சுய அபிமான முள்ள எழுத்தாளன் ஆனபடியால், தான் சிருஷ்டித்த 'வெந்த உள்ளத்தின் கவிதை'யை அவன் ஒரு கதையில் புகுத்தி ஒரு பத்திரிகையில் பிரசுரிக்கச் செய்திருந்தான். அதன் பிரதி ஒன்றைக் காந்திமதி நாகபுரியிலிருந்து செல்லத்துக்குத் தபாலில் அனுப்பிவைத்தாள். செல்லம் அதைப் பார்த்து ஆச்சரியமும் சந்தேகமும் கலக்கமும் அடைந்தாள்.

"எப்படி இது சர்மாவிடம் சென்றது? யார் அனுமதியின்பேரில் அவன் இதைப் பிரசுரித்தான்?" என்றெல்லாம் முத்துசாமியின்பேரில் கடுமையான குறுக்கு விசாரணையைத் தொடர்ந்துவிட்டாள். முத்துசாமிக்குத் தான் அக்கவிதத்தின் சிருஷ்டிகர்த்தா அல்ல என்று சொல்

லிக்கொள்வதற்கு இப்போதும் சந்தர்ப்பம் சரியாக இல்லை. தனக்காக முத்துசாமி வெந்த உள்ளமாகித் தவம் கிடந்து தன் கருணையைப் பெற்றான் என்ற மனோபாவத்தைச் செல்லம் வெகுநாளாகவேரூன்றச் செய்து வளர்த்துவந்ததால் அந்த வேரை இப்போது களைந்தால் தாம்பத்ய பாவத்தில் அதிர்ச்சி ஏற்பட்டு விபத்தில் வந்து முடியும் என்று முத்துசாமிக்குப் பட்டது. ஆகையால் இந்தத் தர்ம சங்கடத்தில் அவன் மழுப்பினாற்போல் பதில் சொல்ல நினைத்தான்.

"ஒரு கல்லினால் இரண்டு மாங்காய்கள் விழலாம் அல்லவா?" என்றான் அவன்.

"ஆனால் சர்மாவுக்குக் கமலியின் நட்பைத் தந்ததும் இந்தக் கவிதைதானா?" என்று கேட்டாள் செல்லம்.

"ஆம்" என்ற அர்த்தத்தில் தலை அசைத்தான் முத்துசாமி.

"அப்படியானால் நீங்கள் எழுதிய காதல் கவிதையைச் சர்மாவிடம் விலைக்கு விற்றீர்களா?" என்று கோபாவேசம் கலந்த பரிகாசத்துடன் கேட்டாள் செல்லம்.

"ஆமாம்! அப்போது அவன் எனக்குச் சாப்பாடு போட்டான் அல்லவா?" என்று முத்துசாமியும் சற்று அசடு தட்டிய பரிகாசத்துடன் பதில் கூறினான்.

"இந்தாருங்கோ! இந்த விளையாட்டு என்னிடம் வேண்டாம். என்னிடத்தில் நிஜத்தைச் சொல்லிவிடுங்கள். எனக்கு அழுகை வரும்போல் இருக்கிறது" என்றாள் படபடப்புக்காரியான செல்லம், கண்களில் நீர் ததும்ப, முத்துசாமியின் இரண்டு கைகளையும் பிடித்துக்கொண்டு. அப்போது அவன் முகத்தை அவள் உறுதியுடன் பார்த்தது அவன் கண் கருவிழியில் பிரதிபலிக்கும் தன் உருவத்தை அவள் உற்று நோக்குவதுபோல் இருந்தது. முத்துசாமி அவளுக்குச் சமாதானமளிக்க வேறு வழியில்லாமல், "செல்லம்! என்னைக் கேட்கிறாயே? எனக்கு எப்

படித் தெரியும்? அவன் அதைத் திருடிப் பிரசுரித்திருந் தால் அதற்கு நானு ஜவாப்தாரி" என்று சொல்லி வைத்தான்.

"அப்படித்தான் இருக்கவேண்டும். ஆனல் திருட னைச் சும்மா விட்டுவிடலாமா? இந்தக் கவிதையின் காப்பி ரைட் உங்களுடையதுதானே? நீங்கள் ஏன் அந்த மானங்கெட்டவனுக்கு நோட்டீஸ் கொடுக்கக்கூடாது?" என்று கர்ஜித்தாள் செல்லம்.

முத்துசாமி வக்கீல் பரீக்ஷைக்குப் பின் செல்லத்தி னிடமே தான் 'அப்ரென்டிஸ்' ஆக இருப்பது தகும் என்று நினைத்துக்கொண்டான்.

"பிறர் கேஸ்களை நடத்தும் தொழிலில் பயிற்சிபெறும் நான் முதலிலேயே சொந்தக் கேஸின் நிமித்தம் கச்சேரி யில் தலை நீட்டுவது எவ்வளவு அவமானம்?" என்று சொல்லிச் சமாளித்துக்கொள்ளப் பார்த்தான் முத்துசாமி.

"என்ன நீங்கள் சொல்லுகிறது விந்தையாக இருக் கிறதே! லா காலேஜில் சேர்ந்துவிட்டால் சொந்தப் பாத்தி யதைகளை எல்லாம் விட்டுவிட்டு அது முதல் பிறர் பாத்திய தைகளை ஸ்தாபிக்கவே விரதம் பூணவேண்டும்போல் இருக் கிறது? அப்படித்தானே?"

"இல்லை" என்றான் முத்துசாமி, செல்லத்தின் வாதிக்கும் திறமையைக் கண்டு உள்ளம் மலரும் சிரிப் புடன்.

"இல்லை! அப்புறம் மேலே என்ன?" என்று வெருட்டினாள் செல்லம்.

"மேலே காப்பிரைட் வியாஜ்யம் தொடரவேண்டியது தான்" என்றான் முத்துசாமி இன்னும் விரிவாகச் சிரித் துக்கொண்டு.

"அதைத்தான் நான் சொல்லுகிறேன்" என்று சற்று ஆச்வாசப்படுத்திக்கொண்டாள் செல்லம்.

முத்துசாமி சிறு நகை நகைத்துக்கொண்டு பேச ஆரம்பித்தான்: "சரி, எப்படிப் பிராது எழுதுகிறது? எழுதிப் பார்க்கலாமா?—'இந்த வாதி ஸ்கூல் மாணவி செல்லம் என்ற மடமயிலின் பள்ளித்தோழனாக இருக்கும்போது மேற்படி செல்லமென்கிற மடமயிலின் தோகை விரித்தாடும் ரூபலாவண்யங்களினால் வசீகரச் சுழலில் சிக்கி மதிமோகம் கொண்டு தவித்துத் தடுமாறி உருகி உள்ளம் வெந்து...' "— முத்துசாமி மேலே வாக்கியத்தைச் சேர்க்கத் திணறுபவன்போல் சற்று விழித்தான்.

"சரி, போரும்! போரும் போங்கள்" என்று சொல்லிக்கொண்டு அப்போது செல்லம் தன் கையில் இருந்த பத்திரிகையினால் முத்துசாமியின் வாயை மூடினாள். அவளுக்குப் பிரஸ்தாபப் பிராது கொடுக்கப்பட்டால் தன் காதல் சரித்திரம் நடுக் கச்சேரியில் அம்பலமாக்கப் படும் என்பது புலப்பட ஆரம்பித்தது.

"இந்தத் தஸ்தாவேஜியின் தத்துவத்தை நிரூபிக்க நீயும் கூட்டில் ஏறவேண்டும்" என்றான் முத்துசாமி, அவள் கையை அப்பால் நகர்த்திப் பிடித்துக்கொண்டு.

"நீங்கள் பேசாமல் இருக்கமாட்டீர்களா? நான்தான் அந்தப் பேச்சை விட்டுவிட்டேனே?" என்று அதட்டினாள் செல்லம்.

"எப்படியும் நம்பன் பாத்யதையை விட்டுவிடலாமா? வந்தது வரட்டும் என்று துணிய வேண்டியதுதான்" என்று முத்துசாமி அவளைக் குறும்புக்காக உத்சாகப்படுத்தினான்.

"அவன் தொலையட்டும் போங்கள். நமக்குச் செலவில்லாமல் அந்தக் கவிதையை அச்சுப் போட்டுக் கொடுத்ததற்கு அவனை மன்னித்து விடுங்கள்" என்று சொல்லிச் சிரித்துவிட்டு அவள் மேலும் முத்துசாமி அந்த வியாஜ்ய வருணனையை விஸ்தரிக்காமல் இருக்கும் பொருட்டு உள்ளே ஓடிவிட்டாள்.

சர்மா கமலியுடன் இனிது காலம் கழித்து வருகிறான். பணமும் பெண்டாட்டியும் ஒரே அதிருஷ்டத்தில் கிடைத்த பெருமை அவனுக்குப் பொங்கி வந்தது. வெறியனைப் போல் அவன் தலைசுற்றி ஆடுவான். அவன் மோகாவேசத்தைக் கமலியினால் தாங்க முடியவில்லை. சில சமயம் அவள் தான் இரண்டு லோகங்களுக்கும் விருத்தமாக ஆத்திரப்பட்டு தன்னை மறு விவாகத்தில் ஒருவனிடம் ஒப்புவித்துக்கொண்டது புத்திசாலித்தனமா என்று ஆராய்ந்துபார்த்துத் தனிமையில் பெருமூச்சு விடுவாள்.

ராமநாதன் "கல்யாண"ப் பிரஸ்ஸை உன்னத நிலைக்குக் கொண்டுவந்து விட்டான். அவனிடத்தில் உழைப்பும் ஊக்கமும் இருந்தன. மேலும் சீதாராமனின் மதியையும் முத்துசாமியின் நீதியையும் அவன் அடிக்கடி கலந்து பயன்படுத்திக்கொண்டான். அவன் 'பிஸினெஸ்' இப்போது வெகு விரிவாக நடக்கிறது. உஷா அவன் நிழல் போல் அவனை அநுசரித்து வாழ்க்கை நடத்துகிறாள். அவள் அன்பால் அவன் கிலேசம் என்பதையே அறியாதவனானான். இருவருடைய நேசமும், ஜீவந்தியும் சமுத்திரமும் ஸங்கமமாகும் இயற்கைப் பெருமை வாய்ந்த அமோகமாக விளங்குகிறது.

பதுமாவும் சக்கரபாணியும் சினிமாத் தொழிலில் எல்லையற்ற பணப்பெருக்கால் ஆகாச மாளிகை கட்டி வாழ்கிறார்கள். அழகிரியும் பாக்கியலக்ஷ்மியும் அந்த ஐசுவரியக் காட்டாற்று வெள்ளத்தில் உத்சாக போதை கொண்டு புரண்டுகொண்டிருக்கிறார்கள். பாக்கியலக்ஷ்மி உஷாவுக்குக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி விட்டாள்.

காந்திமதியின் கணவன் இன்ஜினீயர் பரீக்ஷையில் முன்னணியில் தேறி உடனே கைமேல் உத்தியோகத்தைப் பெற்று மத்திய இந்திய மாகாணத்திலேயே வேலை பார்த்து வருகிறான். அவன் உயரிய குணங்களில் காந்தி

மதிக்கு மிகவும் மன உல்லாசம் ஏற்பட்டு, அவள் அன்புடனும் ஆதரவுடனும் பத்தினி தர்மத்தைக் கடைப்பிடித்து வருகிறாள்.

சிவராமன் காந்திமதியை நாக்பூர் போய்ப் பார்த்து வந்தபோது அவள் புக்ககத்தில் நடந்துகொள்வதையும், புக்ககத்தவர்களின் அன்பையும் மதிப்பையும் அவள் பெற்றிருப்பதையும்பற்றி மிகவும் சிலாகித்துப் பேசினார்.

"பத்மாவின் ஆட்சியும் மாட்சிமையும், உஷாவின் கலைத்திறமும் வாடா வசீகரமும், கமலியின் பொறுமையும் தியாகமும், செல்லத்தின் காதல் வேகமும் மன உறுதியும் ஒருபுறம் இருக்க, ஸரஸ்வதியின் உயரிய தோழமையும் உள்ளடக்கமும, காந்திமதியின் களங்கமற்ற உள்ளமும் பதிசுச்ரூஷையுந்தான் எனக்கு மேலாகத் தோன்றுகின்றன" என்று அவர் அடிக்கடி சொல்லுவது உண்டு.

ஸ்ரீமான் வேங்கடசுப்பையரும் சங்கரி அம்மாளும் தங்களுடையவும் தங்கள் ஆதரவுக்கு உட்பட்டவர்களுமான குழந்தைகளின் க்ஷேமங்களை நிரந்தரமாகத் தியானித்துக்கொண்டு அமோகமான ஐச்வரியப் பெருமையுடன் தானதர்மங்களில் ஈடுபட்டு லக்ஷ்மீ நாராயணர்கள் போல் சாந்தம், தயவு, தாக்ஷிண்யம், தாராளத்தன்மை நிரம்பிய புனித வாழ்க்கை வாழ்ந்து வருகிறார்கள்.

சேஷு சாஸ்திரிகள் தம் மைத்துனனும் சம்பந்தியுமான மணியிடம், செழிப்பும் செம்மையும் தழைத்து ஓங்கிவரும் தம் குடும்ப யோக க்ஷேமத்தைப்பற்றிப் பேசும்போதெல்லாம் உள்ளம் குளிர அனைவரையும் வாழ்த்திவிட்டு, "எல்லாம் என் இருதய கமலத்தில் வசிக்கும் ஸ்ரீ ச்யாமளாம்பாள் கிருபை" என்று சொல்லி முடிப்பார்.

அவருக்கு அநுசரணையாக மணி சாஸ்திரிகள் எப்போதும் அன்பும் தயவும் சுரக்கும் மனத்துடன் ஸ்ரீ பவ

பூதி மகாகவியின் மங்கள வாக்கியத்தைப் பாராயணம் செய்வார்.

शिवमस्तु सर्वजगतां परहितनिरता भवन्तु भूतगणाः ।
दोषाः प्रयान्तु शान्तिं सर्वत्र सुखी भवतु लोकः ॥

“எல்லாப் பிராணிகளுக்கும் க்ஷேமம் உண்டாகட்டும்; எல்லா ஜீவராசிகளும் பிறருக்கு இதத்தைச் செய்வதில் ஈடுபட்டவர்களாகட்டும்; தீயவை யாவும் மறைந்து விடட்டும்; எங்கும் ஜன சமூகம் சுகித்து வாழட்டும்.”

சுபமஸ்து

(முற்றிற்று)

---

அநுபந்தம்

ஸரஸ்வதியின் கடிதம் அசல்

मनस्तु यं नोज्झति जातु यातु मनोरथः कण्ठपथं कथं सः ।
का नाम बाला द्विजराज पाणिग्रहाभिलाषं कथयेदभिज्ञा ॥
मदन्यदानं प्रति कल्पना या वेदस्त्वदीये हृदि तावदेषा ।
निशोऽपि सोमेतरकान्तशङ्कामोंकारमग्रेसरमस्य कुर्याः ॥
अलं विलम्ब्य त्वरितुं हि वेला कार्ये किल स्थैर्यसहे विचारः ।
गुरूपदेशं प्रतिभेव तीक्ष्णा प्रतीक्षते जातु न कालमार्तिः ॥

[नैषधम् III 59, 75, 91.]